ஸ்ரீ சாயி மகிமை

# சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜீயின் சரிதம்

ஆசிரியர் :

ஸ்ரீ பி. நாகேசுவரராவ்

வெளியிடுவோர் :

ஸ்ரீ சாயிபாபா சேவா சமாஜம்

மார்க்கெட் தெரு, செக்கந்தராபாத்

எம். பக்தவத்சலம்

"மல்லிகா"
திருமயிலை, சென்னை-4
25—2—'70

பக்தி என்பது நம்பிக்கையைப் பொருத்தது. நம்பிக்கை அனுபவத்தைக் கொண்டது. இந்த வகையில் ஸ்ரீ சாயிபாபா அவர்களை பிரத்தியட்ச தெய்வமாகக் கொண்டவர்கள் பலர். அவரை நேராக தரிசித்த அனுபவம் சிலருக்கு உண்டு. சுவாமி கேசவய்யாஜி பல்லாண்டுகளாக தன் வாழ்க்கையை ஸ்ரீ சாயிபாபாவுக்கு அர்ப்பணித்து ஸ்ரீ சாயிபாபாவை மக்கள் நம்பி உணர்ந்து கொண்டு உய்வதற்கு உறுதுணையாக அரும் சேவை புரிந்து வருகிறார். இதை அடியார்கள் பலர் நேரில் கண்டு அனுபவித்திருக்கிறார்கள். சுவாமி கேசவய்யாஜியின் ஆழ்ந்த பக்தி அவர்களையே ஸ்ரீ சாயிபாபாவாகக் கருதக் கூடிய நிலைக்கு மாற்றி இருக்கிறது. இந்த தெய்வீக நிலையத்தில் சுவாமிகள் அற்புதமான சாதனைகள் சாதித்திருக்கிறார்கள். பக்தி என்பது மக்களை சீரான வாழ்க்கை வாழப் பக்குவப்படுத்துவதே. ஸ்ரீ சாயிபாபா அடியார்கள் இதை நன்கு உணர்ந்திருக்கிறார்கள். இவர்களை மேலும் ஸ்ரீ சாயிபாபாவின் மகிமையை உணரச் செய்யவும் மற்ற மக்களுக்கு இந்த அனுபவத்தைக் காட்டவும், மிகச்சிறந்த இந்த நூலை ஏராளமான பேர்கள் படித்து இன்புற்று ஸ்ரீ சாயிபாபாவின் அருளைப் பெறுவார்களாக. இந்த மகத்தான சாதனைக்கு நாம் சுவாமி கேசவய்யாஜிக்கு பெரிதும் கடமைப்பட்டிருக்கிறோம்.

(ஒ-ம்) எம். பக்தவத்சலம்

கே. வீராசாமி
தலைமை நீதிபதி
சென்னை உயர்நீதி மன்றம்

சென்னை
28—2—'70

சுவாமி கேசவய்யாஜி அவர்களின் சரிதத்திற்கு முன்னுரை எழுதும் வாய்ப்பு கிடைத்தமைக்காக எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஸ்ரீ சுவாமிஜி அவர்களை சில வருடங்களாக நான் நேரில் அறிவேன், யாவரும் போற்றக் கூடிய பக்குவ நிலையும், ஆன்ம சித்தியும், பற்றற்ற தன்மையும் கொண்ட சுவாமிஜியின் சரிதம் பயன் தருவதோடு, ஆத்மிக சாதனை, மன அமைதி, பரம்பொருளுடன் ஈடுபாடு முதலியவைகளுக்கு வழி காட்டும் வகையில் சீருக அமைந்துள்ளது. பக்தர்களும், மற்றவர்களும் இதைப்படித்து பயனடைவார்கள் என்பது என் நம்பிக்கை.

(ஒ-ம்) கே. வீராசாமி

C. R. பட்டாபிராமன் திருமயிலை, சென்னை-4
7—1—'70

ஸ்ரீ சாயிபாபாவின் பக்தி நெறியைப் பரப்புவதற்காக சென்னை ஷெனாய் நகரில் சுவாமி கேசவய்யாஜி ஒரு சக்தி மிக்க பக்தி நிலையத்தை ஏற்பாடு செய்திருக்கிறார். சுவாமிஜி அரசாங்க அலுவலராக இருந்தபோதே ஸ்ரீ பாபாவின் தொண்டுக்காக பணிபுரிய அவருக்கு ஆக்ஞை பிறந்தது. இன்று அவர் ஷெனாய் நகரில் பக்தி மணம் கமழும் பூஜை அறையில் ஸ்ரீ பாபாவை தியானித்துக் கொண்டும், மக்களுக்கு உபதேசித்துக்கொண்டும், ஸ்ரீ பாபாவின் விழாக்களை நடத்திக்கொண்டும் இருக்கின்றார்: ஷெனாய் நகர் சாயி நிலையம் மேலும் மேலும் வளர்ந்து கொண்டேயிருக்கிறது. இதுவே சுவாமி கேசவய்யாஜியின் அருந்தொண்டுக்கு ஒரு எடுத்துக் காட்டாகும்.

நமது வரலாற்றின் ஒரு சிக்கலான கட்டத்தில் ஸ்ரீ சாயிபாபா இந்திய மண்ணில் தோன்றினார். இரு பெரும் மதங்களான இந்து மதமும், இஸ்லாமும் இணைந்து வாழும்படியாக அவர் ஒரு நுட்பமான இணைப்பை ஏற்படுத்தினார். உலகில் உள்ள மக்கள் எல்லோரும் இணைந்து தங்களை உயர்த்திக்கொள்ள வேண்டுமென்று யாவர்க்கும் பொதுவான கொள்கைகளை வகுத்தார். இதற்காக உலக வாழ்க்கையை வெறுத்து ஒதுக்கவேண்டுமென்று அவர் கூறவில்லை. தினமும் ஒரு குறிப்பிட்ட நேரமாவது ஆண்டவனை தியானித்து, மனதை ஒருமுகப்படுத்த வேண்டுமென்றுதான் சொன்னார். மற்றவர்களைப் போல் தன்னுடைய ஸ்தூல சரீரம் மறைந்த பிறகும் தன் வேலையைத் தொடர்ந்து செய்துகொண்டுதானிருப்பேன் என்று அவர் சொல்லிவந்தார். ஸ்ரீ பாபா இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் உயிருடனிருக்கும் போது தம் பக்தர்களுக்கும், துன்பப்படுகிறவர்களுக்கும் எவ்வாறு வழி காட்டி வந்தாரோ அவ்வாறே அவர் மறைந்த பிறகும் பக்தர்களுக்குத் துணைபுரிந்து வருவதாக சுவாமி கேசவய்யாஜி நம்புகிறார். தன்னை பூஜிப்பதையன்றி வேறொன்றின் மீதும் மனதைச் செலுத்தாதவர்கள் தன்னால் பாதுகாக்கப்படுவார்கள் என்று கீதையில் பகவான் கூறியிருக்கிறார். பகவான் அவர்களின் யோக க்ஷேமங்களை கவனித்துக்கொள்கிறார். இதே கருத்தைத்தான் ஸ்ரீ சாயிபாபாவும் வலியுறுத்தி வந்தார். பக்தியில்லாதவர்களுக்கு கடவுள் நம்பிக்கை உண்டாக ஸ்ரீ பாபா பல அற்புதங்களை நிகழ்த்திக் காண்பித்தார். கடவுள் என்று ஒருவர் உண்டா என்று சந்தேகிக்கின்ற இன்றைய உலகாயத சமுதாயத்தில் கைய அற்புதங்கள் தேவையாக உள்ளன.

ஷெனாய் நகரில் உள்ள சாயி நிலையத்தில் தெய்வீக மணம் கமழு வதைக் காணலாம். அங்கு செல்லும் பலர் கைமேல் பலன் பெற்றுள்ளார்கள் ஸ்ரீ பாபாவின் ஆரம்ப கால சீடர்களில் ஒருவரான காலஞ்சென்ற ஸ்ரீ நரசிம்ம சுவாமியைப் போல. ஸ்ரீ கேசவய்யாஜீயும் மன அமைதியும், இனிய சுபாவமும் கொண்டவர். ஆயிரக் கணக்கான பக்தர்களுக்கு அவர் வழிகாட்டியாகவும், உற்சாகம் அளிப்பவராகவும் இருக்கிறார். சென்னையில் ஸ்ரீ பாபாவின் அருள் நெறி பரவி வேரூன்றி வருவதற்கு சுவாமி கேசவய்யாஜீயின் தொண்டினை அளவிட்டுக் கூற இயலாது. சுவாமிஜியின் வாழ்க்கை வரலாற்றினை எடுத்துக் கூறும் ஸ்ரீ சாயி மகிமை என்ற இந்த நூல். பக்தர்களுக்கு ஒரு மதிப்பிட முடியாத செல்வமாகும். இந்நூல் மற்ற மொழிகளிலும், ஆங்கிலத்திலும் வெளியிடப்படும் என்று நம்புகிறேன்.

(ஒ-ம்) C. R. பட்டாபிராமன்

P. ராமகிருஷ்ணன், I.C.S. (ரிட்)
சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி (ரிட்)

சென்னை
25—2—'70

"ஸ்ரீ சாயி மகிமை" என்ற அழகிய தமிழ் நூலைப் படித்து இன்புறும் பாக்கியம் எனக்குக் கிட்டியது. இந்த நூல் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒரு பகுதியில் சுவாமி கேசவய்யாஜியின் வாழ்க்கை வரலாறு இடம் பெறுகிறது. 1939-ம் ஆண்டில் சுவாமிஜி பாபாவின் அருளைப் பெற்ற பிறகு அவர் வாழ்க்கையில் ஏற்பட்ட ஆத்மீக அனுபவங்கள் இரண்டாம் பகுதியில் விவரிக்கப்பட்டுள்ளன. சுவாமி கேசவய்யாஜியின் தொடர்பு ஏற்பட்ட பிறகும் அவருடைய ஆசியையும், அருளையும் பெற்ற பிறகும் பக்தர்களுக்கு ஏற்பட்ட ஆத்மீக அனுபவங்களும், இடர்ப்பாடுகளிலிருந்து அவர்கள் பெற்ற விடுதலையும் மூன்றும் பகுதியில் உள்ளன.

சாதாரண மக்கள் அற்புதங்களைக் கண்டால்தான் வசீகரிக்கப்படுகிறார்கள். ஆனால் உண்மை ஞானிகள் இந்த அற்புதங்கள் எல்லாம் இயற்கையாக உள்ள பூமியின் இழுக்கும் சக்தி, அசையும் சக்திகளைப் போல், ஒரு நியதிக்கு உட்பட்டே நடக்கின்றன என்று கூறுகின்றனர். தற்குறியாக இருப்பவனுக்கு ரேடியோ ஒலிபரப்பு அற்புதமாகத் தெரிகிறது. ஆனால் ரேடியோ விஞ்ஞானத்தைப் பயின்ற பிறகு அது ஒரு அற்புதமாக அவனுக்குத் தோன்றுவதில்லை. நான் இந்த உலகிலேயே மிக அற்புதமான படைப்பாகக் கருதுவது மனிதன்தான்—அந்த மனிதனுக்கும் சுவாமி கேசவய்யாஜியைப் போன்ற மகான்களின் ஆத்மீக விளக்கம் கிடைக்கப் பெற்று முழு மனிதத்தன்மை பெறுகின்றபோது அந்த அற்புதம் பூரணத்துவம் பெறுகின்றது.

இந்த நூலில் ஸ்ரீ பாபாவின் அனுக்கிரகம் பெற்று ஆண்டவன்பால் இழுக்கப்பட்ட, மனிதப்பிறப்பின் பயனை யெய்திய பல்வேறு மக்களின்-ஏழைமுதல் பிரபுக்கள்-வரையுள்ளவர்களின்-அனுபவங்கள் தொடுக்கப்பட்டுள்ளன. அவர்கள் உடல் நலிவுகளிலிருந்தோ அல்லது மனக் கலக்கங்களிலிருந்தோ விடுதலை பெற்றது அவ்வளவு முக்கியமானது அல்ல, உடல் நலிவுக்கோ, அல்லது மனநோய்

# பொருளடக்கம்

[எண்—பக்க எண்]

முற்பிறப்பில் யோகம் நிறைவேறப்பெருத ஒருவன் அதை நிறைவேற்றிக் கொள்ளுதற்காகப் பொருள் உடையார் வீட்டில் பிறப்பதைவிட அருள் உடையார் வீட்டில் பிறப்பது சாலச் சிறந்தது. முற்பிறப்பில் செய்த சாதனங்கள் சம்ஸ்காரமாக மனதில் புதைந்து மறைந்து கிடக்கின்றன. யோகிகள் குலத்தில் பிறந்து அவர்கள் செய்யும் சாதனங்களைப் பார்க்கும்போது பல யோகிக்குத்தன் பூர்வ ஜன்ம சாதனங்கள், பழைய பாடம் ஞாபகத்துக்கு வருவது போன்று மனதில் உதிக்கும். இடம், பொருள், ஏவல் இவைகளின் சகாயத்தால் முற்பிறப்பில் செய்த சாதனைகளைவிட இன்னும் தீவிரமாக அவன் இப்பிறப்பில் செய்கிருன். மீன் நீரை நாடுவது போன்று அவன் முக்தியை நாடுவது இயல்பாகிறது.

மேற் குறிப்பிட்ட கீதையின் மொழிகளையே இந்த வரலாற்று நூலும் உறுதிப்படுத்துகின்றது. சுவாமி கேசவய்யாஜியும் ஏழைக் குடும்பத்தில் ஆனால் பக்தியுள்ளவர்களிடையே பிறந்ததும் யாருக்கும் கிட்டாத ஒரு பாக்கியமாகத் தெரிகிறது. சாதாரண எளிய குடும்ப சூழ்நிலையில் வாழ்ந்து, சிறிய உத்தியோகம் வகித்தும், 1939-ம் ஆண்டில் தக்க தருணம் வாய்த்தபோது அவருக்கு யோகசித்தி கிடைத்திருக்கிறது.

சுவாமி கேசவய்யாஜி சென்னையில் வசிக்க நேர்ந்தது சென்னை நகர மக்களின் அதிர்ஷ்டம் என்றே சொல்லவேண்டும். ஆயிரக் கணக்கான மக்கள் அவர் செய்யும் பூஜைக்கு வந்து தரிசனம் பெற்று அவருடைய ஆத்மீகப் பாதையைப் பின்பற்றுகிருர்கள். அவர்களும் அவரைப்பற்றி அறிந்திராத மற்றவர்களும் இந்நூலினுல் பெரும் பயனடைவார்கள்.

(ஒ—ம்) பி. இராமகிருஷ்ணன்

# பதிப்புரை

ஸ்ரீ சாயி மகிமை என்ற இந்த நூலை பிரபல தெலுங்கு தினசரி "ஆந்திரபிரபா" (விஜயவாடா) ஆசிரியர் திரு. பி. நாகேசுவர ராவ், B A., அவர்கள் தெலுங்கில் எழுத அதை செகந்திராபாத் ஸ்ரீ சாயி பாபா சேவா சமாஜத்தினர் பதிப்பித்து வெளியிட்டுள்ளனர். அந்நூலுக்கு பக்தர்களிடையே நல்ல வரவேற்பு கிடைத்துள்ளது. முதல்பதிப்பு முற்றும் விலையாகிவிட்டபடியினால், இரண்டாம் பதிப்பை விரைவில் வெளியிட முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. இந்த நூலை தமிழில் வெளியிட வேண்டுமென்று பக்தர்கள் சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜீயிடம் வேண்டிக்கொண்டனர். அந்த வேண்டுகோளுக்கிணங்கி தமிழில் வெளியிட முயற்சிகள் எடுக்கப்பட்டன. இந்நூலை தமிழில் அழகாக மொழிபெயர்த்துத் தந்தவர் இருமொழி ஆசிரியரான திரு. M. S.. செல்லம் ஐயர், M.A., L.T., அவர்களும், அவர்களின் வாழ்க்கைத் துணைவியாரும் ஆவர். நூலை அழகுற அச்சிட்டுக் கொடுத்தவர்கள் சென்னை, ஒயிட்ஸ் சாலையில் உள்ள ஆர். ஆர். பிரிண்டர்ஸ். இந்நூல் அச்சாகும்போது திருத்தங்கள் செய்து நூல் வடிவில் வெளிவர உதவியவர் சென்னை சிறுவர் அரங்க மேலாளர் திரு. தா. ராஜாராம் அவர்கள். இவர்களுக்கும் நூலை வெளியிட உதவிய அன்பர்களுக்கும் பதிப்பகத்தார் நன்றிக் கடன் பட்டுள்ளார்கள். அவர்களுக்கெல்லாம் ஸ்ரீ பாபா நீண்ட ஆயுளும், நிறை செல்வமும், எல்லா பேறுகளும் அளிக்க பிரார்த்திக்கின்றோம்.

மேலும் இந்நூலுக்கு சிறந்த முறையில் அறிமுகம் அளித்து உதவிய பெரியோர்களுக்கும் பதிப்பகத்தார் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கின்றனர்.

———

# ஸ்ரீ சாயி மகிமை

## முன்னுரை

**சென்னை** ஷெனாய் நகரில் கடந்த இருபதாண்டு காலமாக வசித்து சாயி நிலையத்தை ஏற்படுத்தியதோடு, மக்களை நல்வழிப் படுத்தியும், ஆத்மீகத்தில் பற்றுக்கொண்டு கடவுள் அருளை நாடவும், மெய்த் தொண்டு புரிந்துவரும் சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜீயின் வாழ்க்கை வரலாறே ''ஸ்ரீ சாயி மகிமை''. ஆண்டவனின் அருட் செல்வங்களை உணரச் செய்வது அவரது அடியார்களின் தொண்டேயாகும். அதனால்தான் ஆண்டவனை அடியார்க்கு அடியார் என்றும், அடியார்களின் அன்பிற்கு கட்டுப்பட்டவன் என்றும் நம் முன்னோர்கள் கூறினர்.

ஷெனாய் நகர் ஏற்பட்டபோது அங்கு கோயில் குளங்கள் இருக்கவில்லை. கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பது நமது ஆன்றோர் வாக்கு. இக்குறையைப் போக்கி மக்களைத் தம் வசம் இழுக்க சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜி சாயி நிலையத்தைத் தோற்றுவித்தார். இதற்கு முன்பு அவர் பெனுகொண்டாவில் பல்லாண்டுகளாக ஸ்ரீ சாயிபாபாவின் பூஜைகளை நடத்தியதோடு, கோயிலும் கட்டுவித்து மக்களின் ஆத்மீகப் பசி நீங்க அரும்பெரும் தொண்டுகள் ஆற்றியுள்ளார். நம் நாட்டில் தோன்றிய மகான்களுள் ஸ்ரீ சாயிபாபாவும் ஒருவர் என்றும், ஒரு சாரார் கடவுள் அவதாரமென்றும் கருதுகின்றனர். ஸ்ரீ பாபாவின் போதனைகள் இன்றைய நடைமுறைகளுக்கு மிகவும் ஏற்றவையாகும். இந்து—முஸ்லீம் ஒற்றுமை, நாட்டின் ஐக்கியம், ஒருமைப்பாடு என்றெல்லாம் பேசப்பட்டு வருபவைகளை பல்லாண்டுகளுக்கு முன்பாகவே ஸ்ரீ பாபா எடுத்துரைத்தார். அவர் போதனைகளில் அன்பு, சமரசம், ஒற்றுமை. மக்கள் தொண்டு, ஏழைகளுக்கு இரங்குதல் போன்ற குணங்கள்தாம் இறுதியில் நம்மை ஆண்டவனிடம் இட்டுச்செல்லும் பாலமாக அமைகின்றது என்று வற்புறுத்தியுள்ளார். அவருடைய பிரதிநிதியாக, ஸ்ரீ பாபாவின் நேர்வாரிசாக எவ்வாறு ஸ்ரீ சுவ மி கேசவய்யாஜி சென்ற முப்பதாண்டு காலமாக பணியாற்றி வருகிறார் என்று விவரிப்பதே இப்புத்தகத்தின் நோக்கமாகும்.

ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜி இம் முப்பதாண்டு காலத்தில் பாமர மக்களிலிருந்து உயர் பதவிகளில் உள்ள பெரும் தலைவர்களுடனும் தொடர்பு வைத்துக் கொண்டு தம் பணியினை ஆடம்பரமின்றி, விளம்பரமின்றி அமைதியாக ஆற்றி வருகிறார். ஆத்மிகத் தொண்டு தொண்டின் மூலமே சிறப்படைய வேண்டும், முப்பதாண்டு கால சேவையை ஒரு சேர இணைத்து மக்கள் முன் வைத்தால்தான் உண்மை எதுவென்றும், போலியானது எது வென்றும் மக்கள் தங்கள் பகுத்தறிவின் துணையால் உணர்வார்கள். அக்கருத்தைக் கொண்டுதான் இந்த நூல் முதலில் தெலுங்கு மொழியில் இயற்றப்பட்டது. அதைத் தமிழாக்கம் செய்து இப் போது வெளியிடப்பட்டுள்ளது.

சுவாமிஜியிடம் முன்னால் கவர்னர் ஸ்ரீ ஸ்ரீபிரகாசா, இந்திய அரசின் முன்னால் உள்துறை அமைச்சர் ஸ்ரீ தத்தார், தற்போது ஜனாதிபதியாகியுள்ள டாக்டர் வி. வி. கிரி, திரு என். சஞ்சீவரெட்டி முதலானோரும், மற்றும் பல பிரமுகர்களும் ஈடுபாடு கொண்டு அவ்வப்போது வாழ்த்துரைகளும், விழாக்களுக்கு ஆசிகளும் வழங்கியுள்ளனர்.

இன்று ஸ்ரீ பாபாவின் கொள்கைகளையும், போதனைகளையும் நன்கு விளக்குவதற்கு ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜி ஒருவர்தான் உள்ளார். அவர் மக்களின் மேம்பாட்டிற்கு ஆற்றிவரும் ஆத்மிகத் தொண்டு அளவிடற்கரியது. ஒவ்வொரு வியாழக்கிழமையும் சாயி நிலையத்தில் ஸ்ரீ பாபா பூஜையில் கலந்துகொண்டு, ஸ்ரீ கேசவய்யாஜியிடம் தங்கள் குறைகளையும், கவலைகளையும், கஷ்டங் களையும் நேரில் எடுத்துச்சொல்லி மன ஆறுதல் பெற்றுச் செல்லும் ஆயிரக்கணக்கான மக்களே அவர் தொண்டின் சிறப்புக்கு எடுத்துக் காட்டாவர். இன்று தென்னாட்டில் சுவாமிஜியின் ஆத்மிகத் தொண்டினைப்பற்றி அறியாதார் வெகுசிலர்தான் இருக்க முடியும். சுவாமிஜி அவர்கள் இன்னும் நீண்ட நாட்களுக்கு இறைபணியில் ஈடுபட்டிருக்க ஆண்டவன் அவருக்கு நீண்ட ஆயுளையும், உடல் நலத்தையும் அளிக்கும்படி பிரார்த்திக்கிறேன்.

ஸ்ரீ சுவாமிஜியின் பூஜையில் சாதாரண நிலையில் இருக்கும் மக்களிலிருந்து பெரும் பதவிகளில் உள்ளவர்களும், அரசியல் வாதிகளும், வர்த்தகர்களும், பல்வேறு துறையில் உள்ளவர்களும், பல மத, ஜாதி இனங்களைச் சேர்ந்தவர்களும் கலந்துகொண்டு இறைவன் திருவருளைப் பெறுகின்றனர். இறைவன் அடியார்கள் எங்கு இருப்பினும் அங்கு ஆண்டவன் இருப்பார் என்பது நம்

மதக்கோட்பாடு. இச்சீரிய தொண்டு தொடர்ந்து நடைபெற சாயி நிலையத்திற்கு எதிரேயுள்ள காலி நிலத்தை ஒதுக்கித்தரும்படி சென்னை மாநகராட்சியினரிடம் கோரியுள்ளோம். இக்கோரிக்கை விரைவில் நிறைவேறும் என்ற நம்பிக்கை உள்ளது. இந்த காலி இடத்தில் சமாஜத்திற்கு நிரந்தர கட்டிடத்தை எழுப்பியும், ஸ்ரீ பாபாவுக்கு ஒரு ஆலயத்தை நிறுவியும், மக்கள் தினமும் ஸ்ரீ பாபா வின் அருளைப்பெற வழி செய்யவேண்டுமென்பது ஸ்ரீ சாயிபாபா பக்த சமாஜத்தின் விருப்பமாகும். இதற்கும் ஆஸ்திக மக்கள் துணைபுரிந்து தங்களால் இயன்ற உதவிகளை ஆற்ற வேண்டுகிறோம்.

ஓம் ஸ்ரீ சாயிராம், ஸ்ரீ சாயிராம்

**கோ. வெங்கடசுவாமி நாயுடு**
தலைவர்
ஸ்ரீ சாயிபாபா பக்த சமாஜம்
ஷெணாய்நகர், சென்னை-30

அச்சிட்டோர்: ஆர். ஆர். பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை-14.



சீரடி துவாரகாமாயியில் உள்ள ஸ்ரீ சாயி பாபாவின் படம்



ஸ்ரீ சுவாமி நேசவய்யாஜீ சாயி நிலயத்தில் பூஜை செய்தல்

ராஜ்பவன்,
பெங்களூர்,
18-11-1966

ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீயை எனக்கு வெகு நாட்களாகத் தெரியும். அவர் ஸ்ரீ சாயி பாபாவின் சிறந்த பக்தர். நாட்டு மக்களின் ஆன்மீக வளர்ச்சிக்காக அவர் சேவை செய்து வருகிறார். மகான் சாயி பாபாவின் உபதேசங்களை அவர் பின்பற்றுகிறார்.

ஸ்ரீ சாயி பாபாவின் பக்தர்களுக்கு அவர் செய்துவரும் சேவையில் அவருக்குப் பூரண வெற்றி கிடைக்க வேண்டுகிறேன்.

**வி. வி. கிரி**
மைசூர் கவர்னர்

# நூன் முகம்

உலகத்திலே மகான்கள் அவ்வப்போது தோன்றி மக்களை நல் வழிப்படுத்துகிறார்கள். அவர்கள் எப்போது வருவார்கள், எந்த வேடத்தில் வருவார்கள் என்று கூறஇயலாது. ஆனால் உலகம் உய்ய தோன்றிய ஞான்று, சூரியன் எழும்போது பிரகாசம் காணப்படு வதுபோல், அவர்கள் தூய்மையும் அன்பும் நிலவும். கண்ணை மூடிக் கொண்டிருப்பவர்கட்கு சூரிய ஒளி தென்படாது. விழித்தால்தான் ஒளி விளங்கும். எனவே விழித்திருப்பவர்களே தெய்வீகப் புருடர் களின் வருகையை அறிந்துகொள்ள இயலும். அத்தகைய புருடர் கள் உலகை உய்விக்கத் தாம் வந்துள்ளதாகவும் உபதேசங்கள் செய் யப் போவதாகவும் விளம்பரம் செய்துகொள்ள மாட்டார்கள். அவர்கள் நம்மை நாடி வந்தவர்களே. எனினும் நாம் அவர்கள் அருளுக்கு ஆளாக வேண்டும். 'சீரடி' என்ற சிற்றூரில் ஸ்ரீ சாயி பாபா வந்தபோது அவர் யார், என்ன என்பதை ஒருவரும் அறிய வில்லை. பிறகு அந்த பெருமானின் அன்பையும், இரக்கத்தையும் மக்கள் உணர்ந்தார்கள். எளிய பரதேசி கோலத்தில் வந்தவர், கையேந்தி பிச்சை வாங்கி, எளியவர்க்கும், நாய்க்கும், காக்கைக்கும் போட்டு தான் சிறிது உணவு அருந்தியதின் மர்மம் என்ன? இறை வன் அன்பை தேடுவதற்கு முக்கிய சாதனம் எளியோர்க்கும், வறி யோர்க்கும் 'நொய்யில் பிளவளவேனும்' தந்து தாம் உண்ண வேண்டுமென்பதே. எல்லா உயிர்களிலும் இறைவன் உறைகிறான் என்ற தத்துவத்தை சாத்திரங்களில் எவ்வளவு படித்தாலும், உணர் வில் வராது. ஸ்ரீ இராமலிங்க அடிகளாரும் முக்கியமாக போதித்த உண்மையும் ஏழைகளுக்கு பகிர்ந்து கொடுத்து தாம் உண்ண வேண்டுமென்பதே. ஸ்ரீ பசவேசுவரரும் ஐந்து நூற்றாண்டுகட்கு முன் இந்த உண்மையையே வற்புறுத்தினார். "கற்சிலை நாகங்கட்கு பால் வைத்து படைக்கிறார்கள். சிலைகள் பாலை உண்டால் சிறிது கூட வைக்க மாட்டார்கள்; ஓட்டம் பிடிப்பார்கள். அந்தோ, என்ன மடமை!" என்றார்.

ஸ்ரீ சாயி பாபா ஒருசமயம் தமக்குக் கொடுத்த கோதுமையை ஊர்ப் பெண்கள் மா அரைத்துக் கொடுத்தார்கள். பாபாவை "உங்களுக்கு ஏன் இத்துணை மாவு? எங்களுக்கு கொஞ்சம் கொடுங் கள்" என்று விளையாட்டாக கேட்டார்கள். பாபா, "அது முடி யாது. அத்துணை மாவையும் ஊருக்கு வெளியில் எடுத்துக்கொண்டு போய் கொட்டிவிடுங்கள்" என்று கூறினார். இதில் என்ன உண்மை? நமக்குக் கீழான எத்தனையோ சீவ கோடிகள் இருக்கின்றன. அங்கும்

இறைவன் உள்ளான். அதை மறக்கலாகாது என்பது. திருநாவுக்கரசு நாயனூர் "தயையே மூல தர்மம்" எனக் கூறினூர். அத் தகைய தயை வேறுபாடற்றிருத்தல் வேண்டும். அதுதான் 'சர்வ தயை'. இதன் அடிப்படையில்தான் பாபாஜீ தன்னிடம் வந்தவர்கள் யாவர்க்கும் இதமே செய்தார். நோயால் பீடிக்கப் பட்டவர்களையும், குடும்ப இன்னல் பட்டவர்களையும் அவர்கள் குறைகளைத் தெய்வீக சக்தியால் தீர்த்து சாந்தியை அளித்தார். அவர் தமது சித்து விநோதங்களைக் காட்ட விரும்பவில்லை. அவை கள் தாமே வெளிப்பட்டன!

பாபாஜீ தெய்வநம்பிக்கையில் மக்களை ஈடுபடுத்தினூர். ஸ்ரீ ராம நவமி வைபவத்தையும் 'முகரம்' உத்சவத்தையும் பிணைத்து மக்களை கொண்டாடச் செய்தார். இறைவனே ஆண்டான்; நாம் அடிமைகள், என விளக்கினூர். "அல்லா மல்லிக்" என்ற வசனத்தை அவர் அடிக்கடி கூறுவாராம். குரு விசுவாசத்தையும் புகட்டினூர். தாம் மறைந்து போனூலும் என்றும் தன் அடியார்களுடன் இருப்பேன் என்று பிரமாணம் செய்தார். அவர் திரிகால ஞானி. வரப்போகும் பல செய்திகளை தம் சீடர்க்கு குறிப்பாக உணர்த்தி அதிசயிப்பார். சமீப காலத்தில் விளங்கிய நாராயணவரம் சுரைக்காய் சுவாமிகளும் இத்தகையவர் என்பது நமக்குத் தெரியும். பாபாவும் அவரைப்போல் ஒன்றும் தெரியாதவர்போல் சொற்ப உடையும். சட்டியும் தாங்கி, நாய் தொடர்ந்துவர பிச்சைவாங்கி பெற்றதில் பிடி அளவே உண்டுவந்தார்.

அவர் சந்நிதியில் சாந்தம் நிலவிற்று. படித்தவர்களும் பாமரர்களும், ஆணும் பெண்ணும், அவரை நாடி தம் குறைகளைக்கூறி ஆறுதல் பெற்றூர்கள். ஏசுநாதரும் அப்படியே உலகத் தொண்டு புரிந்தவர். பாபாஜீ ஏதோ ஒரு புது சமய இயக்கத்தையோ அல்லது குறிப்பிட்ட ஒரு தெய்வ வழிபாட்டையோ பரப்பவில்லை. எல்லோர்க்கும் ஒரு கடவுள், எல்லாரும் ஒரே இனம் என்பதை விளக்கினூர். அன்பும் இரக்கமுமே உண்மை சமயம் எனப் புகட்டினூர்.

இத்தகைய மகானின் நினைவுகளையும், செய்கைகளையும் சிந்தித்தாலும் அவரை கை கூப்பி அஞ்சலி செய்தாலும் இன்பம் தரும். அவர் காட்டிய வழியை சிறிதளவேனும் பின்பற்றினூலும் உயர்வடையலாம். இறைவன் நமக்கு இந்த தேகத்தை அளித்து அறிவு முதலானவைகளைத் தந்தது சிற்றின்பங்களை தேடுவதற்கல்ல. பாபாஜீ ஒருசமயம் பலநாள் ஓரடி அகலமுள்ள பரணில் படுத்து உறங்கினூராம். இது எதைக் காட்டுகிறது? உடலின்பம் உடல்

விழும்வரைகூட இருக்காது. உடல் விழுந்தபின் உயிருக்கு ஆதாரம் எது? உடலை மறந்தபோது தான் மெய்யுணர்வு உதிக்கும். உடலை மறந்தாலும், 'நான்', 'எனது' என்ற பிணி தீராது. அவைகளும் அற்றுப்போனால்தான் ஒருவன் 'ஸ்திதப் பிரஞைனயை' அடைகிறான். அந்த நிலை பக்தி ஞானங்களுக்கும் அதீதமான தத்துவ நிலை. அந்த நிலை திருவருள் கூடிய ஞானறுதான் உதிக்கும். அதை சத்திநி பாதம் என்றும் கூறுவதுண்டு.

இப்படி திருவருளையும், குருவருளையும் மக்களுக்கு தேடித் தரு வதற்கே பல நிலையங்கள் உள்ளன. அதில் சிறந்ததொன்று ஸ்ரீ கேசவய்யர் சுவாமிஜி அவர்களால் நடத்தப்பட்டுவரும் சென்னை ஷெனாய்நகரில் அமைக்கப்பட்டுள்ள **ஸ்ரீசாயிபாபா பக்த சமாஜம்.** ஸ்ரீ சுவாமிஜி அவர்கள், அன்பின் உருவம். மிதமான பேச்சுடை யவர்கள். இதமான நெஞ்சுடையவர்கள். இரக்கங்கொண்ட இத யம் உள்ளவர். நிர்வாகத்தில் படாடோபம் இல்லாதவர். மக்களை பதவி, குலம், பணம் முதலியவை கொண்டு பாராட்டாது எல்லோ ரையும் அணைத்து ஸ்ரீ சாயி பாபா பக்தியில் ஆற்றுபடுத்துபவர். இத்தகைய அந்தண்மை கூடிய சுவாமிஜீயின் நட்பை யாவரும் பெற விரும்புவார்கள். எத்தனையோ இடர்பாட்டுக்கு இடையே சமா ஜத்தின் வைபவங்களை நியாயமாகவும் அமைதியாகவும் சுவாமிஜி நடத்தி வருகிறார். அவரைக் காண்பதுவும் நன்று. அவரோடு பேசுவதும் நன்று. அவருக்கு ஒரே ஒரு ஆசை. ஸ்ரீ சாயி பாபா சமாஜத்துக்கு நிரந்தரமான ஒரு கட்டடத்தைக் கட்டி முடித்து பக்தர்களுக்கு சௌகரியம் செய்யவேண்டுமென்பதே. பிரதி குரு வார பூஜைக்கு நூற்றுக் கணக்கான மக்கள் வருகிறார்கள். அது போலவே பாபாஜி மகாசமாதி குரு பூசைக்கும், ஸ்ரீ இராம நவமி வைபவங்களுக்கும். சீரடியில் பக்தர்கள் கூடி எத்தனையோ சௌகரி யங்களை செய்துள்ளார்கள். ஷெனாய் நகர் சீரடியின் சின்னமாகத் திகழ வேண்டுமென்பது சுவாமிஜீயின் கருத்து. இறைவன் அரு ளாலும், குருவருளாலும் இது கடிதில் இனிது நிறைவேற வேண்டும் என்று பிரார்த்திப்பதே இந்த நூன்முகத்தின் உட் குறிப்பாகும். இந்த நூலை வாசித்து மக்கள் நற்பயன் அடைவார்களாக!

இப்படிக்கு,

**நல். முருகேச முதலியார்**
Retd. Secretary to Govt. & sometime
Special Adviser to late Chief Minister

சென்னை
15-10-'69

# ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீ

மக்களை அறியாமையாகிய இருள் சூழும்போது, சந்தேகம் உள்ளவர்களுடைய சந்தேகத்தைப் போக்கி அஞ்ஞானிகளுக்கு ஞானத்தை அருளி திவ்விய ஜோதியை ஏற்றிவைத்து அவர்களுக்கு ஆத்மீக நெறியைக் காண்பிப்பதற்காக மகா புருஷர்களும், யோகி களும் அவதரிக்கிறார்கள். அக்கூட்டத்தில் சேர்ந்த அவதார புருஷர் சீரடி சாயி பாபா அவர்கள். அவர் தம் பக்தர்களைக் கண்ணை இமை காப்பதுபோல் காக்கும் ரட்சகர்; முத்தித் தரும் வள்ளல்.

முற்பிறவியின் நற்பயனால் பகவானுடைய அருள்நோக்கைப் பெற்ற அதிர்ஷ்டசாலி, ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீ. இவர் நேர்மை யாக நடப்பவர்; சாத்துவிகர்; ஆத்மீகத்தைத் தேடிப் பெற்றவர்; முனிவர்களைப் போன்றவர்.

பகவானாகிய சீரடி சாயிபாபா அவர்களின் அறிவுரைகளைப் பிர சாரம் செய்து, பக்தர்களுடைய கஷ்டங்களைப் போக்கி அவர்களைக் கரையேற்றுவதே தம் மதத்தின் கடமையாகக் கருதி ஓயாது உழைக்கும் தவயோகி ஸ்ரீ கேசவய்யாஜீ. அவருடைய அனுபவங் களை விரிவாக புத்தக வடிவில் வெளிக்கொணர்ந்த நண்பரும், பிரசித்திப்பெற்ற பத்திரிகை எழுத்தாளருமான ஸ்ரீ பண்டிதாராத் யுல நாகேசுவரராவ் அவர்களைப் பாராட்டுகிறேன்.

திடசங்கல்பத்துடன் இப்புத்தகத்தை வெளியிட்ட பக்தர் கூட் டத்தை, ஸ்ரீ ஜி. வி, ஆர். நாயுடு முதலியவர்களை மெச்சுகிறேன்.

பூஜிக்கத் தக்க ஸ்ரீ கேசவய்யாஜி அவர்களுடைய இந்த வர லாற்றைப் படித்து சீரடி ஸ்ரீ சாயி பாபாவின் மகிமையைத் தெரிந்து கொண்டு அவர் தரிசனம் பெற்று வாசகர்கள் கிருதார்த்தர்களா வார்கள் என்று கோருகிறேன்.

"ராகவ ஸதன்"
ஸோமாஜீகூடா,
ஹைதராபாத்-4
6-3-1948

**கொட்டிபாடி பிரம்மையா**
சபாநாயகர்
ஆந்திர சட்டசபை

# பதிப்பாளரின் விஞ்ஞாபனம்

ஸ்ரீ சாயி மகிமை என்பது, சாயி பக்த ஸ்ரீ சுவாமி கேசவய்யா ஜீயின் சரித்திரம். சுவாமி கேசவய்யாஜிக்கு சீரடி சாயி பாபா 1939ம் ஆண்டு ஜூலை முதல் தேதியன்று பிரத்தியட்சமாகி, தன் செயல்களுக்குக் கருவியாக எல்லாவகையிலும் தகுதியுள்ள தூத ராக தேர்ந்தெடுத்தார். சுவாமிஜி இருக்கும் இடத்தில்தான் சாயி பாபா இருக்கிறார் என்பது பல நிகழ்ச்சிகளால் உறுதிப்பட்டது. ஸ்ரீ சாயிபாபா மற்ற அவதாரங்களைப்போல் துஷ்டர்களைச் சிக்ஷித்து சிஷ்டர்களை ரக்ஷிப்பதற்குமட்டுமே அவதரிக்கவில்லை. சிஷ்டர்களை ரக்ஷிப்பதோடு துஷ்டர்களை சிக்ஷிக்காமல் தீய வழியில் செல்பவர் களை நல்ல வழியில் செல்லும்படி மாற்றிவிட்டார். மோட்சத்தை சாதிக்கப் புதிய வழி ஒன்றைக் காண்பித்திருக்கிறார். அவரை தரி சித்தவர்களோடு நினைத்தவர்களும் உய்ந்தார்கள்.

சுவாமி கேசவய்யாஜீ இருபத்தைந்து ஆண்டு காலமாக சாயி பாபாவின் உபதேசங்களை நாட்டின் எல்லா பகுதிகளிலும் எதி ரொலிக்கச்செய்து, மக்களைத் துன்பத்திலிருந்து விடுதலை பெறச் செய்துகொண்டிருக்கிறார். சீரடி சாயி பாபா சுவாமி கேசவய்யா ஜீயின் வாயிலாகச் செயலாற்றுகிறார். அவரால் நோயாளிகள் பலர் பூரண ஆரோக்கியம் பெற்றிருக்கிறார்கள். வறுமையில் உழன்ற வர்கள் செல்வந்தரானார்கள். உடலைப் பொறுத்த வகையில் சௌக் கியத்தையும், மன அமைதியையும் பெற்றார்கள். சுவாமிஜீயின் உள்ளத்தில் எல்லோருக்கும் வரவேற்பு கிடைக்கும். எவ்வளவு சிக் கலான விவகாரங்களுக்கும் பரிகாரம் கிடைக்கும்.

சுவாமிஜீயை சாயி நிலயத்தில் நேரில் தரிசித்து நலம் பெற்ற வர்களைப் போலவே, அவருக்குக் கடிதம் எழுதிப் பயன் பெற்ற வர்களும் பலர் இருக்கிறார்கள். அவர் வாயிலாக ஸ்ரீ சாயி பாபா வின் அநுக்கிரகத்துக்குப் பாத்திரமானவர்கள் ஆயிரக் கணக்கைத் தாண்டி இருப்பார்கள். அவரைத் தரிசித்தவர்கள் பிறகு என்றும் அவருடைய பார்வையிலிருந்து விலக மாட்டார்கள். சுவாமிஜீயைப் பார்த்தவர்கள் எல்லோரும் பாபாவின் கிருபைக்குத் தகுதியைச் சம்பாதித்துக் கொண்டார்கள்.

அந்த மகானின் வரலாறுதான் இந்த ஸ்ரீ சாயி நூலாகும். அவ ருடைய வாழ்க்கை வரலாற்றுடன் பக்தர்களுக்கு ஏற்பட்ட அனு பவங்கள், சுவாமிஜீ ஆத்மீக விஷயமாக எழுதிய கட்டுரைகள், அவர் அடிக்கடிசெய்த பிரசங்கங்கள் எல்லாம் இந்நூலில் விவரமாக

இடம் பெற்றிருக்கின்றன. நாலைந்து வருடங்களுக்கு முன்பே நூல் பிரசுரமாகி இருக்க வேண்டும். தாமதத்திற்கு இன்னார்தான் காரணம் என்று சொல்லுவது பொருந்தாது. இப்பொழுதாவது சுவாமி கேசவய்யாஜீயின் சரிதத்தை ஸ்ரீ சாயி பாபாவின் பக்தர்களுக்குத் தர முடிந்ததற்காக ஸ்ரீ சாயி பாபாவுக்கு எங்கள் நன்றியோடுகூடிய வணக்கம் உரித்தாகும். ஸ்ரீ சாயி பாபாவின் அருளும், ஸ்ரீ சுவாமி ஜீயின் ஆசியுமே இந்த நூல் வெளிப்படக் காரணமாயின.

இப்படிப்பட்ட நூலை, பக்தியுடன் சிரத்தையாக எழுதிய நூலாசிரியருக்கும், பதிப்பிக்க உதவிய பக்தர்களுக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

மராத்திய மொழியில் ஸ்ரீ ஹேமாத் பந்த் எழுதிய ஸ்ரீ சாயி சத் சரிதையைப் போலவே இந்த ஸ்ரீ சாயி மகிமையும் பக்தர்களுடைய ஆதரவைப் பெறும் என்றும் நம்புகிறோம்.

நூல் இயற்றுவதிலும், பதிப்பிலும் சில பிழைகள் நேர்ந்திருக்கலாம். இரண்டாம் பதிப்பில் அவற்றைத் திருத்தி விஷயங்களை விஸ்தரித்து முழுமையான நூலாகப் பிரசுரிப்போம் என்று நம்புகிறோம்.

**ஜி. வி. ஆர். நாயுடு**
தலைவர்,
ஸ்ரீ சாயி பாபா சேவா சமாஜம்

1—5—1969

# ஸ்ரீ சாயி மகிமை

## சமர்ப்பணம்

ஐந்து வருடங்களுக்கு முந்தைய செய்தி. ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீ பக்தர்களுள் ஒருவருக்கு ஒரு யோசனை உண்டாயிற்று. சாயி நிலையத்து வியாழக்கிழமை பூஜையைப் பற்றி அவ்வப்போது பத்திரிகைகளில் வெளிவந்த நாலைந்து கட்டுரைகளையும் அதே சமயத்தில் பிரசுரமாகிக் கொண்டிருந்த சுவாமிஜீயின் கட்டுரைகளையும் சேர்த்து ஐம்பது அறுபது பக்கங்களில் ஒரு சிறிய புத்தகமாகக் கொண்டுவரலாம் என்பதுதான் அந்த யோசனை. முறைப்படி அப்பக்தர் அதற்காக சுவாமிஜீயின் அனுமதியை வேண்டினார். ஏற்கனவே என் கட்டுரைகள் மீதும், நான் எழுதும் முறையிலும் திருப்தி கொண்ட சுவாமிஜீ அந்த பக்தரை என்னிடம் அனுப்பி வைத்தார். பக்தருக்கு ஒரே உற்சாகம். அவர் சுவாமிஜீயிடம் பழகத் தொடங்கி சிறிது காலமே ஆகியிருந்தாலும், அவர் ஏதோ நற்பயனை அடைந்திருந்ததால் எதையேனும் நல்லதாக செய்துவிடவேண்டும் என்ற துடிப்பு அவரிடம் மிகுந்திருந்தது. கையில் சிறிது பணமும்கூடக் கொண்டுவந்திருந்தார். அச்சமயத்தில் சுவாமிஜீயுடன் எனக்கு நெருக்கமான தொடர்பு ஏற்பட்டிருந்ததென்றாலும் அது அதிக நாட்பட்டதன்று. சுவாமிஜீ, அவருடைய அரும் பெரும் சேவை, அவருடைய உபந்நியாசங்கள் எல்லாவற்றையும் சேர்த்து, ஐம்பது அறுபது பக்கம்கொண்ட புத்தகம்தானா எழுதுவது? என்ற எண்ணம் எழுந்தது. குறைந்தது நூற்றைம்பது இருநூறு பக்கமாவது எழுதினால்தான் ஸ்ரீ ராமனுக்கு அணில் செய்த சேவைபோல் சுவாமிஜீக்கு சிறிது சேவை செய்ததாகும் என்று தோன்றியது.

என் கருத்தை அந்தப் பக்தருக்குத் தெரிவித்தேன். அவர் அதை சுவாமிஜீயிடம் தெரிவித்துவிட்டு, பணத்தை என்னிடம் கொடுத்து விட்டார். அவருக்குப் பொறுப்பு விட்டது. அப்பொழுது எனக்கு சுவாமிஜீயைப் பற்றிய ஒரு நூலை எழுத வேண்டும் என்ற எண்ணம் இருக்கவில்லை. அதனால் எப்படி எழுத வேண்டும், எவ்வளவு எழுதவேண்டும் என்ற பிரச்னைகள் எழ இடமே இல்லை. முன்பே இப்பிரச்சினைகள் தோன்றி அவைகளுக்குப் பதில் கிடைக்காமல் போயிருந்தால் ஐந்து வருடங்களுங்கு முன்பே புத்தகம் வெளிவந்திருக்கும். ஆனால் சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜி அவருடைய சேவை, அவருடைய கட்டுரைகள் ஆகியவற்றைப் பற்றி ஒரு கையேடாகவோ, ஒரு சிறிய புத்தகமாகவோ அது வெளி வந்திருக்

ரும். அது நடக்காமல் தடுத்த பாவம் என்னைத்தான் சாரும். உள்ள படி அப்பக்தர் ஒரு சிறிய நூலை வெளியிட்டு சுவாமிஜீயின் அன்பர் களுக்குக் கொடுத்திருப்பார்.

பிறகு என் முயற்சி கற்பனை உலகைவிட்டு நிஜ உலகத்துக்கு இறங்கவே இல்லை. சுவாமிஜீ என்னமோ அவர் தயாரித்திருந்த குறிப்புக்களை என்னிடம் உடனே கொடுத்துவிட்டார். அவருடைய குறிப்பைப் பார்த்தபின் ஒரு வாரம் அல்லது பத்து நாட்களில் புத்த கத்தை எழுதிவிடலாம் என்ற தீர்மானமும் எழுந்தது. எழுத்து வேலையைத் தொடங்கினேன். இடையில் சில தொல்லைகள் ஏற்பட் டன. என் நிலை தடுமாறியது. சுவாமிஜீயையும் சென்னையையும் விட்டு வரும்படி நேர்ந்தது. மனத்துக்கு அமைதியும், உடலுக்கு ஓய்வும் இல்லாமல் போயிற்று.

கருத்துக்கள் மறைந்துவிடவில்லை. எண்ணங்களுக்கு வடிவம் தரும் திறமை நலிந்து போய்விடவில்லை. என்றாலும் ஓரளவு தளர்ச்சித் தோன்றியது. முதலிலிருந்தே நம்மால் நிருவகிக்க முடி யுமா என்று ஆராய்ந்து பார்க்காது, பொறுப்பை ஏற்பதும், பொறுப்பை ஏற்றபின் செலவுக்கும் கஷ்டங்களுக்கும் ஈடு கொடுப்ப தும் எனக்குப் பழக்கம்தான். அதனால் மனத்திற்கு எவ்வளவு தொல்லைகள் வந்தபோதிலும் மற்ற கடமைகளோடு இதையும் ஒரு கடமையாக மேற்கொண்டேன். ஆனால் முயற்சி பலிக்கவில்லை. எந்த முயற்சியும் சாதகமாகவில்லை. அன்பர்கள் இருவர் கொடுத்த பணத்தை 'பாங்க்'கில் போட்டு டிராப்டுவாங்கி சுவாமிஜீக்கு அனுப் பினேன். ''இந்தப் பொறுப்பை என்னைத் தவிர வேறு யாரேனும் நிறைவேற்ற வேண்டியிருக்கும் என்று தோன்றுகிறது. இதுவரை யிலும் ஒன்றுமே செய்ய இயலவில்லை' என்று எழுதினேன், அவர் என் அபிப்பிராயத்தை ஏற்கவும் இல்லை; நிலைமையைக் கண்டு கொள்ளவும் இல்லை. 'என்னால்தான் இந்த வேலை நடக்கும்' என்பது அவருடைய முடிவு. டிராப்டைத் திருப்பி அனுப்பிவிட்டார். உட னேயே புத்தகத்தை எழுதி முடிக்கும்படி சொன்னார். இது நான்கு வருடங்களுக்கு முன் நடந்த நிகழ்ச்சி.

சூழ்நிலை சதி செய்ததாலும் அந்தச் சதியை விலக்கத் தக்க பொருள் பலமோ மனித பலமோ இல்லாமல் வெள்ளத்தில் அகப் பட்ட துரும்புபோல் தத்தளித்தேன். வரும் விபத்தைத் தடுக்க முயற்சிக்காமல் ஆபத்துக்களிலேயே வலியச் சென்று அகப்பட்டுக் கொண்டு அவற்றிலிருந்து மீளும் வழியைத் தேடுவதிலேயே சக்தியை இழந்துவிட்டதால், தகிக்கும் வெயிலில், பாலைவனத்தில் நிற்பது போன்ற அனுபவம் ஏற்பட்டது.

சுமக்க முடியாத பாரத்தைத் தலையில் வைத்துக்கொண்ட சமயத்தில், அதை சுமக்கக்கூடிய சக்தியையோ, கீழே இறக்கக்கூடிய பலத்தையோ சம்பாதித்துக் கொள்ளவேண்டும். அவை இரண்டையும் இழந்தபோது, தக்க சமயத்தில் கீழே சாய்ந்து, பாரம் அழுத்த நசுங்கிப் போவதுதான் நடக்கக் கூடியது. இந்த ஆபத்திலிருந்து அற்பமான காயங்களோடு, ஸ்ரீ சாயி பாபாவின் அருளுக்கு என்னைப் பாத்திரவானுக்கித் தப்புவித்தார். சுவாமி கேசவய்யாஜி பொருள் நஷ்டம் வந்த காலத்தில் ஆத்மீக நோக்கு ஏற்படா விட்டாலும் யோசனைகள் எழுவது சகஜம். பொருளாதார நிலை சீர்குலைந்து, அகாரணமாய்ப் பழிக்கு ஆளான நிலையில் இந்த நூலை எழுதத் தொடங்கியது தற்செயலாக ஏற்பட்ட சம்பவம் அன்று. பாபாவின் சிறந்த பக்தர் மூலமாக, பாபாவுக்குக் கொடுத்த வாக்குறுதியை நிலைநிறுத்துவதாகப் பாவித்து, வேலையைத் தொடங்கியதால் தடையின்றிப் புத்தகம் உருப் பெற்றது. ஐந்து ஆண்டுகளில் பூரண உருவம் பெற்று முதலிலிருந்து கடைசிவரையில் விஷயம் நிறையப் பெற்றிருக்கிறது. இந்த நூலில் என்னுடையது என்பதற்கு எதுவும் இல்லை. தவறுகளுக்கு மட்டுமே நான் பொறுப்பு.

'முப்பது வருட காலம் அரசியல், பொருளாதாரம், சமூகம் ஆகிய துறைகளின் விமரிசனங்களில் தேய்ந்துவிட்ட என் பேனு, ஆத்மீக விஷயங்களுக்கு வளைந்து கொடுக்குமா என்ற சந்தேகம் வந்தது. ஆனுல் இதில் 'சொந்தக் கவிதை' இல்லை. அதற்குச் சந்தர்ப்பமோ, தேவையோ இல்லை. சுவாமிஜீயின் மறைமுகமான மேற்பார்வையில், பாபாவின் அருள் நோக்கின் கவனிப்பில் இந்த நூல் முடிவடைந்ததாகக் கருதுகிறேன் இது இவ்வளவு பெரிய நூல் ஆகுமென்று சுவாமிஜீக்கு முன்பே தெரிந்திருக்கிறது. என்னுல் ஊகிக்க முடியவில்லை. 'இவ்வளவு பெரிய புத்தகத்துக்கு விஷயம் இருக்குமா?' என்று நினைத்தேன். எழுதத் தொடங்கிய பின், சாயி நிலையத்தில் வியாழக்கிழமையன்று அன்பர்களின் எண்ணிக்கை ஏறுவதுபோல் பக்கங்களும் அத்தியாயங்களும் வளர்ந்தன. சுவாமி கேசவய்யாஜீ அருளிய குறிப்பாகிய பொருளை, கிரகிக்கத்தக்க முறையில் வாசகர்களுக்குத் தயாரித்துக் கொடுத்ததுதான் என் பணியாகும். ஸ்ரீ சாயி பாபாவின் பிரசாதத்தை சிறிதும் வீணுக்கவில்லை.

அன்று அந்த அன்பருடைய யோசனைப்படி ஐம்பது அறுபது பக்கங்கள் கொண்ட சிறு புத்தகத்தை எழுதி யிருந்தால், இன்று இந்தப் புத்தகம் எழுத ஊக்கம் எழாமல் இருந்திருக்கலாம். அப்பொழுதே ஒரு மாதிரியாக நூலை முடிக்க முயன்றிருந்தால் இவ்

வளவு விரிவாக வளர்ந்திருக்காதோ என்னவோ? ஆகையாலேயே "புத்தகம் தயாராகிவிட்டது. அச்சேறத் தாமதமில்லை" என்று எழுதியதும் அவர் மிக மகிழ்ந்து, "கால தாமதம் ஆனதற்காக கவலை வேண்டாம்" என்று பதில் எழுதினார். இதில் குற்றங் குறைகள் இருக்கலாம். குற்றம் காணுவதில் இறங்கிவிட்டால் முக்கியமான விஷயம் நம் பார்வையிலிருந்து நழுவிவிடும். தங்களிடமுள்ள குறையை உணராமல் பிறர் குறையைத் தேடுபவர்களுக்கு நான் அதிக வேலை வைக்கவில்லை என்றெண்ணுகிறேன்.

இந்த நூலைத் தயாரிக்க உதவிய எல்லோருக்கும் என் நன்றி.

மிகப் பெரிய இப்பொறுப்பை ஏற்று வஞ்சனையில்லாமல் நிறைவேற்ற, மனதார முயன்று, பயனை ஸ்ரீ சாயி பாபாவின் திருவடிகளில் சமர்ப்பித்துவிட்டேன். இதனால் நல்ல பயன் பெற்று அதை அனுபவிக்க வேண்டியவர்கள், நாடெங்கும் கணக்கின்றிப் பரவிக் கிடக்கும் ஸ்ரீ பாபாவின் பக்தர்களும் ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீயின் சீடர் குழாமும் ஆவர்.

இந்த நூலை முடித்தபின் அவர்கள் சுவாமிஜீக்கு 'சாயி மகிமை' என பெயர் இட்டார்கள். ஆம்; ஸ்ரீ சாயி பாபாவின் மகிமையே தான் ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜி.

ஓம் நமோ ஸ்ரீ சாயி ராம்

ஸ்ரீ பி. நாகேசுவர ராவ்

# புத்தகமும் அதன் உள்ளடக்கமும்

புத்தகம் எப்படி ஆரம்பமாயிற்றோ அப்படியே முடிவு பெற்றது. முதலில் உருவைச் செய்து உறுப்புகளை அமைத்து அழகு படுத்தியதன்று இது. பொதுவாக மூன்று பகுதிகள் மட்டும் முதலில் திட்டமிடப்பட்டன. முதல் பகுதியில் சுவாமி கேசவய்யாஜீயின் பிறப்பு, இளமை, கல்விப்பயிற்சி, தொழில், பக்தி மார்க்கத்தில் பிரவேசித்தது; அதாவது சுவாமி பால கேசவய்யாஜீ அவர்கள் சாயி பக்த கேசவய்யாஜியாக மாறிய நிகழ்ச்சி. இரண்டாவது பகுதியில் பக்தர்களுடைய அனுபவங்கள் சுவாமி கேசவய்யாஜீயின் கட்டுரைகள், பிரசங்கங்கள், ஸ்ரீ சாயிபாபாவைப் பற்றிய பிரசாரம் ஆகியவை மூன்றும் பகுதியாகும்.

ஸ்ரீ சாயிபாபாவை ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீ மூலமாக எளிதில் புரிந்து கொள்ளலாம். ஆனாலும் ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீயைத் தெரிந்துகொள்வதற்கு ஸ்ரீசாயிபாபாவைப் பற்றிச் சிறிது தெரிந்து கொள்ளவேண்டியது அவசியம். ஸ்ரீ சாயிபாபாவைப் பற்றித் தெரிந்து கொள்ளாமல் சுவாமி கேசவய்யாஜீயைத் தெரிந்து கொள்ள முயன்றால் ஸ்ரீபாபாவைப்பற்றித் தெரிந்துகொள்ளலாமே தவிர சுவாமிஜீயைத் தெரிந்து கொள்ள முடியாது. ஸ்ரீ சாயிபாபாவிடம் நம்பிக்கை இருந்தால் ஸ்ரீசுவாமிஜீயின் மூலம் எளிதில் விரைவில் பயனைப் பெறலாம். ஆனால் சுவாமிஜியால் பயன் பெற்றவர்களுக்கு மெதுவாகத்தான் ஸ்ரீ பாபாவிடம் பக்தியும் நம்பிக்கையும் உண்டாகும்.

ஒரு லாபத்தை விரும்பி வருகிறவர்களுடைய லட்சியம், முதலில் முக்கியமாக தாம் பெறப் போகும் லாபத்தின் மீதே லயித்திருக்கும். அந்த லட்சியம் நாளடைவில்தான் ஸ்ரீபாபாவிடம் லயிக்கும். ஆனால் ஸ்ரீபாபாவின் வழியும் அதுவே. ஆகையால் சுவாமி கேசவய்யாஜி முதலில் பக்தர்கள் வேண்டும் பயன்கள் யாவற்றையும் கொடுத்து அவர்களைப் பக்தி மார்க்கத்தில் ஈடுபடுத்துவார்.

ஸ்ரீசுவாமி கேசவய்யாஜியின் வாழ்க்கை வரலாற்றைத் தொடங்கும்முன் ஸ்ரீசாயிபாபாவைப் பற்றியும் அவர் இயற்றிய அற்புத லீலைகள் குறித்தும் சிறிது எழுதியிருக்கிறோம். ஸ்ரீபாபா புராண புருஷன் தான் என்றாலும் சரித்திரத்துக்கு எட்டாத பழைய புள்ளி அல்லர். கேட்டவுடன் தன் ஸ்தானத்தை பக்தனுக்கு அளித்துவிட்ட மகாத்மா. எந்த நிலையிலும் பக்தர்களைக் கண்ணுக்கு இரப்பையாக இருந்து காத்த எஜமானர். பகவான் ஸ்ரீ ரமண மகரிஷியைப் போலவே இவரும் தம் பதினாறும் வயதில் சித்திபெற்ற பரமாத்மா.

இப்படிப்பட்ட மகா யோகியைத் தனது இளமையிலேயே தரிசித்துத் தம் கொள்கையில் உறுதியும் நேர்மையான நடத்தையும் கொண்டவர் சுவாமி கேசவய்யாஜி. இவர் நாஸ்திகர் அல்லர். அநாத்ம வாதியும் அல்லர். கடவுளிடம் நம்பிக்கை வைத்தவர். பிறர் ஆராதிக்கும் முறையில் இவருக்கு நம்பிக்கை இல்லை. அதனாலேயே இவர் பாபாவின் அருளுக்குப் பாத்திரராகி சாயிபாபாவின் நெருங்கிய பக்தர் ஆனார். 1939 ஜூலை 1–ஆம் தேதி இரவு இவர் பாபாவைக் கண்ணாரக் கண்டார். பிறகு சுமார் இரண்டு வருடகாலம் ஸ்ரீ பாபா இவரைத் தம் சேவைக்காகத் தயார் செய்தார். அன்றுமுதல் இன்றுவரை ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீ பாபாவின் வேலைகளை ஏற்று நடத்தி வருகிறார்.

ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீயின் உத்தியோக நிருவாகத்தைப் பார்த்தோமானால் அவர் திடீரென்று பழனி முருகனுடைய அருளுக்கும் சீரடி ஸ்ரீ சாயிபாபாவின் அருளுக்கும் பாத்திரர் ஆகிவிடவில்லை என்பதும் இவர்கள் சுவாமி கேசவய்யாவை இளமையிலிருந்தே கண்காணித்து வந்திருக்கிறார்கள் என்பதும் தெரியவரும். * பாமுடி என்னும் ஊரில் பிறந்த சுவாமி பால கேசவய்யா அங்கே புராணப் பிரசித்தி பெற்ற போகேசுவர சுவாமி, சென்ன கேசவ ஸ்வாமி, ஆஞ்சநேய ஸ்வாமி ஆகிய ஆலயங்களுக்குச் சென்று அங்கங்கே தியானத்தில் அமர்ந்து விடுவார். இந்த நிகழ்ச்சிகள் எல்லாம் புத்தகத்தில் விரிவாகச் சொல்லப்பெற்றிருக்கின்றன.

ஸ்ரீபாபாவின் அருளுக்குப் பாத்திரர் ஆனபின்பு, ஸ்ரீசுவாமி கேசவய்யாஜீயும் அன்பர்களுக்குச் சேவை புரிந்து வருகிறார். இரண்டாம் பகுதியான பக்தர்களுடைய அனுபவங்களைப் படிக்கும்போது அடிக்கடி ஸ்ரீ சாயி சரிதம் நினைவுக்கு வரும். சாயி சரிதையைப் போல் இந்த நூலிலும் பக்தர்களுடைய அனுபவம்தான் முதலிடம் பெறுகிறது. சென்ற இருபது ஆண்டுகளாக சுவாமிஜீயிடம் வரும் பக்தர் எல்லோருடைய — எல்லா — அனுபவங்களையும் இதில் சேர்த்து விட்டேன் என்று சொல்லமுடியாது. அது மட்டுமா? சில பக்தர்களுடைய சில அனுபவங்கள் மட்டுமே இந்தப்பகுதியில் இருக்கின்றன. எல்லா அன்பர்களுடைய எல்லா அனுபவங்களையும் இதில் சேர்க்காததற்கு அவர்கள் விஷயம் கொடுக்காததுதான் காரணம். ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு பருக்கையைப் பதம் பார்ப்பதுபோல உள்ள விஷயத்தை அறிந்து கொள்ள இந்த ஒரு சில அனுபவங்களே போதும்.

---

* பாமுடி (பாம்பின் முடி) ஆந்திராவில் உள்ள ஒரு புண்ணிய ஸ்தலம்.

இனி மூன்றாம் பகுதியில் சுவாமிஜீயின் படைப்புகள். இவர் எழுதியவை எல்லாமே இப்பகுதியில் சேர்ந்துவிட்டன என்று சொல்லுவது தவறு. ஆனால் ஆத்மீகத் துறையில் இறங்கி குறிப்பிட்ட ஸ்தானத்தை அடைய விரும்பியவர்களுக்குத் தேவையான சாதனைகளும் விஷயங்களும் இவற்றில் கிடைக்கும். இப்பகுதி ஒருவிதத்தில் பரிபூர்ண ஆத்மீக ஞானத்தின் சுருக்கமாகும். பாமரர்களுக்கும் எளிதில் புரியும் முறையில் இவர் ஆத்மீகத் தத்துவங்களை விளக்கியிருக்கிறார். சுவாமிஜீ தொகுத்த ஸ்ரீ சாயிபாபா ஸூக்திமுக்தாவளி (நல்லுரைகள்) நட்சத்திரமாலா என்பது ஆத்மீக மாணவனுக்கு 'நோட்ஸ்' போன்றது.

சுவாமிஜீயின் படைப்புகளைச் செய்தி வாரியாக வெளியிடும் முயற்சி நடந்தது. இவற்றில், 'கூறியது கூறல்' சிறிது இருக்கலாம். இவர் தம் கட்டுரைகளை ஒரே தொகுதியாகவோ, தொடர்ச்சியாகவோ எழுதவில்லை. ஆகையால் சில விஷயங்கள் திரும்பத் திரும்ப வந்துதான் இருக்கும். ஆனால் அவை வாசகர்களுக்குப் பயனுள்ளதாகவே இருக்கும். விஷயங்களை எளிதில் மனத்தில் வாங்கிக் கொள்ளலாம். எளிதில் மறந்துவிட முடியாது.

உண்மையில் ஒவ்வொரு பகுதியும் தனித்தனி நூலாக உருவாகியிருக்க வேண்டும். இரண்டாம் பதிப்பில் அப்படிச் செய்யலாம். ஆனால் மூன்று பதிப்புகளையும் கிரகித்துக் கொண்டாலன்றி விஷயம் முழுவதும் புரியாது. அதனாலேயே ஹேமாபந்த், 'ஸ்ரீ சாயிஸத்சரித்திரத்தை 53 அத்தியாயங்களுடன், ஒரே புத்தகமாக எழுதினார். ஸ்ரீ பாபாவின் பிரவசனங்களிலிருந்தும், பக்தர்களுடைய அனுபவங்களிலிருந்தும் பாபாவின் வாழ்க்கையைப் பிரித்தால்—தனித்தனியே பிரித்தால்— பக்தர்களுடைய அனுபவங்களை வாசகர்கள் நம்பாமல் போகலாம். பாபாவின் வாழ்க்கை நம் இதயத்துடன் தொடர்பு கொண்டது. அவருடைய பிரவசனங்கள் நம் மனத்துடன் தொடர்பு கொண்டவை. பக்தர்களுடைய அனுபவங்கள் திருஷ்டாந்தமாக இருப்பதால் அவை பார்வையுடன் தொடர்பு கொண்டவை. இம்மூன்றும் ஒரே இடத்தில் கூடும்போது விஷயத்தைப் பற்றிக்கொள்வது சுலபமாக இருக்கிறது. அதனாலேயே பரிவர்த்தனை முறையில் இந்நூலைத் தயாரிக்க நேர்ந்தது.

ஸ்ரீசாயிபாபாவின் முறைகளுக்கும் சுவாமி கேசவய்யாஜீயின் முறைக்கும் எந்த வித்தியாசமும் காணப்படவில்லை. பாபாவைப் போலவே சுவாமிஜீயும் பக்தர்களுக்காக எது வேண்டுமானாலும் செய்வார். தர்மவர்த்தில் மழை இல்லாது போய்விட்ட சமயத்தில் சுவாமிஜீ பதினான்கு நாட்கள் சீரடியில் ஸ்ரீ பாபாவின் முன் உண்ணா

விரதம் மேற்கொண்டு உட்கார்ந்துவிட்டார். மழை நோடங்கிவிட்டதென்று நர்மவரத்திலிருந்து தந்தி வந்தபின்பே விரதத்தை நிறுத்தினார். இதுபோலவே, ஒரு பக்தனுக்கு நேரவிருந்த அநியாயத்தைத் தடுக்க வேண்டுமென்று பதினான்கு நாட்கள் சாகும்வரை உண்ணா விரதமென்று துவங்கிவிட்டார். மற்றொரு பக்தனைக் கஷ்டங்களிலிருந்து கரையேற்றுவதற்காக ஏழு வியாழக்கிழமைகள் தாமே பூஜித்தார்.

ஸ்ரீ பாபாவைப் போலவே சுவாமிஜீயும் பக்தர்களுடைய நோயை ஏற்றுத் துன்புற்ற சந்தர்ப்பங்கள் உண்டு. பலருக்கு சுவாமிஜீ எல்லாம் வல்ல சத்குரு ஆவார். பக்தர்கள் எவ்வளவு தூரத்தில் இருந்தாலும் அவர்களுடைய மனத்தை அறிந்து அவர்களுடைய விருப்பங்களை நிறைவேற்றி வைக்கிறார். பக்தர்கள் தவறான வழியில் சென்றால் பாபாவைப் போலவே இவரும் மனிதர்களை அனுப்பி அவர்களை நல்வழிப் படுத்துகிறார். இந்தக் காரணங்களாலேயே ஸ்ரீ சாயிபாபாவைத் தரிசிக்காதவர்களுக்கு சுவாமி கேசவய்யாஜி பிரத்தியட்ச பாபா என்றேன். அப்படிப்பட்ட மகிமை பெற்றவருடைய வரலாறு இது.

தேசீயப் பெருந்தலைவராய் இருந்த ஸ்ரீ பால கங்காதர திலகரிடம், ஸ்ரீ சாயிபாபா, "பாரத நாடு அடிமைத் தளையிலிருந்து விடுபட்டுப் பூரண சுதந்திரம் பெறும்; நீ கவலைப் படாதே" என்று 1914 — 17 இன் இடைக்காலத்தில் சொல்லியது போல், அதே கருத்தை சுவாமிஜீயும் அதே காலத்தில் தமது பதினான்காம் வயதில் தம் உபாத்தியாயரிடம் சொல்லியிருக்கிறார். அது காக்கையேறப் பனம் பழம் விழுந்த கதையாய் இருக்கலாம். ஆனாலும் கவனிக்க வேண்டிய நிகழ்ச்சி. பாரதத் தேசீயத் தலைவர்கள் கடைசியாகச் சிறையில் இருந்தது அஹம்மத் நகர்க் கோட்டையில். அங்கேதான் காந்தி மகான் சாகும்வரை உண்ணாவிரதம் மேற்கொண்டு, அதன் பிறகு சிறையிலிருந்து விடுபட்டு நாட்டு விடுதலைக்கு வழி கோலினார். காந்திஜீ பாரத தேசீய அரங்கில் நுழையும் சமயத்திலேயே ஸ்ரீசாயிபாபா மகா சமாதி ஆனதும் காக்கையேறப் பனம் பழம் விழுந்தது போலத்தான். ஸ்ரீ சாயிபாபா ஹிந்து, முகம்மதியர்களை ஒற்றுமைப் படுத்தவே வாழ்ந்து வந்தார். இந்த இரு சாராருக்கும் இடையில் நட்பையும் ஒற்றுமையையும் வளர்ப்பதற்காக மகாத்மா காந்தி தன் உயிரையே கொடுத்தார். ஆத்மீகத் துறையில் ஸ்ரீ சாயிபாபா செய்தவற்றையே அரசியல், பொருளாதார, சமூகத் துறைகளில் காந்திஜீ செய்திருப்பதாகத் தோன்றுகிறது. பாபாவிடத்திலும் காந்திஜியிடத்திலும் கோடீசுவரர்களும் ஏழைகளும் வந்து சேர்ந்தனர். இருவரும் அவர்களைச் சமமாகத்தான் கண்டார்கள். இப்

படி ஸ்ரீ சாயிபாபா எல்லோருக்கும் மிக வேண்டியவர் ஆனார். அவருடைய பக்தரான சுவாமிஜிக்கும் எல்லோரும் மிக நெருங்கியவர்கள் ஆனார்கள்.

இந்த உண்மைகளை விளக்கி, அவசியமான சந்தர்ப்பங்களில் நிரூபிக்க முயன்றிருக்கிறேன். அது எந்தமட்டும் பயன் பெற்றதென்பதையும், அதனால் எவ்வளவு லாபம் ஏற்பட்டதென்பதையும் பற்றித் தீர்ப்பளிக்க வேண்டியவர்கள் வாசகர்களே.

நூலை எளிதில் படிக்கத்தக்க முறையிலேயே எழுதியிருக்கிறேன். ஆத்மீக விஷயங்களில் எல்லோருக்கும் கவர்ச்சி ஏற்படாது. கீதையைப் படித்து விஷயத்தை உணர்ந்து நடப்பவர்கள் வெகு சிலரே. கிருஷ்ண லீலையைப் படித்து மகிழாதவர்கள் இல்லை. அதைப் போலவே இந்த நூலும் அமைந்திருக்கும் என்று நம்புகிறேன். லீலையை அறிந்து மகிழ்வதால் நாளடைவில் சாசுவதமான ஆனந்தத்தைப் பெறலாம், அதைத்தான் சாயிபாபா சொல்லியிருக்கிறார்.

பகவானுடைய லீலையைச் சிறிது உணர்ந்து ஆனந்தம் பெறுவதாலும் பயனை அடையலாம், வாசகர்கள் இந்த நூலைப் பொழுது போக்காகப் படித்தாலும் அது போன்ற பயனைப் பெற முடியும். நடுக்கடலில் புயலில் அகப்பட்டக் கப்பலுக்குக் கலங்கரை விளக்கம் தெரிந்தவுடனே கரை சேர்ந்துவிட முடியாது. ஆனால் அந்த ஒளி தெரிவதால் கரையென்று ஒன்று இருக்கிறதென்னும் நம்பிக்கை ஏற்பட்டு எப்படியும் அங்கே சென்று விடுவோம் என்ற ஆசை உண்டாகும். இந்த நூல் குறைந்தது அது போன்ற நம்பிக்கையையும் ஆசையையும் உண்டாக்கினால் என் உழைப்புப் பயன் பெற்று, பயனால் லாபம் அடைந்ததாகக் கருதுவேன்.

———

# புத்தக விமரிசனம்

## டெக்கான் கிரானிகள், ஹைதராபாத். 6-2-'68

தம் பக்தியினாலும், ஆத்மிக சாதனைகளாலும் நம் நாட்டில் பல்லாயிரம் மக்கள் மனத்தில் ஆத்ம விழிப்பை உண்டாக்கிய மகான்களுள் சீரடி சாயிபாபாவும் ஒருவராவார். இன்று சாயி பாபா உயிரோடு நம்மிடையே இல்லை என்றாலும் அவருக்கு சமான மான மகான்கள் நம்மிடையே இருக்கிறார்கள். அவர்கள் தங்கள் வாழ்க்கையைப் பக்திக்கும் ஆத்மீக முன்னேற்றத்துக்கும் அர்ப் பணித்துக்கொண்டு பாபாவின் உபதேசங்களைப் பரப்பியவண்ணம் பாபாவின் நினைவு மறவாமல் காத்து வருகிறார்கள். இப்படிப்பட்ட மகான்களுள் சென்னை, ஷெணாய் நகர் சுவாமி கேசவய்யாஜியும் ஒரு வர். ஷெணாய் நகரில் உள்ள இவர் வீடு தென்னாட்டு சீரடியாக வெகு நாட்களாக இருந்து வருகிறது. ஆத்மீக ஆவல் பெற்ற பல பக்தர்கள், கேசவய்யாஜீயை நாடிச் சென்று மோட்ச மார்க்கத் தைப் பற்றி அவரிடமிருந்து உபதேசம் பெறுகிறார்கள். உடல் நோயாலும், மன நோயாலும் வருந்திய பலர் சுவாமிஜீயிடம் சென்று குணமடைந்திருக்கிறார்கள்.

சுவாமி கேசவய்யாஜீயின் வாழ்க்கை வரலாறு பற்றிய புஸ் தகத்தை வெளியிட்டு ஆத்மீகத் துறையில் அவர் செய்துவரும் சேவைகளை மக்களுக்கு எடுத்துக்காட்டிய ஸ்ரீ ஜி. வி. ஆர் நாயுடு வைப் பாராட்டுகிறோம்.

ஸ்ரீ பி. நாகேசுவர ராவ் என்பவர் எழுதிய இந்தப் புத்தகம் சுமார் 300 பக்கங்களைக் கொண்டது. இது சுவாமி கேசவய்யா ஜீயின் வாழ்க்கை அம்சங்களைப் பற்றியெல்லாம் நன்கு கூறுகிறது. அவருடைய ஆரம்ப வாழ்க்கை முதல் சப்ரிஜிஸ்திராராக இருந்த அவர் சுவாமி கேசவய்யாஜீயாக ஆனதுவரை தொடர்ந்து கூறு கிறது. ஆத்மீக சம்பந்தமாக சுவாமிஜி எழுதிய சில நூல்களும் இதில் இடம் பெறுகின்றன.

# ஸ்ரீ சாயி மகிமை

## (ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீயின் சரிதை)

*(தெலுங்கில் எழுதியவர்: ஸ்ரீ பண்டிதாராத்யுல நாகேசுவர ராவ். வெளியீடு: ஸ்ரீ சாயி பாபா சேவா சமாஜம், மார்கெட் வீதி, செக்கந்தராபாத். விலை ரூபாய் 3—00)*

*அவதார புருஷனுய் லட்சக் கணக்கான பக்தர்களால் பல வருடங்களாக பூஜிக்கப்பெற்று வரும் சீரடி ஸ்ரீ சாயி பாபா, தம் உபதேசத்தைப் பிரசாரம் செய்வதற்காகத் தூதராகத் தேர்ந்தெடுத்தவர்களுள் ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீ பிரசித்திப் பெற்றவர். 1939ம் ஆண்டிலேயே ஸ்ரீ கேசவய்யாஜீக்கு சாயி பாபா தரிசனம் கொடுத்துத் தம் பிரதிநிதியாக நியமித்தார். அன்று முதல் ஸ்ரீ சாயி மகிமையின் மறு பெயராக ஸ்ரீ கேசவய்யாஜீயின் வாழ்க்கை அமைந்து விட்டது.*

*இந்திய சம்பிரதாயத்தில் மதத்தைவிட பக்தி உயர்ந்தது. இக பரங்களுக்காக எல்லோரும் எப்பொழுதும் ஏங்கினுலும் அதற்காக உழைக்கவில்லை. அவற்றை சாதிப்பதற்குக் குறுகிய வழி பக்தியாகும். நமக்கு மதம், வாழ்க்கை, தத்துவ ஞானம் ஆகிய மூன்றும் வெவ்வேறல்ல. இம்மூன்றும் திரிவேணியாகப் பின்னிக் கொண்டிருப்பதே பாரதிய ஆத்மா. ஆத்மக் கட்டுப்பாடுள்ள ஒவ்வொரு மனிதனும் ஆத்ம தரிசனம் காண முடியும். ஆத்ம தரிசனம் கண்ட ஒவ்வோர் இந்தியனும் தத்துவத்தை அறிந்தவனே. பாரமார்த்திகச் சிந்தனையால் தத்துவத்தை தேடுபவன் ஆகிருன். கர்ம சித்தாந்தத்தை அப்படியே எழுத்துக் கெழுத்து அனுசரிக்கும் சம்சாரிக்கு பகவானைத் தரிசிக்கும் எளிய வழி பக்தியாகும். அதையே ஸ்ரீ சாயி பாபாவும், ஸ்ரீ கேசவய்யாஜீயும் போன்ற பரம பக்தர்கள் பக்த குழாத்திற்கு அளித்திருக்கிருர்கள்;—அளித்து வருகிருர்கள்.*

*எம்மதமும் நமக்குச் சம்மதமே. ஆனுல் அது மனிதத் தன்மைக்குப் பிரதிபிம்பமாக இருக்க வேண்டும். அதனுலேயே புராணத் தெய்வங்களை விட, மனிதர்களாகப் பிறந்து, பெருமையை சம்பாதித்துத் தம் போன்ற மானிடர்களுக்குக் கரையேறும் வழி காட்டிய ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர், விவேகானந்தர், ரமண மகரிஷி, சாயி பாபா, கேசவய்யாஜீ ஆகியோர் மனிதர்களுக்கு நெருங்கியவர்கள் ஆனுர்கள்.*

ஸ்ரீ கேசவய்யாஜீ தவச் செல்வர். தத்துவ ஞானி. சாயி பாபாவின் பொன்மொழிகளை பிரசாரம் செய்வதே அவருடைய வாழ்வின் உயர்ந்த குறிக்கோள். அவருடைய அனுபவ வடிவங் களுக்கு எழுத்து வடிவம் கொடுத்த ஸ்ரீ பண்டிதாராத்யுல நாகேசு வர ராவ் பெயர் பெற்ற எழுத்தாளர். முப்பது ஆண்டுகளாக அரசியல், பொருளாதாரம், சமூகம் ஆகிய விவகாரங்களை விமரிசிப் பதில் அவருடைய பேனா தேய்ந்துவிட்டது. ஆனால் அது இங்கே— ஆத்மீக விஷயத்தில், உருகிப்போய் இரண்டறக் கலந்துவிட்டது என்றே சொல்ல வேண்டும். சுவாமிஜீயின் தூண்டுதலும், குற்ற மற்ற உள்ளமும் இதுபோன்ற நல்ல (பக்தி) நூல் இயற்றுவதற்கு இனிமையின் நிறைவைக் கொடுக்கின்றன.

முன்னூறு பக்கங்கள் கொண்ட இந்நூலில் ஸ்ரீகேசவய்யாஜீயின் மகிமைகள் ஒவ்வொரு பக்கத்திலும் காணப்படுகின்றன. இதைப் பார்த்தால், நேரில் சாயி பாபாவைத் தரிசிக்காதவர்களுக்கும், தரி சிக்க முடியாதவர்களுக்கும் இருந்த இடத்திலேயே தரிசனம் கிடைக்கும். அது கிடைக்க வேண்டும் என்று விரும்பினால் இச்சிறந்த நூலைப் பற்றி சிறத்தையுடன் படித்தால் போதும் என்பது என் கருத்து.

ஸ்ரீ சாயி பக்தர்களுள் ஸ்ரீ கேசவய்யாஜீயின் பக்தர்கள் எல் லோரும் பத்தியுடன் படிக்க வேண்டிய நூல் இது. விசேஷ அனு பவங்களுடனும் பக்தியுடனும் சுவாமிஜீயின் சரிதையை எழுதிய ஸ்ரீ நாகேசுவர ராவின் உழைப்பு மிகவும் பாராட்டத் தக்கது.

**சார்வரி**

“ஆந்திரப்பிரபா”, 24-1-’68

டெக்கான் ஹெறரால்டு (ஆங்கில தினசரி)
பெங்களூர், ஞாயிறு 4-2-1968

## சீரடி சாயி பாபாவின் சிறந்த பக்தர்

பக்தி, ஆத்ம ஸமர்ப்பணம் ஆகிய உபதேசங்களை மக்களுக்கு வழங்குவதற்காகவே இந்த நூற்றுண்டின் தொடக்கத்தின் முன்பே நம் நாட்டில் அவதரித்த பெரிய மகான் சீரடி சாயி பாபா என்பது அவருடைய பக்தர்களின் கருத்து.

அவர் கடவுளிடம் பக்தி செலுத்துவதையே வற்புறுத்தினர். அவர் ஒரு சிறந்த புருஷர்; அவர் பல அற்புதங்கள் செய்ததாகத் தெரிகிறது, அவரால் மன ஆறுதலும், நோய் நீக்கமும் பெற்ற பக்தர்கள் மிகப் பலராவர். ஜாதி, மத பேதமின்றி மக்கள் அவரை நாடுகிறுர்கள்.

இதன் முதற் பகுதி அவர் ஓர் அவதார புருஷர் என்பதைப் பற்றிப் பேசுகிறது.

இரண்டாம் பகுதியில் சுவாமி கேசவய்யாஜீயின் வாழ்க்கை வரலாறும் அவர் இயற்றிய நூல்களும் இடம் பெறுகின்றன. சீரடி சாயி பாபாவின் பிரதம சீடர் ஸ்ரீ கேசவய்யாஜீ என்பது பலர் கருத்து. அனந்தப்பூர் ஜில்லாவில் படித்த அவர் சென்னை ராஜஸ் தானியில் ரிஜிஸ்திரேஷன் ஆபீஸ் குமாஸ்தாவாக சேர்ந்தார். பிறகு சப்ரிஜிஸ்திரார் ஆனுர். தம்முடைய திறமைமிக்க யோக்கிய மான வேலையால் அவர் அதிகாரிகளின் பாராட்டுக்களைப் பெற்றுர். இதே அதிகாரிகள் பின்னர் அவர் சீடரானுர்கள்.

என்றைக்கு சுவாமி கேசவய்யாஜி ஸ்ரீ சாயி பாபாவைப் பற்றி ஒரு நண்பரின் மூலம் கேள்விப்பட்டாரோ அன்றே சாயி பாபா அவர் கனவில் தோன்றித் தன் உபதேசங்களையும், தம் கொள்கை களையும் மக்களிடையே பரப்பும்படி சுவாமிஜீக்குக் கட்டளையிட் டார். சில கவர்னர்கள். பல மத்திய ராஜ்ய மந்திரிகள், உயர்ந்த உத்தியோகஸ்தர்கள் உள்ளிட்ட பலதரப்பட்டோர் இவருடைய சீடர்கள். ஸ்ரீ பி. வி. நரசிம்ம சுவாமி, சுவாமி கேசவய்யாஜீயைப் பாராட்டிய பகுதி ஒன்றும் இப்புத்தகத்தில் இடம் பெறுகிறது.

மூன்றுவது பாகத்தில் சுவாமி கேசவய்யாஜீ, பக்தர்களுக்கு செய்த உபதேசங்கள் அடங்கி இருக்கின்றன. புத்தகத்திலேயே மிகவும் பயனுள்ள பகுதி இதுதான். இதைப் பலமுறை படித்தா லும் பலன் உண்டு.

இந்த நூல் ஆசிரியர் முப்பது ஆண்டுகளாகப் பத்திரிகைத் தொழிலில் அனுபவம் உள்ளவர்; அரசியல், பொருளாதாரம், சமயம் முதலியவைபற்றிய பல நூல்களுக்கு ஆசிரியர். இவர் சரளமாக எழுதுவதில் வல்லவர்.

இதில் பல அச்சுப் பிழைகள் இருப்பதாகவும் அடுத்த பதிப்பில் அவற்றை நீக்கிவிடுவதாகவும் பிரசுரித்தவர்கள் சொல்கிறார்கள். இதில் ஆர்ட் பேப்பர்ப் படங்கள் பல இருக்கின்றன. புத்தகம் பொதுவில் நன்றாக அமைந்திருக்கிறது.

பெயர்: ஸ்ரீ சாயி மஹிமா. சுவாமி கேசவய்யாஜீயின் வாழ்க்கை வரலாறு.

ஆசிரியர்: பி. நாகேச்வர ராவ்.

பிரசுரம்: ஸ்ரீ சாயி பாபா சேவா சமாஜம், மார்க்கெட் தெரு, செக்கந்தராபாத்.

விலை: ரூபாய் 3-00.

விமர்சகர்: **ஆர். ஸ்ரீ கண்டேச்வர ராவ்.**

---

சண்டே ஸ்டாண்டர்டு
28-1-'68

## சமீபத்தில் வெளிவந்த தெலுங்குப் புத்தகங்கள்

ஸ்ரீ சாயி மஹிமா: ஆசிரியர் பி. நாகேச்வர ராவ்; ஸ்ரீ சாயி பாபா சேவா சமாஜம்; செக்கந்தராபாத். ரூபாய் 3-00.

சென்ற சில தலைமுறைகளுக்குள் ரமண மகரிஷியை விட்டுவிட்டால் அடுத்தபடியாக மிகப் பலர் மனத்தில் இடம் பெற்றவர் சாயி பாபா என்றுதான் சொல்ல வேண்டும். ஸ்ரீ ரமணரின் சீடர்கள் அவரைப் 'பகவான்' என்று வழிபடுவதைப் போலவே பாபாவின் சீடர்களும் பாபாவை 'அவதார புருஷன்' என்று வழிபடுகிறார்கள். இருவரும் தமக்கென்று ஒரு கிளைச் சங்கம் வகுத்துக் கொண்டார்கள். ஆனால் அவர்கள் உபதேசங்களின் முடிவான லக்ஷியம் ஒன்றுதான். இந்த இரண்டு குருமார்களின் ஒளியும் அவர்களின் உபதேசங்களின் எளிமையும் பல்லாயிரம் மக்களை அவர்கள்பால் இழுத்தன.

ஸ்ரீ சாயிபாபாவின் சிறந்த பக்தரான சுவாமி கேசவய்யாஜீயின் வாழ்க்கைபற்றிய விவரங்களை எல்லாம் இந்தப் புத்தகத்தில் காணலாம். அத்துடன் ஸ்ரீ சாயி பாபாவின் சித்திகளைப்பற்றியும் இது நிறையப் பேசுகிறது. பாபாவின் விபூதியால் ஏற்பட்ட பல அற்புதங்களைப் பற்றி இது சொல்லுகிறது.

இந்தியாவின் உதவி ஜனாதிபதியான ஸ்ரீ வி. வி. கிரி அவர்கள் இதற்கு ஒரு முகவுரை தந்திருக்கிறார். சாயி பாபாவின் உபதேசத்தில் நம்பிக்கை உள்ளவர்களுக்கு இந்தப் புத்தகத்தை சிபாரிசு செய்கிறார். சீரடி மகானின் கொள்கைகளைப் பரப்புவதில் சுவாமி கேசவய்யாஜீ வெற்றி பெற வேண்டும் என்றும் அவர் விரும்புகிறார்.

---

**ஸ்ரீ சாயி மகிமா (தெலுங்கு)**
*ஆசிரியர்: ஸ்ரீ பி. நாகேச்வர ராவ்.*

## தெய்வீகக் குரல் ... The Call Divine

*1 - 2 - 1968 — விமர்சனம்*

*மிகச்சிறந்த சாயி பக்தரான சுவாமி கேசவய்யாஜீயின் ரசமான அனுபவங்களைப் பற்றி இது கூறுகிறது. சீரடி சாயிபாபாவின் பெயர் இன்று எல்லா வீடுகளிலும் ஒலிக்கிறது. அவரது ஆத்மீகச் சக்தி எங்கும் நிறைந்திருக்கிறது. கேசவய்யாஜி ஸ்ரீபாபாவின் மிகச்சிறந்த பக்தர். இவர் ஒழுங்காக நடத்தும் சாயி பூஜைக்குப் பலர் வருகிறார்கள். இவர் ஒரு சப் ரிஜிஸ்திராராக இருந்தார். திடீரென்று சாயி பாபாவைச் சரணடைய வேண்டும் என்ற எண்ணம் இவருக்கு ஒரு நாள் உதித்தது. அன்றுமுதல் இன்றுவரை அவர் பாபாவின் அருந் தொண்டராக இருந்துவருகிறார். அவரின் ரசமான அனுபவங்கள் பலவற்றை இதில் காணலாம். சாயிபாபாவின் வளரும் வரலாற்றுக்கு இதுவும் உதவும். சென்னை ஷெனாய் நகரில் உள்ள சாயி நிலையத்தில் இவர் வெகு சிறப்பாகப் பூஜை செய்துவருகிறார். இது 300 பக்கங்கள் கொண்டது (டெமி சைஸ்). இதில் சாயிபாபாவைப் பற்றியும் அவர் தம் பக்தர்களைக் காப்பது பற்றியும் பல செய்திகள் அடங்கியுள்ளன. விலை ரூ. 3-00 ஸ்ரீசாயிபாபா சேவா சமாஜம், மார்க்கெட் தெரு, சிக்கந்தராபாத், (ஆ. பி.) என்ற விலாசத்தில் கிடைக்கும்.*

## புத்தக விமர்சனம்

"மெயில்" சென்னை. 10—6—68

ஸ்ரீ ஸாயி மஹிமா: (தெலுங்கில் ஸ்ரீகேசவய்யாஜீயின் வரலாறு)

ஆசிரியர்: பி. நாகேச்வர ராவ், ஸ்ரீசாயிபாபா சேவா சமாஜம்

தம் பக்தர்களின் லௌகீக ஆத்மீகக் கவலைகளை மாற்றுவதில் புகழ்பெற்ற ஸ்ரீசாயிபாபாவை ஓர் அவதாரமாகவே கருதுகிறார்கள். பாபா என்ற சொல் அவர் கௌரவத்தையும் கஷ்டப் படுகிறவர்களிடம் அவர் காட்டும் தந்தை போன்ற கருணையையும் சுட்டுகிறது. தம்மை நாடுபவர்களின் கஷ்டங்களைத் தீர்த்தபிறகே அவர் பக்தியை எதிர்பார்த்ததாகத் தெரிகிறது. ஸ்ரீசாயி பக்த சுவாமி கேசவய்யாஜீயின் மூலமாக சாயிபாபா எவ்வளவு அற்புத சிகிச்சைகள் புரிந்திருக்கிறார் என்பதை சாயி மகிமா சொல்லுகிறது. சித்தியடைந்த முப்பது ஆண்டுகளுக்குப் பின் சாயி பாபாவின் கடாட்சம் அனந்தப்பூர் ஜில்லாவில் சப் ரிஜிஸ்திராராக வேலை பார்த்து வந்த ஸ்ரீகேசவய்யாஜீயின் மேல் விழுந்தது. அவரே தம் உபதேசங்களைப் பரப்பத் தகுதியானவர் என்று பாபா நினைத்தார். சென்னையிலும் ஆந்திராவிலும் பாபாவின் உபதேசங்களைப் பரப்பிய பெருமை ஸ்ரீ கேசவய்யாஜீயையே சாரும். இப்போது ஷெணாய் நகர் சாயி நிலையத்திலிருந்து தம் சேவையைச் செய்து வருகிறார். கேசவய்யாஜியின் வாழ்க்கை வரலாறு, பக்தர்களின் அனுபவங்கள், கேசவய்யாஜியின் நூல்கள், பிரசங்கங்கள் இவற்றை இந்தப் புத்தகத்தில் காணலாம். அனுபவம் மிக்கப் பத்திரிகைக்காரரான ஆசிரியர் இதை ரசமாகவும் படிக்கத் தக்கதாகவும் ஆக்கியுள்ளார்.

———



ஸ்ரீ சுவாமி நேசவய்யாஜீ சாயி நிலயத்தில் பூஜை செய்தல்

ராஜ்பவன்,
பெங்களூர்,
18-11-1966

ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீயை எனக்கு வெகு நாட்களாகத் தெரியும். அவர் ஸ்ரீ சாயி பாபாவின் சிறந்த பக்தர். நாட்டு மக்களின் ஆன்மீக வளர்ச்சிக்காக அவர் சேவை செய்து வருகிறார். மகான் சாயி பாபாவின் உபதேசங்களை அவர் பின்பற்றுகிறார்.

ஸ்ரீ சாயி பாபாவின் பக்தர்களுக்கு அவர் செய்துவரும் சேவையில் அவருக்குப் பூரண வெற்றி கிடைக்க வேண்டுகிறேன்.

**வி. வி. கிரி**
மைசூர் கவர்னர்

# நூன்முகம்

உலகத்திலே மகான்கள் அவ்வப்போது தோன்றி மக்களை நல்வழிப்படுத்துகிறார்கள். அவர்கள் எப்போது வருவார்கள், எந்த வேடத்தில் வருவார்கள் என்று கூறஇயலாது. ஆனால் உலகம் உய்ய தோன்றிய ஞான்று, சூரியன் எழும்போது பிரகாசம் காணப்படுவதுபோல், அவர்கள் தூய்மையும் அன்பும் நிலவும். கண்ணை மூடிக் கொண்டிருப்பவர்கட்கு சூரிய ஒளி தென்படாது. விழித்தால்தான் ஒளி விளங்கும். எனவே விழித்திருப்பவர்களே தெய்வீகப் புருடர்களின் வருகையை அறிந்துகொள்ள இயலும். அத்தகைய புருடர்கள் உலகை உய்விக்கத் தாம் வந்துள்ளதாகவும் உபதேசங்கள் செய்யப் போவதாகவும் விளம்பரம் செய்துகொள்ள மாட்டார்கள். அவர்கள் நம்மை நாடி வந்தவர்களே. எனினும் நாம் அவர்கள் அருளுக்கு ஆளாக வேண்டும். 'சீரடி' என்ற சிற்றூரில் ஸ்ரீ சாயி பாபா வந்தபோது அவர் யார், என்ன என்பதை ஒருவரும் அறியவில்லை. பிறகு அந்த பெருமானின் அன்பையும், இரக்கத்தையும் மக்கள் உணர்ந்தார்கள். எளிய பரதேசி கோலத்தில் வந்தவர், கையேந்தி பிச்சை வாங்கி, எளியவர்க்கும், நாய்க்கும், காக்கைக்கும் போட்டு தான் சிறிது உணவு அருந்தியதின் மர்மம் என்ன? இறைவன் அன்பை தேடுவதற்கு முக்கிய சாதனம் எளியோர்க்கும், வறியோர்க்கும் 'நொய்யில் பிளவளவேனும்' தந்து தாம் உண்ண வேண்டுமென்பதே. எல்லா உயிர்களிலும் இறைவன் உறைகிறான் என்ற தத்துவத்தை சாத்திரங்களில் எவ்வளவு படித்தாலும், உணர்வில் வராது. ஸ்ரீ இராமலிங்க அடிகளாரும் முக்கியமாக போதித்த உண்மையும் ஏழைகளுக்கு பகிர்ந்து கொடுத்து தாம் உண்ண வேண்டுமென்பதே. ஸ்ரீ பசவேசுவரரும் ஐந்து நூற்றாண்டுகட்கு முன் இந்த உண்மையையே வற்புறுத்தினார். "கற்சிலை நாகங்கட்கு பால் வைத்து படைக்கிறார்கள். சிலைகள் பாலை உண்டால் சிறிது கூட வைக்க மாட்டார்கள்; ஓட்டம் பிடிப்பார்கள். அந்தோ, என்ன மடமை!" என்றார்.

ஸ்ரீ சாயி பாபா ஒருசமயம் தமக்குக் கொடுத்த கோதுமையை ஊர்ப் பெண்கள் மா அரைத்துக் கொடுத்தார்கள். பாபாவை "உங்களுக்கு ஏன் இத்துணை மாவு? எங்களுக்கு கொஞ்சம் கொடுங்கள்" என்று விளையாட்டாக கேட்டார்கள். பாபா, "அது முடியாது. அத்துணை மாவையும் ஊருக்கு வெளியில் எடுத்துக்கொண்டு போய் கொட்டிவிடுங்கள்" என்று கூறினார். இதில் என்ன உண்மை? நமக்குக் கீழான எத்தனையோ சீவ கோடிகள் இருக்கின்றன. அங்கும்

இறைவன் உள்ளான். அதை மறக்கலாகாது என்பது. திருநாவுக்கரசு நாயனார் "தயையே மூல தர்மம்" எனக் கூறினார். அத்தகைய தயை வேறுபாடற்றிருத்தல் வேண்டும். அதுதான் 'சர்வ தயை'. இதன் அடிப்படையில்தான் பாபாஜி தன்னிடம் வந்தவர்கள் யாவர்க்கும் இதமே செய்தார். நோயால் பிடிக்கப்பட்டவர்களையும், குடும்ப இன்னல் பட்டவர்களையும் அவர்கள் குறைகளைத் தெய்வீக சக்தியால் தீர்த்து சாந்தியை அளித்தார். அவர் தமது சித்து விநோதங்களைக் காட்ட விரும்பவில்லை. அவைகள் தாமே வெளிப்பட்டன!

பாபாஜி தெய்வநம்பிக்கையில் மக்களை ஈடுபடுத்தினார். ஸ்ரீ ராம நவமி வைபவத்தையும் 'முகரம்' உத்சவத்தையும் பிணைத்து மக்களை கொண்டாடச் செய்தார். இறைவனே ஆண்டான்; நாம் அடிமைகள், என விளக்கினார். "அல்லா மல்லிக்" என்ற வசனத்தை அவர் அடிக்கடி கூறுவாராம். குரு விசுவாசத்தையும் புகட்டினார். தாம் மறைந்து போனாலும் என்றும் தன் அடியார்களுடன் இருப்பேன் என்று பிரமாணம் செய்தார். அவர் திரிகால ஞானி. வரப்போகும் பல செய்திகளை தம் சீடர்க்கு குறிப்பாக உணர்த்தி அதிசயிப்பார். சமீப காலத்தில் விளங்கிய நாராயணவரம் சுரைக்காய் சுவாமிகளும் இத்தகையவர் என்பது நமக்குத் தெரியும். பாபாவும் அவரைப்போல் ஒன்றும் தெரியாதவர்போல் சொற்ப உடையும், சட்டியும் தாங்கி, நாய் தொடர்ந்துவர பிச்சைவாங்கி பெற்றதில் பிடி அளவே உண்டுவந்தார்.

அவர் சந்நிதியில் சாந்தம் நிலவிற்று. படித்தவர்களும் பாமரர்களும், ஆணும் பெண்ணும், அவரை நாடி தம் குறைகளைக்கூறி ஆறுதல் பெற்றார்கள். ஏசுநாதரும் அப்படியே உலகத் தொண்டு புரிந்தவர். பாபாஜீ ஏதோ ஒரு புது சமய இயக்கத்தையோ அல்லது குறிப்பிட்ட ஒரு தெய்வ வழிபாட்டையோ பரப்பவில்லை. எல்லோர்க்கும் ஒரு கடவுள், எல்லாரும் ஓரே இனம் என்பதை விளக்கினார். அன்பும் இரக்கமுமே உண்மை சமயம் எனப் புகட்டினார்.

இத்தகைய மகானின் நினைவுகளையும், செய்கைகளையும் சிந்தித்தாலும் அவரை கை கூப்பி அஞ்சலி செய்தாலும் இன்பம் தரும். அவர் காட்டிய வழியை சிறிதளவேனும் பின்பற்றினாலும் உயர்வடையலாம். இறைவன் நமக்கு இந்த தேகத்தை அளித்து அறிவு முதலானவைகளைத் தந்தது சிற்றின்பங்களை தேடுவதற்கல்ல. பாபாஜி ஒருசமயம் பலநாள் ஓரடி அகலமுள்ள பரணில் படுத்து உறங்கினாராம். இது எதைக் காட்டுகிறது? உடலின்பம் உடல்

விழும்வரைகூட இருக்காது. உடல் விழுந்தபின் உயிருக்கு ஆதாரம் எது? உடலை மறந்தபோது தான் மெய்யுணர்வு உதிக்கும். உடலை மறந்தாலும், 'நான்', 'எனது' என்ற பிணி தீராது. அவைகளும் அற்றுப்போனால்தான் ஒருவன் 'ஸ்திதப் பிரஞையை' அடைகிறான். அந்த நிலை பக்தி ஞானங்களுக்கும் அதீதமான தத்துவ நிலை. அந்த நிலை திருவருள் கூடிய ஞான்றுதான் உதிக்கும். அதை சத்திநி பாதம் என்றும் கூறுவதுண்டு.

இப்படி திருவருளையும், குருவருளையும் மக்களுக்கு தேடித் தரு வதற்கே பல நிலையங்கள் உள்ளன. அதில் சிறந்ததொன்று ஸ்ரீ கேசவய்யர் சுவாமிஜி அவர்களால் நடத்தப்பட்டுவரும் சென்னை ஷெணாய்நகரில் அமைக்கப்பட்டுள்ள **ஸ்ரீசாயிபாபா பக்த சமாஜம்.** ஸ்ரீ சுவாமிஜி அவர்கள், அன்பின் உருவம். மிதமான பேச்சுடை யவர்கள். இதமான நெஞ்சுடையவர்கள். இரக்கங்கொண்ட இத யம் உள்ளவர். நிர்வாகத்தில் படாடோபம் இல்லாதவர். மக்களை பதவி, குலம், பணம் முதலியவை கொண்டு பாராட்டாது எல்லோ ரையும் அணைத்து ஸ்ரீ சாயி பாபா பக்தியில் ஆற்றுபடுத்துபவர். இத்தகைய அந்தண்மை கூடிய சுவாமிஜீயின் நட்பை யாவரும் பெற விரும்புவார்கள். எத்தனையோ இடர்பாட்டுக்கு இடையே சமா ஜத்தின் வைபவங்களை நியாயமாகவும் அமைதியாகவும் சுவாமிஜி நடத்தி வருகிறார். அவரைக் காண்பதுவும் நன்று. அவரோடு பேசுவதும் நன்று. அவருக்கு ஒரே ஒரு ஆசை. ஸ்ரீ சாயி பாபா சமாஜத்துக்கு நிரந்தரமான ஒரு கட்டடத்தைக் கட்டி முடித்து பக்தர்களுக்கு சௌகரியம் செய்யவேண்டுமென்பதே. பிரதி குரு வார பூஜைக்கு நூற்றுக் கணக்கான மக்கள் வருகிறார்கள். அது போலவே பாபாஜி மகாசமாதி குரு பூசைக்கும், ஸ்ரீ இராம நவமி வைபவங்களுக்கும். சீரடியில் பக்தர்கள் கூடி எத்தனையோ சௌகரி யங்களை செய்துள்ளார்கள். ஷெணாய் நகர் சீரடியின் சின்னமாகத் திகழ வேண்டுமென்பது சுவாமிஜீயின் கருத்து. இறைவன் அரு ளாலும், குருவருளாலும் இது கடிதில் இனிது நிறைவேற வேண்டும் என்று பிரார்த்திப்பதே இந்த நூன்முகத்தின் உட் குறிப்பாகும். இந்த நூலை வாசித்து மக்கள் நற்பயன் அடைவார்களாக!

இப்படிக்கு,

நல். முருகேச முதலியார்
Retd. Secretary to Govt. & sometime
Special Adviser to late Chief Minister

சென்னை
15-10-'69

## ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீ

மக்களை அறியாமையாகிய இருள் சூழும்போது, சந்தேகம் உள்ளவர்களுடைய சந்தேகத்தைப் போக்கி அஞ்ஞானிகளுக்கு ஞானத்தை அருளி திவ்விய ஜோதியை ஏற்றிவைத்து அவர்களுக்கு ஆத்மீக நெறியைக் காண்பிப்பதற்காக மகா புருஷர்களும், யோகிகளும் அவதரிக்கிறார்கள். அக்கூட்டத்தில் சேர்ந்த அவதார புருஷர் சீரடி சாயி பாபா அவர்கள். அவர் தம் பக்தர்களைக் கண்ணை இமை காப்பதுபோல் காக்கும் ரட்சகர்; முத்தித் தரும் வள்ளல்.

முற்பிறவியின் நற்பயனால் பகவானுடைய அருள்நோக்கைப் பெற்ற அதிர்ஷ்டசாலி, ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீ. இவர் நேர்மையாக நடப்பவர்; சாத்துவிகர்; ஆத்மீகத்தைத் தேடிப் பெற்றவர்; முனிவர்களைப் போன்றவர்.

பகவானாகிய சீரடி சாயிபாபா அவர்களின் அறிவுரைகளைப் பிரசாரம் செய்து, பக்தர்களுடைய கஷ்டங்களைப் போக்கி அவர்களைக் கரையேற்றுவதே தம் மதத்தின் கடமையாகக் கருதி ஓயாது உழைக்கும் தவயோகி ஸ்ரீ கேசவய்யாஜீ. அவருடைய அனுபவங்களை விரிவாக புத்தக வடிவில் வெளிக்கொணர்ந்த நண்பரும், பிரசித்திப்பெற்ற பத்திரிகை எழுத்தாளருமான ஸ்ரீ பண்டிதாராத்யுல நாகேசுவரராவ் அவர்களைப் பாராட்டுகிறேன்.

திடசங்கல்பத்துடன் இப்புத்தகத்தை வெளியிட்ட பக்தர் கூட்டத்தை, ஸ்ரீ ஜி. வி. ஆர். நாயுடு முதலியவர்களை மெச்சுகிறேன்.

பூஜிக்கத் தக்க ஸ்ரீ கேசவய்யாஜி அவர்களுடைய இந்த வரலாற்றைப் படித்து சீரடி ஸ்ரீ சாயி பாபாவின் மகிமையைத் தெரிந்து கொண்டு அவர் தரிசனம் பெற்று வாசகர்கள் கிருதார்த்தர்களாவார்கள் என்று கோருகிறேன்.

"ராகவ ஸதன்"
ஸோமாஜீகூடா,
ஹைதராபாத்-4
6-3-1948

**கொட்டிபாடி பிரம்மையா**
சபாநாயகர்
ஆந்திர சட்டசபை

## பதிப்பாளரின் விஞ்ஞாபனம்

ஸ்ரீ சாயி மகிமை என்பது, சாயி பக்த ஸ்ரீ சுவாமி கேசவய்யா ஜீயின் சரித்திரம். சுவாமி கேசவய்யாஜீக்கு சீரடி சாயி பாபா 1939ம் ஆண்டு ஜூலை முதல் தேதியன்று பிரத்தியட்சமாகி, தன் செயல்களுக்குக் கருவியாக எல்லாவகையிலும் தகுதியுள்ள தூத ராக தேர்ந்தெடுத்தார். சுவாமிஜி இருக்கும் இடத்தில்தான் சாயி பாபா இருக்கிறார் என்பது பல நிகழ்ச்சிகளால் உறுதிப்பட்டது. ஸ்ரீ சாயிபாபா மற்ற அவதாரங்களைப்போல் துஷ்டர்களைச் சிக்ஷித்து சிஷ்டர்களை ரக்ஷிப்பதற்குமட்டுமே அவதரிக்கவில்லை. சிஷ்டர்களை ரக்ஷிப்பதோடு துஷ்டர்களை சிக்ஷிக்காமல் தீய வழியில் செல்பவர் களை நல்ல வழியில் செல்லும்படி மாற்றிவிட்டார். மோட்சத்தை சாதிக்கப் புதிய வழி ஒன்றைக் காண்பித்திருக்கிறார். அவரை தரி சித்தவர்களோடு நினைத்தவர்களும் உய்ந்தார்கள்.

சுவாமி கேசவய்யாஜீ இருபத்தைந்து ஆண்டு காலமாக சாயி பாபாவின் உபதேசங்களை நாட்டின் எல்லா பகுதிகளிலும் எதி ரொலிக்கச்செய்து, மக்களைத் துன்பத்திலிருந்து விடுதலை பெறச் செய்துகொண்டிருக்கிறார். சீரடி சாயி பாபா சுவாமி கேசவய்யா ஜீயின் வாயிலாகச் செயலாற்றுகிறார். அவரால் நோயாளிகள் பலர் பூரண ஆரோக்கியம் பெற்றிருக்கிறார்கள். வறுமையில் உழன்ற வர்கள் செல்வந்தரானார்கள். உடலைப் பொறுத்த வகையில் சௌக் கியத்தையும், மன அமைதியையும் பெற்றார்கள். சுவாமிஜீயின் உள்ளத்தில் எல்லோருக்கும் வரவேற்பு கிடைக்கும். எவ்வளவு சிக் கலான விவகாரங்களுக்கும் பரிகாரம் கிடைக்கும்.

சுவாமிஜீயை சாயி நிலையத்தில் நேரில் தரிசித்து நலம் பெற்ற வர்களைப் போலவே, அவருக்குக் கடிதம் எழுதிப் பயன் பெற்ற வர்களும் பலர் இருக்கிறார்கள். அவர் வாயிலாக ஸ்ரீ சாயி பாபா வின் அநுக்கிரகத்துக்குப் பாத்திரமானவர்கள் ஆயிரக் கணக்கைத் தாண்டி இருப்பார்கள். அவரைத் தரிசித்தவர்கள் பிறகு என்றும் அவருடைய பார்வையிலிருந்து விலக மாட்டார்கள். சுவாமிஜீயைப் பார்த்தவர்கள் எல்லோரும் பாபாவின் கிருபைக்குத் தகுதியைச் சம்பாதித்துக் கொண்டார்கள்.

அந்த மகானின் வரலாறுதான் இந்த ஸ்ரீ சாயி நூலாகும். அவ ருடைய வாழ்க்கை வரலாற்றுடன் பக்தர்களுக்கு ஏற்பட்ட அனு பவங்கள், சுவாமிஜீ ஆத்மிக விஷயமாக எழுதிய கட்டுரைகள், அவர் அடிக்கடிசெய்த பிரசங்கங்கள் எல்லாம் இந்நூலில் விவரமாக

இடம் பெற்றிருக்கின்றன. நாலைந்து வருடங்களுக்கு முன்பே நூல் பிரசுரமாகி இருக்க வேண்டும். தாமதத்திற்கு இன்னார்தான் காரணம் என்று சொல்லுவது பொருந்தாது. இப்பொழுதாவது சுவாமி கேசவய்யாஜீயின் சரிதத்தை ஸ்ரீ சாயி பாபாவின் பக்தர்களுக்குத் தர முடிந்ததற்காக ஸ்ரீ சாயி பாபாவுக்கு எங்கள் நன்றியோடுகூடிய வணக்கம் உரித்தாகும். ஸ்ரீ சாயி பாபாவின் அருளும், ஸ்ரீ சுவாமி ஜீயின் ஆசியுமே இந்த நூல் வெளிப்படக் காரணமாயின.

இப்படிப்பட்ட நூலை, பக்தியுடன் சிரத்தையாக எழுதிய நூலாசிரியருக்கும், பதிப்பிக்க உதவிய பக்தர்களுக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

மராத்திய மொழியில் ஸ்ரீ ஹேமாத் பந்த் எழுதிய ஸ்ரீ சாயி சத் சரிதையைப் போலவே இந்த ஸ்ரீ சாயி மகிமையும் பக்தர்களுடைய ஆதரவைப் பெறும் என்றும் நம்புகிறோம்.

நூல் இயற்றுவதிலும், பதிப்பிலும் சில பிழைகள் நேர்ந்திருக்கலாம். இரண்டாம் பதிப்பில் அவற்றைத் திருத்தி விஷயங்களை விஸ்தரித்து முழுமையான நூலாகப் பிரசுரிப்போம் என்று நம்புகிறோம்.

**ஜி. வி. ஆர். நாயுடு**
தலைவர்,
ஸ்ரீ சாயி பாபா சேவா சமாஜம்

*1—5—1969*

# ஸ்ரீ சாயி மகிமை

## சமர்ப்பணம்

ஐந்து வருடங்களுக்கு முந்தைய செய்தி. ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீ பக்தர்களுள் ஒருவருக்கு ஒரு யோசனை உண்டாயிற்று. சாயி நிலையத்து வியாழக்கிழமை பூஜையைப் பற்றி அவ்வப்போது பத்திரிகைகளில் வெளிவந்த நாலைந்து கட்டுரைகளையும் அதே சமயத்தில் பிரசுரமாகிக் கொண்டிருந்த சுவாமிஜீயின் கட்டுரைகளையும் சேர்த்து ஐம்பது அறுபது பக்கங்களில் ஒரு சிறிய புத்தகமாகக் கொண்டுவரலாம் என்பதுதான் அந்த யோசனை. முறைப்படி அப்பக்தர் அதற்காக சுவாமிஜீயின் அனுமதியை வேண்டினார். ஏற்கனவே என் கட்டுரைகள் மீதும், நான் எழுதும் முறையிலும் திருப்தி கொண்ட சுவாமிஜீ அந்த பக்தரை என்னிடம் அனுப்பி வைத்தார். பக்தருக்கு ஒரே உற்சாகம். அவர் சுவாமிஜீயிடம் பழகத் தொடங்கி சிறிது காலமே ஆகியிருந்தாலும், அவர் ஏதோ நற்பயனை அடைந்திருந்ததால் எதையேனும் நல்லதாக செய்துவிடவேண்டும் என்ற துடிப்பு அவரிடம் மிகுந்திருந்தது. கையில் சிறிது பணமும்கூடக் கொண்டுவந்திருந்தார். அச்சமயத்தில் சுவாமிஜீயுடன் எனக்கு நெருக்கமான தொடர்பு ஏற்பட்டிருந்த தென்றாலும் அது அதிக நாட்பட்டதன்று. சுவாமிஜீ, அவருடைய அரும் பெரும் சேவை, அவருடைய உபந்நியாசங்கள் எல்லாவற்றையும் சேர்த்து, ஐம்பது அறுபது பக்கம்கொண்ட புத்தகம்தானா எழுதுவது? என்ற எண்ணம் எழுந்தது. குறைந்தது நூற்றைம்பது இருநூறு பக்கமாவது எழுதினால்தான் ஸ்ரீ ராமனுக்கு அணில் செய்த சேவைபோல் சுவாமிஜீக்கு சிறிது சேவை செய்ததாகும் என்று தோன்றியது.

என் கருத்தை அந்தப் பக்தருக்குத் தெரிவித்தேன். அவர் அதை சுவாமிஜீயிடம் தெரிவித்துவிட்டு, பணத்தை என்னிடம் கொடுத்து விட்டார். அவருக்குப் பொறுப்பு விட்டது. அப்பொழுது எனக்கு சுவாமிஜீயைப் பற்றிய ஒரு நூலை எழுத வேண்டும் என்ற எண்ணம் இருக்கவில்லை. அதனால் எப்படி எழுத வேண்டும், எவ்வளவு எழுதவேண்டும் என்ற பிரச்னைகள் எழ இடமே இல்லை. முன்பே இப்பிரச்சினைகள் தோன்றி அவைகளுக்குப் பதில் கிடைக்காமல் போயிருந்தால் ஐந்து வருடங்களுங்கு முன்பே புத்தகம் வெளிவந்திருக்கும். ஆனால் சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜி அவருடைய சேவை, அவருடைய கட்டுரைகள் ஆகியவற்றைப் பற்றி ஒரு கையேடாகவோ, ஒரு சிறிய புத்தகமாகவோ அது வெளி வந்திருக்

கும். அது நடக்காமல் தடுத்த பாவம் என்னைத்தான் சாரும். உண்மையில் அப்பக்தர் ஒரு சிறிய நூலை வெளியிட்டு சுவாமிஜீயின் அன்பர்களுக்குக் கொடுத்திருப்பார்.

பிறகு என் முயற்சி கற்பனை உலகைவிட்டு நிஜ உலகத்துக்கு இறங்கவே இல்லை. சுவாமிஜீ என்னமோ அவர் தயாரித்திருந்த குறிப்புக்களை என்னிடம் உடனே கொடுத்துவிட்டார். அவருடைய குறிப்பைப் பார்த்தபின் ஒரு வாரம் அல்லது பத்து நாட்களில் புத்தகத்தை எழுதிவிடலாம் என்ற தீர்மானமும் எழுந்தது. எழுத்து வேலையைத் தொடங்கினேன். இடையில் சில தொல்லைகள் ஏற்பட்டன. என் நிலை தடுமாறியது. சுவாமிஜீயையும் சென்னையையும் விட்டு வரும்படி நேர்ந்தது. மனத்துக்கு அமைதியும், உடலுக்கு ஓய்வும் இல்லாமல் போயிற்று.

கருத்துக்கள் மறைந்துவிடவில்லை. எண்ணங்களுக்கு வடிவம் தரும் திறமை நலிந்து போய்விடவில்லை. என்றாலும் ஓரளவு தளர்ச்சித் தோன்றியது. முதலிலிருந்தே நம்மால் நிருவகிக்க முடியுமா என்று ஆராய்ந்து பார்க்காது, பொறுப்பை ஏற்பதும், பொறுப்பை ஏற்றபின் செலவுக்கும் கஷ்டங்களுக்கும் ஈடு கொடுப்பதும் எனக்குப் பழக்கம்தான். அதனால் மனத்திற்கு எவ்வளவு தொல்லைகள் வந்தபோதிலும் மற்ற கடமைகளோடு இதையும் ஒரு கடமையாக மேற்கொண்டேன். ஆனால் முயற்சி பலிக்கவில்லை. எந்த முயற்சியும் சாதகமாகவில்லை. அன்பர்கள் இருவர் கொடுத்த பணத்தை 'பாங்க்'கில் போட்டு டிராப்டுவாங்கி சுவாமிஜீக்கு அனுப்பினேன். "இந்தப் பொறுப்பை என்னைத் தவிர வேறு யாரேனும் நிறைவேற்ற வேண்டியிருக்கும் என்று தோன்றுகிறது. இதுவரையிலும் ஒன்றுமே செய்ய இயலவில்லை" என்று எழுதினேன், அவர் என் அபிப்பிராயத்தை ஏற்கவும் இல்லை; நிலைமையைக் கண்டு கொள்ளவும் இல்லை. 'என்னால்தான் இந்த வேலை நடக்கும்' என்பது அவருடைய முடிவு. டிராப்டைத் திருப்பி அனுப்பிவிட்டார். உடனேயே புத்தகத்தை எழுதி முடிக்கும்படி சொன்னார். இது நான்கு வருடங்களுக்கு முன் நடந்த நிகழ்ச்சி.

சூழ்நிலை சதி செய்ததாலும் அந்தச் சதியை விலக்கத் தக்க பொருள் பலமோ மனித பலமோ இல்லாமல் வெள்ளத்தில் அகப்பட்ட துரும்புபோல் தத்தளித்தேன். வரும் விபத்தைத் தடுக்க முயற்சிக்காமல் ஆபத்துக்களிலேயே வலியச் சென்று அகப்பட்டுக் கொண்டு அவற்றிலிருந்து மீளும் வழியைத் தேடுவதிலேயே சக்தியை இழந்துவிட்டதால், தகிக்கும் வெயிலில், பாலைவனத்தில் நிற்பது போன்ற அனுபவம் ஏற்பட்டது.

சுமக்க முடியாத பாரத்தைத் தலையில் வைத்துக்கொண்ட சமயத்தில், அதை சுமக்கக்கூடிய சக்தியையோ, கீழே இறக்கக்கூடிய பலத்தையோ சம்பாதித்துக் கொள்ளவேண்டும். அவை இரண்டையும் இழந்தபோது, தக்க சமயத்தில் கீழே சாய்ந்து, பாரம் அழுத்த நசுங்கிப் போவதுதான் நடக்கக் கூடியது. இந்த ஆபத்திலிருந்து அற்பமான காயங்களோடு, ஸ்ரீ சாயி பாபாவின் அருளுக்கு என்னைப் பாத்திரவானுக்கித் தப்புவித்தார். சுவாமி கேசவய்யாஜி பொருள் நஷ்டம் வந்த காலத்தில் ஆத்மீக நோக்கு ஏற்படா விட்டாலும் யோசனைகள் எழுவது சகஜம். பொருளாதார நிலை சீர்குலைந்து, அகாரணமாய்ப் பழிக்கு ஆளான நிலையில் இந்த நூலை எழுதத் தொடங்கியது தற்செயலாக ஏற்பட்ட சம்பவம் அன்று. பாபாவின் சிறந்த பக்தர் மூலமாக, பாபாவுக்குக் கொடுத்த வாக்குறுதியை நிலைநிறுத்துவதாகப் பாவித்து, வேலையைத் தொடங்கியதால் தடையின்றிப் புத்தகம் உருப் பெற்றது. ஐந்து ஆண்டுகளில் பூரண உருவம் பெற்று முதலிலிருந்து கடைசிவரையில் விஷயம் நிறையப் பெற்றிருக்கிறது. இந்த நூலில் என்னுடையது என்பதற்கு எதுவும் இல்லை. தவறுகளுக்கு மட்டுமே நான் பொறுப்பு.

'முப்பது வருட காலம் அரசியல், பொருளாதாரம், சமூகம் ஆகிய துறைகளின் விமரிசனங்களில் தேய்ந்துவிட்ட என் பேனு, ஆத்மீக விஷயங்களுக்கு வளைந்து கொடுக்குமா என்ற சந்தேகம் வந்தது. ஆனுல் இதில் 'சொந்தக் கவிதை' இல்லை. அதற்குச் சந்தர்ப்பமோ, தேவையோ இல்லை. சுவாமிஜீயின் மறைமுகமான மேற்பார்வையில், பாபாவின் அருள் நோக்கின் கவனிப்பில் இந்த நூல் முடிவடைந்ததாகக் கருதுகிறேன் இது இவ்வளவு பெரிய நூல் ஆகுமென்று சுவாமிஜீக்கு முன்பே தெரிந்திருக்கிறது. என்னுல் ஊகிக்க முடியவில்லை. 'இவ்வளவு பெரிய புத்தகத்துக்கு விஷயம் இருக்குமா?' என்று நினைத்தேன். எழுதத் தொடங்கிய பின், சாயி நிலையத்தில் வியாழக்கிழமையன்று அன்பர்களின் எண்ணிக்கை ஏறுவதுபோல் பக்கங்களும் அத்தியாயங்களும் வளர்ந்தன. சுவாமி கேசவய்யாஜீ அருளிய குறிப்பாகிய பொருளை, கிரகிக்கத்தக்க முறையில் வாசகர்களுக்குத் தயாரித்துக் கொடுத்ததுதான் என் பணியாகும். ஸ்ரீ சாயி பாபாவின் பிரசாதத்தை சிறிதும் வீணுக்கவில்லை.

அன்று அந்த அன்பருடைய யோசனைப்படி ஐம்பது அறுபது பக்கங்கள் கொண்ட சிறு புத்தகத்தை எழுதி யிருந்தால், இன்று இந்தப் புத்தகம் எழுத ஊக்கம் எழாமல் இருந்திருக்கலாம். அப்பொழுதே ஒரு மாதிரியாக நூலை முடிக்க முயன்றிருந்தால் இவ்

வளவு விரிவாக வளர்ந்திருக்காதோ என்னவோ? ஆகையாலேயே "புத்தகம் தயாராகிவிட்டது. அச்சேறத் தாமதமில்லை" என்று எழுதியதும் அவர் மிக மகிழ்ந்து, "நாவ தாமதம் ஆனதற்காக கவலை வேண்டாம்" என்று பதில் எழுதினர் இதில் குற்றங் குறைகள் இருக்கலாம். குற்றம் காணுவதில் இறங்கிவிட்டால் முக்கியமான விஷயம் நம் பார்வையிலிருந்து நழுவிவிடும். தங்களிடமுள்ள குறையை உணராமல் பிறர் குறையைத் தேடுபவர்களுக்கு நான் அதிக வேலை வைக்கவில்லை என்றெண்ணுகிறேன்.

இந்த நூலைத் தயாரிக்க உதவிய எல்லோருக்கும் என் நன்றி.

மிகப் பெரிய இப்பொறுப்பை ஏற்று வஞ்சனையில்லாமல் நிறைவேற்ற, மனதார முயன்று, பயனை ஸ்ரீ சாயி பாபாவின் திருவடிகளில் சமர்ப்பித்துவிட்டேன். இதனால் நல்ல பயன் பெற்று அதை அனுபவிக்க வேண்டியவர்கள், நாடெங்கும் கணக்கின்றிப் பரவிக் கிடக்கும் ஸ்ரீ பாபாவின் பக்தர்களும் ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீயின் சீடர் குழாமும் ஆவர்.

இந்த நூலை முடித்தபின் அவர்கள் சுவாமிஜீக்கு 'சாயி மகிமை' என பெயர் இட்டார்கள். ஆம்; ஸ்ரீ சாயி பாபாவின் மகிமையே தான் ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜி.

ஓம் நமோ ஸ்ரீ சாயி ராம்

**ஸ்ரீ பி. நாகேசுவர ராவ்**

# புத்தகமும் அதன் உள்ளடக்கமும்

புத்தகம் எப்படி ஆரம்பமாயிற்றோ அப்படியே முடிவு பெற்றது. முதலில் உருவைச் செய்து உறுப்புகளை அமைத்து அழகு படுத்தியதன்று இது. பொதுவாக மூன்று பகுதிகள் மட்டும் முதலில் திட்டமிடப்பட்டன. முதல் பகுதியில் சுவாமி கேசவய்யாஜீயின் பிறப்பு, இளமை, கல்விப்பயிற்சி, தொழில், பக்தி மார்க்கத்தில் பிரவேசித்தது; அதாவது சுவாமி பால கேசவய்யாஜீ அவர்கள் சாயி பக்த கேசவய்யாஜியாக மாறிய நிகழ்ச்சி. இரண்டாவது பகுதியில் பக்தர்களுடைய அனுபவங்கள் சுவாமி கேசவய்யாஜீயின் கட்டுரைகள், பிரசங்கங்கள், ஸ்ரீ சாயிபாபாவைப் பற்றிய பிரசாரம் ஆகியவை மூன்றும் பகுதியாகும்.

ஸ்ரீ சாயிபாபாவை ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீ மூலமாக எளிதில் புரிந்து கொள்ளலாம். ஆனாலும் ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீயைத் தெரிந்துகொள்வதற்கு ஸ்ரீசாயிபாபாவைப் பற்றிச் சிறிது தெரிந்து கொள்ளவேண்டியது அவசியம். ஸ்ரீ சாயிபாபாவைப் பற்றித் தெரிந்து கொள்ளாமல் சுவாமி கேசவய்யாஜீயைத் தெரிந்து கொள்ள முயன்றால் ஸ்ரீபாபாவைப்பற்றித் தெரிந்துகொள்ளலாமே தவிர சுவாமிஜீயைத் தெரிந்து கொள்ள முடியாது. ஸ்ரீ சாயிபாபாவிடம் நம்பிக்கை இருந்தால் ஸ்ரீசுவாமிஜீயின் மூலம் எளிதில் விரைவில் பயனைப் பெறலாம். ஆனால் சுவாமிஜீயால் பயன் பெற்றவர்களுக்கு மெதுவாகத்தான் ஸ்ரீ பாபாவிடம் பக்தியும் நம்பிக்கையும் உண்டாகும்.

இந்த ஸ்தாபனத்தை விரும்பி வருகிறவர்களுடைய லட்சியம், முதலில் முக்கியமாக தாம் பெறப் போகும் லாபத்தின் மீதே லயித்திருக்கும். அந்த லட்சியம் நாளடைவில்தான் ஸ்ரீபாபாவிடம் லயிக்கும். ஆனால் ஸ்ரீபாபாவின் வழியும் அதுவே. ஆகையால் சுவாமி கேசவய்யாஜீ முதலில் பக்தர்கள் வேண்டும் பயன்கள் யாவற்றையும் கொடுத்து அவர்களைப் பக்தி மார்க்கத்தில் ஈடுபடுத்துவார்.

ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீயின் வாழ்க்கை வரலாற்றைத் தொடங்கும் முன் ஸ்ரீ சாயிபாபாவைப் பற்றியும் அவர் இயற்றிய அற்புத லீலைகள் குறித்தும் சிறிது எழுதியிருக்கிறோம். ஸ்ரீ பாபா புராண புருஷன் அல்ல. என்றாலும் சரித்திரத்துக்கு எட்டாத பழைய புள்ளி அல்லர். கேட்டவுடன் தன் ஞானத்தை பக்தனுக்கு அளித்துவிட்ட மகாபுருஷர். எந்த நிலையிலும் பக்தர்களைக் கண்ணுக்கு இரப்பையாக இருந்து காத்த எஜமானர். பகவான் ஸ்ரீ ரமண மகரிஷியைப் போலவே இவரும் தம் பதினாறும் வயதில் சித்திபெற்ற பரமாத்மா.

இப்படிப்பட்ட மகா யோகியைத் தனது இளமையிலேயே தரிசித்துத் தம் கொள்கையில் உறுதியும் நேர்மையான நடத்தையும் கொண்டவர் சுவாமி கேசவய்யாஜி. இவர் நாஸ்திகர் அல்லர். அநாத்ம வாதியும் அல்லர். கடவுளிடம் நம்பிக்கை வைத்தவர். பிறர் ஆராதிக்கும் முறையில் இவருக்கு நம்பிக்கை இல்லை. அதனுலேயே இவர் பாபாவின் அருளுக்குப் பாத்திரராகி சாயிபாபாவின் நெருங்கிய பக்தர் ஆனுர். 1939 ஜுலை 1–ஆம் தேதி இரவு இவர் பாபாவைக் கண்ணுரக் கண்டார். பிறகு சுமார் இரண்டு வருட காலம் ஸ்ரீ பாபா இவரைத் தம் சேவைக்காகத் தயார் செய்தார். அன்றுமுதல் இன்றுவரை ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீ பாபாவின் வேலைகளை ஏற்று நடத்தி வருகிறுர்.

ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீயின் உத்தியோக நிருவாகத்தைப் பார்த்தோமானுல் அவர் திடீரென்று பழனி முருகனுடைய அருளுக்கும் சிரடி ஸ்ரீ சாயிபாபாவின் அருளுக்கும் பாத்திரர் ஆகிவிடவில்லை என்பதும் இவர்கள் சுவாமி கேசவய்யாவை இளமையிலிருந்தே கண்காணித்து வந்திருக்கிறுர்கள் என்பதும் தெரியவரும். * பாமுடி என்னும் ஊரில் பிறந்த சுவாமி பால கேசவய்யா அங்கே புராணப் பிரசித்தி பெற்ற போகேசுவர சுவாமி, சென்ன கேசவ ஸ்வாமி, ஆஞ்சநேய ஸ்வாமி ஆகிய ஆலயங்களுக்குச் சென்று அங்கங்கே தியானத்தில் அமர்ந்து விடுவார். இந்த நிகழ்ச்சிகள் எல்லாம் புத்தகத்தில் விரிவாகச் சொல்லப்பெற்றிருக்கின்றன.

ஸ்ரீபாபாவின் அருளுக்குப் பாத்திரர் ஆனபின்பு, ஸ்ரீசுவாமி கேசவய்யாஜீயும் அன்பர்களுக்குச் சேவை புரிந்து வருகிறுர். இரண்டாம் பகுதியான பக்தர்களுடைய அனுபவங்களைப் படிக்கும்போது அடிக்கடி ஸ்ரீ சாயி சரிதம் நினைவுக்கு வரும். சாயி சரிதையைப் போல் இந்த நூலிலும் பக்தர்களுடைய அனுபவம்தான் முதலிடம் பெறுகிறது. சென்ற இருபது ஆண்டுகளாக சுவாமிஜீயிடம் வரும் பக்தர் எல்லோருடைய — எல்லா — அனுபவங்களையும் இதில் சேர்த்து விட்டேன் என்று சொல்லமுடியாது. அது மட்டுமா? சில பக்தர்களுடைய சில அனுபவங்கள் மட்டுமே இந்தப்பகுதியில் இருக்கின்றன. எல்லா அன்பர்களுடைய எல்லா அனுபவங்களையும் இதில் சேர்க்காததற்கு அவர்கள் விஷயம் கொடுக்காததுதான் காரணம். ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு பருக்கையைப் பதம் பார்ப்பதுபோல உள்ள விஷயத்தை அறிந்து கொள்ள இந்த ஒரு சில அனுபவங்களே போதும்.

---

* பாமுடி (பாம்பின் முடி) ஆந்திராவில் உள்ள ஒரு புண்ணிய ஸ்தலம்.

இனி மூன்றும் பகுதியில் சுவாமிஜீயின் படைப்புகள். இவர் எழுதியவை எல்லாமே இப்பகுதியில் சேர்ந்துவிட்டன என்று சொல்லுவது தவறு. ஆனால் ஆத்மீகத் துறையில் இறங்கி குறிப்பிட்ட ஸ்தானத்தை அடைய விரும்பியவர்களுக்குத் தேவையான சாதனைகளும் விஷயங்களும் இவற்றில் கிடைக்கும். இப்பகுதி ஒருவிதத்தில் பரிபூர்ண ஆத்மீக ஞானத்தின் சுருக்கமாகும். பாமரர்களுக்கும் எளிதில் புரியும் முறையில் இவர் ஆத்மீகத் தத்துவங்களை விளக்கியிருக்கிறார். சுவாமிஜீ தொகுத்த ஸ்ரீ சாயிபாபா ஸூக்திமுக்தாவளி (நல்லுரைகள்) நட்சத்திரமாலா என்பது ஆத்மீக மாணவனுக்கு 'நோட்ஸ்' போன்றது.

சுவாமிஜீயின் படைப்புகளைச் செய்தி வாரியாக வெளியிடும் முயற்சி நடந்தது. இவற்றில், 'கூறியது கூறல்' சிறிது இருக்கலாம். இவர் தம் கட்டுரைகளை ஒரே தொகுதியாகவோ, தொடர்ச்சியாகவோ எழுதவில்லை. ஆகையால் சில விஷயங்கள் திரும்பத் திரும்ப வந்துதான் இருக்கும். ஆனால் அவை வாசகர்களுக்குப் பயனுள்ளதாகவே இருக்கும். விஷயங்களை எளிதில் மனத்தில் வாங்கிக் கொள்ளலாம். எளிதில் மறந்துவிட முடியாது.

உண்மையில் ஒவ்வொரு பகுதியும் தனித்தனி நூலாக உருவாகியிருக்க வேண்டும். இரண்டாம் பதிப்பில் அப்படிச் செய்யலாம். ஆனால் மூன்று பதிப்புகளையும் கிரகித்துக் கொண்டாலன்றி விஷயம் முழுவதும் புரியாது. அதனாலேயே ஹேமாபந்த், 'ஸ்ரீ சாயிஸத்சரித்திரத்தை 53 அத்தியாயங்களுடன், ஒரே புத்தகமாக எழுதினார். ஸ்ரீ பாபாவின் பிரவசனங்களிலிருந்தும், பக்தர்களுடைய அனுபவங்களிலிருந்தும் பாபாவின் வாழ்க்கையைப் பிரித்தால்—தனித்தனியே பிரித்தால்— பக்தர்களுடைய அனுபவங்களை வாசகர்கள் நம்பாமல் போகலாம். பாபாவின் வாழ்க்கை நம் இதயத்துடன் தொடர்பு கொண்டது. அவருடைய பிரவசனங்கள் நம் மனத்துடன் தொடர்பு கொண்டவை. பக்தர்களுடைய அனுபவங்கள் திருஷ்டாந்தமாக இருப்பதால் அவை பார்வையுடன் தொடர்பு கொண்டவை. இம்மூன்றும் ஒரே இடத்தில் கூடும்போது விஷயத்தைப் பற்றிக்கொள்வது சுலபமாக இருக்கிறது. அதனாலேயே பரிவர்த்தன முறையில் இந்நூலைத் தயாரிக்க நேர்ந்தது.

ஸ்ரீசாயிபாபாவின் முறைகளுக்கும் சுவாமி கேசவய்யாஜீயின் முறைக்கும் எந்த வித்தியாசமும் காணப்படவில்லை. பாபாவைப் போலவே சுவாமிஜீயும் பக்தர்களுக்காக எது வேண்டுமானாலும் செய்வார். தர்மவர்த்தில் மழை இல்லாது போய்விட்ட சமயத்தில் சுவாமிஜீ பதினான்கு நாட்கள் சீரடியில் ஸ்ரீபாபாவின் முன் உண்ணு

விரதம் மேற்கொண்டு உட்கார்ந்துவிட்டார். மழை தொடங்கிவிட்டதென்று தர்மவரத்திலிருந்து தந்தி வந்தபின்பே விரதத்தை நிறுத்தினர். இதுபோலவே, ஒரு பக்தனுக்கு நேரவிருந்த அநியாயத்தைத் தடுக்க வேண்டுமென்று பதினைந்து நாட்கள் சாகும்வரை உண்ணா விரதமென்று துவங்கிவிட்டார். மற்றொரு பக்தனைக் கஷ்டங்களிலிருந்து கரையேற்றுவதற்காக ஏழு வியாழக்கிழமைகள் தாமே பூஜித்தார்.

ஸ்ரீ பாபாவைப் போலவே சுவாமிஜீயும் பக்தர்களுடைய நோயை ஏற்றுத் துன்புற்ற சந்தர்ப்பங்கள் உண்டு. பலருக்கு சுவாமிஜீ எல்லாம் வல்ல சத்குரு ஆவார். பக்தர்கள் எவ்வளவு தூரத்தில் இருந்தாலும் அவர்களுடைய மனத்தை அறிந்து அவர்களுடைய விருப்பங்களை நிறைவேற்றி வைக்கிறார். பக்தர்கள் தவறான வழியில் சென்றால் பாபாவைப் போலவே இவரும் மனிதர்களை அனுப்பி அவர்களை நல்வழிப் படுத்துகிறார். இந்தக் காரணங்களாலேயே ஸ்ரீ சாயிபாபாவைத் தரிசிக்காதவர்களுக்கு சுவாமி கேசவய்யாஜி பிரத்தியட்ச பாபா என்றேன். அப்படிப் பட்ட மகிமை பெற்றவருடைய வரலாறு இது.

தேசீயப் பெருந்தலைவராய் இருந்த ஸ்ரீ பால கங்காதர திலகரிடம், ஸ்ரீ சாயிபாபா, ''பாரத நாடு அடிமைத் தளையிலிருந்து விடுபட்டுப் பூரண சுதந்திரம் பெறும்; நீ கவலைப் படாதே'' என்று 1914 — 17 இன் இடைக்காலத்தில் சொல்லியது போல், அதே கருத்தை சுவாமிஜீயும் அதே காலத்தில் தமது பதினைன்காம் வயதில் தம் உபாத்தியாயரிடம் சொல்லியிருக்கிறார். அது காக்கையேறப் பனம் பழம் விழுந்த கதையாய் இருக்கலாம். ஆனாலும் கவனிக்க வேண்டிய நிகழ்ச்சி. பாரதத் தேசீயத் தலைவர்கள் கடைசியாகச் சிறையில் இருந்தது அஹம்மத் நகர்க் கோட்டையில். அங்கேதான் காந்தி மகான் சாகும்வரை உண்ணாவிரதம் மேற்கொண்டு, அதன் பிறகு சிறையிலிருந்து விடுபட்டு நாட்டு விடுதலைக்கு வழி கோலினார். காந்திஜீ பாரத தேசீய அரங்கில் நுழையும் சமயத்திலேயே ஸ்ரீ சாயி பாபா மகா சமாதி ஆனதும் காக்கையேறப் பனம் பழம் விழுந்தது போலத்தான். ஸ்ரீ சாயிபாபா ஹிந்து, முகம்மதியர்களை ஒற்றுமைப் படுத்தவே வாழ்ந்து வந்தார். இந்த இரு சாராருக்கும் இடையில் நட்பையும் ஒற்றுமையையும் வளர்ப்பதற்காக மகாத்மா காந்தி தன் உயிரையே கொடுத்தார். ஆத்மீகத் துறையில் ஸ்ரீ சாயிபாபா செய்தவற்றையே அரசியல், பொருளாதார, சமூகத் துறைகளில் காந்திஜீ செய்திருப்பதாகத் தோன்றுகிறது. பாபாவிடத்திலும் காந்திஜியிடத்திலும் கோடீசுவரர்களும் ஏழைகளும் வந்து சேர்ந்தனர். இருவரும் அவர்களைச் சமமாகத்தான் கண்டார்கள். இப்

படி ஸ்ரீ சாயிபாபா எல்லோருக்கும் மிக வேண்டியவர் ஆனார். அவருடைய பக்தரான சுவாமிஜிக்கும் எல்லோரும் மிக நெருங்கியவர்கள் ஆனார்கள்.

இந்த உண்மைகளை விளக்கி, அவசியமான சந்தர்ப்பங்களில் நிரூபிக்க முயன்றிருக்கிறேன். அது எந்தமட்டும் பயன் பெற்றதென்பதையும், அதனால் எவ்வளவு லாபம் ஏற்பட்டதென்பதையும் பற்றித் தீர்ப்பளிக்க வேண்டியவர்கள் வாசகர்களே.

நூலை எளிதில் படிக்கத்தக்க முறையிலேயே எழுதியிருக்கிறேன். ஆத்மீக விஷயங்களில் எல்லோருக்கும் கவர்ச்சி ஏற்படாது. கீதையைப் படித்து விஷயத்தை உணர்ந்து நடப்பவர்கள் வெகு சிலரே. கிருஷ்ண லீலையைப் படித்து மகிழாதவர்கள் இல்லை. அதைப் போலவே இந்த நூலும் அமைந்திருக்கும் என்று நம்புகிறேன். லீலையை அறிந்து மகிழ்வதால் நாளடைவில் சாசுவதமான ஆனந்தத்தைப் பெறலாம், அதைத்தான் சாயிபாபா சொல்லியிருக்கிறார்.

பகவானுடைய லீலையைச் சிறிது உணர்ந்து ஆனந்தம் பெறுவதாலும் பயனை அடையலாம், வாசகர்கள் இந்த நூலைப் பொழுது போக்காகப் படித்தாலும் அது போன்ற பயனைப் பெற முடியும். நடுக்கடலில் புயலில் அகப்பட்டக் கப்பலுக்குக் கலங்கரை விளக்கம் தெரிந்தவுடனே கரை சேர்ந்துவிட முடியாது. ஆனால் அந்த ஒளி தெரிவதால் கரையென்று ஒன்று இருக்கிறதென்னும் நம்பிக்கை ஏற்பட்டு எப்படியும் அங்கே சென்று விடுவோம் என்ற ஆசை உண்டாகும். இந்த நூல் குறைந்தது அது போன்ற நம்பிக்கையையும் ஆசையையும் உண்டாக்கினால் என் உழைப்புப் பயன் பெற்று, பயனால் லாபம் அடைந்ததாகக் கருதுவேன்.

———

# புத்தக விமரிசனம்

## டெக்கான் கிரானிகள், ஹைதராபாத். 6-2-'68

தம் பக்தியினாலும், ஆத்மீக சாதனைகளாலும் நம் நாட்டில் பல்லாயிரம் மக்கள் மனத்தில் ஆத்ம விழிப்பை உண்டாக்கிய மகான்களுள் சீரடி சாயிபாபாவும் ஒருவராவார். இன்று சாயி பாபா உயிரோடு நம்மிடையே இல்லை என்றாலும் அவருக்கு சமான மான மகான்கள் நம்மிடையே இருக்கிறார்கள். அவர்கள் தங்கள் வாழ்க்கையைப் பக்திக்கும் ஆத்மீக முன்னேற்றத்துக்கும் அர்ப் பணித்துக்கொண்டு பாபாவின் உபதேசங்களைப் பரப்பியவண்ணம் பாபாவின் நினைவு மறவாமல் காத்து வருகிறார்கள். இப்படிப்பட்ட மகான்களுள் சென்னை, ஷெனாய் நகர் சுவாமி கேசவய்யாஜியும் ஒரு வர். ஷெனாய் நகரில் உள்ள இவர் வீடு தென்னாட்டு சீரடியாக வெகு நாட்களாக இருந்து வருகிறது. ஆத்மீக ஆவல் பெற்ற பல பக்தர்கள், கேசவய்யாஜீயை நாடிச் சென்று மோட்ச மார்க்கத் தைப் பற்றி அவரிடமிருந்து உபதேசம் பெறுகிறார்கள். உடல் நோயாலும், மன நோயாலும் வருந்திய பலர் சுவாமிஜீயிடம் சென்று குணமடைந்திருக்கிறார்கள்.

சுவாமி கேசவய்யாஜீயின் வாழ்க்கை வரலாறு பற்றிய புஸ் தகத்தை வெளியிட்டு ஆத்மீகத் துறையில் அவர் செய்துவரும் சேவைகளை மக்களுக்கு எடுத்துக்காட்டிய ஸ்ரீ ஜி. வி. ஆர் நாயுடு வைப் பாராட்டுகிறோம்.

ஸ்ரீ பி. நாகேசுவர ராவ் என்பவர் எழுதிய இந்தப் புத்தகம் சுமார் 300 பக்கங்களைக் கொண்டது. இது சுவாமி கேசவய்யா ஜீயின் வாழ்க்கை அம்சங்களைப் பற்றியெல்லாம் நன்கு கூறுகிறது. அவருடைய ஆரம்ப வாழ்க்கை முதல் சப்ரிஜிஸ்திராராக இருந்த அவர் சுவாமி கேசவய்யாஜீயாக ஆனதுவரை தொடர்ந்து கூறு கிறது. ஆத்மீக சம்பந்தமாக சுவாமிஜி எழுதிய சில நூல்களும் இதில் இடம் பெறுகின்றன.

# ஸ்ரீ சாயி மகிமை

## (ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீயின் சரிதை)

*(தெலுங்கில் எழுதியவர்: ஸ்ரீ பண்டிதாராத்யுல நாகேசுவர ராவ். வெளியீடு: ஸ்ரீ சாயி பாபா சேவா சமாஜம், மார்கெட் வீதி, செக்கந்தராபாத். விலை ரூபாய் 3—00)*

அவதார புருஷனாய் லட்சக் கணக்கான பக்தர்களால் பல வருடங்களாக பூஜிக்கப்பெற்று வரும் சீரடி ஸ்ரீ சாயி பாபா, தம் உபதேசத்தைப் பிரசாரம் செய்வதற்காகத் தூதராகத் தேர்ந்தெடுத்தவர்களுள் ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீ பிரசித்திப் பெற்றவர். 1939ம் ஆண்டிலேயே ஸ்ரீ கேசவய்யாஜீக்கு சாயி பாபா தரிசனம் கொடுத்துத் தம் பிரதிநிதியாக நியமித்தார். அன்று முதல் ஸ்ரீ சாயி மகிமையின் மறு பெயராக ஸ்ரீ கேசவய்யாஜீயின் வாழ்க்கை அமைந்து விட்டது.

இந்திய சம்பிரதாயத்தில் மதத்தைவிட பக்தி உயர்ந்தது. இக பரங்களுக்காக எல்லோரும் எப்பொழுதும் ஏங்கினாலும் அதற்காக உழைக்கவில்லை. அவற்றை சாதிப்பதற்குக் குறுகிய வழி பக்தியாகும். நமக்கு மதம், வாழ்க்கை, தத்துவ ஞானம் ஆகிய மூன்றும் வெவ்வேறல்ல. இம்மூன்றும் திரிவேணியாகப் பின்னிக் கொண்டிருப்பதே பாரதீய ஆத்மா. ஆத்மக் கட்டுப்பாடுள்ள ஒவ்வொரு மனிதனும் ஆத்ம தரிசனம் காண முடியும். ஆத்ம தரிசனம் கண்ட ஒவ்வோர் இந்தியனும் தத்துவத்தை அறிந்தவனே. பாரமார்த்திகச் சிந்தனையால் தத்துவத்தை தேடுபவன் ஆகிறான். கர்ம சித்தாந்தத்தை அப்படியே எழுத்துக் கெழுத்து அனுசரிக்கும் சம்சாரிக்கு பகவானைத் தரிசிக்கும் எளிய வழி பக்தியாகும். அதையே ஸ்ரீ சாயி பாபாவும், ஸ்ரீ கேசவய்யாஜீயும் போன்ற பரம பக்தர்கள் பக்த குழாத்திற்கு அளித்திருக்கிறார்கள்;—அளித்து வருகிறார்கள்.

எம்மதமும் நமக்குச் சம்மதமே. ஆனால் அது மனிதத் தன்மைக்குப் பிரதிபிம்பமாக இருக்க வேண்டும். அதனாலேயே புராணத் தெய்வங்களை விட, மனிதர்களாகப் பிறந்து, பெருமையை சம்பாதித்துத் தம் போன்ற மானிடர்களுக்குக் கரையேறும் வழி காட்டிய ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர், விவேகானந்தர், ரமண மகரிஷி, சாயி பாபா, கேசவய்யாஜீ ஆகியோர் மனிதர்களுக்கு நெருங்கியவர்கள் ஆனார்கள்.

ஸ்ரீ கேசவய்யாஜி தவச் செல்வர். தத்துவ ஞானி. சாயி பாபாவின் பொன்மொழிகளை பிரசாரம் செய்வதே அவருடைய வாழ்வின் உயர்ந்த குறிக்கோள். அவருடைய அனுபவ வடிவங்களுக்கு எழுத்து வடிவம் கொடுத்த ஸ்ரீ பண்டிதாராத்யுல நாகேசுவர ராவ் பெயர் பெற்ற எழுத்தாளர். முப்பது ஆண்டுகளாக அரசியல், பொருளாதாரம், சமூகம் ஆகிய விவகாரங்களை விமரிசிப்பதில் அவருடைய பேனு தேய்ந்துவிட்டது. ஆனல் அது இங்கே—ஆத்மீக விஷயத்தில், உருகிப்போய் இரண்டறக் கலந்துவிட்டது என்றே சொல்ல வேண்டும். சுவாமிஜீயின் தூண்டுதலும், குற்ற மற்ற உள்ளமும் இதுபோன்ற நல்ல (பக்தி) நூல் இயற்றுவதற்கு இனிமையின் நிறைவைக் கொடுக்கின்றன.

முன்னூறு பக்கங்கள் கொண்ட இந்நூலில் ஸ்ரீகேசவய்யாஜீயின் மகிமைகள் ஒவ்வொரு பக்கத்திலும் காணப்படுகின்றன. இதைப் பார்த்தால், நேரில் சாயி பாபாவைத் தரிசிக்காதவர்களுக்கும், தரிசிக்க முடியாதவர்களுக்கும் இருந்த இடத்திலேயே தரிசனம் கிடைக்கும். அது கிடைக்க வேண்டும் என்று விரும்பினல் இச்சிறந்த நூலைப் பற்றி சிறத்தையுடன் படித்தால் போதும் என்பது என் கருத்து.

ஸ்ரீ சாயி பக்தர்களுள் ஸ்ரீ கேசவய்யாஜீயின் பக்தர்கள் எல்லோரும் பத்தியுடன் படிக்க வேண்டிய நூல் இது. விசேஷ அனுபவங்களுடனும் பக்தியுடனும் சுவாமிஜீயின் சரிதையை எழுதிய ஸ்ரீ நாகேசுவர ராவின் உழைப்பு மிகவும் பாராட்டத் தக்கது.

**சார்வரி**

*“ஆந்திரப்பிரபா”, 24-1-’68*

டெக்கான் ஹெரால்டு (ஆங்கில தினசரி)
பெங்களூர், ஞாயிறு 4-2-1968

## சீரடி சாயி பாபாவின் சிறந்த பக்தர்

பக்தி, ஆத்ம ஸமர்ப்பணம் ஆகிய உபதேசங்களை மக்களுக்கு வழங்குவதற்காகவே இந்த நூற்றுண்டின் தொடக்கத்தின் முன்பே நம் நாட்டில் அவதரித்த பெரிய மகான் சீரடி சாயி பாபா என்பது அவருடைய பக்தர்களின் கருத்து.

அவர் கடவுளிடம் பக்தி செலுத்துவதையே வற்புறுத்தினுர். அவர் ஒரு சிறந்த புருஷர்; அவர் பல அற்புதங்கள் செய்ததாகத் தெரிகிறது, அவரால் மன ஆறுதலும், நோய் நீக்கமும் பெற்ற பக்தர்கள் மிகப் பலராவர். ஜாதி, மத பேதமின்றி மக்கள் அவரை நாடுகிறுர்கள்.

இதன் முதற் பகுதி அவர் ஓர் அவதார புருஷர் என்பதைப் பற்றிப் பேசுகிறது.

இரண்டாம் பகுதியில் சுவாமி கேசவய்யாஜீயின் வாழ்க்கை வரலாறும் அவர் இயற்றிய நூல்களும் இடம் பெறுகின்றன. சீரடி சாயி பாபாவின் பிரதம சீடர் ஸ்ரீ கேசவய்யாஜீ என்பது பலர் கருத்து. அனந்தப்பூர் ஜில்லாவில் படித்த அவர் சென்னை ராஜஸ்தானியில் ரிஜிஸ்திரேஷன் ஆபீஸ் குமாஸ்தாவாக சேர்ந்தார். பிறகு சப்ரிஜிஸ்திரார் ஆனுர். தம்முடைய திறமைமிக்க யோக்கியமான வேலையால் அவர் அதிகாரிகளின் பாராட்டுக்களைப் பெற்றுர். இதே அதிகாரிகள் பின்னர் அவர் சீடரானுர்கள்.

என்றைக்கு சுவாமி கேசவய்யாஜி ஸ்ரீ சாயி பாபாவைப் பற்றி ஒரு நண்பரின் மூலம் கேள்விப்பட்டாரோ அன்றே சாயி பாபா அவர் கனவில் தோன்றித் தன் உபதேசங்களையும், தம் கொள்கைகளையும் மக்களிடையே பரப்பும்படி சுவாமிஜீக்குக் கட்டளையிட்டார். சில கவர்னர்கள், பல மத்திய ராஜ்ய மந்திரிகள், உயர்ந்த உத்தியோகஸ்தர்கள் உள்ளிட்ட பலதரப்பட்டோர் இவருடைய சீடர்கள். ஸ்ரீ பி. வி. நரசிம்ம சுவாமி, சுவாமி கேசவய்யாஜீயைப் பாராட்டிய பகுதி ஒன்றும் இப்புத்தகத்தில் இடம் பெறுகிறது.

மூன்றுவது பாகத்தில் சுவாமி கேசவய்யாஜீ, பக்தர்களுக்கு செய்த உபதேசங்கள் அடங்கி இருக்கின்றன. புத்தகத்திலேயே மிகவும் பயனுள்ள பகுதி இதுதான். இதைப் பலமுறை படித்தாலும் பலன் உண்டு.

இந்த நூல் ஆசிரியர் முப்பது ஆண்டுகளாகப் பத்திரிகைத் தொழிலில் அனுபவம் உள்ளவர்; அரசியல், பொருளாதாரம், சமயம் முதலியவைபற்றிய பல நூல்களுக்கு ஆசிரியர். இவர் சரளமாக எழுதுவதில் வல்லவர்.

இதில் பல அச்சுப் பிழைகள் இருப்பதாகவும் அடுத்த பதிப்பில் அவற்றை நீக்கிவிடுவதாகவும் பிரசுரித்தவர்கள் சொல்கிறார்கள். இதில் ஆர்ட் பேப்பர்ப் படங்கள் பல இருக்கின்றன. புத்தகம் பொதுவில் நன்றாக அமைந்திருக்கிறது.

பெயர்: ஸ்ரீ சாயி மஹிமா. சுவாமி கேசவய்யாஜீயின் வாழ்க்கை வரலாறு.

ஆசிரியர்: பி. நாகேச்வர ராவ்.

பிரசுரம்: ஸ்ரீ சாயி பாபா சேவா சமாஜம், மார்க்கெட் தெரு, செக்கந்தராபாத்.

விலை: ரூபாய் 3-00.

விமர்சகர்: ஆர். ஸ்ரீ கண்டேச்வர ராவ்.

சண்டே ஸ்டாண்டர்டு
28-1-'68

## சமீபத்தில் வெளிவந்த தெலுங்குப் புத்தகங்கள்

ஸ்ரீ சாயி மஹிமா: ஆசிரியர் பி. நாகேச்வர ராவ்; ஸ்ரீ சாயி பாபா சேவா சமாஜம்; செக்கந்தராபாத். ரூபாய் 3-00.

சென்ற சில தலைமுறைகளுக்குள் ரமண மகரிஷியை விட்டுவிட்டால் அடுத்தபடியாக மிகப் பலர் மனத்தில் இடம் பெற்றவர் சாயி பாபா என்றுதான் சொல்ல வேண்டும். ஸ்ரீ ரமணரின் சீடர்கள் அவரைப் 'பகவான்' என்று வழிபடுவதைப் போலவே பாபாவின் சீடர்களும் பாபாவை 'அவதார புருஷன்' என்று வழிபடுகிறார்கள். இருவரும் தமக்கென்று ஒரு கிளைச் சங்கம் வகுத்துக் கொண்டார்கள். ஆனால் அவர்கள் உபதேசங்களின் முடிவான லக்ஷியம் ஒன்றுதான். இந்த இரண்டு குருமார்களின் ஒளியும் அவர்களின் உபதேசங்களின் எளிமையும் பல்லாயிரம் மக்களை அவர்கள்பால் இழுத்தன.

ஸ்ரீ சாயிபாபாவின் சிறந்த பக்தரான சுவாமி கேசவய்யாஜீயின் வாழ்க்கைபற்றிய விவரங்களை எல்லாம் இந்தப் புத்தகத்தில் காணலாம். அத்துடன் ஸ்ரீ சாயி பாபாவின் சித்திகளைப்பற்றியும் இது நிறையப் பேசுகிறது. பாபாவின் விபூதியால் ஏற்பட்ட பல அற்புதங்களைப் பற்றி இது சொல்லுகிறது.

இந்தியாவின் உதவி ஜனாதிபதியான ஸ்ரீ வி. வி. கிரி அவர்கள் இதற்கு ஒரு முகவுரை தந்திருக்கிறார். சாயி பாபாவின் உபதேசத்தில் நம்பிக்கை உள்ளவர்களுக்கு இந்தப் புத்தகத்தை சிபாரிசு செய்கிறார். சீரடி மகானின் கொள்கைகளைப் பரப்புவதில் சுவாமி கேசவய்யாஜீ வெற்றி பெற வேண்டும் என்றும் அவர் விரும்புகிறார்.

---

**ஸ்ரீ சாயி மகிமா (தெலுங்கு)**
*ஆசிரியர்: ஸ்ரீ பி. நாகேச்வர ராவ்.*

## தெய்வீகக் குரல் ... The Call Divine

*1 - 2 - 1968 — விமர்சனம்*

*மிகச்சிறந்த சாயி பக்தரான சுவாமி கேசவய்யாஜீயின் ரசமான அனுபவங்களைப் பற்றி இது கூறுகிறது. சீரடி சாயிபாபாவின் பெயர் இன்று எல்லா வீடுகளிலும் ஒலிக்கிறது. அவரது ஆத்மீகச் சக்தி எங்கும் நிறைந்திருக்கிறது. கேசவய்யாஜி ஸ்ரீபாபாவின் மிகச்சிறந்த பக்தர். இவர் ஒழுங்காக நடத்தும் சாயி பூஜைக்குப் பலர் வருகிறார்கள். இவர் ஒரு சப் ரிஜிஸ்திராராக இருந்தார். திடீரென்று சாயி பாபாவைச் சரணடைய வேண்டும் என்ற எண்ணம் இவருக்கு ஒரு நாள் உதித்தது. அன்றுமுதல் இன்றுவரை அவர் பாபாவின் அருந் தொண்டராக இருந்துவருகிறார். அவரின் ரசமான அனுபவங்கள் பலவற்றை இதில் காணலாம். சாயிபாபாவின் வளரும் வரலாற்றுக்கு இதுவும் உதவும். சென்னை ஷெணாய் நகரில் உள்ள சாயி நிலயத்தில் இவர் வெகு சிறப்பாகப் பூஜை செய்துவருகிறார். இது 300 பக்கங்கள் கொண்டது (டெமி சைஸ்). இதில் சாயிபாபாவைப் பற்றியும் அவர் நம் பக்தர்களைக் காப்பது பற்றியும் பல செய்திகள் அடங்கியுள்ளன. விலை ரூ. 3-00 ஸ்ரீசாயிபாபா சேவா சமாஜம், மார்க்கெட் தெரு, சிக்கந்தராபாத், (ஆ. பி.) என்ற விலாசத்தில் கிடைக்கும்.*

## புத்தக விமர்சனம்

"மெயில்" சென்னை. 10—6—68

ஸ்ரீ ஸாயி மஹிமா: (தெலுங்கில் ஸ்ரீகேசவய்யாஜீயின் வரலாறு, ஆசிரியர்: பி. நாகேச்வர ராவ், ஸ்ரீசாயிபாபா சேவா சமாஜம்

தம் பக்தர்களின் லௌகிக ஆத்மீகக் கவலைகளை மாற்றுவதில் புகழ்பெற்ற ஸ்ரீசாயிபாபாவை ஓர் அவதாரமாகவே கருதுகிறார்கள். பாபா என்ற சொல் அவர் கௌரவத்தையும் கஷ்டப் படுகிறவர்களிடம் அவர் காட்டும் தந்தை போன்ற கருணையையும் சுட்டுகிறது. தம்மை நாடுபவர்களின் கஷ்டங்களைத் தீர்த்தபிறகே அவர் பக்தியை எதிர்பார்த்ததாகத் தெரிகிறது. ஸ்ரீசாயி பக்த சுவாமி கேசவய்யாஜீயின் மூலமாக சாயிபாபா எவ்வளவு அற்புத சிகிச்சைகள் புரிந்திருக்கிறார் என்பதை சாயி மகிமா சொல்லுகிறது. சித்தியடைந்த முப்பது ஆண்டுகளுக்குப் பின் சாயி பாபாவின் கடாட்சம் அனந்தப்பூர் ஜில்லாவில் சப் ரிஜிஸ்திராராக வேலை பார்த்து வந்த ஸ்ரீகேசவய்யாஜீயின் மேல் விழுந்தது. அவரே தம் உபதேசங்களைப் பரப்பத் தகுதியானவர் என்று பாபா நினைத்தார். சென்னையிலும் ஆந்திராவிலும் பாபாவின் உபதேசங்களைப் பரப்பிய பெருமை ஸ்ரீ கேசவய்யாஜீயையே சாரும். இப்போது ஷெனாய் நகர் சாயி நிலையத்திலிருந்து தம் சேவையைச் செய்து வருகிறார். கேசவய்யாஜியின் வாழ்க்கை வரலாறு, பக்தர்களின் அனுபவங்கள், கேசவய்யாஜியின் நூல்கள், பிரசங்கங்கள் இவற்றை இந்தப் புத்தகத்தில் காணலாம். அனுபவம் மிக்கப் பத்திரிகைக்காரரான ஆசிரியர் இதை ரசமாகவும் படிக்கத் தக்கதாகவும் ஆக்கியுள்ளார்.

# முதற் பகுதி

# ஸ்ரீ சாயிபாபா

## வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகள்

மகரிஷிகள் நிறைந்தது நம்நாடு. நம் ஆத்மிகச் செல்வம் அட்சயமானது. வேத காலத்திலிருந்து இன்று வரை, வளர்ந்து வந்த நம் நாகரிகம் ஆத்மிகத் தொடர்பு கொண்டது. நமது பண்பாடும் மரபும் ஈசுவரத் தன்மை நிரம்பியது. நமக்கு "ஓம் நமச்சிவாய" என்று அட்சராப்பியாசம் செய்விக்கிறார்கள். "ராம" சப்தத்தில் தொடங்கி மொழி (வடமொழி)யைப் போதிக்கிறார்கள். நமக்கு மதம் வேறு, வாழ்க்கை வேறு, தத்துவஞானம் வேறு என்பதில்லை. பெயர் பெற்ற தத்துவ சாஸ்திரியான ஸ்ரீ லின்யுடாங் எழுதியபடி, "பாரத நாட்டு மக்கள் ஈசுவர பரவத்தில் மூழ்கி மெய் மறந்திருக்கிறார்கள்." "அஹிம்சை விரதத்தைப் பாரத நாட்டினர் மட்டுமே நடத்த முடியும்" என்று அவர் அறை கூவினார். நமக்கு எந்தவிதமான பயம் இல்லாவிட்டாலும் ஏதோ ஒரு நிலையில் மனத்துக்குள் பாவத்தைப் பற்றிய பயம் மட்டும் இருந்தே தீரும். ராமாயண, மகாபாரத, பாகவதங்கள் இந்த உண்மையைப் பறை சாற்றுகின்றன.

விஞ்ஞான அறிவு எவ்வளவு தான் வளர்ந்தாலும் விஞ்ஞானிகள் எவ்வளவு வெற்றிகளைப் பெற்றாலும் நமக்கு மதத்தினிடம் வெறுப்பு ஏற்படவில்லை கடவுள் நம்பிக்கை குறையவில்லை. இன்றைய விமான யாத்திரைகளும் அணு ஆயுதங்களும் நமக்கு நம் வேத சாஸ்திரங்களில் உள்ள நம்பிக்கையை இன்னும் அதிகமாக்குகின்றன. கடுந்தவம் புரிந்து நமது ரிஷிகள் சாதித்த சக்திகளும் ஓயாத ஆராய்ச்சிகளால் தற்கால விஞ்ஞானிகள் சாதித்த சக்திகளும் ஒன்றுதான். விசுவாமித்திரர் படைத்த "திரிசங்கு ஸ்வர்க்கத்தை பாரமற்ற மண்டலம் அன்று என்று நிரூபிக்க முடியுமா? மகரிஷிகளுடைய தவத்துக்கும் விஞ்ஞானிகளின் ஆராய்ச்சிக்கும் வித்தியாசம்

இல்லை. காரியத்தைச் செய்வதில் உறுதி, மனத் தூய்மை, தீக்ஷை ஆகியவை முற்காலத் தவத்துக்கும் தற்கால ஆராய்ச்சிக்கும் அவசியமானவை. சிலர் நாஸ்திக நோக்கில் கடவுள் இல்லை என்றவாதத்தை நிலைநாட்ட, விஞ்ஞானிகளின் ஆராய்ச்சிகளை மேற்கோள்களாகக் காண்பிப்பார்கள். உண்மையில், இந்த ஆராய்ச்சிகள் கடவுள் உண்டென்னும் கருத்தைப் பலப்படுத்துகின்றன.

ரஷ்ய, அமெரிக்க விஞ்ஞானிகள் வானமண்டலப் பிரயாணம் சாத்தியமானதே என்று நிரூபிக்கும் வரையில் பூமியைச் சுற்றி வருவது சாத்தியம் என்பதை யாரும் ஒப்புக்கொள்ளவில்லை, பழங்காலத்து முனிவர்கள் யோகாப் பியாசத்தாலும், ஞான திருஷ்டியாலும் சாதித்த அரும்பெரும் செயல்களைப் பரிகசித்த நவநாகரிக மக்கள், ரஷ்ய, அமெரிக்க விஞ்ஞானிகள் சாதித்த வான மண்டல யாத்திரையைச் சந்தேகிப்பதில்லை. தருமபுத்திரர் பின் சென்று ஒரு நாய் ஸ்வர்க்கம் அடைந்ததென்று நாம் மகாபாரதத்தில் படித்த செய்தியைக் கற்பனை என்கிறோம். சோவியத் விஞ்ஞானிகள் மனிதனை வான மண்டல யாத்திரைக்கு அனுப்பும் முன், நாய்களை அனுப்பினார்கள் என்றால், ''என்ன வெற்றி!'' என்று மெச்சுகிறோம். தற்கால விஞ்ஞான நோக்கில் நம் வேதபுராணங்களை ஆராய்ந்தால் பல ரகசியங்கள் வெளிப்படும்; பல விஷயங்கள் புலப்படும்.

விஞ்ஞானிகளும், ஆராய்ச்சியாளர்களும் பௌதிகப் பொருள்களிலிருந்து பல வகைச் சக்திகளைப் படைக்க முடிந்த போது, பயனைப் பெற முடிந்தபோது முனிவர்கள், யோகியர், சாதகர்கள் ஆகியோர் "பிரம்ம" பதார்த்தத்திலிருந்து அதே சக்திகளைப் படைத்துப் பயன்பெற முடியாதா? இந்த வினவுக்கு நம் வேத புராணங்கள் விடை தருகின்றன. இந்த நூற்றாண்டிலே, இந்தத் தத்துவத்தைப் பறை சாற்றியவர்களும், இன்னும் பறை சாற்றிக் கொண்டிருப்பவர்களும் பலர் இருக்கிறார்கள். அவர்களுள் ஒருவர் ஸ்ரீ சாயிபாபா. மற்றொருவர் திருவண்ணாமலையில் வாழ்ந்த ரமணபகவான். சீரடியில் வாழ்ந்த ஸ்ரீ சாயிபாபா, பிரத்தியட்ச தெய்வமாவார். இவர்கள் வரலாற்றுக்கு எட்டாத புராண புருஷர்கள் அல்லர். தென்னாட்டில் ஒருவரும், மேற்குப் பாரதத்தில் ஒருவருமாக அவதரித்த சித்த புருஷர்கள். எவ்வளவு தான் அளவுக்கு மீறிச் செலவானாலும் நமது ஆத்மிகச் செல்வம் அட்சயமாக இருப்பதற்கு இவர்களும் இவர்களுடைய அருளுக்குப் பாத்திரமான புண்ணியாத்மாக்களும்தான் காரணம். ஸ்ரீ சாயிபாபாவின் அருளுக்குப் பாத்திரமாகி ஆயிரக்கணக்கான மக்களுக்கு ஒளி தந்துகொண்டிருக்கும், சித்தர் சென்னை ஷெனாய் நகரில் இருக்கும் சுவாமி கேசவய்யாஜி அவர்களாவார்.

நம் நாட்டில் ஸ்ரீ சாயிபாபாவின் அன்பர்கள் பலர் இருக்கிறுர் கள். பாபாவின் பெயரால் நல்ல செயல்களையும் தீய செயல்களையும் செய்பவர்களும் பலர் இருக்கிறுர்கள். ஸ்ரீ சாயிபாபா பக்தர்களிடம் அருள் கொண்டவர். அன்பர்களுக்கு வசப்பட்டவர். எளிதில்கிடைப் பவர். அதனுலேயே பாபாவின் பக்தர்கள் எல்லோரும் மற்ருெரு வரின் தலையீடு இல்லாமல் தாங்களே அவரைச் சேவித்து விரும்பிய எல்லாவற்றையும் பெறுகிறுர்கள். பாபாவின் பக்தர்களுள் யோக் கியர்களோடு அயோக்கியர்களும், யோகிகளோடு போலிகளும் இருக்கிறுர்கள். பாபாவின் அருளுக்குப் பாத்திரராகி, நோயற்றவர் களையும் துன்புற்றவர்களையும் பாபாவுடைய அருள் நோக்குக்கு அருகதை உள்ளவர்களாகச் செய்யக்கூடியவர்கள், பாபாவின் பக்தர் களுள் சிலர்தான் இருக்கிறுர்கள். அப்படிப்பட்டவர்களுள் சுவாமி கேசவய்யாஜீ முதன்மையானவர். இவர்களே உண்மையில் அருள் பெற்றவர்கள். மனிதர்களுக்குச் சேவை செய்வதற்காகப் பாபா இவரைச் சாவிலிருந்து காப்பாற்றி வரப்போகும் பிறவியிலிருந்தும் சில வருடங்களை இவருக்குக் கொடுப்பதாகத் தெரிகிறது. சுவாமி பாலகேசவய்யா, சாயிபக்த கேசவய்யாஜியாக மாறி இரண்டு மாமாங்கங்கள் ஆகின்றன. 1939-ம் ஆண்டு ஜுலை 1-ம் தேதி இரவு தர்மவரத்தில் ஸப்ரிஜிஸ்திரார் உத்தியோகத்தில் இருந்த ஸ்ரீ கேசவய்யாஜிக்கு ஸ்ரீ சாயிபாபா பிரத்தியக்ஷமானுர் அன்று முதல் இவர் சாயி பக்த கேசவய்யாஜி ஆனுர். இவருக்கு ஸ்ரீ சாயிபாபாவின் தரிசனம் 1939-ம் ஆண்டு ஜுலை 1-ம் தேதியன்று கிடைத்ததில் ஒரு விசேஷம் இருப்பதாகத் தெரிகிறது.

1899-ம் ஆண்டு ஜுலை 1-ம் தேதியன்று ஸ்ரீ கேசவய்யாஜி பிறந்தார். சரியாக 40-வது வயதில் இவர் பாபாவின் அருளால் சித்தி பெற்றுர். பிறகு இரண்டு மாமாங்க காலமாக ஆயிரக் கணக்கான மக்களுக்கு உடல் நோய் மன நோய்களிலிருந்து விடுதலை அருளியிருக்கிறுர். பலருடைய கஷ்டங்களை நீக்கி அவர்களுடைய குடும்பப் பிரச்னை. பொருளாதாரப் பிரச்னைகளுக்குத் தீர்வுகண்டு தென்னுட்டில் சாயிபாபாவின் மகிமையை வெளிப்படுத்தினுர். ஸ்ரீ பி. வி. நரசிம்ம சுவாமியும் ஸ்ரீ சாயிபக்த கேசவய்யாஜியும் தென்னுட்டில் சாயிபாபாவைப் பற்றிப் பிரசாரம் செய்து, பல பகுதிகளில் சாயி மந்திரங்களை நிறுவினுர்கள். இவர்கள்தான் பாபாவைச் சென்னைக்கும், ஆந்திரப் பிரதேசத்துக்கும் அழைத்து வந்தார்கள்.

ஸ்ரீ சாயிபாபாவின் பக்தர்களை அறிந்து கொள்வதற்கும், அவருடைய தகுதியை கிரகித்துக் கொள்வதற்கும் பாபாவைப் பற்றி பொதுவாகவாவது தெரிந்து கொள்வது அவசியம். ஸ்ரீ சாயிபாபா பிரத்யக்ஷ தெய்வம். அவரை அண்டி "அந்யதாஸரணம்

நாஸ்தி த்வமேவ சரணம் மவ' என்று காலில் விழுந்தவர்களுக்கு சாயிபாபா இம்மையில் செல்வத்தையும், சுகத்தையும் கொடுத்து முக்தி மார்க்கத்தை நாடும்படி செய்தார். பசியால் வயிறு பற்றி எரியும்போது யாரும் ஈச்வரனை அடைய முடியாது என்று பாபா சொன்னார். அவர் சமாதிக்குள் இருந்தாலும் பக்தர்களுடைய முறையீடுகளைக் கேட்டுக் காப்பாற்றி வருகிறார்.

ஸ்ரீ சாயிபாபா யார்? எங்கிருந்து வந்தார்? அவர் பிறப்பு வரலாறு என்ன? எந்த மதத்தைச் சேர்ந்தவர்? பெற்றோர் யார்? குல கோத்திரங்கள் என்ன? என்ற கேள்விகளை அவதார புருஷரான ஸ்ரீ சாயிபாபாவைப்பற்றிக் கேட்பது அனாவசியம், அவிவேகம். ஆனால் ஸ்ரீராம, கிருஷ்ணர்கள் அவதார புருஷர்கள் ஆனாலும் அவர்களுடைய பிறவி, பெற்றோர்களைப் பற்றிய வரலாறுகள் புராணங்களால் தெரிய வருகின்றன. இது போலவே ஸ்ரீ சாயிபாபாவின் பிறப்பு வரலாறும் மற்ற விவரங்களும் எங்கேயாவது கிடைக்குமோ என்று பக்தர்கள் பலர் வேண்டியமட்டும் விசாரித்துப் பார்த்தார்கள். பக்தர்கள் பலர், பாபாவையே கேட்டும் பார்த்தார்கள், பயனில்லை. பாபா சமாதியான பிறகு சிலர் கற்பனை செய்தும் பார்த்தார்கள். பாபா சொல்ல நினைத்த விஷயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று புலன் விசாரிக்கத் தொடங்குவதும் ஆராய்ச்சி செய்வதும் பெரிய அபச்சாரம் ஆகும். தம்மைக் குறித்துப் பக்தர்கள் அறிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் எல்லாவற்றையும் அவரே சொல்லியிருக்கிறார். 'சொல்லப்போவது பாகவதம் சொல்ல வைப்பவன் ராமபக்தன்' என்று சொல்லி கவி போதனா ஸ்ரீ மத் ஆந்திர பாகவதத்தை இயற்றியதுபோல் மராத்தி மொழியில் ஸ்ரீ கோவிந்த ராவ் ரகுநாத் தபோல்கார் என்பவர் ஸ்ரீ சாயி ஸத் சரித்திரத்தை எழுதினார்.''

மராத்தி மொழியில் இருந்த ஸ்ரீ சாயி ஸத் சரித்திரத்தை ஸ்ரீ நாகேஷ்வாசுதேவ் குணாஜி என்பவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். அதிலிருந்து சாயிபாபாவின் வாழ்க்கை வரலாற்றுப் பகுதியை இங்கே எழுதுகிறேன். வெகு நாட்களுக்கு முன்பு ஸ்ரீ சாயி ஸத் சரிதை தெலுங்கு மொழியில் வெளிவந்திருக்கிறது. சில பத்திரிகைகள் சில பகுதிகளை மொழி பெயர்த்துப் பிரசுரித்தன. சுவாமி கேசவய்யாஜியின் வரலாறு ஸ்ரீ சாயிபாபா வாழ்க்கை வரலாற்றுடன் ஆரம்பமாவது எல்லா விதத்திலும் உசித மென்று தோன்றுகிறது.

ஆங்கிலத்தில் ஸ்ரீ நாகேஷ் வாசுதேவ் குணாஜி எழுதிய ஸ்ரீ சாயி பாபா ஸத் சரிதையிலிருந்து இந்த விஷயங்களைச் சேகரித்தேன்.

இதுதான் ஆதார நூல் என்று ஸ்வாமி கேசவய்யாஜி பல சந்தர்ப்பங்களில் சொல்லியிருக்கிறார். ஸ்வாமிஜியும் ஸ்ரீ சாயிபாபாவைப் பற்றிப் பல கட்டுரைகள் எழுதியிருக்கிறார்கள். அவற்றையும் இந்த அத்தியாயத்திலேயே சாயி கிருபையால் பிரசுரித்திருந்தாலும் இந்த எழுத்தாளர் ஸ்ரீ சாயி ஸச்சரிதையிலிருந்தும் ஸ்வாமிஜியின் கட்டுரைகளிலிருந்தும் தான் 'பாபா' வாழ்க்கைக்குத் தொடர்புள்ள விவரங்களைச் சேகரித்திருக்கிறார்.

## ஸ்ரீ சாயிபாபாவின் வாழ்க்கை வரலாறு

### ஸ்ரீ என். வி. குணாஜி

இந்த நாட்டில் ஸ்ரீ சாயிபாபாவை அறியாதவர்கள் இல்லை என்றே சொல்லலாம். 1838-ம் ஆண்டு வாக்கில் மகாராஷ்டிரம் சீரடியில் அவதரித்தது முதல் இவர் பலருக்குப் பல அநுபவங்களை ஏற்படுத்தியிருக்கிறார். நோயாளிகள், நோயிலிருந்து விடுபட்டு முழு ஆரோக்கியமும் பெற்றார்கள். மனத்தாலும் உடலாலும் துன்புற்றவர்கள் அமைதியையும் சுகத்தையும் பெற்றார்கள். 'நான் மகாசமாதி ஆனபின்னும் என் பக்தர்களுடைய விருப்பங்களை நிறைவேற்றிக் கொண்டிருப்பேன்' என்று பாபா சொன்னார். அதுபோலவே பாபாவின் பக்தர்கள் இன்றும் பல பயன்களைப் பெற்று வருகிறார்கள். மகாசமாதியிலிருந்து கொண்டே பக்தர்களுடைய அழைப்பைக்கேட்டு அவர்களைக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறார். இவற்றால் ஒரு விஷயம் தெளிவாகிறது. ஸ்ரீ சாயி பாபா உயிரோடிருந்தபோதைவிட சமாதியான பிறகுதான் அதிகமாக வாழ்ந்து கொண்டிருக்கிறார். பாபா மகாசமாதியான பிறகு தான் அவருடைய புகழ் நாட்டின் எட்டுத் திக்குகளிலும் பரவியிருக்கிறது. சாயி பக்தர்களுடைய எண்ணிக்கை வளர்ந்தோங்கி விட்டது. சாயி லீலைகளை அறிந்து கொள்ள வேண்டுமென்றும் பாபாவைப்பற்றிய விஷயங்கள் எல்லாவற்றையும் தெரிந்து கொள்ள வேண்டுமென்றும் பக்தர்கள் வெகு ஆவலுடன் இருக்கிறார்கள்.

### பாபாவின் பிறப்பு

இந்த விஷயத்தில் நாம் மிகவும் துரதிருஷ்டம் செய்திருக்கிறோம். பாபாவின் பிறப்பு, பிறந்த ஊர், பெற்றோர் முதலிய விவரங்கள் யாருக்கும் தெரியாது. சாயிபாபா எப்போது, எங்கே, எந்தக் குடும்பத்தில் பிறந்தார் என்பது யாருக்கும் நிச்சயமாகத் தெரி

யாது. பக்தர்கள் இந்த விவரங்களைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று பாபாவையே பல கேள்விகள் கேட்டார்கள். பாபா எந்தக் கேள்விகளுக்கும் தெளிவாக நேரான பதில் தர வில்லை. பக்தர்கள் மிகவும் வற்புறுத்தியதன் பேரில் "நான் ஔரங்காபாத்திலிருந்து வந்தேன். நான் அங்கே என் மாமாவின் வீட்டில் இருந்தேன். அவருடைய பெயர் ''நஸத்ய'' என்றார்." ஒரு சமயத்தில் தூலியா மாஜிஸ்திரேட் கோர்ட்டில் ஒரு வழக்கில் பாபாவை விசாரித்தார்கள். கோர்ட்டார் கேட்ட கேள்விகளுக்கு ஸ்ரீ பாபா இப்படிப் பதில் சொன்னார். ''என்னை சாயிபாபா என்று வழங்குவார்கள். என் குரு 'வெங்கூஸ'. என் மதம் கபீர். என் குலமும் கோத்திரமும் கடவுள்''. இந்தத் தோரணையில்தான் அவர் எல்லாக் கேள்விகளுக்கும் பிடி கொடுக்காமல் பதில் சொன்னார்.

## நாத் பஞ்சாயதனத்தில் முக்கியமானவர்

சில நூற்றாண்டுகளுக்கு முன் தாஸ் பஞ்சாயதன் என்று ஐந்து சித்தர்களுடைய பீடம் ஒன்று இருந்ததாம். இந்த ஐவர் ஸ்ரீ சமர்த்த ராமதாஸ், ஸ்ரீ சயராம ஸ்வாமி, ஸ்ரீ ரங்கநாதஸ்வாமி ஸ்ரீ கேசவஸ்வாமி, ஸ்ரீ ஆனந்தமூர்த்தி என்பவர்களே. அதுபோல் இக்காலத்தில் நாத்பஞ்சாயதன் என்ற பீடம் ஒன்று இருக்கிறதாம். இந்தப் பீடாதிபதிகள் பரம பாகவதோத்தமர்கள். அந்த ஐவர் ஸ்ரீ மாதவநாத், ஸ்ரீ ஸத்குருஸாயிநாத், ஸ்ரீ துண்டேராஜா புலாளி, ஸ்ரீ கஜானன் மகாராஜ், ஸ்ரீ கோபாலதாஸ் என்பவர்கள். இவர்கள் ஐவரும் தங்கள் ஆத்மாக்களின் மூலம் சந்தித்துக் கொண்டு சேவை செய்து வருவார்களாம். இந்த ஐவருள் தலை சிறந்தவர் ஸ்ரீ சத்குருசாயிநாத். சாயிபாபா திரிலோகநாதன் என்று ஸ்ரீ மாதவநாத் சொல்லுவார். அவரே ஸ்ரீ பாபாவை கோஹினூர் என்றும் சொல்லுவார். இந்தப் பஞ்சாயதனத்தில் ஸ்ரீ சாயிநாத்தை எல்லோரும் கௌரவிப்பார்கள்.

## சீரடித் தேர்வு

மகாராஷ்டிர ராஜ்யத்தில் அகமத் நகர் ஜில்லாவைச் சேர்ந்த சிறிய கிராமமான சீரடியை சாயிபாபா தம் வாசஸ்தலமாக ஏன் தேர்ந்தெடுத்தார்? பல பேருக்கு இது ஒரு சிக்கலான பிரச்னை. ஆனால் ஆழ்ந்து பரிசீலித்தால் இது ஒரு பிரச்னையே அன்று. ஸ்ரீ சாயிபாபா தம் குருவைப் பற்றி இப்படிச் சொன்னார்: ''அவர் என்னை வளர்த்தார். சாப்பாட்டுக்கும துணி மணிக்கும் பஞ்சமே

இல்லை. அவர் அன்பின் உருவம் என்னிடம் மிகவும் அன்பு காட்டு வார் அவர் போன்ற குருவைப் பெறுவது அரிதிலும் அரிது. எனக்கு அவரைத்தவிர வேறு ஆதரவு இல்லை. என் மனம் எப் பொழுதும் அவரிடமே லயித்திருக்கும்.''

குரு என்றால் பாபாவுக்கு எவ்வளவு பக்தியும் அன்பும் இருக் கிறது என்பது இதனால் தெளிவாகிறது. ஸ்ரீ சாயிபாபாவின் அஞ் ஞாதமான வாழ்க்கை குருவின் சந்நிதியில் தப நிஷ்டையில் கழிந் திருப்பதாகத் தோன்றுகிறது. பாபா 16, 17 வயது முதல் குரு வின் இருப்பிடத்தைத் தேடி அலைந்தார். குருவைச் சந்திக்க வேண்டும் அல்லது அவரது சமாதியைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று அலைந்து அலைந்து ஸ்ரீ சாயிபாபா சிரடி வந்து சேர்ந்தார். சீரடியில் பாபாவைப் பார்த்தவள் நானா சோக்தா ருடைய அம்மா. ''இந்தச் சிறுவன், இந்த இளைஞன் மிகவும் அழகானவன், செக்கச்செவேலென்று லட்சணமாக இருப்பான்'' என்று அடிக்கடி சொல்வாள். ஸாத்தேவாடாவுக்கு முன் உள்ள வேப்பமரத்தடியில் இவர் தபஸ் செய்து கொண்டிருப்பார். இங்கே சிறிது காலம் இருந்தபின் எங்கேயோ போய்விட்டு மூன்று நான்கு வருடங்களுக்குப் பிறகு சாந்த் பட்டேல் கல்யாணக் கூட்டத் துடன் சீரடிக்குத் திரும்பி வந்தார். அப்பொழுது வந்தவர் சீரடியிலேயே தங்கிவிட்டார். அங்கேயே அவருடைய குருவின் பாத கமலங்களின் அடியில் வாழ்ந்து வாழ்க்கையை முடித்தார்.

இரண்டாம் முறை சீரடிக்கு வந்தபின் சாயிபாபாவின் லீலைகள் எல்லோருக்கும் தெரிந்தவைதாம். எங்கிருந்தோ பக்தர்கள் வந்து கொண்டிருப்பார்கள். எல்லா ஜாதியாரும், எல்லா மதத் தினரும் பலவகை தொழில் செய்பவரும் சாயிபாபாவை வந்து தரிசித்து உடல் நலத்தையும் மன அமைதியையும் பெறுவார்கள்.

## ஸ்ரீ சாயிபாபா யார் ?

ஸ்ரீ சாயிபாபா யார் என்ற விஷயத்தைப் பற்றி மூன்று வகை யான அபிப்பிராயங்கள் இருக்கின்றன. பொருள்களையும் மனிதர் களையும் ஆழ்ந்து ஆராயாமல் வெளித் தோற்றத்தைக் கொண்டு தீர் மானத்துக்கு வந்தவர்களெல்லாம் ''ஸ்ரீ சாயிபாபா, பாழடைந்த மசூதி ஒன்றில் வெகு காலம் வாழ்ந்த பைத்தியக்காரப் பக்கிரி என் பார்கள். பார்க்க வந்தவர்களிடம் தட்சிணை என்ற பெயரில் பணம் பறித்தார் என்றுகூட இவர்கள் சொல்லுவார்கள். இது ஓர் அபிப் பிராயம்.

இது சுத்தத் தவறு. ஒரு பக்தர் பாபாவிடம் விடைபெற்று, பம்பாய்க்குத் திரும்பிப் போகும்போது கண்ணீர் விட்டு அழுதார். "பைத்தியம் போல் நடந்து கொள்ளுகிறாயே, பம்பாயில் மட்டும் நான் உன்னுடன் இருக்க மாட்டேனா?" என்று பாபா ஊக்கம் கொடுத்தார். அதற்கு அந்த பக்தர் இப்படிப் பதில் சொன்னார், "அந்த விஷயம் எனக்குத் தெரியும். ஆனால் பம்பாயில் தாங்கள் என்னுடன் இருப்பது போன்ற அநுபவம் எனக்கு ஏற்படவில்லை." "சாயிபாபா சீரடியில் மட்டும்தான் இருக்கிறார் என்று கருதுகிறவர்கள் பாபாவைப் பார்க்க முடியாது" என்று ஸ்ரீ சாயிபாபா சொன்னார். சாயிபாபா எங்கும் நிறைந்தவர், சாயிபாபா புனிதமானவர் என்று சிலர் கருதுகிறார்கள். முகம்மதியர்கள், சாயிபாபாவைத் தங்கள் பீர்களுள் ஒருவர் என்று நினைக்கிறார்கள். சாயிபாபா மகரிஷி என்று இந்துக்கள் நினைக்கிறார்கள். சீரடியில் உற்சவங்களை நடத்துகிறவர்கள் எல்லோரும் பாபாவை "ஸந்த் சூடாமணி" என்கிறார்கள். இந்த அபிப்பிராயமும் தவறுதான்.

மூன்றாம் வகையினர் ஸ்ரீ சாயிபாபாவை, பகவானுடைய அவதாரம் என்கிறார்கள். பாபாவின் பக்தர்களும் அவருக்கு அருகில் இருந்து அவருடைய லீலைகளைக் கண்டவர்களும் சாயிபாபாவைக் கடவுள் என்றார்கள். இது சரியான அபிப்பிராயம். ஸ்ரீ சாயிபாபா கடவுளே-பிரத்தியக்ஷ தெய்வம்.

சாயிபாபாவை, தத்தாத்ரேயருடைய அவதாரம் என்று ஸத்சரிதையின் ஆசிரியரான ஹேமாத் பந்த் எழுதியிருக்கிறார்.

## சீரடிக்கு சாயிபாபாவின் வருகை:

இயற்றியவர்: ஸ்ரீ ஹேமாத் பந்த்

"யத³ா யத³ாஹி த⁴ர்மஸ்ய க்³லானிர் ப⁴வதி ப⁴ாரத
அப்⁴யுத்த²ான மத⁴ர்மஸ்ய தத³ாத்மானம் ஸ்ருஜாம் யஹம்
பரித்ராணாய ஸாதூ⁴னாம் விநாசாயச து³ஷ்க்ருதாம்
த⁴ர்ம ஸம்ஸ்த²ாபனார்த்த²ாய ஸம்ப⁴வாமி யுகே³ யுகே³" (கீதை)

"தருமம் அழிந்து அதருமம் ஓங்கும் போது நான் அவதரிப்பேன். நல்லோர்களைக் காத்து, துஷ்டர்களைத் தண்டித்து, தர்மத்தை நிலைநாட்ட ஒவ்வொரு யுகத்திலும் நான் தோன்றிக்கொண்டிருப்பேன்" என்று ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனிடம் சொன்னார். ஈசுவரனுடைய செயலும் கடமையும் இதுதான். பகவானுக்குப் பிரதிநிதிகளான முனிவர்களும் யோகீசுவரர்களும் அந்த அந்தக் காலங்களில் இவ்வுலகுக்கு வந்து பகவானுடைய பணியைச் செய்வார்கள்.

இவர்கள் நமக்கு ஒளி காண்பித்துச் சரியான வழியில் கொண்டு செலுத்துவார்கள். இந்த முறையில் பல மகான்கள் பிறந்தார்கள். நிவிருத்தி, ஞானதேவர், முக்தாபாய், நாமதேவர், கோரா, கோநய், ஏகநாதர், துகாராம், நரஹரி, நார்சிபாய், ஸஜன்காசாய் ஸவத, ராம் தாஸ், கபீர்தாஸ் இன்னும் பலர், மக்களுக்கு நல்வழி காட்ட இவ்வுலகத்துக்கு வந்தார்கள். கடைசியில் சீரடி சாயிபாபா வந்தார்.

சாயிபாபாவின் பிறப்பு, பெற்றோர் பற்றிய செய்திகளை யாரும் அறியார். அறிய முயன்றும் பயனில்லை. இவ்விஷயங்களைப் பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது. நாமதேவரும், கபீரும் சாதாரண மனிதர்களைப் போல் பிறக்கவில்லை. பீம்ரதி நதியில் கோநய் நாமதேவரைக் குழந்தையாகக் கண்டெடுத்தார். தமால் கபீரை பாகீரதி நதியில் குழந்தையாகக் கண்டார். சாயிபாபாவின் அவதாரமும் இவை போன்றதே. பக்தர்களுக்காக சீரடியில் பதினாறு வயது இளைஞனாக அவர் ஒரு வேப்ப மரத்தடியில் காணப்பட்டார். அப்பொழுதே அவருக்குப் பிரம்ம ஞானம் பூரணமாகக் கிடைத்திருந்தது. கனவில் கூட அவருக்கு உலகத்துப் பொருள்களின்மேல் ஆசை விழவில்லை. மாயையை உதறித் தள்ளினார். முக்தி அவருடைய திருவடிகளுக்கருகே காத்துக் கிடந்தது.

நானா சோப்தாருடைய தாய், பாபாவைக் கீழ்க்கண்டபடி வருணித்தாள். "இந்தச் சிறுவன் வெகு அழகாக இருக்கிறான். வேப்ப மரத்தடியில் பத்மாசனம் இட்டு அமர்ந்திருக்கிறான். சீதோஷ்ண நிலையை லட்சியம் செய்வதில்லை, காற்று, மழையையும் லட்சியம் செய்வதில்லை. இவ்வளவு சிறு வயதில் கடுமையான தவம் செய்வதைக் கண்ட கிராமத்தார் எல்லோரும் ஆச்சரியம் அடைந்தார்கள். அவர் பகலில் யாரோடும் பழகுவதில்லை. 'இந்தச் சிறுவன் எங்கிருந்து வந்திருப்பான்?' என்று எல்லோரும் கேட்டுக்கொள்வார்கள். ஒரு தரம் பார்த்தால் போதும் என்று விட்டுச் செல்ல மனம் வராது. அவனுடைய தேஜஸும் அழகும் அவ்வளவு கவர்ச்சியாக இருக்கின்றன. அவனிடம் ஒவ்வொருவருக்கும் குழந்தை வாத்ஸல்யம் பிறக்கிறது. அவன் யார் வீட்டுக்கும் போகமாட்டான். எப்பொழுதும் வேப்ப மரத்தடியிலே உட்கார்ந்திருக்கிறான். வயதோ குறைவு. மனம் பழுத்து விட்டது.

"அவனுடைய நடவடிக்கைகளைப் பார்த்தால் அவன் ஒரு மகாத்மா என்ற அபிப்பிராயமே தோன்றும்."

"ஒரு நாள் கண்டோபா ஒரு பக்தன்மேல் ஆவேசமாக வந்தார். அப்பொழுது அங்கே கூடியிருந்த எல்லோரும், 'தேவா! இந்தக்

குழந்தை எங்கிருந்து வந்தான்? இவனுடைய தாய்தந்தையர் யார்?' என்று கேட்டார்கள். கண்டோபா மக்களுக்குப் பாபாவின் பிறவி வரலாறு எதையும் சொல்லவில்லை. ஓர் இடத்தைக் காண்பித்து, கடப்பாறை கொண்டுவந்து அங்கே தோண்டச் சொன்னார். மக்கள் அப்படியே அங்கே தோண்டினார்கள். ஒரு பெரிய கல்லும், செங்கல் களும் காணப்பட்டன. அந்தக் கல்லை எடுத்தவுடன் ஓர் இடைவழி தெரிந்தது. நாற்புறமும் நான்கு ஜோதிகள் எரிந்துகொண்டிருந்தன. இடைகழியில் நுழைந்து பார்த்ததும் கோமுக வடிவில் உள்ள கட்ட டங்களும் சில மரக் கட்டைகளும் கழுத்தில் அணியும் ஆபரணங்க களும் காணப்பட்டன. 'இங்கே இந்தச் சிறுவன் 12 வருட காலம் தவம் செய்தான்' என்று கண்டோபா சொன்னார். மக்கள் இந்த விஷயத்தைப் பற்றி சாயிபாபாவைக் கேட்டதற்கு அவர் சரியான பதில் சொல்லவில்லை. அது தம் குருவின் இடம் என்றும் அங்கே தான் அவருடைய சமாதி இருக்கிறதென்றும் அந்தப் பிரதேசத்தை ஜாக்கிரதையாகக் காப்பாற்றும்படியும் சொன்னார். பிறகு ஜனங் கள் அந்தப் பெரிய கல்லைப் பழையபடி மூடி மறைத்துவிட்டார்கள். பின்பு சில நாட்களுக்கெல்லாம் சாயிபாபா அங்கிருந்து போய்விட் டார். மறுபடியும் சாந்த் பட்டேல் கலியாணக் கூட்டத்துடன் சீர டிக்கு வந்து சேர்ந்தார்.

அப்போதைய நிஜாம் சமஸ்தானத்துக்கு உட்பட்ட ஔரங்கா பாத் ஜில்லாவில் 'தூப்' என்னும் கிராமம் இருக்கிறது. அக்கிராமத் தில் 'சாந்த்' என்னும் பணக்கார முகம்மதியர் ஒருவர் இருந்தார். அவர் அக்கிராமத்தின் குடியானவர். அவர் ஔரங்காபாத்துக்கு போகும்போது வழியில் அவருடைய குதிரை மாயமாய் மறைந்து விட்டது. அவர் குதிரை கிடைக்கும் என்ற ஆசையை விட்டுவிட்டுச் சேணத்தைத் தோளில் போட்டுக்கொண்டு ஔரங்காபாத்திலிருந்து திரும்பி வந்துகொண்டிருந்தார். இரண்டு மாத காலம் குதிரையைத் தேடி அலுத்துவிட்டார். இப்படி பத்து மைல் தூரம் நடந்து மா மரம் ஒன்றைச் சமீபித்தார். அம்மரத்தடியில் விசித்திரமாகக் காணப்பட்ட இளைஞன் ஒருவனைக் கண்டார். தலையில் தொப்பி, உடலில் சொக்காய், கக்கத்தில் குறுந்தடி ஒன்று. ஹுக்கா குடிக்க எல்லாம் தயாராக வைத்திருந்தான். சாந்த் பட்டேல் அவ்வழியே செல்வதைக் கண்ட இளைஞன் அவரைக் கூப்பிட்டான். இரண்டு 'தம்' ஹுக்கா இழுத்துவிட்டு, ஓய்வெடுத்துக்கொண்டு போகச் சொன்னான். சாந்த் பட்டேலின் தோளில் தொங்கிய சேணத்தைப் பற்றியும் அந்தப் பக்கீர் விசாரித்தான். சாந்த் பட்டேல் மறைந்து விட்ட குதிரையைப் பற்றிச் சொன்னார். அவ்விடத்துக்கு அருகி லேயே குதிரை மேய்ந்துகொண்டிருப்பதாகவும் போய்ப் பார்க்கும் படியும் பக்கீர் சொன்னான். சாந்த் பட்டேல் போய்ப் பார்த்துக்

குதிரை மேய்ந்துகொண்டிருப்பதைக் கண்டார். “இந்தப் பக்கீர் சாமானிய மனிதன் அல்ல; ஒரு மகானாக இருக்கவேண்டும்” என்று சாந்த் பட்டேல் தீர்மானித்தார். குதிரையை ஓட்டிக்கொண்டு சந்தோஷத்துடன் பக்கீரை நோக்கி வந்தார். ஹுக்கா தயாராய் இருந்தது; ஆனால் புகையை உறிஞ்சும் துணியை நனைக்கத் தண்ணீர் இல்லை. சுருட்டுப் பற்றவைக்க நெருப்பு இல்லை. பக்கீர் தன்னிடம் இருந்த கூரான குச்சியால் ஓங்கித் தரையில் குத்தினான். கனிந்து கொண்டிருந்த நெருப்புத் துண்டம் மேலே வந்தது. கக்கத்தில் இருந்த குறுந்தடியை எடுத்துத் தரை மீது அடித்தான். அங்கிருந்து தண்ணீர் கொப்புளித்து மேலே வந்தது. ஹுக்கா குடிப்பதற்கு வேண்டிய நெருப்பும் தண்ணீரும் கிடைத்துவிட்டன. பாபா இரண்டு ‘தம்’ இழுத்துவிட்டுப் பட்டேலிடம் கொடுத்தார். இந்த நிகழ்ச்சிகளையெல்லாம் கண்ட சாந்த் பட்டேல் ஆச்சரியத்தால் பிரமித்தார். தம்முடன் தம் வீட்டுக்கு வரும்படி பக்கீரை வேண்டினார். மறுநாள் பக்கீர் (சாயிபாபா) சாந்த் பட்டேலின் வீட்டுக்குச் சென்றார். அங்கேயே சிறிது காலம் தங்கினார். சாந்த் பட்டேலின் மைத்துனர் பிள்ளைக்குத் திருமணம் நிச்சயமாயிற்று. பெண் சீரடியில் வசிப்பவள். சாந்த் பட்டேல் இந்தக் கலியாணத்துக்காக சீரடிக்குப் புறப்பட்டார். சாயிபாபாவும் இந்தச் சம்பந்திகளுடன் புறப்பட்டார். கலியாணம் சிறப்பாக நடந்தது. சம்பந்திகள் திரும்பிப் போய்விட்டார்கள். பாபா மட்டும் சீரடியிலேயே தங்கிவிட்டார்.

## சாயி என்ற பெயர் எப்படி வந்தது?

சம்பந்திகள் சீரடிக்கு வந்து பகத் மஹல்ஸ்பதியின் வயலில் ஓர் ஆல மரத்தின் கீழே தங்கினார்கள். கண்டோபா கோயிலுக்கு அருகே தான் இந்த ஆலமரம் இருந்தது. சம்பந்திகள் எல்லோரும் வண்டியிலிருந்து இறங்கினார்கள். அவர்களுடன் பக்கீரும் இறங்கினார். அப்பொழுது பகத் மஹல்ஸ்பதி பக்கீரைப் பார்த்து, “சாயிக்கு நல்வரவு” என்றார். அதுமுதல் இந்தப் பக்கீரை எல்லோரும் “சாயி” என்று அழைத்தார்கள்.

சாயிபாபாவைப் பற்றி இந்த நூலில் இதற்கு மேற்பட்ட விவரங்களை எழுதுவது உசிதம் ஆகாது. ஸ்வாமி கேசவய்யாஜீயின் வரலாற்றைத் தொடங்கும் முன், அவர் சாயிபாபாவைப் பற்றி எழுதிய கட்டுரைகளைப் பற்றிச் சொல்ல வேண்டியது கடமை.

ஸ்ரீ ஸ்வாமி கேசவய்யாஜீயின் கட்டுரைகள் பல பத்திரிகைகளில் ஏற்கெனவே வெளிவந்திருக்கின்றன. சாயிபாபாவைப் பற்றி எழுதிய கட்டுரைகள் இரண்டு, “ஸஞ்ஜய” என்னும் பத்திரிகையில்

வெளிவந்திருக்கின்றன. அந்த இரண்டையும் உள்ளபடியே இங்கே எழுதியிருக்கிறேன்.

## ஸ்ரீ சாயிபாபா அவதாரம்

எழுதியவர்: ஸ்ரீ ஸ்வாமி கேசவய்யாஜீ

"நல்லோர்களை ரட்சித்து, துஷ்டர்களை ஒழித்து, தர்மத்தை மீண்டும் நிலைநாட்ட ஒவ்வொரு யுகத்திலும் நான் அவதரிப்பேன்" என்று கிருஷ்ண பரமாத்மா சொல்லியருளினர். பகவானுடைய அவதாரங்களின் ஒரே குறிக்கோள் தர்மத்தைக் காப்பதுதான். அது போலவே, சந்தேகப் பிராணிகளின் சந்தேகத்தைத் தீர்த்து அஞ்ஞானிகளுக்கு ஞானத்தை அருள் பாலித்து, அவர்களுக்கு ஆத்மீக மார்க்கத்தைக் காண்பிப்பதற்காக, திவ்விய ஜோதிகளை ஏற்றும் பொருட்டு மகா புருஷர்களும் யோகீசுவரர்களும் அவதரிக்கிறார்கள். ஞானதேவர், நாமதேவர், துக்காராம், ஏசுநாதர், ஸமர்த்த ராமதாஸர், ராமகிருஷ்ண பரமஹம்ஸர், ஸ்வாமி விவேகானந்தர், ஸ்ரீ ஸத்குரு சாயிநாத் ஆகியோர் இந்த வகையைச் சேர்ந்தவர்களே. இம்மகான்கள் எல்லோரும் வலுவில் மனிதர்களுள் வாழும் தெய்வத்தை உலகுக்கு எடுத்துக் காட்டினார்கள். அஞ்ஞானமாகிய இருட்டில் முடிவில்லாத துன்பத்தில் உழலும் மக்களுக்கு, இவர்கள் அமைதியையும் சுகத்தையும் அருளினார்கள். இவர்களுள் சிலர், ஆத்மிக வாழ்க்கைக்கு இல்லற வாழ்க்கை இடையூறாக இருக்காது என்பதை நிரூபித்தார்கள். இம்மகான்கள் சாதித்த வெற்றிகளும் அருஞ் செயல்களும் தெய்வீகத் தொடர்பு கொண்டவை.

ஸ்ரீ சாயிபாபா சீரடியில் ஒரு வேப்ப மரத்தடியில் அமர்ந்து தவம் செய்தார். நூற்றுக் கணக்கான மக்கள் வந்து பாபாவைத் தரிசித்து விட்டுப் போவார்கள். இப்படிச் சிறிது காலம் சென்றது. பாபா இடம் மாறினார். வேப்ப மரத்தை விட்டு அதற்கு அருகில் இருந்த மசூதி ஒன்றில் தங்கினார். அது பாழடைந்து இடிந்து கிடந்தது. பாபா அதிலேயே குடியிருந்தார். பாபாவைத் தரிசிக்க வருவோரின் எண்ணிக்கை படிப்படியாக உயர்ந்து வந்தது.

சிருஷ்டியில் அடங்கிய சராசரங்கள் (ஜடம்—ஜீவன்) எல்லாவற்றுள்ளும் சாயிபாபா தெய்வத்தைக் கண்டார். கடவுளிடத்தில் அகில உலகத்தையும் கண்டார். ஸ்ரீ சாயிபாபாவின் அறிவுரைகளில் "அன்பு" முக்கியமானது. ஜாதி, மத பேதம் இல்லாமல் எல்லா மக்களையும் சம நோக்கில் பார்த்தார். களங்கம் அற்ற அன்புடனும் அசையாத பக்தியுடனும் பரமாத்மாவைச் சேருவதற்கு, பாபா வழி காண்பித்தார்.

நாம ரூபங்கள் எவையாயினும் கடவுள் ஒருவரே என்றும் உருவம் எதுவானாலும் அவதாரம் ஒன்றே என்றும் பாபா தம் பக்தர்களுக்கு நிரூபித்துக் காட்டினார். எந்தத் தெய்வத்தின்மேல் நம்பிக்கை இருக்கிறதோ அதையே ஆராதியுங்கள் என்று சாயிபாபா சொன்னார். யாருக்கு எந்த ஈச்வராம்சத்தில் நம்பிக்கை இருக்கிறதோ அந்த அம்சத்திலேயே அவர்களுக்கு பாபா காணப்படுவார். ஸ்ரீ சாயிபாபா எம்மதமும் சம்மதமாகிய குரு. ஹிந்து பக்தர்கள் தங்கள் சாஸ்திரங்களின் அடிப்படைகளையும், முதல்படி ரகசியங்களையும் பாபாவிடமிருந்து தெரிந்து கொண்டார்கள். முஸ்லிம் பக்தர்கள் குர்ஆன் ரகசியங்களைப் பாபாவிடமிருந்து தெரிந்துகொண்டார்கள். சாயிபாபாவின் சந்நிதியில் எல்லா மதத்தினரும் மிக ஒற்றுமையாகவும் சமரசத்துடனும் பழகுவார்கள்.

ஸ்ரீ சாயிபாபா தம்முடைய பக்தர்களின் பரமார்த்திக விவகாரங்களை மட்டுமா கவனித்துத் திருத்தினார்? பக்தர்களை ஒவ்வொரு கணமும் கண்ணை இமை காப்பதுபோல் காத்து வந்தார். மசூதியில் உள்ள 'துனி' ஹோமகுண்டத்திலிருந்து விபூதி எடுத்துக் கொடுத்து பக்தர்களுடைய துன்பங்கள் எல்லாவற்றையும் போக்குவார். பாபா அருளிய விபூதியால் உடல் நோய்கள், மனக் கவலைகள் எல்லாம் மாயமாக மறைந்து மனத்துக்குச் சாந்தியும் உடலுக்குச் சுகமும் கிடைக்கும். மெக்கா யாத்திரைக்குப் போக நினைக்கும் ஏழை முஸ்லிம்களுக்குப் பாபா பண உதவி செய்வார்.

பாபா, முப்பது வருஷ காலம் தம் பக்தர்களுக்குத் தோழராய், நிழல்போல் துணையாய், ஞான வள்ளலாய் இருந்து வந்தார். இன்றைக்கும் அடைக்கலம் புகுந்தவர்களைக் காப்பாற்றிக் கொண்டுதான் இருக்கிறார்.

ஸ்ரீ சாயிபாபா பல அற்புதங்களை நிகழ்த்தி மக்களை வியப்பில் ஆழ்த்தினார். சீரடிக்கு வந்த புதிதில் ஏதேதோ மூலிகைகளைக் கொடுத்து நோய்களைக் குணமாக்கி வந்தார். பெரிய ஹக்கீம் என்று பெயர் பெற்றார். வர வர மூலிகை கொடுப்பதைக் குறைத்துக் கொண்டு, துவாரகமாயியில் உள்ள ஹோமகுண்டத்திலிருந்து விபூதியைக் கொடுத்து, "அல்லா, அச்சா கரேகா" என்பார். இந்த விபூதியாலேயே எல்லா நோய்களும் குணமாகி வந்தன. தம்மைத் தரிசிக்க வந்த பக்தர்களுக்கு விபூதி கொடுத்து ஆசீர்வதிப்பார். மற்ற மகான்கள் தங்கள் பக்தர்களை இவ்வளவு சுலபமாக அனுக்கிரகிக்க மாட்டார்கள். ஆனால் வெகு எளிதில் பாபாவின் அனுக்கிரகத்தைப் பெறலாம். அவருடைய அன்பு வெள்ளம், புனித கங்கை நதியைப் போல் பெருக்கெடுத்து ஓடுகிறது; மக்களைக் கரையேற்றுகிறது.

பக்தர்கள் எல்லோரையும் அவர் சமநோக்கில் பார்ப்பார். எந்த வித்தியாசமும் காண்பிக்கமாட்டார். தம்மிடம் அசையாத பக்தியும் நம்பிக்கையும் உள்ள பக்தர்களுக்கு அடிக்கடி பாபா, தம் மகிமையைக் காண்பிப்பார். தம் திவ்விய சக்தியால் பக்தர்களுடைய துன்பங்களை நீக்கி, ''நானிருக்க, பயமேன்'' என்று அபயம் கொடுப்பார். பக்தர்களுடைய இதயத்திலிருந்து அற்ப ஆசைகளை விலக்கி, அவர்களுடைய ஆத்மாவை உயர்ந்த நிலைக்குக் கொண்டுவந்து முக்திக்கு வழி காட்டுவார்.

சாயிபாபா ஹிந்து-முஸ்லிம் நட்புக்கும் ஒற்றுமைக்கும் மிகப் பாடுபட்டார். மத மாற்றத்தையும் இஷ்ட தெய்வத்தை விட்டு விடுவதையும் அவர் பொறுக்கமாட்டார். அந்த இயல்பைத் தீவிரமாகக் கண்டித்தார். பக்தர்கள் எந்த மதத்தைச் சார்ந்தவர்களோ அந்த மதத்தின் முறைப்படியே கடவுள் சந்நிதியைச் சேரலாம் என்று ஊக்குவிப்பார். சிரடியில் 'ஸ்ரீ ராம நவமி', 'ஸஞ்ஜா ஸந்தல்' உற்சவங்கள் வெகு கோலாகலமாக நடக்கும். எல்லா மதத்தினரும் ?ர வகுப்பினரும் இந்த உற்சவங்களில் பங்கு கொள்வார்கள்.

1886-ஆம் ஆண்டில் மூன்று நாட்கள் பாபா உடலை விட்டுப் பிரிந்தார். ''நான் அல்லாவிடம் போகிறேன்; மூன்று நாட்களில் திரும்பி வராவிட்டால் இந்த உடலைச் சமாதி செய்து விடுங்கள்'' என்று பக்தர்களுக்கு உத்தரவிட்டார். பக்தர்கள் பாபாவின் உடலைக் காத்துக்கொண்டு 'என்ன நடக்கப் போகிறதோ?' என்று ஆவலுடன் எதிர் பார்த்திருந்தார்கள். மூன்றும் நாள் ஜீவன் மறுபடியும் பாபா உடலுக்குள் பிரவேசித்தது. பிறகு பாபா பக்தர்களுக்குப் பல நன்மைகளைச் செய்தார்; இப்பொழுதும் பக்தர்கள் பல நன்மைகளைப் பெற்று வருகிறார்கள்.

ஸ்ரீ சாயிபாபா 1918-ஆம் ஆண்டு விஜயதசமியன்று உடல் நீத்து மகா சமாதி அடைந்தார். இந்த ஸ்தூல சரீரத்தை விட்ட பின்னும் சூட்சும சரீரத்தோடு இருந்துகொண்டு, பாபா பக்தர்களுக்கு அருள் பாலித்துக்கொண்டிருக்கிறார். ''நான் உடலை நீத்தாலும் என் சமாதி பேசும்'' என்று பாபா சொன்னார். அப்படியே பாபா இன்றும் பக்தர்களை ரட்சித்துக்கொண்டும் அவர்களுடைய விருப்பங்களை நிறைவேற்றிக்கொண்டும் இருக்கிறார். சாயிபாபா ஸர்வாந்தர்யாமி, ஸர்வ சக்தியும் பெற்றவர்.

## ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் வழிபடு தெய்வம்

எழுதியவர்: ஸ்ரீ ஸ்வாமி கேசவய்யாஜீ

தம் கொள்கைகளையும் நம்பிக்கைகளையும் செயல்படுத்துவதன் மூலமாக, தம்மைப் பின்பற்றியவர்களுடைய மனத்தை மாற்ற

முயன்றார் பாபா, வேத வேதாங்கங்களை உருப்போடுவதிலோ, தர்க்க மீமாம்ஸா சாஸ்திரங்களைக் கரைத்துக் குடிப்பதிலோ பகவானை அடைய முடியாது என்பது பாபாவின் அபிப்பிராயம். பகவானைப் போல் நடந்துகொள்வதாலும் அதற்கேற்ற நல்லொழுக்கத்தைக் கடைப்பிடிப்பதாலுமே கடவுளை அடைய முடியும் என்பது பாபாவின் சித்தாந்தம். பரமாத்மாவைப் போல் நம் நடவடிக்கைகளை உருவாக்கிக்கொண்டு நற் பழக்கங்களை ஏற்படுத்திக்கொண்டு பகவானுடைய மாற்றுருவம்போல் ஆவதே முக்தி. அதற்காக ஒவ்வொரு மனிதனும் தன்னாலியன்ற அளவு பாடுபடவேண்டும். மனிதர்களுக்கு அன்றாடம் ஏற்படும் அநுபவங்களிலிருந்து பரிபூர்ணமான சத்தியத்தை பாபா உருவாக்கினார். அவற்றையே பக்தர்களுக்கு உபதேசித்தார்.

''என் பக்தர்களுக்கு ஒரு குறையும் இல்லை. இம்மையிலும் மறுமையிலும் அவர்கள் விரும்பிய எதுவும் கிடைக்காமல் இருக்காது. இந்த உடலை விட்டபின் என் சமாதி, பக்தர்களுடைய சந்தேகங்களுக்கு விளக்கம் கொடுத்துக்கொண்டு, அவர்களுடைய விருப்பத்தை நிறைவேற்றிக்கொண்டிருக்கும்'' என்று சாயிபாபா சொன்னார். இம்மையிலும் மறுமையிலும் மிக உயர்ந்தவற்றை என் பக்தர்களுக்குக் கொடுப்பதற்காக நான் அவதாரம் செய்தேன்'' என்றார் பாபா. இந்த வாக்குறுதியை பாபா எழுத்துக்கு எழுத்து நடத்திக் கொடுக்கிறார். ''பரலோகங்களில் உள்ள மிகச் சிறந்தவற்றை என் பக்தர்களுக்குக் கொடுப்பதற்காக நான் அவதரித்தேன்'' என்று சொன்னார் அல்லவா? பக்தர்களுடைய அநுபவமும் அப்படித்தான் இருக்கிறது. உத்தியோகத்தை விரும்பியவர்களும், பொருட் செல்வத்தை வேண்டியவர்களும் நோய்களிலிருந்து விடுபட விரும்பியவர்களும் பாபாவை அண்டித் தங்கள் ஆசைகளை நிறைவேற்றிக்கொண்டார்கள். வேண்டியவற்றைப் பெற்றார்கள். பாபா ஆளை அனுப்பி, பக்தர்களைத் தருவித்துக் கொள்வார். முதலில் அவர்களுக்கு இம்மைச் சுகங்களை ஏற்படுத்திக் கொடுத்து, அதன் மூலம் அவர்களுக்குக் கடவுளிடம் நம்பிக்கையை உண்டாக்கி, நாளடைவில் தரும மார்க்கத்தில் செலுத்தி ஆத்மிக வாழ்வில் புகுத்துவார்.

சம்சாரத் தளையில் அகப்பட்டுத் திக்குத் திசை தெரியாமல் தடுமாறும் மக்களுடைய நலனுக்காகவும் மறுமலர்ச்சிக்காகவும் பாபா உழைத்தார். இந்தக் காரிய சாதனைக்காகவே பாபா தம் வாழ்க்கையை அர்ப்பணித்தார். இந்த உண்மையை நிரூபிக்கப் பல உதாரணங்கள் உள்ளன. இப்பொழுதும் பாபா தம் பக்தர்களை மிக அன்புடனும் பரிவுடனும் பார்த்துக்கொள்கிறார். ''நான் பக்தர்களுடைய சேவகன்'' என்று பாபா சொல்லுவார். பரிபூர்ண ஞானி; ஆத்மிக வித்தை வசமானவர்; பரமாத்மாவை அடைந்த சித்த புருஷன்;

ஆனாலும் பச்சைக் குழந்தைபோல், சூதுவாதுகள் அறியாதவர். "உங்கள் தரிசனத்தால் என் வாழ்க்கை பயன் பெற்றது. உங்கள் திருவடிகளைக் காணும் பாக்கியம் எனக்குக் கிட்டியது என் பெரும் புண்ணியம்; நான் கேவலம் ஒரு புழுவுக்குச் சமம்" என்று பாபா தம் பக்தர்களைப் பார்த்துச் சொல்லுவார்.

அன்றாடம் பிச்சை எடுத்து வாழ்க்கை நடத்திய பக்கிர் சாயி பாபா, நினைத்த மாத்திரத்தில் சக்ரவர்த்திபோல் வாழத் திறமை பெற்றவர். ஆனாலும் அவர் தம் சுகத்தை என்றுமே விரும்பவில்லை. பக்தர்களைச் செல்வத்தில் திளைக்க வைத்து, தாம் மட்டும் பிச்சைப் பாத்திரத்தை விடாமல் காலந்தள்ளிய கால ஞானி; திரிகால ஞானி மூவுலகுக்கும் தலைவர். தற்காலத்து ராஜ்ய கவர்னர்களுக்கு வரும் அளவு வரும்படி அக்காலத்தில் பாபாவுக்கு வந்துகொண்டிருந்தும் 1918-ஆம் ஆண்டு உடல் நீத்த போது பதினாறு ரூபாய்கள் மட்டுமே இருந்தன.

பிச்சைக்காரர்களுக்கு முழு மனதுடன் தாராளமாக நம்மால் கொடுக்க முடிந்த அளவு கொடுக்க வேண்டுமென்று பாபா அறிவுரை கூறினார். பக்தர்கள் கொடுத்த தட்சிணையையும் பக்தர்களிடம் வசூலித்த தட்சிணையையும் பாபா அக்கணமே தேவையுள்ளவர்களுக்கும் தகுதி உள்ளவர்களுக்கும் கொடுத்து விடுவார். கஷ்டப்படுகிற ஏழைகளுக்கு நாம் எவ்வளவு உதவுகிறோமோ, அவ்வளவையும் கடவுள் நமக்குத் திரும்ப உதவுவார் என்று பக்தர்களிடம் சொல்லுவார். "தேஹி" என்று கையேந்தி வந்தவர்களைத் தாழ்வாகப் பார்க்கக் கூடாது. வெறுப்புக் காட்டக் கூடாது. தானம் கொடுப்பதால் ஒளி கூடி, பரமாத்மாவுடன் ஐக்கியமாக முடியும். கேட்பவர்களுக்குக் கொடுக்கக் கூடிய சந்தர்ப்பத்தை மகா பாக்கியமென்று கருதித் தானம் செய்து கொண்டிருக்க வேண்டும்.

பக்தர்களுடைய விருப்பத்தை நிறைவேற்ற, பாபா ஏதும் செய்வார். சீரடியில் ஒரு சமயம் மௌல்வி ஐவர் ஆலி என்பவர் சாயி பாபாவிடம் சென்று, "நீங்கள் என் சீடனாய் என் பின்னால் 'ரஹட்டா'வுக்கு வர வேண்டும்" என்று வேண்டினார். பாபா உடனே அதற்குச் சம்மதித்து ஐவர் ஆலியின் பின் சென்று மூன்று மாதங்கள் குருவுக்குச் சிசுருஷை செய்தார். ஹிந்து பக்தர்களுக்கு இது சரியென்று படவில்லை. ரஹட்டாவுக்குச் சென்று ஐவர் ஆலி இல்லாத சமயம் பார்த்து பாபாவைச் சந்தித்தார்கள். மறுபடியும் சீரடிக்கு வர வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். பாபா "ஐவர் ஆலி மிகப் பொல்லாதவன். அவன் திரும்பி வருவதற்கு முன் நீங்கள் இங்கிருந்து போய்விடுங்கள். குருவின் உத்தரவு பெறாமல் சீரடிக்கு என்னால் வர முடியாது" என்று அவர்களுக்குப் பதில் சொன்னார். அதற்

குள் அந்த மௌல்வி வந்துவிட்டார். அவர் சீரடியிலிருந்து வந்த பக்தர்களைக் கண்டு சீற்றத்துடன் துரத்த முற்பட்டார். பக்தர்களுக்கும் மௌல்வி ஜவர் ஆலிக்கும் தீவிரமான வாக்குவாதம் நடந்தது. பிறகு மௌல்வியும் சீரடிக்கு வரச் சம்மதித்தார். சாயிபாபாவும் குரு ஜவர் ஆலியும் சீரடிக்குத் திரும்பினார்கள். அப்பொழுதுதான் மௌல்விக்கு விவேகம் பிறந்தது. சாயிநாதனைச் சரணடைந்தார், அது முதல் ஜவர் ஆலி பாபாவின் பக்தர் ஆனார். பாபாவுக்கு ஜவர் ஆலியிடம் எந்த விதமான வெறுப்பும் ஏற்படவில்லை.

சீரடியில் நானவல்லி என்னும் விசித்திர மனிதன் இருந்தான். இவன் பாபாவுக்குப் பரிசாரகனைப் போல் இருந்து அவருடைய வேலைகள் எல்லாவற்றையும் செய்து வந்தான். அவன் ஒரு நாள் பாபாவிடம் சென்று, "நீங்கள் உங்களுடைய ஆசனத்திலிருந்து எழுந்திருங்கள்; நான் உட்கார வேண்டும்" என்றான். உடனே பாபா எழுந்திருந்து நானவல்லிக்குத் தம் ஆசனத்தைக் கொடுத்தார். நானவல்லி சிறிது நேரம் ஆசனத்தில் உட்கார்ந்திருந்த பின், பாபாவிடம் சென்று, "இனி நீங்கள் போய் உங்கள் ஆசனத்தில் உட்காருங்கள்" என்றான். பாபா அவன் சொன்னபடியே திரும்பவும் ஆசனத்தில் உட்கார்ந்தார். உடனே நானவல்லி பாபாவின் திருவடிகளில் விழுந்து வணங்கிவிட்டு எங்கோ போய்விட்டான். நானவல்லியின் விசித்திரமான—பொருத்தம் அற்ற—செயலைக் கண்டு பாபாவுக்குக் கோபமோ, அதிருப்தியோ ஏற்படவில்லை. ஸ்ரீ சாயிபாபா மகா சமாதியான பதின்மூன்றாம் நாளே நானவல்லியும் இறந்துவிட்டான். பாபா இல்லாத சீரடியில் இந்தப் பக்தனால் வாழ முடியவில்லை.

ஸ்ரீ சாயிபாபா அபூர்வமான ஒப்பற்ற குரு. பாபாவின் அறிவுரைகள் உலகத்தார் எல்லோரும் எல்லா மதத்தினரும் ஏற்கக் கூடியவை. மதங்கள் எல்லாம் ஒன்றே என்றும் ஹிந்துக்கள் வேறு முஸ்லிம்கள் வேறல்ல என்றும் பாபா அறிவுரை கூறினார். இன்றைக்கும் சீரடியில் சாயிபாபாவின் சமாதியில் ஹிந்துக்கள், முகம்மதியர், கிறிஸ்தவர்கள், பார்சிகள் எல்லோருமே சமரஸ நோக்குடனும் ஒற்றுமையுடனும் பாபாவைத் தொழுகிறார்கள்.

"முற் பிறவித் தொடர்பால் நீங்கள் என்னிடம் வந்தீர்கள். அதைப் புரிந்துகொள்ளுங்கள். உங்களை நாடி எந்த மனிதர்கள் வந்தாலும் அவர்களைத் தாழ்வாக நினைக்காமலும் வெறுக்காமலும் ஆதரித்துச் சாப்பாடு போடுங்கள். பசித்தவர்களுக்கு உணவு கொடுங்கள். தாகம் கொண்டவர்களுக்குத் தண்ணீர் உதவுங்கள். துணி மணிகள் இல்லாதவர்களுக்குத் துணி கொடுங்கள். கடவுள் உங்களுடைய தரும குணத்தையும் நல்ல தனத்தையும் பாராட்டுவார். "தேஹி" என்று வந்தவர்களைத் திட்டித் துரத்தாதீர்கள். பிறர்

தூஷித்தால் பொறுத்துக் கொள்ளுங்கள். பழி வாங்க நினைக்காமல் நயமாகச் சொல்லுங்கள். சௌக்கியமாகவும் அமைதியாகவும் வாழ இதுதான் வழி. உலகமே தலை கீழானாலும் மனத்தை அடக்கிவையுங் கள். தரும நெறியைக் கைவிடாதீர்கள்'' என்று பாபா தம் பக்தர் களுக்கு உபதேசித்தார். அவரும் அந்த நெறியிலேயே வாழ்ந்தார்.

ஸ்ரீ சாயிபாபாவின் உபதேசம் அன்பு மயமானது. அதனாலேயே ஹிந்துக்களும் முஸ்லிம்களும் அவருடைய பக்தர்களாகித் தம் வாழ்க் கையைப் புனிதமாக்கிக் கொண்டார்கள். சத்குரு சாயிநாதனுடைய போதனையின்படி, நாம் நம் வாழ்க்கையைச் சீர்ப்படுத்திக் கொண்டு, குல, மத, ஜாதி பேதம் போன்ற குறுகிய கருத்துக்களுக்கு முடிவு கட்டி அன்புடனும் நல்ல எண்ணத்துடனும் தரும நெறியில் நடப் போம். அதற்கு வேண்டிய புத்தியையும் மனோ பலத்தையும் சாயி பாபா நமக்கு அருள்வாராக!

## ஸ்ரீ ஸ்வாமி கேசவய்யாஜீயின் வாழ்க்கை வரலாறு

இக்காலம் பணத்தையே நினைத்து, தெய்வத்தை மறந்த உலகம் பொருளாதார நோக்கே தவிர, பரமார்த்திக நோக்கு இல்லாத காலம். பரமார்த்தம் அழிவற்றது என்பதை ஒப்புக்கொள்ளாமல் 'பொருளை'த் தேடி, 'பரத்'தை விட்டு விடும் பழக்கம் அதிகரித்துவிட் டது. அந்தகாரத்தில் மூழ்கி மதத்தை மறந்துவிட்டனர் மக்கள் மத தருமங்கள் மூலையில் கிடக்கின்றன. சத்தியமும் அஹிம்சையும் செயல் முறையில் அசத்தியமும் ஹிம்சையுமாக மாறியது. வேலைக்கு மதிப்பில்லை. சம்பளத்துக்குத்தான் மதிப்பு. தம் மதக் கோட்பாடு களும், அதைக் கையாளுதலும் தன்னலத்துக்கே சாதகமாகின்றன இயந்திரங்கள் தாம் மந்திரம். இதுதானே தற்போதைய நடை முறை.

இந்த நிலையில் மனிதனுடைய நோக்கும், மனதும், இதயமும் ஈசுவரனிடம் லயிக்குமா? லயிக்காவிட்டாலும், பரமாத்மாவை நோக்கித் திரும்பவாவது முடியுமா? அது நடக்குமா? ''லயிக்கும் நடக்கும்'' என்று ஸ்ரீ ஸ்வாமி கேசவய்யாஜீ பதில் சொல்லுகிறார் ஸாயி நிலையத்தில் அமர்ந்து உதாரணங்களுடன் நிரூபித்தார். சீர டிக்குப்போக வசதியற்ற, பாபாவின் பக்தர்களுக்கு இதுதான் ''துவா ரகா மாயி''. ஸ்ரீ ஸ்வாமி கேசவய்யாஜீ யார்? ஸ்ரீ சாயிபாபா யார்? இந்த வினாக்களுக்கு இந்த நூலில் ஓரளவு பதில் கிடைக்கலாம். திருப்திகரமான பதிலைப் பெறுதவர்கள் ஸ்ரீ சாயி ஸத் சரிதையைப் படிக்கலாம். ஒரு வியாழக்கிழமையன்று சென்னையில் ஷெனாய் நகரி லுள்ள ஸாயி நிலயத்தைத் தரிசிக்கலாம்.

சென்னையில் 116F ஷெனாய் நகர் பிரசித்தி பெற்றது. அது தான் ஸாயி பக்த ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீயின் இருப்பிடம். இவர் பெனுகொண்டாவில் சப்ரிஜிஸ்திராராக இருந்து எல்லா நோய்களும் ஒன்று சேர்ந்த கொடிய வியாதிக்கு இலக்கானார். சிகிச்சைக்காகச் சென்னைக்கு வந்தார். 1948-ஆம் ஆண்டில் நோய் நீங்கிக் குணம் பெற்றார். பிறகு அவருக்குச் சென்னைக்கே மாற்றலாகிவிட்டதால் சென்னையிலேயே இருக்கும்படி நேர்ந்தது. 1949-ஆம் ஆண்டு மே மாதம் 5-ஆம் தேதியன்று பிரசித்திபெற்ற 116F ஷெனாய் நகரில் நிலையாகக் குடியேறினார். ஜனங்களின் மன நோய்களுக்கும் உடல் நோய்களுக்கும் சிகிச்சை செய்து கொண்டு முக்கியமான ஆத்மிக வைத்தியராகப் பெயர் பெற்றிருக்கிறார்.

## பிறப்பும்—இளமையும்

ஸ்ரீ சாயிபாபாவைத் தெரிந்து கொள்வது அவருடைய பக்தர்களுக்கு மட்டுமே இயலும். சாயி ஸத் சரிதையைப் படித்தால் பாபாவைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொள்ளலாம். ஸ்ரீ சாயி ஸத் சரிதையைப் படிக்காமல், யார் மூலமாகவும் பாபாவின் கதைகளைக் கேட்காமல் ஸ்ரீ சாயிபாபாவை, வெகு எளிதில் அவர் பெயரைக் கேட்ட சில மணி நேரங்களுக்குள் புரிந்துகொண்ட மகா பக்தர் ஸ்ரீ பாலகேசவய்யா. ஆகையால் அவர், 'ஸ்ரீ சாயி பாபாவின் கிருபையால் நான் சித்தன் ஆனேன்' என்று சொல்லுவார். புனித கங்கா நதி பரமேஸ்வரனுடைய ஜடாமகுடத்திலிருந்து பெருகி பாரத நாட்டினருடைய பாபங்களைக் கழுவி பரத பூமியைப் புனிதமாக்குவது போலவே ஸ்ரீ சாயிநாதனுடைய அருள், ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜியிடம் புகுந்து ஆயிரக்கணக்கான மக்களுடைய உடல் நலத்தையும் அமைதியையும் ஆத்மிக மலர்ச்சியையும் கொடுத்தருளுகிறது.

ஸ்ரீ சாயி பாபாவை வெகு காலம் இரவு பகலாகப் பிரார்த்தனை செய்தவர்களும், வழிபட்டவர்களும், சேவித்தவர்களும் பலர் இருக்கிறார்கள். ஸ்ரீ சாயிபாபாவோ சுவாமி கேசவய்யாஜீயைத் தேடித் தம் அருளை மக்களுக்கு எட்ட விடுவதற்கு ஒரு கருவியாகத் தயார் செய்தார். சுவாமி பால கேசவய்யாவை, சாயி பக்த கேசவய்யாவாக மாற்றிவிட்டார். ஸ்ரீ சாயிபாபா நாளடைவில் சுவாமி கேசவய்யாஜீ மூலமாக விவகாரத்தை நடத்தி வருகிறார். பக்தர்கள் பலருக்கு இந்த உண்மை அநுபவத்தில் தெரிந்திருக்கிறது. ஆந்திர தேசத்தில் ஏதோ ஒரு மூலையில் உள்ள கிராமத்தில் அரசாங்க உத்தியோகம் செய்துகொண்டிருந்த மிகச் சாதாரண மனிதர் ஒருவரை ஸ்ரீ சாயிபாபா தம் தூதராகத் தேர்ந்தெடுத்ததற்குக் காரணம் இவ்

லாமல் போகவில்லை. ஸ்ரீ சுவாமி பாலகேசவய்யாஜீயின் நாற்ப தாண்டு வாழ்க்கை, ஸ்ரீ சாயிபாபாவின் தேர்வு எவ்வளவு பொருத்த மானது என்பதை நிரூபிக்கிறது. ஆகையால் இது கேவலம் ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீயின் வாழ்க்கை வரலாறு மட்டுமே அன்று; ஸ்ரீ சாயிபாபா மகா ஸமாதி ஆனபின் திரும்பவும் தொடங்கிய, மறைந்து வாழும் முப்பது வருஷ வாழ்க்கை வரலாறு; அன்று முதல் அவரு டைய லீலைகளை விளக்குவது. அதனாலேயே சுவாமி கேசவய்யாஜீ இந்த நூலுக்கு "சாயி மஹிமை" என்று பெயர் வைத்தார்.

## பிறப்பும், வளர்ப்பும்

சுவாமி பால கேசவய்யாஜீ 1899-ஆம் ஆண்டு, ஜூலை முதல் தேதியன்று பிறந்தார். தகப்பனார் ஸ்ரீ பாலையா, தாய் ஸ்ரீமதி சஞ் சீவி அம்மாள். இந்தத் தம்பதிகளுக்குப் புதல்வர்கள் நால்வர். இவர் களுள் இரண்டாமவர் ஸ்ரீ கேசவய்யாஜீ, மூத்தவர் ஸ்ரீ சஞ்சீவையா. இவர் சிறந்த பக்தர். பெண்ணையாற்றின் கரையில் உள்ள சொந்த ஊரான பாமிடியில் ஆஞ்சனேய ஸ்வாமிக்குக் கோயில் கட்டுவித் தார். ஒவ்வொரு சனிக்கிழமையன்றும் கோயிலில் அந்த ராமபக்த ஹனுமாருக்குப் பூஜை நடப்பதற்குத் தக்க ஏற்பாடு செய்தார் சஞ்சீ வையா. இவர் காலமாகிவிட்டார். ஸ்ரீ கேசவய்யாஜீக்கு ஸ்ரீ கிருஷ்ணமய்யாவும், ஸ்ரீ சம்பத் குமாரும் தம்பிகள். இவர்களுள் ஸ்ரீ கிருஷ்ணமய்யா பத்து வருடங்களுக்கு முன் காலமானார். ஸ்ரீ ஸம் பத் குமார் B.A.,B.T., பாஸ் செய்து ஆசிரியர் பணியை மேற்கொண் டிருக்கிறார். இவரும் பாபாவின் பக்தர். தற்சமயம் அனந்தப்பூர் ஜில்லா ஹிந்துபுரத்தில் உள்ள உயர்நிலைப் பள்ளியில் தலைமை ஆசிரி யராக இருக்கிறார்.

இவ்வாறாக பாமிடி 'ஸ்வாமி'களின் குடும்பம் பகவானுக்குச் சமர்ப்பணமாகி விட்டது. ஆதலால் ஸ்ரீ சுவாமி சஞ்சீவையாவுக்கு ஆஞ்சநேயர் கனவில் தோன்றித் தமக்குக் கோயில் கட்டும்படி கேட் டிருக்கிறார். ஸ்ரீ கிருஷ்ண, ராம, சிவ, மாருதி சொரூபரான ஸ்ரீ சமர்த்த சத்குரு சாயிநாத் ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீக்குத் தரிசனம் கொடுத்துத் தம் பணியை ஏற்றுச் செய்யுமாறு உத்தரவிட்டிருக்கி றார்.

பெற்றோரான ஸ்ரீமதி சஞ்சீவி அம்மாளும் ஸ்ரீ பாலையாவும் சிறந்த பக்திமான்கள். இவர்கள் சாத்தாத ஸ்ரீ வைஷ்ணவ மதத்தி னர். ஹிந்து மத சம்பிரதாயங்களில் அசையாத நம்பிக்கையுடன் ராம நாம சங்கீர்த்தனம் செய்து பொழுது போக்கியவர்கள். ஸ்ரீ கேசவய்யாஜீ இளமைப் பருவத்திலேயே வீட்டில் ராமாயண, பாரத

பாகவதக் கதைகளைக் கேட்டிருக்கிறார். அவை இவருடைய மனத்தில் பதிந்து விட்டன. தாய் மொழியான தெலுங்கையும் வீட்டிலேயே கற்றார்.

ஸ்ரீ கேசவய்யாஜீயின் குடும்பத்தாருக்குத் தம் எதிர்காலத்தைப் பற்றிய ஆசை இருந்ததாகத் தெரியவில்லை. தவிர அவர்களுள் சிலருக்குச் சில சந்தேகங்கள்கூட இருந்திருக்கிறது. புண்ணிய நதியான பெண்ணையாற்றங் கரையில், மகரிஷிகள் தவம் செய்த பாமிடியில் ஸ்ரீ கேசவய்யாஜீ பிறந்திருக்கிறார். அவர் பிறந்த நாளன்று அமாவாசை. ஆகையால் அக்காலத்து மூட நம்பிக்கை காரணமாக, இவர் திருட்டில் கைதேர்ந்த புள்ளியாவார் என்று எல்லோரும் நினைத்தார்கள். ஆனால் கிராமத்தில் உடுக்கடித்துக் குறி சொல்லுபவர்களும் சாமுத்திரிக லக்ஷணம் அறிந்தவர்களும் ஸ்ரீ கேசவய்யாஜீ மஹாநுபாவர் ஆவார் என்று சொன்னார்கள். அமாவாசையன்று பிறந்தவர்கள் பக்காத் திருடனாகவோ மகா யோகியாகவோ புகழ் பெறுவார்கள். ஸ்ரீ கேசவய்யாஜீ நிச்சயமாக மகா யோகியாவார் என்று அவ்வூர்க் குடுகுடுப்பாண்டி சோதிடம் சொன்னான்.

சுவாமிஜீயின் இளமைப் பருவம் பாமிடியில் வீட்டிலேயே கடந்து விட்டது. வீட்டில் எங்கேயாவது பணம் இருந்தால் ஓசைப்படாமல் எடுத்துக்கொண்டு போய் விடுவாராம். ஆனால் அந்தப் பணத்தை வீணாக்கமாட்டார். தன்னைவிடத் தாழ்ந்த நிலையில் உள்ள சிறுவர்களுக்கு உதவுவார். இந்த "ராபின்ஹுட்" விளையாட்டு, சிறிது காலம்தான் நடந்தது. பாமிடியில் இருக்கும் போகேசுவரர், சென்ன கேசவர், ஆஞ்சநேயர் கோயில்கள் இவரைக் கவர்ந்தன. அதிக நேரம் கோயில்களுக்குச் சென்று அங்கேயே தியானத்தில் அமர்ந்துவிடுவார். கோயிலில் உள்ள விக்கிரகங்கள் அல்லாமல் பெண்ணை நதிக் கரையில் அமைந்த கோயில்களின் சூழ்நிலையே இவரைக் கவர்ந்தன. இந்தக் கோயில்கள் எல்லாம் புராதனமானவை. தவச் செல்வர்கள் பிரதிஷ்டை செய்தவை. இங்கே முற்காலத்தில் மகரிஷிகள் பலர் தவம் செய்தார்கள். பாமிடி வரலாற்றுப் புகழும், புராணப் பெருமையும் ஒருங்கே பெற்ற க்ஷேத்திரம். "சேஷக் கிரந்தி" (பாம்பின் படம்) புரம் என்று வெகு காலம் புண்ணிய ஸ்தலமாக இருந்திருக்கிறது. அந்தக் காலத்துக் கேசவ சுவாமியே, சுவாமி கேசவய்யாஜீயாக வந்திருக்கலாமோ என்ற கருத்துக் கூடப் பலருக்கு உண்டு. ஸ்ரீ கேசவய்யாஜீக்கு ஆங்கிலம் கற்பித்த, பாமிடி மிஷன் பாடசாலைத் தலைமை ஆசிரியரான ஸ்ரீ E. D. லெக்லர், "கடவுளே ஸ்ரீ கேசவய்யாஜீயைப் பாமிடிக்கு அனுப்பியிருக்கிறார்" என்று சொன்னார்.

## கல்விப் பயிற்சி

பாமிடியில் லண்டன் மிஷன் நடுத்தரப் பள்ளி ஒன்று இருக்கிறது. ஆனால் சுவாமி கேசவய்யாஜீ தம் பதினைந்தாம் வயது வரையில் பள்ளிக்குச் செல்லவில்லை. 1913-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதல் தேதியன்று இவர் இந்தப் பள்ளியில் சேர்ந்தார். தலைமை ஆசிரியரான ஸ்ரீ லெக்லர் ஸ்ரீ கேசவய்யாஜிக்கு ஆங்கில எழுத்துக்களைக் கற்பித்தார். அதுமுதல் இந்தக் குரு-சீடர்களிடையே ஒரு விசித்திரமான தொடர்பு வளர்ந்தது. பள்ளி வேளைக்குப் பிறகும் ஸ்ரீ கேசவய்யாஜி தம் வீட்டுக்குப் போகமாட்டார். ஸ்ரீ லெக்லரின் கூடவே இருந்து அவருடைய வீட்டுக்குச் சென்று பல செய்திகளைக் குறித்து ஆசிரியரிடம் சந்தேகம் கேட்பார். அதன் பயனாக ஸ்ரீ கேசவய்யாஜி இரண்டாண்டுகள் A.B.C.D. கற்றுக்கொண்டு நான்காம் பாரத்தில் சேருவதற்கு வேண்டிய அறிவைத் தேடிக்கொண்டார். சந்தேகம் தீர்ந்தாலன்றி ஸ்ரீ கேசவய்யாஜி திருப்தி அடைய மாட்டார். பள்ளிச் சிறுவர்கள் எல்லோரையும் விடப் புத்திமானாக விளங்கினார். இளமையிலிருந்தே இவர் உடனொத்த சிறுவர்களுடனோ, கூடப் படிப்பவர்களுடனோ சேரமாட்டார். லௌகிக விஷயங்களில் அவ்வளவாக நாட்டம் இல்லை. மிஷன் பள்ளியில் படித்தபோது எப்பொழுதும் ஏசு கிறிஸ்துவைப் பற்றி ஸ்ரீ லெக்லரிடம் ஏதாவது கேட்டுக்கொண்டே இருப்பார். ஏசுவின் பக்தர்களுடைய அநுபவத்தைப் பற்றி ஆவலுடன் கேட்டுத் தெரிந்துகொள்வார். "33 வயது வாழ்ந்த ஏசுவின் வாழ்க்கை" என்னும் நூலை ஆழ்ந்து படித்தார். பைபிள் படிப்பதில் இவருக்கு முதல் பரிசு கிடைத்தது. ஏசு கிறிஸ்துவைப் பற்றிய நூல்களில் நல்ல தேர்ச்சி பெற்ற பாலகேசவய்யாஜிக்கு ஏசு கிறிஸ்து தரிசனம் கொடுத்ததில் அதிசயமில்லை. இவருக்கு முகம்மது நபிகூட தரிசனம் கொடுத்திருக்கிறார்.

லண்டன் மிஷன் பள்ளியில் படித்த இரண்டாண்டுகள் ஸ்ரீ கேசவய்யாஜியின் எதிர்காலத்துக்குச் சரியான அஸ்திவாரம் போட்டுவிட்டன. ஸ்ரீ லெக்லரைப் போலவே லண்டன் மிஷன் தலைமை அதிகாரியான குமாரி க்ரிஸ்ட்லிப் என்பவரும் ஸ்ரீ கேசவய்யாஜியின் விஷயத்தில் தனிப்பட்ட அக்கரை எடுத்துக் கொண்டார். இவர் ஸ்ரீ கேசவய்யாஜிக்கு ஏசு கிறிஸ்துவைப் பற்றிய நூல்களை அதிகமாக அனுப்புவது வழக்கம். ஒவ்வொரு நூலையும் ஒவ்வொரு கையேட்டையும் ஸ்ரீ கேசவய்யாஜி அக்கரையுடன் சந்தேகமறப் படிப்பார். ஏசு கிறிஸ்துவைப் பற்றிய நூல்களில் அவ்வளவு ஆசை இருந்தும், ஏசு கிறிஸ்து தரிசனம் கொடுத்தும் ஸ்ரீ கேசவய்யாஜி மதம் மாறவில்லை. ஹிந்து மதப் பழக்கங்களை விடவில்லை. இவர் லௌகிக

நினைவுகள் இன்றி ஆத்மிக நோக்குடன் ஏசு கிறிஸ்துவையும் கிறிஸ்துவ மதத்தையும் ஆராய்வார். ஸ்ரீ கேசவய்யாஜியின் இளமைப் பருவத்தில் இந்த இரண்டாண்டுகள் மிக முக்கியமானவை. ஸ்ரீ கேசவய்யாஜியின் அச்சமயத்து மன நிலையைப் பற்றி ஸ்ரீ லெக்லர் தெரிவித்த விஷயங்கள் தனிப்படக் கவனிக்கவேண்டியவை. ஸ்ரீ லெக்லர் இன்னும் பாமிடியில் வசிக்கிறார். அவர் சிறிது காலத்துக்கு முன்பு தான் ஸ்ரீ ஆர். கிருஷ்ணமூர்த்திக்குக் கீழ்க்கண்ட விவரங்களைத் தெரிவித்தார்.

## ஸ்ரீ லெக்லரின் கருத்து

ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜி 1913-ஆம் ஆண்டு செப்டம்பர் 1-ஆம் தேதியன்று எங்கள் மிஷன் பள்ளியில் சேர்ந்தார். அப்பொழுது அவருடைய வயது பதினொன்கு. தெலுங்கு தவிர வேறொன்றும் அவருக்குத் தெரியாது. நான் அவருக்கு ஆங்கில எழுத்துக்களைக் கற்பித்தேன். ஆரம்பத்திலிருந்தே அவருக்குக் கல்வியில் மிகவும் அக்கறை இருந்தது. இரவும் பகலும் அவர் என்னை விடமாட்டார். நிழல் போல் என்னைச் சுற்றி வந்துகொண்டிருப்பார். நான் தூங்கிவிட்டால் அவர் ஜன்னலில் தெருவைப் பார்த்து உட்கார்ந்து தூங்கிக்கொண்டிருப்பார், ஆனால் வீட்டுக்குப் போகமாட்டார். பசிகூட இருப்பதாகத் தெரியாது. இரவு வெகு நேரம் சென்றபின் பையன் வரவில்லையே என்று அவருடைய பெரியம்மா தேடிக்கொண்டுவந்து அழைத்துச் செல்லுவார். அவருடைய உடல் ஓய்வெடுத்துக்கொண்டிருந்தாலும் உள்ளத்துக்கு ஓய்விருப்பதாகத் தெரியாது. எப்பொழுதும் ஏதாவது யோசனையில் ஆழ்ந்திருப்பார். அந்த யோசனையில் தோன்றிய விஷயங்களைப் பற்றி நன்றாகச் சந்தேகம் தீரும் வரையில் கேள்விகளைப் போட்டுக்கொண்டே இருப்பார். பாமிடியை விட்டுத் தம் பாட்டியின் ஊராகிய கமலபாடுக்குப் போனால் அங்கே என்ன என்னவோ கட்டுரைகள் எழுதிச் சரிபார்க்கும்படி எனக்கு அனுப்பிக்கொண்டிருப்பார். அந்தச் சிறு வயதிலேயே அவ்வளவு அக்கறை இருப்பது எங்கள் எல்லோருக்கும் ஆச்சரியத்தைக் கொடுக்கும். எங்கள் பள்ளியில் மேற்பார்வை பார்க்கும் குமாரி கிஸ்பிளிப்புக்குக்கூட கேசவய்யாஜி என்றால் மிகவும் இஷ்டம். இவருக்குப் புஸ்தகங்களையும் பண்டிகை போன்ற நாட்களில் நல்வாழ்த்துக்களையும் அந்த அம்மையார் அனுப்புவார். பள்ளிக்கூட சம்பந்தமாக அந்த அம்மையார் எனக்கு எழுதும் ஒவ்வொரு கடிதத்திலும் அவர் கேசவய்யாஜியைப் பற்றி விசாரிப்பார். அந்த அம்மாள் ஏசு கிறிஸ்துவைப் பற்றிக் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் அவர் புத்திசாலித்தனமாகப் பதில் சொல்வார். அதிகமாக என்னையும் அந்த அம்மாளையும் ஏசு கிறிஸ்துவின் பிறப்பு இறப்புக்களைப் பற்றிக் கேள்விகள் கேட்டுக்கொண்டே இருப்பார்.

"எங்கள் பள்ளியில் இரண்டே வருஷங்கள் படித்தாலும் அந்தச் சில நாட்களிலேயே அவர் நான்காம் பாரம் தேர்வதற்கு வேண்டிய அறிவைச் சம்பாதித்துக் கொண்டார். பாமிடியில் படிப்பு முடிந்தது. நான்காம் பாரத்தில் சேர்க்க வேண்டும். அந்தப் பொறுப்பும் என் மேலேயே விழுந்தது. குத்தி என்ற ஊரில் உயர்தரப் பள்ளி இருக்கிறது. மாட்டு வண்டியில் ஸ்ரீ கேசவய்யாஜியை அழைத்துக் கொண்டு குத்திக்குப் போனேன். குத்தியில் எங்களுடைய லண்டன் மிஷன் பள்ளியில் ஸ்ரீ கேசவய்யாஜியைச் சுலபமாகச் சேர்க்கலாம் என்று நினைத்தேன். பள்ளித் தலைமை ஆசிரியர் ஸ்ரீ கேசவய்யாஜியைப் பரீட்சித்தார். பரீட்சைக்குப் பின் ஸ்ரீ கேசவய்யாஜியை நான்காம் பாரத்தில் சேர்த்துக்கொள்ளலாம் என்று அவர் சொன்னார். ஆனால் ஏதோ நிபந்தனைகள் தடையாக இருக்கின்றன என்றார். இந்தச் செய்தியைக் கேட்டதும் ஸ்ரீ கேசவய்யாஜி குழப்பமடைந்தார். தாம் கட்டிய ஆகாயக் கோட்டை திடீரென்று சரிந்து விட்டதுபோல் கவலைப்பட்டார். உடனே உடம்பு மெதுவாகக் காய்ந்தது; ஜுரம் வந்ததுபோல் ஆகிவிட்டது. சிறிது தைரியம் சொன்னேன். போன வண்டியிலேயே பாமிடிக்குத் திரும்பிவந்தோம். வந்தவுடன் ஜுரம் அதிகமாகிவிட்டது. ஆறு மணி நேர வண்டிப் பிரயாணம், போன வேலை உடனே முடியவில்லை என்ற கவலை. நான் ஆனமட்டும் அவருக்குத் தைரியம் சொன்னேன். ஜுரம் என்றதும். 'அனந்தபுரம் போய்ப் பள்ளியில் சேரலாம் என்றும் கவலைப்பட வேண்டாம்' என்றும் சொன்னேன். இரண்டே நாளில் ஜுரம் நீங்கி உடல் நன்றாகக் குணமாகிவிட்டது. உடனே அனந்தபுரத்துக்குப் போகவேண்டும் என்று என்னை அவசரப்படுத்தினார். அவரை அழைத்துக்கொண்டு அனந்தபுரத்துக்குப் போனேன்.

"அனந்தபுரம் முனிஸிபாலிட்டி உயர்நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியர் உடனே ஸ்ரீ கேசவய்யாஜியைப் பரீட்சித்தார். 'நான்காம் பாரத்தில் சேர்த்துக் கொள்கிறேன்' என்றார். பள்ளியில் உடனே சேராமல் காலங் கடத்தினால் தலைமை உபாத்தியாயருடைய மனம் மாறிவிடுமோ என்று எங்களுக்குப் பயம். ஆனால் கையில் சம்பளத்துக்குப் பணம் கொண்டுபோகவில்லை. அதிர்ஷ்டவசமாக ஸ்ரீ என். ரங்கைய செட்டியின் சகோதரர் ஸ்ரீ வேங்கடசாமி செட்டி உதவினார். சம்பளம் கட்ட வேண்டிய பணத்தை அவர் கொடுத்ததால் அன்றைக்கே சம்பளம் கட்டி ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜியை நான்காம் பாரத்தில் சேர்த்தேன்.

"மூன்று வருஷங்களில் உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்து மெட்ரிக்குலேஷன் பரீக்ஷையில் பாஸ் செய்தார். அரசாங்க உத்தியோகத்தில் சேருவதற்குத் தகுதியான குறைந்த பட்சத் தகுதியைச்

சம்பாதித்துக்கொண்டார். மேல் படிப்புப் படிக்க வசதி போதாது. அதனால் 1921-22இல் இருந்து வேலை தேடத் தொடங்கினார். போலீஸ் இலாகாவில் சப்-இன்ஸ்பெக்டராகச் சேரவேண்டும் என்று அவர் மிகவும் ஆசைப்பட்டார். 'பூட்ஸ்' வாங்கிக் கொண்டும் 'ஸூட்' தைத்துக் கொண்டும் இரண்டு தடவை 'இன்டர்வ்யூவுக்'காகக் குண்டக்கல்லுக்குப் போனார். தேர்வு கிடைக்கவில்லை; தெய்வச் செயல்.

''குமாரி கிறிஸ்ட்லிப் அதிகமாக அனந்தபுரத்தில்தான் இருப்பாள். அந்த அம்மாள் ஜெர்மனியைச் சேர்ந்தவள். இந்தப் பகுதியில் மிஷனரி வேலை செய்துகொண்டிருந்தாள். 1922-23-ஆம் ஆண்டுகளில் சென்னை கவர்னராக இருந்த லார்டு வெல்லிங்டன் அனந்தபுரத்துக்கு வந்தார். அவரைக் கௌரவிப்பதற்காகக் குமாரி கிறிஸ்ட்லிப் விருந்து நடத்தினார். இந்தச் செய்தியைத் தெரிந்துகொண்டு ஸ்ரீ கேசவய்யாஜி என்னிடம் வந்தார். 'குமாரி கிறிஸ்ட்லிப்புக்குக் கவர்னரிடம் நல்ல செல்வாக்கு இருக்கிறது; அந்த அம்மாள் ஒரு வார்த்தை கவர்னரிடம் சொன்னால் எனக்கு உத்தியோகம் கிடைக்கும். நீங்கள் தான் சொல்லி எனக்கு வேலை சம்பாதித்துக் கொடுக்க வேண்டும்' என்று என்னிடம் சொன்னார். மெட்ரிகுலேஷன் தேறியிருந்த ஒருவருடைய உத்தியோகத்தைப் பற்றிக் கவர்னரிடம் பிரஸ்தாபிப்பது உசிதமா என்பதை அவர் யோசிக்கவில்லை. 'வேலையைச் செய்துவை' என்று கேட்கலாமா என்ற பயமும் இல்லை. முதலிலிருந்தே ஸ்ரீ கேசவய்யாஜிக்கு நல்ல தைரியம் உண்டு; பயமே தெரியாது.

''நான் இந்த முயற்சிக்காகவே அனந்தபுரம் சென்று குமாரி கிறிஸ்ட்லிப்பிடம் செய்தியைச் சொன்னேன். ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜியிடம் அந்த அம்மாளும் மிகுந்த அன்பு வைத்திருந்தாள். நான் நினைவு படுத்தியவுடன் அந்த அம்மாள் கவர்னரிடம் ஸ்ரீ கேசவய்யாஜியின் வேலைபற்றிச் சொன்னாள். லார்ட் வெல்லிங்டன் தம் ஜேபியில் இருந்த சிறிய புத்தகம் ஒன்றை எடுத்து, ''S.B. கேசவய்யா, பாமிடி'' என்று குறித்துக்கொண்டார். ஒரு மாதத்தில் சென்னை செக்ரடேரியட்டிலிருந்து நேராக ஸ்ரீ கேசவய்யாஜிக்கு வேலை உத்தரவு வந்தது. இந்த உத்தரவைக் கண்டு எல்லோரும் ஆச்சரியமடைந்தனர். 1923-ம் ஆண்டு அக்டோபர் 30-ஆம் தேதியில் ஸ்ரீ கேசவய்யாஜி அனந்தபுரம் ஜில்லா ரிஜிஸ்திரார் ஆபீஸில் குமாஸ்தாவாகச் சேர்ந்தார்.

''ஸ்ரீ கேசவய்யாஜீயின் கதையை முடிக்குமுன் அவருடைய ஆத்மிகக் கருத்துக்களைப் பற்றியும், வரப் போகும் நிகழ்ச்சிகளை அவர் எப்படிச் சொல்லுவார் என்பதையும் பற்றிச் சில வார்த்தைகள்

எழுதுகிறேன். என்னிடம் படிக்கும்போதே அவர் பெண்ணையாற்றங் கரையில் உள்ள சென்ன கேசவ, சிவ, ஆஞ்சநேயர் கோயில்களுக்கு அடிக்கடி போவார். ஆற்றின் தென் கரைக்குச் சென்று அங்கே வெகு நேரம் தியானத்தில் இருப்பார். கமலபாடு கிராமத்துக்குப் போனாலும் அங்கேயும் பூசை செய்வார். அந்தக் காலத்திலேயே அவருக்கு உள்முகநோக்கு இருந்தது. பிரிட்டிஷார் பாரத நாட்டை விட்டுவிட்டுப் போய்விடுவார்கள் என்றும் இந்தியர்கள் சுதந்திரம் பெறுவார்கள் என்றும் காங்கிரஸ் நாட்டை ஆளும் என்றும் அவர் என்னிடம் தர்க்கம் செய்வார். அப்போது பல பேருக்குக் காங்கிரசின் பெயர்கூடத் தெரியாது. கடவுளே ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜியை பாமிடிக்கு அனுப்பியிருப்பார்.

“சில நாட்களுக்கு முன் எனக்கு வயிற்றில் ஏதோ தொந்தரவாக இருந்தது. சுவாமி எனக்கு விபூதி அனுப்பினர். அதை உட்கொண்டவுடன் நோய் நன்ருகக் குணமாகிவிட்டது.

“அவர் பாமிடியில் இருந்தவரை என்னை விட்டு நகரவே மாட்டார். மாலை வேளையில் இருவருமாக பாமிடி மலை வரைக்கும் நடந்து போய்விட்டு வருவோம். அப்போது பல விஷயங்களைப் பற்றிப் பேசுவோம். நான் எங்கள் ஊருக்குப் போகவேண்டியிருந்தால் வீட்டுச் சாவிகளை ஸ்ரீ கேசவய்யாஜியிடமே கொடுத்துவிட்டுப் போவேன். அவர் அவ்வளவு நேர்மையும், கட்டுப்பாடும் உள்ளவர்.”

“ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீயின் இளம் பருவத்துச் செய்திகளை அறிந்த மற்ெருருவர் அனந்தபுரம் வக்கீல் ஸ்ரீ செங்கல்வராய செட்டியார் அவர்கள். அவர் தெரிவித்த விஷயங்களையும் இந்தச் சந்தர்ப்பத்தில் இங்கே சேர்க்கிறேன்.

“சுவாமி பாலகேசவய்யாஜீயிடம் எனக்கு நெருங்கிய பழக்கம் உண்டு. அனந்தபுரம் ஜில்லா ரிஜிஸ்திரார் ஆபீஸில் குமாஸ்தாவாகச் சேர்ந்தது முதல் அவரை எனக்குத் தெரியும். அப்போது அவரிடம் எனக்குத் தெரிந்த குணங்கள் இரண்டு; பிடிவாதம், நினைத்ததை நிறைவேற்றும் உறுதி. அவர் எப்பொழுதும் தன்னைப் போன்றவர்களைவிட ஒரு படி மேலாகவே இருப்பார். பெரியோர்களின் கூட்டுறவையே விரும்புவார். அவருடைய எளிமையும் நன்னடத்தையும் எல்லோரையும் கவர்ந்தன. தம்முடைய சொந்த சக்தி சாமர்த்தியங்களாலேயே அவர் தம் வாழ்க்கையில் பல தடைகளை வென்று முன்னேறினர். நான் கண்ட வரையில் அவர் மிதமாகப் பேசுபவர். எல்லோருடனும் கலந்து பழகமாட்டார். எந்தச்

சந்தர்ப்பத்திலும் சுய கௌரவத்தை விட்டுக் கொடுக்கமாட்டார். எந்தச் சிறிய விஷயத்தையும் மிகவும் ஜாக்கிரதையாக ஆராய்ந்து அக்கறையுடன் செய்வார்.''

## திருமணம்

ஸ்ரீ கேசவய்யாஜீ வேலையில் சேர்ந்த ஏழெட்டு மாதங்களிலேயே, தொட்டபள்ளி என்னும் ஊரில் ஸ்டேஷன் மாஸ்டராகப் பணியாற்றிவந்த ஸ்ரீ எம். வேதாந்தையா என்பவருடைய இரண்டாம் பெண்ணை சௌபாக்கியவதி கோவிந்தம்மாளை மணந்தார். அதே ஊரில் அவர் கல்யாணம் நடந்தது. இவர்களுக்கு இரண்டு பெண்களும், ஒரு பிள்ளையும் இருக்கிறார்கள். பெண்களுக்குச் சிறப்பாகத் திருமணங்கள் நடந்தன. எல்லோரும் சுகமாக இருக்கிறார்கள்.

ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜி 1923 முதல் 1930-ஆம் ஆண்டுவரையில் ரிஜிஸ்திரார் ஆபீசில் குமாஸ்தாவாகத்தான் இருந்தார். ஆனால் மேல் உத்தியோகத்துக்கு வேண்டிய பரீட்சைகள் எல்லாவற்றிலும் தேறி பதவி உயர்வுக்குரிய தகுதியைச் சம்பாதித்துக் கொண்டார்.

1930-இல் இவரை சப் ரிஜிஸ்திரார் பதவிக்கு உயர்த்தினார்கள். 1933-ஆம் ஆண்டு ஜூலை 1-ஆம் தேதியன்று அந்த உத்தியோகம் இவருக்குக் காயம் ஆயிற்று. அந்தப் பத்து ஆண்டு காலத்தில் இவர் நாணயம், நீதி, திறமைகள் மிக்கவர் என்று புகழ் பெற்றார். ஸ்ரீ ஓ. புல்லாரெட்டி, ஐ.ஸி.எஸ்., ஸ்ரீ கேசவய்யாஜீக்கு மிக உதவியாய் இருந்து வந்தார்கள். ஸ்ரீ கேசவய்யாஜீயின் கடமையுணர்ச்சியும், திறமையும் ஸ்ரீ புல்லாரெட்டியை வெகுவாகக் கவர்ந்துவிட்டன. அதனால் ஸ்ரீ கேசவய்யாஜிக்குத் தேவைப்பட்டபோதெல்லாம் ஊக்கம் கொடுத்து உதவி செய்தார். ஸ்ரீ கேசவய்யாஜீ, ஸ்ரீ புல்லாரெட்டியின் உதவியையும் உற்சாகப்படுத்தும் தன்மையையும் இன்றைக்கும் நினைத்துக்கொண்டிருக்கிறார். ஸ்ரீ புல்லா ரெட்டியும் சுவாமிஜீக்கு மிக நெருங்கியவரானார். ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீ அதிகமாக தர்மவரம், பெனுகொண்டா, கதிரி, பாக்காலா ஆகிய இடங்களில் ரிஜிஸ்திராராக வேலை செய்தார். கடைசியாக சென்னையில் இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஆஃப் ரிஜீஸ்திரேஷன் ஆபீசில் மானேஜராக இருந்து 1953-இல் வேலையிலிருந்து ஓய்வு பெற்றார்.

## இல்வாழ்க்கைத் துணைவி வீடு பேறு அடைதல்

சுவாமி கேசவய்யாஜி அவர்களின் தர்மபத்தினி திருமதி கோவிந்தம்மாள் 1966-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 16-ஆம் தேதி சனிக்கிழமை மாலை 3-30 மணிக்கு மண்ணுலக வாழ்வைத் துறந்து விண்ணுலகெய்தி வைகுந்த பதவி அடைந்தார். ஐம்பத்தேழு ஆண்டுகள் நிரம்பப் பெற்ற அப்புனிதவதி ஏகாதசி நன்னாளில் "கோவிந்தா! கிருஷ்ணா! ராமா! பாபா" என்ற திருநாமங்களை உச்சரித்தவண்ணம் மிக்க அமைதியோடு உடல் நீத்துப் பரமபதம் அடைந்தார். அம்மையார் ஆண்டவன் திருவடி நிழலில் அமரும் பேரானந்த நிலையைப் பெற்ற போதிலும் சுவாமிகள் ஆற்றி வரும் இறை பணியில் தோன்றாத் துணையாக விளங்கி ஸ்ரீ சாயிபாபா வழிபாட்டில் பக்தியோடு ஈடுபட்டுத் துணை புரிந்து வந்த அவர்களுடைய மறைவு சுவாமி கேசவய்யாஜீ அவர்களுக்கு ஆற்றொணாத் துயர் விளைத்து விட்டது. எனினும் பாபா வழிபாட்டுத் திருப்பணியின் வாயிலாக தமக்கு நேர்ந்த துக்கத்தை மறந்து ஆறுதல் அடைகின்றார். சாயி நிலையத்திற்கு வருகின்ற பக்தர்கள் அனைவரையும் அவ்வம்மையாரின் பிரிவு துயரத்திலாழ்த்தியது. அப்போது சென்னை ராச்சிய தற்காலிக கவர்னராகப் பதவி ஏற்றிருந்த மாண்புமிகு சந்திரா ரெட்டி, மதுரை மாநகர் பிரமுகரும் பிரபல அரசியல் தலைவருமான சர். பி. டி. ராஜன் போன்ற பெரியோர்களும் ஏனைய பல பக்தர்களும் நண்பர்களும் சாயி நிலையத்திற்கு வந்து சுவாமி கேசவய்யாஜீ அவர்களுக்கு ஆறுதல் சொன்னார்கள்.

1939-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 1-ம் தேதி ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீ அவர்கள் பாபாவின் தரிசனமும் அருளும் பிரத்யட்ச அனுபவமாகப் பெற்றது முதல் இதுகாறும் ஸ்ரீமதி கோவிந்தம்மாள் சற்றேறக் குறைய முப்பது ஆண்டுகளாக பாபா வழிபாட்டில் சுவாமி கேசவய்யாஜீ அவர்களுக்கு அரிய தொண்டாற்றி மகிழ்ந்திருந்தார். அம்மையாருடைய குண நலங்களை விரித்துரைக்கவியலாது.

அமைதியும் சாந்தமும் இலட்சுமிகரமும் ஒருங்கே வாய்ந்த அவ்வம்மையார் அவர்களின் தளராத உழைப்பும் சலியாத தொண்டும் நெறி பிறழாத இல்லற நோன்பும் எளியவர்பால் காட்டும் கருணையும் இரக்கமும் அவரை நேரிற் கண்ட பக்தர்கள் அனைவரும் நன்கறிவர். பாபாவின் மகிமையைப் பற்றியும் அவரருளைப் பற்றியும் அம்மையார் பால் அசைக்க இயலாத நம்பிக்கை குடிகொண்டிருந்தது. இத்தகைய குண நலன்கள் வாய்ந்த அம்மையார் தமது கணவனுக்கு ஆற்றும் பணிகள் பாபாவின் வழிபாடாகவே கருதித் தொண்டாற்றி வந்தார். உரைத்தற்கரிய பெருமை பொருந்திய அவ்வம்மையார் தாம் இருக்குமிடந்தெரியாது தமது இல்லத்தில் அமைதி



சுவாமி கேசவய்யாஜீயின் வாழ்க்கைத் துணைவியார் திருமதி கோவிந்தம்மா அவர்கள், ( 1966ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 16ம் நாள் ஸ்ரீ பாபாவின் பாத கமலங்களை அடைந்தார்கள் )

யோடு தமது கணவனார் பக்கலிலிருந்து அவருக்குப் பணி புரிந்தும் தமது மக்களை நன்முறையில் வளர்த்து போஷித்தும் வந்தார்கள்.

"இல்லாள் அகத்திருக்க இல்லாததொன்றுமில்லை" என்னும் மூதுரைக்கு இலக்கியமாக அவ்வம்மையாருடைய இல் வாழ்க்கை விளங்கியது.

அவ்வம்மையாரின் மறைவுக்குப் பின்னர் அவருடைய கணவனாரும் அவருடைய ஏக புத்திரனும் வீட்டு நலன்கள் அனைத்தையும் இழந்தவர்போல் துயரத்திலாழ்ந்தனர். ஆனால் சுவாமிகளிடம் பக்தி பூண்டொழுகும் பாபா பக்தர்கள் அவர்களுக்கு அவ்வித குறைபாடுகள் தோன்றுவண்ணம் தம் தம்மாலான பணிகளைச் செய்துவருகின்றனர். மேலும் சுவாமி கேசவய்யாஜீ அவர்கள் தமது உடல் பொருள் ஆவி அனைத்தையும் பாபாவின் திருப்பாதக் கமலங்களில் சமர்ப்பித்து பூரண மனத்துறவு பெற்றுள்ளார்.

திருமதி கோவிந்தம்மாளின் மூத்த மகள் திருமதி பாரிஜாதம் கிருஷ்ணா ஜில்லாவில் மந்தப்பேட்டை என்னுமிடத்தில் கால்நடை மருத்துவராக ஆந்திர அரசின்கீழ்ப் பணிபுரியும் டாக்டர் A. கேசவமூர்த்தி M.V.S.C. அவர்கள் இல்வாழ்க்கைத் துணைவியாக மணம் புரிந்து கணவனும் மனைவியும் இப்போது மூன்று மக்களுடன் இல்லறம் நடத்துகின்றார்கள்.

இளைய புதல்வி திருமதி இராதாபாய் மைசூர் இராச்சியத்தில் பெங்களூரில் H.M.T. நிலையத்தில் பணியாற்றும் திரு. B. சத்திய நாராயணா B.E. அவர்களுக்கு மணம் செய்விக்கப் பெற்று இப்போது கணவனும் மனைவியும் ஒரு பெண் மகவுடன் இல்லறம் இனிது நடத்தி வருகின்றனர்.

திருவளர் செல்வன் சுப்பிரமணியன் என்ற பிள்ளைத் திருநாமம் சூடப்பெற்ற மைந்தன் சுவாமிகளின் மூன்றாவது பிள்ளையாவர். சென்னைப் பல்கலைக் கழகப் பட்டத் தேர்வுக்காக ஒரு கல்லூரியில் பயின்று வருகின்றார். சுவாமிகள் உடனுறைந்து அவருக்கு உறு துணையாக இருப்பது இப்பிள்ளையேயாவர்.

நாற்பது ஆண்டுகள் சுவாமிகளுடன் புனிதமான இல்லற வாழ்விலிருந்து உடல் துறந்த அம்மையாரின் ஆத்மா இறைவன் திருவடி நிழலில் நித்யானந்த நிலை எய்தியுள்ளதென்று நாம் திண்ணமாகக் கூறலாம்.

## உத்தியோக பர்வம்

ஸ்ரீ சுவாமி பாலகேசவய்யாஜீ 1923-ஆம் ஆண்டு அக்டோபர் 30-ஆம் தேதி உத்தியோகத்தில் சேர்ந்தார் என்பதை ஏற்கனவே குறிப்பிட்டோம். இவர் ரிஜிஸ்திரேஷன் இலாகாவில் குமாஸ்தா வாகச் சேர்ந்த நாள் முதல், இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஆஃப் ரிஜிஸ் திரேஷன் ஆபீஸ் மானேஜராக இருந்து ஓய்வு பெற்ற நாள் வரை யில் பொதுமக்களும் மேல் அதிகாரிகளும் இவரைப் பற்றி ஒரே அபிப்பிராயம்தான் கொண்டிருந்தார்கள். இவர் ரொக்கமாகவோ, பொருள்களாகவோ ஒரு பைசா கூட லஞ்சம் வாங்கியதில்லை. தம் ஆபீசில் லஞ்ச ஊழலைத் தலையெடுக்க விடவில்லை. ஒரு பொய் சொல்லி அறியார். ''விவேகம் ஏற்படாத குழந்தைப் பருவத்தில் நான் ஓயாமல் பொய் சொல்லிக்கொண்டிருப்பேன்'' என்று தாமே சொல்வார். ஆனால் வயது வந்தபின் இவர் பொய் பேசாததோடு, யார் பொய் சொன்னாலும் பொறுக்கமாட்டார். ''நீ பொய் சொல்லுகிறாய்'' என்று அவர்கள் முகத்தின் எதிரிலேயே பட்டென்று சொல்லிவிடுவார். பெரியவர்களிடமும் மேல் அதிகாரிகளிடமும் மதிப்பு மிக வைத்தவர். ஆனால் என்றும் பயமே அறியாதவர். ''என் கடமையை நான் ஒழுங்காகவும் கடமை தவறாமலும் நியாயமாக வும் செய்துகொண்டிருக்கிறேன். பிறரைக் கண்டு பயப்பட வேண் டிய நிலையோ அவசியமோ எனக்கு இல்லை'' என்பார்.

ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீயை ஏழை மக்கள் மிகவும் போற்று வார்கள். ஆபீசில் தாக்கலான பத்திரங்களை உடனுக்குடனே ரிஜிஸ் தர் செய்து பத்திரங்களைத் திருப்பிக் கொடுத்துவிடுவார். சரியாக ஆபீசில் வேலை தொடங்கும் வேளைக்கு ஆஜராவார். ஆபீஸ் முடியும் சமயத்துக்குள் தம் வேலையை முடித்துவிட்டுப் போய்விடுவார். குமாஸ்தாக்களாவது பியூன்களாவது பத்திரம் பதிய வருபவர்களைத் தொந்தரவு செய்தால் பொறுக்கமாட்டார்.

ஸ்ரீ கேசவய்யாஜீயின் உத்தியோக நிர்வாகத்தைப் பிறர் என்ன சொன்னாலும் அது புகழ்ச்சியாகத்தான் இருக்கும். இவர் ரிஜிஸ்திரே ஷன் இலாகாவில் வேலை செய்துகொண்டிருந்தபோது, அந்த இலா காவின் தலைவராய் இருந்த இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஆஃப் ரிஜிஸ்தி ரேஷன், திவான் பகதூர் ஸ்ரீ பண்டி ஹரிராவ் நாயுடுகாரு, ஸ்ரீ கேசவய்யாஜீயின் உத்தியோக நிர்வாகம் பற்றி அழகாக விவரித்தி ருக்கிறார். சென்னை நகர் (சென்னை) சாயி நிலையத்தில் 1957-ஆம் ஆண்டு நடைபெற்ற மகாசமாதி உற்சவத்தின்போது ஸ்ரீ ஹரிராவ் நாயுடுகாரு இந்த விஷயங்களை வெளியிட்டு உரை நிகழ்த்தினார்.



1939ம் ஆண்டு ஜுலை 1ம் தேதிக்கு முன்பாக
சுவாமி கேசவய்யாஜி சப் ரிஜிஸ்திராராக பணியாற்றியபோது
ஐரோப்பியர்களைப்போல் உடை உடுத்திக்கொள்வார்.

அதை இங்கே கொடுத்திருக்கிறேன். "எனக்கு ஸ்ரீ கேசவய்யாஜீயு டன் இருபத்தைந்து வருடம் பழக்கம் உண்டு. ரிஜிஸ்திரேஷன் இலாகாவில் நாங்கள் பதினொரு வருட காலம் சேர்ந்து வேலை செய் தோம். அந்தக் காலத்தில் நான் கொடுமை மிக்க மாமியாராக நடந்துகொள்வேன். அநீதியையும் லஞ்ச ஊழலையும் சிறிதும் பொறுக்க மாட்டேன். நீதி, நேர்மை, நன்னடத்தைகள் இல்லாத உத்தியோகஸ்தரை என் இலாகாவில் தலையெடுக்க விடமாட்டேன். நியாயந்தவறி நடந்தவர்கள் என்று ருசுவானால் அவர்களை ஒரு கை பார்த்து விட்டுத்தான் மூச்சு விடுவேன்.

"தற்சமயம மத்திய அரசாங்கத்தில் பாதுகாப்பு இலாகாவில் காரியதரிசியாக இருக்கும் ஸ்ரீ ஒபுளம்பல்லி-புல்லா ரெட்டி, ஐ.ஸி. எஸ். (அவர் தற்சமயம் ஹைதராபாத்தில் ஆந்திர விவசாயப் பல் கலைக் கழக துணை வேந்தராக இருக்கிறார்) "இவர் எங்கள் ரிஜிஸ்தி ரேஷன் இலாகாவில் குமாஸ்தாவாகத்தான் பணியாற்றுகிறார்" என்று என்னிடம் ஸ்ரீ கேசவய்யாஜீயைப் பற்றிச் சொன்னார். ஸ்ரீ கேசவய்யாஜீ மிகவும் நேர்மையானவர் என்றும் திறமைசாலி என் றும் ஸ்ரீ புல்லா ரெட்டி என்னிடம் சொன்னார். அடுத்த சந்தர்ப்பம் கிடைத்தவுடன் நான் கேசவய்யாஜீயை சப் ரிஜிஸ்திரார் ஆக நிய மனம் செய்தேன். 1930-ம் வருடம் முதன் முதலாக இவரைச் சப்ரிஜிஸ்திராராகப் போட்டதாக நினைவு. பிறகு அவர் எந்த ஊருக்கு மாற்றல் கேட்கிறாரோ அந்த ஊருக்கு மாற்றல் கொடுத்து வந்தேன். எந்த ஊரில் வேலை செய்தாலும் இவர் அங்கே உள்ள மக்களின் அன்பைப் பெற்று வந்தார்; நீதிமான் என்ற புகழையும் பெற்றார். அதனால் ஸ்ரீ கேசவய்யாஜீயிடம் எனக்கு மிகவும் பற்று உண்டாயிற்று. தாம் நீதிக்கும் நாணயத்துக்கும் கட்டுப்பட்டு நடப்பதால் தம் கீழே வேலை செய்பவர்களும் நியாயமும் அதில் உறுதியும் கொண்டிருக்கவேண்டுமென்று இவர் கருதுவார். நாங்கள் சேர்ந்து வேலை செய்த பதினொரு வருட காலத்தில் ஒத்துப்போகாத சந்தர்ப்பம் வரவே இல்லை.

ஸ்ரீ ஸ்வாமி கேசவய்யாஜீயின் இயல்பை அறிந்து கொள்ள, ஒரு சம்பவத்தைப் பற்றிச் சொல்லுகிறேன். அந்தக் காலத்தில், தாலூக்கா ஆபீஸ் கஜானாக்களுக்குத் தாசில்தாரும், தலைமை கணக்கரும் சேர்ந்து பொறுப்பை ஏற்பார்கள். கஜானாவில் ரொக்கம், ஸ்டாம்புகள், பாண்டுகள் வகையராக்கள் இருக்கும். இந்தக் கஜானாவுக்கு இரண்டு பூட்டுப் போடுவது வழக்கம். ஒரு பூட்டும் சாவியும் தாசில்தாரிடமும் மற்றொன்று தலைமைக் கணக் கரிடமும் இருக்கும். இருவரும் இருக்கும்போதுதான் கஜானாவைத் திறந்து மூட முடியும். தாசில்தார் வேறு கிராமங்களுக்குச் செல்

நும்போதும் சுற்றுப் பயணம் செல்லும் போதும் நிபந்தனைப்படி அவரிடம் இருக்கும் சாவியை சப்ரிஜிஸ்திராரிடம் கொடுப்பது வழக்கம். தாசில்தார் திரும்பி வந்தவுடன் சப்ரிஜிஸ்திராரிடமிருந்து சாவியைத் திரும்பப் பெற்றுக்கொள்வார்.

''ஒரு தடவை தாசில்தார் ஒருவர் சுற்றுப்பயணத்துக்குப் புறப் படும்போது அப்போது அங்கே சப்ரிஜிஸ்திராராக இருந்த ஸ்ரீ கேசவய்யாவிடம் கஜானு சாவியைக் கொடுத்தார். தாசில்தார் திரும்பி வந்தவுடன் ஸ்ரீ கேசவய்யாஜீ அவருக்குச் சாவியைப் பெற் றுக் கொள்ளும்படி செய்தி அனுப்பினுர். தாசில்தார் 'இதோ, அதோ' என்று காலம் கடத்திப் பொறுப்பிலிருந்து விடுபடப்பார்த் தார். ஊரில் இருந்து கொண்டே எங்கேயோ சுற்றுப் பயணம் போயிருப்பதுபோல் ரிக்கார்டு தயாரித்தார். ஸ்ரீ கேசவய்யாஜீ இந்தச் செய்திகளை விவரித்து, அந்தத் தாசில்தாரின் மேல் பிராது ஒன்றும் தமக்காக விண்ணப்பம் ஒன்றும் அனுப்பினுர்.

''உலகத்தில் கள்ள வியாபாரிகளும், நியாயமும் நேர்மையும் அற்றவர்களும் — இவர்கள் அதிகாரிகளானுலும் சரி, சாதாரண மக்களானுலும் சரி — பொருளாதார நிலையில் மற்ற எல்லோரை யும் மிஞ்சியிருக்கிருர்கள். ஸ்ரீ கேசவய்யாஜீ நேரான பாதையில் செல்லும் மனிதர். ஆத்மாவை மெய்ப்பித்து நடப்பவர். தாசில் தார் பேரில் அவர் அனுப்பிய பிராது வந்ததும் பெற்றுக்கொண்டு நான் ஸ்ரீ கேசவய்யாவுக்குப் பதில் எழுதினேன். ''நீ தாசில்தார் விஷயமாக எழுதிய விஷயங்களை நிரூபிக்க முடியுமா?'' என்று அக்கடிதத்தில் எழுதிக் கேட்டிருந்தேன். அந்தக் கடிதத்துக்கு ஸ்ரீ கேசவய்யாஜீ எழுதியிருந்த பதிலே அவருடைய நேர்மையான நடத்தைக்கு எடுத்துக்காட்டாக இருந்தது. ''அந்தச் செய்தியெல் லாம் உண்மைதான்; இருந்தாலும் என்னுல் நிரூபிக்க முடியாது'' என்று ஸ்ரீ கேசவய்யாஜீ எழுதியிருந்தார். அந்த நிலையில் மற்றொ ருவர் இருந்தால் வீருப்புப் பேசி அதற்கு ஆதாரமாக ஏதாவது கடிதங்களைத் தயார் செய்து விடுவார்கள். இவர் உள்ளதை உள்ள படி சொல்லி விட்டார். அப்புறம் இவருக்கு இப்படி எழுதினேன் ''நீங்கள் லௌகிக முறையில் விவகாரம் செய்யக் கற்றுக்கொள்ள வேண்டும்.''

''அந்தத் தாசில்தார் விஷயத்தில் ஸ்ரீ கேசவய்யாஜீ எழுதியது முற்றும் உண்மை என்பது எனக்குத் தெரியும். இருந்தாலும் அந்தச் சமயத்தில் ஸ்ரீ கேசவய்யாஜீக்கு அப்படியோசனை கூற வேண்டியிருந்தது. தாசில்தாரைக் குற்றம் சாட்டுவதற்காக, நான் இந்த நிகழ்ச்சியைச் சொல்லவில்லை. மிகச்சிறிய உத்தியோ கத்தில் இருந்தபோதிலும் ஸ்ரீ கேசவய்யாஜீ எவ்வளவு நியாயமாக

வும், உறுதியுடனும், நேர்மையுடனும் நடந்து கொள்வார் என்பதை விளக்கவே இவ்வளவு தூரம் சென்னேன். ஸ்ரீ கேசவய்யாவின் நேர்மையான நடத்தை, உண்மை பேசுதல், நாணயம் ஆகியவற்றை கடவுள் அறிந்து கொண்டு விட்டார் என்பதில் எனக்கு மிகவும் சந்தோசமாக இருக்கிறது; பிரம்மானந்தமாக இருக்கிறது. இந்தப் பிறவியிலேயே இவருக்கு இம்மாதிரி கடவுளுடைய அருள் கிடைத்தது அபூர்வமான நிகழ்ச்சி. ஸ்ரீ ஸ்வாமி கேசவய்யாஜீ சாயிபாபாவின் தூதுவராய் அந்த மகானுடைய உத்தரவுகளை நமக்குத் தெரிவிக்கிறார். கலையாத தியானத்தாலும், சாயிபாபாவின் பொன் மொழிகளைச் செயலில் கடைப்பிடிப்பதாலும் ஸ்ரீ ஸ்வாமி கேசவய்யாஜீ நமது அன்புக்கு உரியவரானார். இவர் பிறருக்குப் போதித்தபடி தாம் நடந்துகொள்ளாவிட்டால் ஒவ்வொரு வியாழனன்றும் இந்த சாயி நிலையத்தில் ஆயிரக்கணக்கான பக்தர்கள் கூடமாட்டார்கள் அல்லவா ?

1933-ம் ஆண்டு ஜுலை 1-ம் தேதியன்று ஸ்ரீ கேசவய்யாவுக்கு சப்ரிஜிஸ்திரார் வேலை காயம் ஆயிற்று. ஸ்ரீ புல்லா ரெட்டி மிகவும் உதவி செய்தார். ஐ. ஸி. எஸ். ஆபீசரான ஸ்ரீ புல்லா ரெட்டி, சாதாரணப் பிரஜையான சப்ரிஜிதிரார் ஸ்வாமி ஸ்ரீ கேசவய்யாஜீ இவ்விருவருக்கும் நெருங்கிய நட்பு ஏற்பட்டது. இவர்களுடைய தொடர்பு இப்படிப்பட்டதென்று விவரித்துச் சொல்ல இயலாதது. ஸ்ரீ கேசவய்யாஜீ தர்மவரம், பெனுகொண்டா, கதிரி, பாக்காலா ஆகிய ஊர்களில் சப்ரிஜிஸ்திராராக இருந்திருக்கிறார். அக்காலத்தில் இவருடைய ஆபீஸைத் தணிக்கை செய்த மேலதிகாரிகள் வெளியிட்ட அபிப்பிராயங்களையும் இங்கே சொல்வது பொறுத்தமாக இருக்கும்.

1932-ம் ஆண்டு ஜுலை 2-ம் தேதியன்று ரிஜிஸ்திரேஷன் இலாக்கா இன்ஸ்பெக்டர் — ஜெனல் ஸ்ரீ பி. வி. ஹரிராவ் நாயுடு ஸ்ரீ கேசவய்யாவின் வேலையைப் புகழ்ந்து கூறியபோது இவருடைய நடத்தையைப் பற்றி மகிழ்ச்சியைத் தெரிவித்து இப்படி எழுதினர் :—

"ஆக்டிங் சப்ரிஜிஸ்திரார் ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாஜீ செய்து வரும் திறமையான வேலையைக் கண்டு ரிஜிஸ்திரேஷன் இலாகா இன்ஸ்பெக்டர் ஜெனரல் மிகவும் சந்தோஷப்படுகிறார்." 1935-ம் ஆண்டு நவம்பர் மாதத்திலும் அவர் இதே கருத்தை வெளியிட்டார். 1933 முதல் 1934 வரை பெல்லாரி, அனந்தபுரம் ஜில்லா ரிஸ்திராராக இருந்த ஸ்ரீ எஸ். பி. ராதாகிருஷ்ண நாயுடு ஸ்ரீ ஸ்வாமி கேசவய்யாவின் வேலையைப் புகழ்ந்து இப்படி எழுதினர்:

"ஆபீஸின் நிலை வழக்கம்போல் இருக்கிறது; இங்கே வேலை மிக அதிகம்; அவ்வளவு அதிகமான வேலைக்குத்தக்க சிப்பந்திகள் ஆபீஸில் இல்லை. இருந்தாலும் ஆக்டிங் ஸப்ரிஜிஸ்திராரான ஸ்ரீ கேசவய்யாஜீ தனிப்பட்ட அக்கறை எடுத்துக்கொண்டு மிகவும் உழைத்து ஆபீஸைத் திருப்திகரமான நிலைக்குக் கொண்டுவந்திருக்கிறார். கடமையைச் செய்யும்போது இவர், மக்களுக்குச் சேவை செய்வதில் தம்மையே மறந்து விடுகிறார். இதைக் கண்டு நான் மிகவும் மகிழ்ந்தேன்."

ஸ்ரீ ராதாகிருஷ்ண நாயுடு 1932-ம் ஆண்டு ஏப்ரல் 6-ம் தேதி வெளியிட்ட கருத்து இது. மூன்று மாதத்துக்குப்பின் ரிஜிஸ்திரேஷன் இலாக்கா இன்ஸ்பெக்டர் ஜெனரலின் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்போது ஸ்ரீ ராதாகிருஷ்ண நாயுடு 1932-ம் ஆண்டு ஜூலை 11-ம் தேதி ஸ்ரீ கேசவய்யாவுக்கு இப்படி எழுதினார்.

"அன்புள்ள ஸ்ரீ கேசவய்யாஜீ,

சென்ற தடவை உங்கள் ஆபீஸைத் தணிக்கை செய்து என் கருத்துக்களை எழுதி அனுப்பிய அறிக்கையைப் பார்த்த ரிஜிஸ்திரேஷன் இலாகா இன்ஸ்பெக்டர் ஜெனரல் அறிக்கையில் கண்ட விஷயத்தைப்பற்றித் தம் சந்தோஷத்தையும் திருப்தியையும் தெரிவித்தார். இந்த விஷயத்தை உங்கள் நன்னடத்தை சர்டிபிகேட்டில் குறித்திருக்கிறார். அவரிடமிருந்து பாராட்டுப் பெற்றதற்கு நான் உங்களைப் பாராட்டுகிறேன். இப்பொழுது முதல் இன்னும் உற்சாகத்துடனும், அக்கறையுடனும் வேலை செய்வீர்களென்று எதிர்பார்க்கிறேன்."

ஸ்ரீ ராதாகிருஷ்ண நாயுடு மறுபடியும் 1933-ம் ஆண்டு பிப்ரவரி 27 முதல் மார்ச் 1-ம் தேதி வரை ஸ்ரீ கேசவய்யாஜீ வேலை செய்த ஆபீஸை மறுபடி தணிக்கை செய்தார். அப்பொழுதும் இவருடைய வேலைத்திறமையை மிகவும் புகழ்ந்து எழுதியிருக்கிறார்.

'ஆபீசில் வேலைகள் நடக்கும் முறை திருப்திகரமாக இருக்கிறது. ஏதோ அற்ப விஷயங்களில் முக்கியமற்ற தவறுகள் அங்கங்கே இருந்தாலும் மொத்தத்தில் இந்த ஆபீஸ் பிறருக்கு உதாரணமாக அமைந்திருக்கிறது. 'மாதிரி ஆபீஸ்' என்று சொல்லத் தக்கதாக இது இருக்கிறது. இந்த இலாகாவுக்குத் தொடர்புள்ள இரண்டு முக்கியமான ரிகார்டுகள் விஷயத்தில் ஸப்ரிஜிஸ்திரார்

தனிப்பட்ட சிரத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். அவை புத்தகங்களின் ரிக்கார்டும், அட்டவணையும் ஆகும். ஆக்டிங் சப் ரிஜிஸ்திரார் ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாஜீ தம் கடமையைக் குறியாகச் செய்வதிலும், நல்ல முறையில் வேலை செய்வதிலும் சிறந்து விளங்குகிறார். இந்த இரண்டு தன்மைகளும் மகிழ்ச்சிக்கு உரியவை.''

பிறகு 1933-ம் ஆண்டு மார்ச் 24-ம் தேதியில் ரிஜிஸ்திரேஷன் இலாகா இன்ஸ்பெக்டர்-ஜெனரலான ஸ்ரீ பி. வி. ஹரிராவ் நாயுடு தாமாகவே இப்படி எழுதினார் :

''சப்ரிஜிஸ்திரார் ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாவின் நேர்மையைப் பற்றிப் புகழ்ச்சியாகக் கேள்விப்படுவதற்கு மிகவும் சந்தோஷப்படுகிறேன். இவர் தம் புகழை இப்படியே நிலை நிறுத்திக்கொள்வார் என்று நம்புகிறேன்.''

1934-ம் ஆண்டில் ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாஜீ அனந்தபுரம் ஜில்லாவைச் சேர்ந்த கதிரியில் சப்ரிஜிஸ்திராராக இருந்தார். அப்பொழுது இவருடைய ஆபீஸை ஜில்லா ரிஜிஸ்திரார் ஸ்ரீ எஸ். பி. ராதாகிஷ்ண நாயுடு தணிக்கை செய்து விட்டு இவ்வாறு எழுதினார்.

## ஆபீஸின் சாதாரண நிலை

''மிகத்திருப்திகரமாக இருக்கிறது. புத்தகங்கள், அட்டவணை விஷயங்களில் சப்ரிஜிஸ்திரார் ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாஜீ தனிப்பட்ட சிரத்தை எடுத்துக்கொண்டிருக்கிறார். வேலை மிகச் சுத்தமாகவும் தவறில்லாமலும் இருக்கிறது. ஆபீஸை மெச்சத்தக்கரீதியில் நடத்துகிறார். குடியானவர்கள் நலத்தையே இவர் தீவிரமாக விரும்புகிறார்.''

1935-ம் ஆண்டு பிப்ரவரி 25-ம் தேதியில் ஜில்லா ரிஜிஸ்திரார் ஸ்ரீ எஸ். பி. ராதாகிருஷ்ண நாயுடு திடீரென்று கதிரி சப்ரிஜிஸ்திரார் ஆபீஸைத் தணிக்கை செய்தார். அப்பொழுதும் ஆபீஸின் நிலைமை ஒழுங்காகவே இருந்தது. அவர் எழுதியது :

''மேலாகப் பார்க்கும் பொழுது திருப்திகரமாகத்தான் இருக்கிறது. ரிஜிஸ்திரேஷனுக்குத் தாக்கல் செய்த அன்றே பத்திரங்களை ரிஜிஸ்தர் செய்து திருப்பிக்கொடுப்பது இந்த ஆபீஸின் தனிப் பெருமை. ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாஜீயின் தலைமையில் இந்த ஆபீஸ்

மிக உயர் நிலையை எட்டிப்பிடித்துப் புகழை நிலை நிறுத்திக் கொண்டிருக்கிறது. ஸ்ரீ கேசவய்யாஜீ மக்களுடைய நலத்தையே விரும்பித் தம் கடமையைச் செய்து வருகிறார்.''

அதே ஆண்டு அனந்தபுரம் ஜில்லா ரிஜிஸ்திராராக வந்த ஸ்ரீ எம். எச். இக்பால் இப்படி எழுதினார் :

''ஜில்லாவில் ஏராளமாக வேலையுள்ள சப்ரிஜிஸ்திரார் ஆபீஸ்களில் இதுவும் ஒன்று. சப்ரிஜிஸ்திரார் ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாஜீ பாடுபட்டு உழைத்து ஆபீஸை மிகவும் உயர்ந்த நிலையில் வைத்திருக்கிறார். இந்த ஆபீசில் சிறப்பாகக் கவனிக்க வேண்டிய விஷயம், சாதாரணமாக அன்றன்று தாக்கல் ஆகும் பத்திரங்களை அன்றன்றே ரிஜிஸ்தர் செய்து உரியவர்களுக்குத் திருப்பிக்கொடுப்பதுதான். தற்சமயம் உள்ள சப்ரிஜிஸ்திரார் ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாஜீயின் நிர்வாகத்தின் கீழ் இந்த ஆபீஸ் பெரும் புகழைத் தேடிக்கொண்டிருக்கிறது. மொத்தத்தில் ஆபீசின் நிலைமை மிகவும் திருப்திகரமாக இருக்கிறது.''

இந்தத் தணிக்கை அறிக்கை விஷயத்தில் ரிஜிஸ்திரேஷன் இலாகா இன்ஸ்பெக்டர்-ஜெனரல் தம் மகிழ்ச்சியை வெளியிட்டார்.

1936-ஆம் ஆண்டு அக்டோபர் முதல் தேதியன்று ஜில்லா ரிஜிஸ்திரார் ஸ்ரீ எம். எச். இக்பால், ஸ்ரீ கேசவய்யாவின் வேலையைப் பாராட்டியபோது, ''சப் ரிஜிஸ்திரார் ஸ்ரீ எஸ். பீ. கேசவய்யா மிகவும் கஷ்டப்பட்டு வேலை செய்யும் உத்தியோகஸ்தர். இவருடைய ஆபீஸின் நிலைமை திருப்திகரமாக இருக்கிறது'' என்று எழுதினார்.

1937-ஆம் ஆண்டு ஸ்ரீ எஸ். பீ. கேசவய்யா, பாகாலாவில் சப் ரிஜிஸ்திராராக இருந்தார். அச்சமயம் சித்தூர், கடப்பை ஜில்லாக்களுக்கு ஜில்லா ரிஜிஸ்திராராக இருந்த ஸ்ரீ எஸ். பி. ராதாகிருஷ்ண நாயுடு, ஸ்ரீ கேசவய்யாவின் வேலையைப் பற்றி இவ்வாறு எழுதினார். ''ஆபீஸின் நிலைமை திருப்திகரமாக இருக்கிறது. சப் ரிஜிஸ்திரார் ஸ்ரீ எஸ். பி. கேசவய்யா தம் வேலையில் தக்க ஊக்கம் காண்பிக்கிறார். அவருடைய வேலை வெகு சுத்தமாக இருக்கிறது. யாருக்கும் சொந்தமற்ற பத்திரங்களின் எண்ணிக்கை மிகக் குறைவாக இருப்பது தனிப்படப் பாராட்ட வேண்டிய விஷயம். இதற்காக முழுதும் சப் ரிஜிஸ்திராரைப் பாராட்ட வேண்டும்.''

1939-ஆம் ஆண்டு தர்மவரத்தில் சப் ரிஜிஸ்திராராக இருந்தார் ஸ்ரீ கேசவய்யாஜீ. அந்த ஆண்டு அவருடைய வாழ்க்கையில் மிக முக்கியமானது அக்காலத்தில் அனந்தபுரம் ஜில்லா ரிஜிஸ்திராராக இருந்த ஸ்ரீ வி. வி. ரங்கநாதம் சப் ரிஜிஸ்திரார் ஆபீஸைப் பார்வை

யிட்டார். பின்பு இவ்வாறு எழுதினுர். தணிக்கைக் காலத்தில் ஒரு மாதம் தவிர மற்ற நாட்களில் எல்லாம் ஸ்ரீ எஸ். பி. கேசவய்யா சப் ரிஜிஸ்திராராக வேலை செய்தார். ஒவ்வொரு விஷயத்திலும் ஸ்ரீ கேசவய்யா தாமே அக்கறை எடுத்துக்கொண்டார். ஆபீஸின் திறமையையும் புகழையும் மிக உயர்ந்த நிலையில் வைக்க அவர் உழைத்தார். அன்றுடம் தாக்கலான பத்திரங்களை உடனே பூர்த்தி செய்து கிட்டத்தட்ட எல்லாவற்றையும் அன்றே திருப்பிக் கொடுப்பதை முக்கியமாகப் பாராட்ட வேண்டும்.''

1942-ல் ஸ்ரீ கேசவய்யாஜீ பெனுகொண்டாவில் சப் ரிஜிஸ்திராராக இருந்தார். அப்பொழுது ஜில்லா ரிஜிஸ்திராராக இருந்த ஸ்ரீ பி. கனகராஜு ஆகஸ்ட் 29-ம் தேதியன்று சப் ரிஜிஸ்திரார் ஆபீஸைப் பார்வையிட்டார். அவர் எழுதினுர். ''ஆபீஸின் நிலைமை வழக்கம் போல் திருப்திகரமாக இருக்கிறது. சப் ரிஜிஸ்திராரான ஸ்ரீ எஸ். பி. கேசவய்யா தம் பொறுப்பையும் கடமையையும் உணர்ந்த உத்தியோகஸ்தர். வேலையில் விசேஷ அக்கறை கொண்டவர்.''

ஸ்ரீ பி. வி. ஹரிராவ் நாயுடுவுக்குப் பிறகு, ஸ்ரீ எஸ். கிருஷ்ண மூர்த்தி ரிஜிஸ்திரேஷன் இலாகா ஜெனரல் மானேஜராக வந்தார். அவரும் ஸ்ரீ கேசவய்யாஜீயின் வேலையைப் பற்றி வெகுவாகப் பாராட்டியிருக்கிறுர். இவர் 1942 அக்டோபர் 3-இல் எழுதியிருக்கிறுர்:— ''பெனுகொண்டா சப் ரிஜிஸ்திரார் ஆபீஸில் சப் ரிஜிஸ்திரார் ஸ்ரீ எஸ். பி. கேசவய்யா தம் பதவியை மிக அக்கறையுடன், புகழத்தக்க முறையில், குற்றமற்ற வழியில் நிர்வகித்து வருகிறுர் என்பதை அறிந்து மிகவும் சந்தோஷப்படுகிறேன்.''

1943-ம் ஆண்டில் ஜில்லா ரிஜிஸ்திரார் ஸ்ரீ ஒய். சேஷகிரி ராவ் பெனுகொண்டா சப் ரிஜிஸ்திரார் ஆபீஸைப் பார்வையிட்டார். அபிப்பிராயத்தை இப்படி வெளியிட்டார். ''ஆபீஸின் நிலைமை முழுதும் திருப்தியை அளிக்கிறது. ரிஜிஸ்டர் புத்தகங்கள், அட்டவணை விஷயத்தில் சப் ரிஜிஸ்திரார் ஸ்ரீ எஸ். பி. கேசவய்யா விசேஷ சிரத்தை கொண்டிருக்கிறுர். அவருடைய வேலை வெகு சுத்தமாகவும் தவறில்லாமலும் இருக்கிறது. ஆபீஸை மிகத் திறமையுடன் நடத்துவதோடு, ஏழைக் குடியானவர்களுடைய நலனையும் விசாரிக்கிறுர்.''

1944-ம் ஆண்டு முதல் 1948 வரையில் பெனுகொண்டா சப் ரிஜிஸ்திரார் ஆபீஸைத் தணிக்கை செய்த ஜில்லா ரிஜிஸ்திரார்கள் எல்லோரும் ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாவைப் பற்றி ஒருமுகமான

நல்ல அபிப்பிராயத்தையே வெளியிட்டிருக்கிருர்கள். சுவாமிஜீயின் சர்வீஸ் ரிஜிஸ்தரில் அவர் திறமையை மெச்சும் ஆறு சிவப்புக் குறியீடுகள் உள்ளன.

சப் ரிஜிஸ்திராராக இருந்ததுடன் 1941-ஆம் ஆண்டில் ஜனத்தொகைக் கணக்கெடுக்கும் வேலையில் பங்கெடுத்துக்கொண்டு ஸ்ரீ கேசவய்யாஜீ சென்சஸ் சூப்பரின்டெண்டின் புகழுக்குப் பாத்திரமானுர்.

முப்பது வருடங்கள் உத்தியோகம் செய்த காலத்தில் ஸ்ரீ கேசவய்யாஜீ, மக்களின் அன்பையும் மேலதிகாரிகளின் பாராட்டுக்களையும் ஒருங்கே பெற்ருர்.

சுவாமிஜீ சப் ரிஜிஸ்திரார் வேலையில் இருந்தவரையில் சம்பாதித்தது பணமன்று; நற்சாட்சிப் பத்திரங்கள்தாம். திவான் பகதூர் ஸ்ரீ ஹரிராவ் நாயுடு வெளியிட்ட அபிப்பிராயத்தை அறிந்தோம். விற்பனை வரி அப்பீல் டிரிப்யூனல் அங்கத்தினரான ஸ்ரீ எஸ். வி. ராதாகிருஷ்ண நாயுடு ஐ.ஏ.எஸ். (ரிடையர்டு) சுவாமி கேசவய்யாஜீயின்மேல் வந்த சில பிராதுகளை விசாரித்தார். அவர் அந்த நிகழ்ச்சியைப் பற்றி 1959-ஆம் ஆண்டு ஸ்ரீ ராமநவமி உற்சவத்தில் ஷெனுய் நகர் சாயி நிலையத்தில் நடந்த பொதுக்கூட்டத்தில் சொன்னுர். அவருடைய பிரசங்கத்திலிருந்து இந்த நிகழ்ச்சிக்குத் தொடர்பு உள்ள பகுதிகளை மட்டும் இங்கே சொல்லிவிட்டு மற்ற பகுதிகளை, ''பக்தர்களுடைய அநுபவம்'' என்னும் தலைப்பில் விவரித்திருக்கிறேன்.

''இங்கே இந்த ஸ்ரீராம நவமி உற்சவத்தில் பங்குகொள்ளச் சந்தர்ப்பம் கிடைத்ததைப் பெரும் பேருகக் கருதுகிறேன். முப்பது வருடங்களுக்கு மேலாகவே எனக்கு சுவாமிஜீயுடன் பரிச்சயம் உண்டு. நாங்கள் இருவரும் ஒரே கிளையில் வேலை செய்ததால் எங்களுடைய முதல் சந்திப்பு அதிகார ரீதியிலேயே நடந்தது. சப் ரிஜிஸ்திரார் வேலை மிகச் சிறியது. ஆனுல் அந்த வேலையைப் பயமின்றி நிர்வகித்து அரசாங்க உத்தியோகஸ்தருக்கு இலக்கணமானவர் என்று புகழ் பெற்றுவிட்டார் சுவாமிஜீ. இவருடைய நேர்மையிலும் நியாயத்திலும் களங்கம் இல்லை. நூற்றுக்கு நூறு நன்னடத்தையுள்ள உத்தியோகஸ்தர் என்று பிரசித்தி பெற்றுவிட்டார். இவர் தம்முடைய நேர்மையான நடத்தையோடு திருப்தி பெற்றுவிடவில்லை. தம்முடனும் தம் கீழும் வேலை செய்பவர்கள் எல்லோருமே நியாயமும் நேர்மையும் உள்ளவர்களாய் இருக்கவேண்டும் என்பார். இதனுல் இவர் கீழ் உத்தியோகஸ்தர்களுக்கு இவர் பெருந்தடையாக இருந்தார். அவர்கள் இவரைப் பற்றி அவதூருகப் பிரசாரம் செய்ய ஆரம்பித்தார்கள். நான் அந்த ஜில்லாவிலேயே ஜில்லா

ரிஜிஸ்திராராக இருந்தேன். 'பலர் கையொப்பமிட்டு கேசவய்யா மீது புகார் செய்து எனக்கு மனு அனுப்பியிருந்தார்கள். ஒரு விஷயத்தை மட்டும் அந்த மனுதாரர்கள்கூட ஒப்புக்கொண்டதாகத் தெரிந்தது. கேசவய்யாஜீயின்மேல் லஞ்சம் பெற்றதாகக் குற்றம் சாட்டவில்லை. மிகக் கடுமையாக இருப்பதாகவும், வேலை செய்யச் சொல்லி உயிரை வாங்குவதாகவும் புகார் செய்திருந்தார்கள்.

பிராது வந்துவிட்டதால் நானே விசாரித்தேன். பல கிராமங்களுக்குச் சென்று ஜனங்களை விசாரித்தேன். எல்லோரும் ஒருமுகமாக ஒரே விஷயத்தைச் சொன்னார்கள். "இவர்போல் நீதிக்குக் கட்டுப்பட்ட சப் ரிஜிஸ்திராரை நாங்கள் இதற்குமுன் கண்டதில்லை" ஜில்லாவில் உள்ள மக்கள் ஸ்ரீ கேசவய்யாஜீயின் வேலை நிர்வாகத்தில் திருப்தியாய் இருந்தார்கள். மக்களுடைய மதிப்பையும் அன்பையும் பெற்ற உத்தியோகஸ்தர் வேறு யாரும் இல்லை. பிராது எழுதியவர்கள் சுவாமி கேசவய்யாஜீயின் முகத்தில் கரி தீட்டப் பார்த்தார்கள். ஆனால் இந்த விசாரணையால் அவர் மேலும் ஒளிபெற்று அதிலிருந்து தப்பினார்.'' என்று விசாரணையைப் பூர்த்தி செய்து மேலே அனுப்ப வேண்டியதாயிற்று.

"ஸ்ரீ கேசவய்யாஜீ வேலையில் பதவி உயர்வை எதிர்பார்த்தோ, மேல் பதவியில் நாட்டம் வைத்தோ இவ்வளவு நேர்மையாக நடந்து கொள்ளவில்லை. தொழிலின் மேல் உள்ள அன்பும் கௌரவமுமே அவர் கண்டிப்புக்குக் காரணமாயின. இது "உத்தியோகத்தின் கடமை" என்று கண்டுகொண்டார். ஸ்ரீ கேசவய்யாஜீ உடல் நலிவாலும் மனக் கவலையாலும் துன்புற்றதும், பல கஷ்டங்களைச் சமாளித்ததும் எனக்குத் தெரியும். இவர் எந்த நிலையிலும் தரும நெறி தவறவில்லை என்பதும் தெரியும். இவருடைய நடவடிக்கை அந்த ஆபீசில் உள்ளவர்களுக்குப் படிப்பினையாக இருந்தது. இவர் நேர்மையோடு திறமையும் மிக்க உத்தியோகஸ்தர். அரசாங்க உத்தியோகஸ்தர்கள் எல்லோருக்கும் "சர்வீஸ் ரிஜிஸ்தர்" என்று ஒன்று உண்டு. உத்தியோகஸ்தர்களுடைய செயல்களில் நல்லவை, தீயவைகளைப் பற்றி அதில் எழுதுவார்கள். சர்வீஸ் ரிஜிஸ்தரில் நல்ல சர்ட்டிபிகேட் (புகழ்) வாங்கிய முதல் சப் ரிஜிஸ்திரார், ஸ்ரீ கேசவய்யாஜீ தான் (சுவாமிஜீயின் வேலைக் காலத்தில் ஆறு முறை புகழ்ந்து எழுதப் பெற்ற கௌரவம் அவருக்கு கிடைத்திருக்கிறது.)

"சப் ரிஜிஸ்திரார் வேலை செய்து கொண்டிருந்த காலத்தில் இவர் இவ்வளவு மகத்துவமும் ஆத்மீக சக்தியும் பெற்றிருந்ததாகத் தெரியவில்லை. நன்னடத்தையுள்ள மனிதராகவும் நாட்டுக்கு வற்றாத செல்வமாகவும் இருந்தார். நான் சில ஆண்டுகளுக்குப் பின்

ஸ்ரீ கேசவய்யாஜீ உத்தியோகம் செய்த ஜில்லாவுக்கு ரிஜிஸ்திராராகச் சென்றேன். ஜனங்கள் ஸ்ரீ கேசவய்யாஜீயை "புனித சப் ரிஜிஸ்திரார்" (செயின்ட் சப் ரிஜிஸ்திரார்) என்று சொல்லுவதைக் கேள்விப் பட்டேன். அவர் அரசாங்க வேலை செய்துகொண்டிருந்த காலத்தில் தொழிலில்மட்டும் கடமையைச் செலுத்துவதோடு நிற்கவில்லை. ஆத்மிக சிந்தனையிலும் பழகி வந்தார் பலனை எதிர் பார்க்காமல் தன் கடமையைச் செய்துகொண்டு காலந்தள்ளும் உண்மையான கர்மயோகி ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீ; இப்பொழுதும் அப்படித்தான் செய்து கொண்டிருக்கிறார்."

ஸ்ரீ எம். மல்லி ரெட்டியும் சுவாமிஜீ வேலை பற்றி இதுபோன்ற செய்திகளையே சொன்னார். அந்தக் காலத்தில் ஸ்ரீ கேசவய்யாஜீ அதிகமாக உணர்ச்சி வசப்பட்டு விடுவாரென்றும், அக்கிரமத்தையும் அநீதியையும் பொறுக்கமாட்டாரென்றும் அதனால் தம் கீழே வேலை செய்யும் உத்தியோகஸ்தர்களிடம் பகை தேடிக்கொண்டார் என்றும் ஸ்ரீ மல்லி ரெட்டி சொன்னார்.

சுவாமி கேசவய்யாஜீ 1923-இல் வேலைக்குச் சேர்ந்தார். அது முதல் 1948-ம் ஆண்டில் நோயுறும் வரையில் அனந்தபுரம், சித்தூர் ஜில்லாக்களிலேயே வேலை செய்தார். 1930 முதல் 1948 வரையில் தர்மவரம், கதிரி, பெனுகொண்டா, பாக்காலா ஆகிய ஊர்களில் சப் ரிஜிஸ்திராராக இருந்தார். 1949-ம் ஆண்டில் திரும்ப ஆரோக்கியம் பெற்றபின், சென்னையில் ரிஜிஸ்திரேஷன் இலாகா இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஆபீஸில் மானேஜராகச் சேர்ந்தார். அந்தப் பதவியில் இருக்கும்போதே 1953-ம் ஆண்டில் ஓய்வு பெற்றார். சென்னையிலேயே தங்கிவிட்டார்.

## சுவாமிஜியின் கருத்துக்கள்

ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீயின் பிறப்பு, இளமை, கல்வி கற்றல், உத்தியோகம் ஆகியவை பற்றிய விஷயங்களைச் சிரத்தையாக ஆராய்ந்தால் எல்லோருக்கும் ஒரே அபிப்பிராயம் ஏற்படும். 1939-ம் ஆண்டு ஜூலை முதல் தேதியன்று ஸ்ரீ சாயி பாபா திடீரென்று ஸ்ரீ சுவாமி பாலகேசவய்யாஜீயைத் தம் வாரிசாகத் தேர்ந்தெடுக்க வில்லை என்பதும் ஸ்ரீ கேசவய்யாஜீ இளமையிலிருந்தே அதற்குத் தகுதியைச் சம்பாதித்துக்கொண்டார் என்பதும் ஒவ்வொருவருக்கும் தெரியவரும். ஒரு நிகழ்ச்சியைத் தெரிந்துகொண்டால் இந்த உண்மை இன்னும் உறுதியாகும்

ஸ்ரீ சாயிபாபா 1918-ஆம் ஆண்டு விஜயதசமியன்று மகா சமாதியானார். அதே நாளில் இங்கே—பாமிடியில் ஓர் அதிசயம் நிகழ்ந்தது. சுவாமிஜியும் அவருடைய தாயான ஸ்ரீமதி சஞ்சீவம்மாவும் நோயுற்றுப் படுத்திருந்தார்கள். அன்று ஸ்ரீமதி சஞ்சீவம்மா பரம பதம் அடைந்தாள். ஆனால், ஊரில் ஸ்ரீ கேசவய்யா இறந்துவிட்டாரென்று வதந்தி பரவியது. ஊரார் எல்லோரும் ஸ்ரீ கேசவய்யா இறந்துவிட்டதாகவே நினைத்தார்கள். ஆனால் இங்கே இறந்தது சுவாமிஜியின் தாய்; அங்கே மகா சமாதியானவர் ஸ்ரீ சாயிபாபா. அதுமுதல் ஸ்ரீ கேசவய்யாஜியின் உடல்நிலை தேறி படிப்படியாகப் பூரண ஆரோக்கியம் பெற்றார்.

ஸ்ரீ சாயிபாபா இதற்கு முன்பு சீரடியில் இதுபோலவே ஒரு பக்தனைத் தம் உயிரைக் கொடுத்துக் காத்ததாக ஸ்ரீ சாயி ஸத் சரிதையில் காண்கிறோம். ஆகையால் ஸ்ரீ சாயிபாபா, சுவாமி பாலகேசவய்யாவைத் தம் காரியங்களைத் தொடர்ந்து நடத்துவதற்காக வெகு காலத்துக்கு முன்பே தேர்ந்தெடுத்திருக்கிறார். அந்தச் செய்தியை சுவாமிஜிக்கு மட்டும் இரண்டாம் உலகப் போர் தொடங்குவதற்கு முன் 1939 ஜுலை முதல் தேதியன்று தெரிவித்தார்.

இந்த அத்தியாயத்தைத் தொடங்கும் முன் இரண்டு விஷயங்களைச் சொல்ல வேண்டும். ஸ்ரீ சுவாமிஜியின் தந்தையான ஸ்ரீ பாலையா 1911-ஆம் ஆண்டு கார்த்திகைச் சுக்கில த்விதியையன்று பரம பதம் அடைந்தார். தாய் ஸ்ரீமதி சஞ்சீவம்மா 1918-ஆம் ஆண்டு அக்டோபர் 15-ம் தேதி பரம பதம் பெற்றார். ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீ 1911-ஆம் ஆண்டிலேயே பிரைமரிப் பரீட்சையில் தேறிவிட்டார். பிறகு அவருடைய கல்வி, மற்ற செய்திகள் பற்றி வாசகர்கள் ஏற்கெனவே தெரிந்துகொண்டிருக்கிறார்கள்.

1939-ஆம் ஆண்டு ஜுலை 1-ந் தேதியன்று ஸ்ரீ சாயிபாபா சுவாமிஜீயின் வாழ்வில் பிரவேசிப்பதற்கு முன், சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜீயைப்பற்றி அறிந்துகொள்ள வேண்டிய செய்திகள் சில உண்டு. முக்கியமாக ஆத்மிக விஷயங்களில் சுவாமிஜீயின் அபிப்பிராயத்தையும் விக்கிரகாராதனை பற்றிய கருத்துக்களையும் கவனித்தால், பக்தி மார்க்கத்தில் பிரவேசிப்பவர்களுக்குப் பயனுள்ளதாக இருக்கும்.

ஸ்ரீ சுவாமி பாலகேசவய்யா சிறு வயதிலேயே பாமிடிக் கோயில்களுக்கு அடிக்கடி சென்று கோயில் பிரகாரத்தில் அமர்ந்து தியானம் செய்வாரென்பதை முன்பே கூறினோம். ஆனால் சுவாமிஜீ கோயில் விக்கிரகங்களுக்குப் பூஜை செய்ய மாட்டார். கற்சிலைகளில் கடவுள் இருக்கிறாரென்றோ, இருக்க முடியும் என்றோ அவர் நம்பவில்லை. கல் பொம்மைகளுக்குத் தேங்காய் உடைப்பதால் என்ன பயன் என்று

கேட்பார். அந்தப் பைசாக்களை ஓர் ஏழைக்குக் கொடுத்தாலும் பயன் உண்டு என்று தர்க்கம் செய்வார். ஆத்மிகச் சிந்தனை இல்லா திருந்தாலும் முதலிலிருந்தே இவர் நாஸ்திகர் அல்லர். அக்காலத்து நினைவுகளைப் பற்றியும் கருத்துக்களைப் பற்றியும் தாமே இப்படிச் சொல்லுவார். "1939-ஆம் ஆண்டு ஜூலை 1-ந் தேதி வரை எனக்கு ஆத்மிகச் சிந்தனை எதுவும் இருக்கவில்லை. கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்றிருந்தேன். அக்காலத்தில் இந்திய இளைஞர்கள் எல்லோரையும் பற்றிக் கொண்டிருந்த நவநாகரிக மோகத்தில் மூழ்கி நடையுடை பாவனைகளிலும், சிந்தனைகளிலும் முழுக்க முழுக்க அயல் நாட்டினரின் பழக்கங்களை மேற்கொண்டிருந்தேன்."

அக்காலத்தில் எடுக்கப்பட்ட சுவாமிஜீயின் போட்டோவைப் பார்த்தால் எல்லோருக்கும் விஷயம் விளங்கிவிடும். ஆங்கிலேயரைப் போல் அழகாகக் கிராப் வாரிக்கொள்வார். ஆபீசில் இருக்கும் வரையில் ஃபுல் ஸூட்தான் உடை. அப்பொழுது இங்கிலாந்திலிருந்து வந்த துரைபோல் இருப்பார். தாம் திரிகரண சுத்தியாக நம்பிய விஷயங்களை எந்தச் சந்தர்ப்பத்திலும் விட்டுக் கொடுக்க மாட்டார். எப்பொழுதும் வெட்டு ஒன்று, துண்டு இரண்டு என்று தான் பேசுவார். எப்படியாவது காரியத்தைச் சாதித்துக் கொண்டால் போதும் என்ற கருத்தோ, தாட்சணியத்துக்காகத் தன் மனத்தில் உள்ள நினைவுக்கு மாறுகப் பேசுவதோ எப்பொழுதுமே இவருக்குத் தெரியாது. அதனுலேயே இவருக்கு முதலிலிருந்தே ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், சுவாமி விவேகானந்தர் ஆகியோரின் உபதேசங்கள் பிடித்துப் போய்விட்டன. அவர்களுடைய புத்தகங்களை மிக ஆவலுடன் படிப்பார்.

## பக்தி பர்வம்—தீர்த்த யாத்திரை

சுவாமிஜீக்கு இளமையிலிருந்தே பிடிவாதம் இருந்தது. ஆனுலும் அது முரட்டுப் பிடிவாதம் அன்று; விவேகத்தோடு கூடிய பிடிவாதம்; விஷயத்தைப் புரிந்து கொள்ளவேண்டும் என்ற பிடிவாதம். 1939-ஆம் ஆண்டில் இவருடைய பெரிய பெண்ணுக்கு உடல் நிலை மிகவும் சீர் கெட்டிருந்தது. பெரியோர்கள் தென்னுட்டுப் புண்ணிய க்ஷேத்திரங்களைத் தரிசிக்கும்படி யோசனை சொன்னுர்கள். அதன் படியே இவர் ராமேசுவரத்திலிருந்து தென்னுட்டு யாத்திரையைத் தொடங்கினுர். ஸ்ரீ ராமலிங்கேசுவர சுவாமி சந்நிதியில் விக்கிரகத்தின் முன் நிற்கும்போது இவருக்கு பக்தி உணர்ச்சி எழவில்லை விக்கிரகத்தின் சிற்பத் திறன் இவரைக் கவர்ந்தது. அழகிய விக்கிரகத்தைக் காணும்போது ஏற்படும் சந்தோஷமே இவருக்கு ஏற்பட்டது. அதற்குமேல் எந்த விதமான அநுபவமும் உண்டாகவில்லை.

அங்கிருந்து வந்து, ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீ ரங்கநாதரையும், மதுரையில் ஸ்ரீ மீனாட்சியையும், காஞ்சியில் ஸ்ரீ காமாட்சியையும் மற்ற பல கோயில்களையும் தரிசித்தார்கள். அது வெறும் யாத்திரையாய் இருந்ததேயன்றித் தீர்த்த யாத்திரையாகவில்லை. இவற்றையெல்லாம் தரிசித்தபின் சுவாமிஜீ பழனிக்குச் சென்றார். அங்கே முருகனுடைய ஆலயத்துக்குச் சென்றார். அது இவருக்கு, ''போதிமரம்'' ஆயிற்று.

பழனி முருகப் பெருமான் அற்புத மகிமை உள்ளவர் என்று தமிழ் நாட்டவர் எல்லோரும் நம்புகிறார்கள். பழனியும் தென்னாட்டு முக்கியத் தலங்களில் ஒன்று மதுரை ஸ்ரீ மீனாட்சி, காஞ்சி ஸ்ரீ காமாட்சி, ராமேசுவரத்து ஸ்ரீ ராமலிங்கப் பெருமான், ஸ்ரீரங்கத்து ஸ்ரீ ரங்கநாதர் ஆகிய தெய்வங்களுக்கு எவ்வளவு மகிமை உண்டோ அவ்வளவு மகிமை பழனியில் முருகப் பெருமானுக்கும் உண்டு.

## முருகனுடைய சந்நிதியில்......

பழனியில் ஸ்ரீ கேசவய்யாஜீ முருகனுடைய கோயிலினுள் நுழைந்தார். ஸ்ரீ தண்டாயுதபாணிக்கு விபூதி அர்ச்சனை செய்வித்தார். அர்ச்சனை முடிந்தபின் கண்ணை மூடித் தலை தாழ்த்தி முருகனை வணங்கினார். கண்ணைத் திறந்து பார்க்கும்போது முருகனுடைய விக்கிரகம் இருக்கும் இடத்தில் பேரொளி தெரிந்தது. சுவாமி கேசவய்யாஜீயின் பார்வைக்கு மின்னல்போல் மின்னிக் கூச வைத்தது. அந்தத் தேஜஸ் தம்மைக் கவருகிறதென்ற உணர்வு சுவாமிஜீக்கு ஏற்பட்டது. உடல் புல்லரித்தது. தம்மை மறந்து மூர்ச்சையடைந்தார். அந்த நிலையிலே சற்று நேரம் இருந்தார். திரும்ப நினைவு வந்தபோது உடல் லேசாகிவிட்டதுபோல் தோன்றியது. எழுந்திருந்து நிற்கவும் சக்தியில்லை. களைப்பு ஏற்பட்டது. அந்தக் கணத்தில் இவருக்கு ஞானோதயம் ஆயிற்று.

பிறகு ராமேசுவரம் சென்று ஸ்ரீ ராமலிங்க சுவாமியைத் தரிசிக்கும்போது மெய்ம்மறந்து ஈசுவரனைத் துதிக்கத் தொடங்கினார். கோயில்களில் சிலைகளும், கற்களும் பொம்மைகள் அல்லவென்றும், மகிமை பொருந்திய தெய்வ விக்கிரகங்களே என்றும் சுவாமிஜீ உணர்ந்தார். ராமேசுவரத்திலும் பழனியிலும் இவருக்கு ஏற்பட்ட திவ்வியமான அநுபவம் காரணமாக, சுவாமிஜீக்கு அபூர்வமான சில சக்திகள் அமைந்தன. எதிரே யார் வந்தாலும் அவர்களுடைய முப்பிறவி வாழ்க்கைச் செய்திகளும் கண்ணாடியில் காண்பதுபோல் சுவாமிஜீக்குத் தெரியும். அப்படித் தெரிந்த செய்திகளை அவர்களி

டம் சொன்னால் தான் சுவாமிஜிக்கு அமைதி உண்டாகும். அவர்களுக்குப் போதாத காலம் இருப்பதாகக் கண்ணுக்குத் தெரிந்தால் அந்த ஆபத்திலிருந்து விடுபடுவதற்குப் பரிகாரமும் சொல்லுவார்.

1939-ஆம் ஆண்டு தீர்த்த யாத்திரையை முடித்துக் கொண்டு இந்தத் திவ்விய சக்தியைப் பெற்று தர்மவரத்துக்குத் திரும்பி வந்தார். பிறகு சுமார் ஒரு மாதத்தில் சுவாமிஜிக்கு சாயிபாபா பிரத்தியட்சம் ஆனார்.

சுவாமிஜிக்கு சாயிபாபாவின் பெயரை அறிமுகப்படுத்தியவர் அனந்தபுரத்தில் பிரசித்தி பெற்ற வக்கீலாக இருந்த ஸ்ரீ எம். மல்லி ரெட்டி. அவர் அந்த நிகழ்ச்சியை இப்படி விவரித்தார். "நான் கோர்ட்டு வேலையாக வாரத்தில் இரண்டு மூன்று நாட்கள் தர்மவரம் போவேன். சுவாமி கேசவய்யாஜீ கதிரிலிருந்து மாற்றலாகி அங்கே சப் ரிஜிஸ்திராராக வந்தார். நியாய விரோதமாக நடந்துகொள்ளும் உத்தியோகஸ்தர்களைக் கண்டால் சுவாமி கேசவய்யாஜீக்குப் பிடிக்காது, பொறுக்க மாட்டார். அதனால், கூட வேலை செய்யும் பலருக்கு இவரைக் கண்டால் ஆகாது. குடும்பத்தில் நோயின் தொல்லையும் ஆபீஸில் பகையும் இவருடைய மன அமைதியை விரட்டி விட்டன. நான் தர்மவரம் சென்று திரும்பும்போதெல்லாம் இவர் என்னுடன் ரெயில்வே நிலையத்திற்கு வந்து, நான் செல்லும் அனந்தபுரம் வண்டி நகரும் வரையில் என்னுடன் இருப்பார்.

"1930 முதல் இவரிடம் எனக்குப் பழக்கம் உண்டு. தர்மவரத்தில் இவர் படும் துன்பங்களையும் நான் அறிவேன். 1934 முதல் நான் பாபாவின் பக்தன் ஆனேன். இருந்தாலும் சுவாமி கேசவய்யாவிடம் பாபாவைப் பற்றிச் சொல்ல வேண்டுமென்று எனக்குத் தோன்றவில்லை.

"ஒருநாள் வழக்கப்படி இவர் என்னுடன் தர்மவரம் ரெயில்வே நிலையத்துக்கு வந்தார். தாம் படும் துன்பங்களையும் அநுபவிக்கும் கஷ்டங்களையும் பற்றிச் சொன்னார். நான் எல்லாவற்றையும் கேட்டேன். அப்பொழுது ரெயில் நகரும் நேரம் ஆயிற்று. நான் ரெயிலில் ஏறிக் கதவருகே நின்றேன். ஸ்ரீ கேசவய்யாஜீ என்னிடம் விடைபெற்றுக்கொண்டு, ரெயில் நகராததால் பிளாட்பாரத்தில் எனக்கு எதிரே நின்றார். அந்தச் சமயத்தில் எனக்கு மின்னல்போல் ஒரு யோசனை தோன்றியது. உடனே, "கேசவய்யா, உனக்கு இவ்வளவு கஷ்டங்கள் இருக்கின்றன. நீ சீரடி சாயிபாபாவை ஏன் வழிபடக் கூடாது?'' என்று கேட்டேன். உடனே ரெயில் நகர்ந்து விட்டது. விவரங்கள் சொல்லச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. அப்பொழுது



தர்மாவரத்தில் சுவாமி கேசவய்யாஜி குடியிருந்த வீடு.
இங்குதான் 1939ம் ஆண்டு ஜூலை 1ம் தேதி ஸ்ரீசாயி பாபாவின்
தரிசனம் சுவாமிஜீக்கு கிடைத்தது.



பாமிடி ஆங்கில—தாய்மொழிப் பள்ளி தலைமை ஆசிரியர்
ஸ்ரீ இ. டி. லெக்கர்

பாபாவின் பூஜை ஆந்திரத்தில் அவ்வளவாகப் பரவவில்லை. சுவாமி கேசவய்யாஜீ, பாபாவின் பெயரைக் கேள்விப்பட்டதில்லை. சாயி நாத்தின் படத்தைக் கூடப் பார்த்ததில்லை. ரெயில் நகர்ந்துவிட்ட தால் என்னாலும் ஒன்றும் சொல்ல முடியவில்லை. இவரும் என்னை ஒன்றும் கேட்கவில்லை.

இரண்டு நாட்களுக்குப் பின் நான் மறுபடியும் கோர்ட் வேலை யாகத் தர்மவரத்துக்குப் போனேன். வேலை முடிந்ததும் சுவாமி கேசவய்யாவைச் சந்தித்தேன். சாயந்திரம் என்னைச் சந்தித்ததும் "நீங்கள் சாயிபாபாவைப் பற்றி என்னிடம் ஒன்றும் சொல்லவில்லை. நீங்கள் அவர் பெயரைச் சொன்னதுமுதல், "யார் அந்த சாயிபாபா? எப்படி இருப்பார்?" என்று யோசித்தேன் என்று சொன்ன சுவாமிஜீ அன்று நடந்த விருத்தாந்தங்களை எல்லாம் சொன்னார். அன்று கேசவய்யாஜீக்கு கனவில் ஸ்ரீ பாபா, தரிசனம் கொடுத்தார். நாலைந்து நிமிடங்கள் ஸ்ரீ பாபா, கேசவய்யாஜீயுடனே இருந்திருக்கி றார். அன்றிரவு கண்ட உருவத்தைக் கேசவய்யாஜீ வருணித்தபின் அந்த வருணனை பாபாவைப் பற்றியதுதான் என்பது எனக்குத் தெளிவாயிற்று. "நீங்கள் புண்ணியம் செய்தவர். கனவில் கூடப் பாபா எல்லோருக்கும் பிரத்தியக்ஷம் ஆகமாட்டார். வெகு சிலருக்கு மட்டுமே பிரத்தியக்ஷம் ஆவார். முற்பிறவியில் நீங்கள் பாபாவின் பக்தராக இருந்திருக்க வேண்டும்" என்று நான் சொன்னேன். அன்று முதல் இவர் பாபாவை ஆராதித்து வருகிறார். சில வாரங்க ளுக்குள்ளேயே இவருடைய கஷ்டமெல்லாம் நீங்கிவிட்டன; மன அமைதியும் கிடைத்தது."

இந்த நிகழ்ச்சியைக் குறித்து சாயீஸுதா 1940 டிசம்பர் சஞ்சி கையில் சுவாமிஜீ விவரமாக எழுதியிருக்கிறார். அந்தக் கட்டுரையை இங்கே தருவது பொருத்தமாக இருக்கும்.

"இதுவரைக்கும் கடவுளிடம் நம்பிக்கை அற்ற நாஸ்திகர்களுள் நானும் ஒருவன். கடவுளிடம் நம்பிக்கை இல்லாதிருந்தும் தமிழ் நாட்டில் உள்ள புண்ணிய க்ஷேத்திரங்கள் எல்லாவற்றையும் தரிசித் தேன். சிறு வயதிலிருந்தே ஏழைகளுக்கு ஏதாவது தர்மம் செய்ய வேண்டும் என்ற ஆசை மட்டும் எனக்கு இருந்து வந்தது. எனக்கு வக்கீல் நண்பர் ஒருவர் இருக்கிறார். என் க்ஷேமத்தில் அக்கறை கொண்டவர். அவருடைய பெயர் ஸ்ரீ எம். மல்லி ரெட்டி. அவர் எம்.ஏ.பி.எல். பாஸ் செய்துவிட்டு அனந்தபுரத்தில் வக்கீலாக இருக் கிறார். நாங்கள் அடிக்கடி சந்திப்போம். சந்தித்த போதெல்லாம் நான் அவரிடம் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், சுவாமி விவேகானந்

தர் இருவருடைய வாழ்க்கைகளைப் பற்றியும் பேசிக்கொண்டிருப்பேன். ஸ்ரீ மல்லி ரெட்டி வெகு நாளாக பாபாவின் பக்தராக இருக்கிறார். நாங்கள் ஆத்மிக விஷயங்களைப் பேசிக்கொண்டிருந்தபோதிலும் அவர் பாபாவைப் பற்றி என்னிடம் சொன்னதில்லை.

"1939 ஜூலை 1-ந் தேதியன்று தர்மவரம் ரெயில்வே நிலையத்தில் பிளாட்பாரத்தில் நான் நின்றிருந்தேன். ஸ்ரீ மல்லி ரெட்டி அனந்தபுரம் செல்லும் ரெயிலில் ஏறி நின்றிருந்தார். வண்டி நகர ஒரு கணம் இருக்கும்போது அவர் என்னிடம் பாபாவின் பெயரைச் சொன்னார். 'பாபாவை வழிபடு. உன் கஷ்டங்கள் விலகும்' என்றார். ரெயில் நகர்ந்தது.

"ஸ்ரீ சாயிபாபாவின் புனித நாமம் முதல் தடவையாக அன்று என் காதில் விழுந்தது. பெயரைக் கேட்டேனே தவிர, வேறு விவரங்கள் ஒன்றும் எனக்குத் தெரியாது. பாபாவை நினைத்த வண்ணம் அவரைப் பற்றிய யோசனைகளுடன் வீட்டுக்கு வந்தேன். ஸ்ரீ மல்லி ரெட்டி சொல்லிய செய்தியை என் மனைவியிடம் சொன்னேன். அன்றிரவு வெகு நேரம் வரையில் நாங்கள் பாபாவைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம். பாபாவின் படம் வாங்கிப் பூஜை செய்ய வேண்டும் என்று நிச்சயித்துக்கொண்டோம்.

"என்ன ஆச்சரியம்! அன்றிரவே எனக்குப் பாபா பிரத்தியக்ஷம் ஆனார். நாலைந்து நிமிடங்கள் என்னுடன் இருந்தார். நினைத்த கணமே தோன்றிய மகாநுபாவர் சாயிநாதன். அன்றிரவு பாபாவின் தரிசனத்தால் நான் பிரம்மானந்தம் அடைந்தேன். பாபாவின் படம் வாங்கிப் பூஜை செய்ய வேண்டும் என்று மறுபடியும் நானும் என் மனைவியும் நிச்சயித்துக் கொண்டோம். அன்று சீரடியிலிருந்து சாயி ஸம்ஸ்தானத்தார் அனுப்பிய சாயிபாபா போட்டோ வந்தது. பிறகு இரண்டு நாள் கழித்துப் பெரிய விபூதிப் பொட்டலம் ஒன்று வந்தது. இதுவும் வியக்கத்தக்க விஷயந்தான். சாயி ஸம்ஸ்தானத்தாருக்கு நான் யார் என்பதும் என் விலாசமும் தெரியாது. அவர்கள் பாபாவின் படத்தையும் விபூதியையும் எப்படி அனுப்ப முடிந்தது? எல்லாம் அந்த சாயிநாதனுடைய மகிமை!

"மறுநாள் வழக்கம்போல் ஆபீசுக்குப் புறப்படுவதற்காக என் மேல் நாட்டு உடைகளை அணிந்துகொண்டிருந்தேன். 'இதெல்லாம் உனக்கு எதற்கப்பா?' என்று யாரோ சொன்னது போல் காதில் விழுந்தது. 'ஆம், எதற்கு?' என்ற எண்ணம் எனக்கும் அந்தக் கணத்திலேயே தோன்றியது. அன்றைக்கே ஸூட், கோட், பூட்,டை எல்லாவற்றையும் விட்டுவிட்டேன். சாதாரணமாக வேஷ்டியைக் கட்டிக்கொண்டு ஆபீசுக்குச் சென்றேன். எல்லோரும்

இந்த மாறுதலைக் கண்டு திகைத்தார்கள். அன்றிலிருந்து என்னிடத்திலும் பெரிய மாறுதல், மிகப் பெரிய மாறுதல் ஏற்பட்டது. 'இதெல்லாம் பாபா அருள்தான் என்பது என் நம்பிக்கை.''

1922-ஆம் வருடம் இவர் வேலையில் சேர்ந்தார். ஆனால் 1939 ஜூலை 1-ஆம் தேதியன்றுதான் இவர் சாயிபாபா பக்தரானார். இவர் கையாண்ட உத்தியோகக் கடமைகளைத் தெரிந்துகொண்டால் இவருக்கு இவ்வளவு சுலபமாகப் பாபா தரிசனம் கொடுத்ததற்குக் காரணம் தெரியும். 1939 ஜூலை 1-ந் தேதியிலிருந்து சுவாமிஜீ ஒரு பக்தனாகவே வாழ்ந்து வந்தார். இவருடைய பூர்வாசிரம வாழ்க்கை இந்த வாழ்க்கைக்கு அடிப்படையானது.

மெட்ரிகுலேஷன் முடிந்தவுடன், சுவாமி பால கேசவய்யா போலீஸ் இலாக்காவில் சப் இன்ஸ்பெக்டராகச் சேர வேண்டும் என்று பெரிதும் விரும்பினார். அரசாங்கத்தில் இவ்வளவு இலாகாக்கள் இருக்கும்போது போலீஸ் இலாக்கா மட்டும் இவரை ஏன் இவ்வளவு கவர்ந்தது? சுவாமிஜீக்குச் சுய கௌரவம் எவ்வளவு இருக்கிறதோ, அவ்வளவு தன்னடக்கமும் உண்டு. இவருடைய வாழ்க்கை ஆரம்பம் முதலே கட்டுப்பாட்டுடன் இருந்து வந்திருக்கிறது. ''செல்ப் டிசிப்ளின்'' இவரிடம் பளிச்சென்று தெரிகிறது. அதுதான் இவரைப் போலீஸ் வேலைக்குத் தூண்டியிருக்கிறது.

இவருடைய தன்னடக்கத்துக்கு ஓர் உதாரணம். கிறிஸ்தவ மதத்தினரின் நடுவிலேயே இருபத்து நான்கு மணி நேரமும் இருந்து ஏசு கிறிஸ்துவைப் பற்றி விரிவாகப் படித்தார். கிறிஸ்தவர்களுடன் தனக்குத் தோன்றியபடி, ஏசு கிறிஸ்துவின் அநுபவங்களைச் சர்ச்சை செய்திருக்கிறார். ஸ்ரீ ஈ. டி. லெக்லர், ஸ்ரீமதி எம். கே. கிரிஸ்ட்லிப் இவர்களிடம் விசேஷமாக உதவி பெற்றிருந்தும் மதம் மாறும் எண்ணத்துக்கு இவர் இடம் கொடுக்கவில்லை. அக்காலத்தில் சுவாமிஜீ போன்ற இளைஞர் மதம் மாறியிருந்தால் மிகப் பெரிய உத்தியோகம் தேடி வந்திருக்கும். இவர் விரும்பிய போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் வேலை முதல் நேர்முகப் பரீட்சையிலேயே கிடைத்திருக்கும். தற்காலிகமான லௌகிக விஷயங்களுக்காக சுவாமிஜீ தம் கொள்கைகளை அடகு வைக்கவில்லை.

சுவாமி கேசவய்யாஜீயின் உத்தியோகப் படலம் முடியும்முன்பே பக்திப் படலம் தொடங்கிவிட்டதை முன்பே கூறினோம். ஸ்ரீ மல்லி ரெட்டியின் மூலம் சாயிபாபாவின் பெயரைக் கேள்விப்பட்ட சில மணி நேரத்திலேயே பாபா சுவாமிஜீக்குப் பிரத்தியக்ஷம் ஆனது சிலருக்கு விபரீதமாகத் தோன்றலாம். ஆனால் சுவாமிஜீயின்

வாழ்க்கைச் சிறப்புகளைத் தெரிந்து கொண்டபின், 1939 ஜூலை 1-ந் தேதியில் சுவாமிஜீ பெற்ற அநுபவம் சகஜமானது. அதில் ஆச்சரியத்துக்கு இடமே இல்லை. 'இன்று நான் உன்னிடம் வருகிறேன்' என்று பாபா, ஸ்ரீ மல்லி ரெட்டி மூலம் சுவாமிஜிக்குச் செய்தி அனுப்பினார் என்று வாசகர்கள் தெரிந்துகொள்ள வேண்டும். சுவாமிஜீ திடீரென்று ஒரே கணத்தில் ஸ்ரீ சாயிபாபாவின் கிருபைக்கு ஆளாகவில்லை. தம் இளமைப் பருவத்தில் தியான மார்க்கத்தில் ஈடுபட்டிருந்தார். படிப்பு முடிந்து வேலைக்கு வந்தபின் அந்தத் தியான மார்க்கம் கர்ம மார்க்கத்தில் இணைந்து விட்டது. கர்ம மார்க்கத்தில் முன்னேறிப் பக்தி மார்க்கத்தில் நுழைந்து விட்டார். பக்தி மார்க்கத்தில் தம் யாத்திரை முடிந்தபின் ஞான மார்க்கத்தில் சேர்ந்து சித்தி பெற்றார். அது சுவாமிஜீயின் ஆத்மிக வளர்ச்சி. இவருக்கு ஏசு கிறிஸ்து, முகம்மது நபி, முருகன், ஸ்ரீ சாயிபாபா ஆகியோர் பிரத்தியக்ஷம் ஆனார்கள். எம்மதமும் சம்மதமான ஸ்ரீ சாயிபாபா சுவாமிஜீயிடம் சேரும் முன்பே சுவாமிஜீயை, ஏசு கிறிஸ்து, முகம்மது நபி, பழனி முருகப் பெருமான்—ஹிந்து முஸ்லிம் கிறிஸ்தவ தெய்வங்கள்—தேர்ந்தெடுத்து விட்டார்கள்,

1939-ஆம் ஆண்டு ஜூலை 1-ந் தேதிக்குப் பின் சுவாமிஜீ தம் துன்பங்களுடன் பக்தர்களுடைய துன்பங்களையும் சேர்த்து அநுபவித்து வந்தார். ஆறு, ஏழு ஆண்டுகள் பக்தர்களுடைய நோய்களுக்குச் சிகிச்சை செய்ததில், 1948-ஆம் ஆண்டில் சுவாமிஜீக்கு க்ஷயரோகம் பற்றிக்கொண்டது. சுமார் இருபது மாதங்கள் சிகிச்சை பெற்றார். 1948 ஜூன் மாதம் 10-ந் தேதியன்று இவர் சிகிச்சைக்காக சென்னை வந்தது, ஸ்ரீ சாயிபாபா சாந்த்பட்டேலின் கலியாணக் கூட்டத்துடன் சிரடிக்கு வந்தது போல் ஆயிற்று. இனிமேல் பெனுகொண்டாவுக்குத் திரும்ப வேண்டாம் என்பதுபோல், பாபா ஸ்ரீ கேசவய்யாஜியைக் கொண்டு அந்த நகரில் ஒரு கோயிலைக் கட்டுவித்தார். பெனுகொண்டா, தென்னிந்திய சிரடியாகப் பிரசித்தி பெற்று விட்டது. ஸ்ரீ சாயி தேவருக்கு விதிப்படி பூஜை நடக்க சுவாமிஜீ எல்லா ஏற்பாடுகளும் செய்திருக்கிறார்.

ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜி சென்னை பிராட்வே டாக்கீஸ் அதிபருக்குச் சொந்தமான பிரபாத் டாக்கீஸ் மதிலுக்குள் இருக்கும் விருந்தினர் விடுதியில் தங்கிச் சிகிச்சை பெற்றார். இவர் நோய்வாய்ப்பட்டிருந்தும் ஸ்ரீ சாயிபாபாவின் சேவையைச் செய்து கொண்டே இருந்தார். தினந்தோறும் பத்து இருபது பேர்கள் வந்து விபூதி பெற்று, சாயியின் ஆசிகளைக் கிரகித்துச் செல்வார்கள். சுவாமிஜி, தம் உடல் நிலையைப் பொருட்படுத்தாமல் எவ்வளவு பேர் வந்தாலும், யார் வந்தாலும் அவர்களுக்குச் சேவை செய்வார். நூற்றுக்கணக்

தில் "ஸ்ட்ரெப்டோமைஸின்" இன்ஜெக்ஷன் எடுத்துக்கொண்டு, பீஷ்மர் அம்புப் படுக்கையில் இருப்பது போல் இருந்தும் தம்மை அழைத்தவர்கள் வீட்டுக்குச் சென்று சாயி பூஜை செய்வார். இதே சமயத்தில் ஸ்ரீ பி. வி. நரசிம்ம ஸ்வாமி செய்துவந்த சாயி பிரசாரத்துக்கு ஸ்ரீ கேசவய்யாஜி செய்து வந்த சாயி பூஜைகள் துணையாகித் தென்னாட்டில் ஸ்ரீ சாயிபாபா நன்கு நிலை பெற்றுவிட்டார்.

இங்கே சுவாமிஜியின் நோயைப் பற்றியும் இவருக்குச் சிகிச்சை செய்த வைத்தியர்களைப் பற்றியும் அப்போது நடந்த சில நிகழ்ச்சிகளைப் பற்றியும் வாசகர்கள் தெரிந்துகொள்ள வேண்டும். ஒரு காலத்தில் க்ஷயத்துக்குச் சிகிச்சையே இருக்கவில்லை. அந்த நோய் பிடித்தவர்கள் பிழைப்பதே அபூர்வம் என்று எல்லோரும் நினைத்தார்கள். சுவாமிஜியின் இடப் பக்கத்து நுரையீரல் முழுவதும் கெட்டுவிட்டதாக எக்ஸ்ரே போட்டோ எடுத்த டாக்டர்கள் உணர்ந்தார்கள். அந்த நிலையில் இருந்த ஸ்ரீ கேசவய்யாஜீ, பிழைத்தால் புனர் ஜென்மம் என்று டாக்டர்களும் சுவாமிஜியின் சிஷ்யர்களும் தீர்மானித்தார்கள். சுவாமிஜீ சாயிபாபா மேல் பாரத்தைப் போட்டார். டாக்டர்கள் நோயுடன் தீவிரமாகப் போராட்டம் நடத்தினார்கள். டாக்டர்கள் ஸ்ரீ ரத்னவேலு சுப்ரமணியம் (M.R.C.P.) ஸ்ரீ கோவிந்த ரெட்டி (M D.), ஸ்ரீ N. வீரபத்ர ரெட்டி (M.S.), ஸ்ரீ H. T வீரா ரெட்டி (F.R.C.S.) ஆகியோர் வைத்திய சாஸ்திர முறைகளையும் தங்கள் அநுபவத்தையும் கலந்து வைத்தியம் செய்தார்கள். ஸ்ரீ ஒ. புல்லா ரெட்டி, (I.C.S.) அவர்கள் சென்னையிலேயே இருந்ததால் அவர், சுவாமிஜியின் சிகிச்சை விஷயத்தில் தனிப்பட்ட சிரத்தை எடுத்துக்கொண்டிருந்தார்.

பத்து மாதங்கள் ஆயின. வியாதி குறையும் வகை காணப்படவே இல்லை. அந்திம காலம் சமீபித்துவிட்டதாகவே எல்லோரும் பயந்தார்கள். சுவாமிஜியும் பரலோக யாத்திரைக்குத் தம்மைத் தயார் செய்து கொண்டார். இவருக்குச் சிசுருஷை செய்த ஸ்ரீ ராமனிடம் செய்தியைச் சொல்லி, மனைவிக்கும் குழந்தைகளுக்கும் தெரிவிக்கும்படி சொன்னார். எந்தக் கணத்தில் உடலை விடவேண்டுமோ? என்று மனச் சலனமற்று சாயிநாதனைப் பார்த்துக்கொண்டே அமைதியாகப் படுத்திருந்தார். இது நடந்தது 1949–ஆம் ஆண்டு ஏப்ரல் 29-ஆம் தேதி இரவு 11-30 மணி. யம கிங்கரர்கள் எல்லா ஏற்பாடுகளும் செய்துகொண்டு ஜீவனை எடுத்துக்கொண்டு போக சுவாமிஜியின் அறைக்குள் பிரவேசித்தார்கள். அவர்களைக் கண்டும் சுவாமிஜீ அசைந்து கொடுக்கவில்லை; கலவரம் அடையவில்லை; 'ஸ்ரீ சாயிபாபாவின் அனுமதி பெற்று என்னை அழைத்துப் போங்கள்' என்பது போல் அவர்களைப் பார்த்தார். அதே கணத்தில் 'ஹட், ஹட், ஹட்'

என்று பாபா அந்தக் கிங்கரர்களை சுவாமிஜியின் அறையிலிருந்து துரத்திவிட்டார். இந்தக் காட்சியை சுவாமிஜி இப்போதும் மிக விவரமாக வருணிப்பார். கிங்கரர்களின் பின்னாலிருந்த யம தர்ம ராஜன் தன் வாகனத்தைத் திருப்பிக்கொண்டு சிப்பந்திகளையும் திருப்பி அழைத்துக்கொண்டு வெளியே சென்றார். அதே சமயத்தில் பக்கத்து விட்டில் அழுகைக் குரல் கேட்டது. சிறிது காலமாக நோயுற்றிருந்த ஒருவர் இறந்துவிட்டதாகத் தெரிந்தது. இது அடிக்கடி நடப்பதுதான். ஸ்ரீ சாயிபாபா சுவாமிஜியை யமனிடமிருந்து காப்பாற்றி விட்டார். அந்த நிமிஷத்திலிருந்தே இவருடைய நோய் குறைவது மட்டுமா? மறையவே தொடங்கிவிட்டது. படிப்படியாக உடல் குணமாகி விட்டது. இந்தச் சமயத்தில் சுவாமிஜிக்கு மிகவும் உதவியாக இருந்தவர்கள் பிரபாத் டாக்கீஸ் அதிபரோடு ஸ்ரீ எச். ஸி. மாணிக்க ரெட்டி, ஆதோனி முக்கிய வியாபாரியாகிய ஸ்ரீ உப்புட்டூரு எம்பெருமானார் செட்டி முதலியவர்கள். டாக்டர் எச். டி. வீரா ரெட்டி சுவாமிஜியைக் கண்ணை இமை போல் பாதுகாத்தார். அப்போது அவர் F.R.C S. பட்டம் பெறவில்லை. சுவாமிஜி அவரிடம், "நீங்கள் இங்கிலாந்து சென்று மேல் படிப்புப் படித்துத் திரும்புவீர்கள்" என்று சொன்னார். அது போலவே அவர் இங்கிலாந்து சென்று F.R.C S. பரீட்சை எழுதிச் சென்னைக்குத் திரும்பி வந்து, ரண சிகிச்சை நர்ஸிங் ஹோம் நடத்தி வருகிறார். நகரத்துப் பிரபல டாக்டர்களுள் ஒருவராக இன்று பெயர் பெற்றிருக்கிறார்.

டாக்டர் வீரா ரெட்டியைப் பற்றியும் அவருக்கும் சுவாமிஜிக்கும் இடையே உள்ள உறவைப் பற்றியும் சிறிது விரிவாகச் சொல்ல வேண்டியிருக்கிறது. டாக்டர் வீரா ரெட்டி சுவாமிஜியைத் தரிசித்த நாள் முதல் சுவாமிஜிக்கு மிகவும் வேண்டியவரானார். இங்கிலாந்தில் இருந்த போது கூட சுவாமிஜிக்கு மிகவும் உதவியாக இருந்தார். இப்போதும் சென்னையில் சுவாமிஜிக்கு அவர் எல்லாவித உதவியும் செய்துகொண்டிருக்கிறார். ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் சுவாமி விவேகானந்தர் இவர்களுக்கு இடையில் இருந்த உறவு எப்படிப்பட்டதோ அப்படிப்பட்டது சுவாமிஜிக்கும் டாக்டருக்குமிடையேயுள்ள உறவு. டாக்டருக்கு சுவாமிஜியின் ஆசி நிறைய இருக்கிறது. டாக்டர் வீரா ரெட்டி ஆடம்பரமற்றவர்; ஆத்மிக மார்க்கத்தில் மிகவும் முன்னேறியவர். ஆனாலும் குழந்தை மனம் படைத்தவர். மிக வெகுளி. கள்ளங்கபடு தெரியாதவர். இவருடைய அநுபவங்களை ஒரு பெரிய நூலாகும். ஆனால் அவர் தம் அநுபவங்களை வெளியிட இஷ்டப்படவில்லை. காரணம், அகங்காரம் அன்று; அடக்கம். இருந்தாலும் சில அநுபவங்கள் தெரிந்தன; அவை அபூர்வமானவை; அவற்றால் டாக்டர் வீரா ரெட்டி பெற்ற மற்ற அநுபவங்களையும் எளிதில் ஊகித்துக்கொள்ளலாம்.

டாக்டர் வீரா ரெட்டிக்கு சுவாமிஜீயிடம் வெகு காலப் பழக்கம் ஏற்பட்டு மிகவும் நெருங்கிய உறவு உண்டாயிற்று. பண்டித ஜவஹர்லால் நேருவுக்குக் காந்தியிடம் இருந்த மதிப்பு டாக்டருக்கு சுவாமிஜீயிடம் இருக்கிறது. ஆத்மிக விவகாரங்களில் ராமகிருஷ்ண பரமஹம்ஸருக்கு சுவாமி விவேகானந்தர் எப்படியோ, சுவாமிஜிக்கு வீரா ரெட்டி அப்படியே என்று ஏற்கனவே சொல்லியிருக்கிறோம். மிக முக்கியமானதும் லௌகிக நோக்கில் விசித்திரமானதுமான இரண்டு சம்பவங்களைச் சொல்லிவிட்டு இந்த விஷயத்தை முடித்துக் கொள்கிறேன்.

டாக்டர் வீரா ரெட்டி சென்னையில் எம்.பி.பி.எஸ். பட்டம் பெற்று, சுவாமிஜீ சொன்னது போல் மேல் படிப்புக்காக இங்கிலாந்துக்குச் சென்றார். F.R.C S. படித்துக்கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் அவர் ஒரு கனவு கண்டார். தன்னை சமுத்திரம் அடித்துக்கொண்டு போயிற்றாம்; சுவாமி கேசவய்யாஜீ நடுக் கடலில் பரமசிவனைப் பூஜித்துக்கொண்டிருக்கிறாராம். சுவாமிஜீயின் மடியில் ஸ்ரீ பாபா படுத்துக்கொண்டிருந்தாராம். அப்போது சுவாமிஜீ ஸ்ரீ சாயிபாபாவிடம், "அவனைக் காப்பாற்றுங்கள்" என்று சொல்ல பாபா டாக்டரைக் காப்பாற்றினாராம். சாமான்ய மக்களுக்கு இந்தக் கனவு வெகு சாதாரணமாகத் தோன்றலாம். ஆனால் ஆத்மிக நோக்கில் ஆராய்ந்தால் இந்தக் கனவில் எவ்வளவோ அடங்கியிருப்பது தெரியும்.

சுவாமிஜீ சாத்தாத ஸ்ரீ வைஷ்ணவர். இவருடைய மடியில் ஸ்ரீ சாயிபாபா படுத்திருந்து பரமசிவனுக்குப் பூஜை செய்விக்கிறார். சமுத்திரத்தைக் கடைந்த போது வந்த ஆலகால விஷத்தைப் பரமசிவன் உட்கொண்டார். டாக்டர் வீரா ரெட்டி லிங்காயத் வகுப்பைச் சேர்ந்தவர். சுவாமி கேசவய்யாஜீ முதலில் ராமேசுவரத்தில் ஸ்ரீ ராமலிங்க சுவாமியைத் தரிசித்த போது பக்தி உணர்ச்சியே ஏற்படவில்லை. பிறகு பழனியில் முருகனுடைய சந்நிதியில் இவருக்கு ஞானோதயம் ஏற்பட்டுப் பிறகு மறுபடியும் ராமேசுவரத்துக்குச் சென்று ராமலிங்க சுவாமியைத் தரிசித்தபோது பரவசமடைந்து சுவாமியைத் தோத்திரம் செய்தார். கோயிலிலிருந்து வெளியே வரும்போதே தமக்கு எதிர்ப்பட்டவர்களுடைய முற்பிறப்பு விருத்தாந்தங்களை சொல்லத் தொடங்கினார். இவற்றையெல்லாம் மனத்தில் வைத்துக்கொண்டு இந்தக் கனவின் உட்பொருளை ஆராய்ந்தால் பல விஷயங்கள் தெரியும். சம்சார சாகரத்தில் விழுந்து அடித்துக் கொண்டு போகிறவர்களை சுவாமிஜீ ஸ்ரீ சாயிபாபாவின் உதவியால் கரையேற்றுகிறார். கஷ்டங்களை அந்தப் பரமேசுவரனுக்கு ஒப்படைத்து விட்டு பக்தர்களுக்கு அமைதியையும் சுகத்தையும் அருள் செய்கிறார்.

டாக்டர் வீரா ரெட்டிக்குச் சம்பந்தப்பட்ட மற்றொரு செய்தி இது. திருமலையில் ஸ்ரீ வெங்கடேசுவர சுவாமியின் சந்நிதியில் நடந்தது. டாக்டர் வீரா ரெட்டியும் காபி போர்டு சேர்மன் திரு. H. சீதாராம ரெட்டியும் வேங்கடேசுவர சுவாமி தரிசனம் செய்ய, திருப்பதிக்குச் சென்றார்கள். சுவாமிஜீ, வீரா ரெட்டி, சீதாராம ரெட்டி மூவரும் சுவாமி சந்நிதியின் முன் உட்கார்ந்திருந்தார்கள். கர்ப்பக்கிருகக் கதவின் முன்திரை போடப்பட்டிருந்தது. திரை விலகியதும் சுவாமி தரிசனம் ஆகவேண்டுமென்று திரு. சீதாராம ரெட்டி எதிரிலேயே உட்கார்ந்திருந்தார். அவருக்கு ஒரு பக்கம் சுவாமிஜீயும் மற்றொரு பக்கம் வீரா ரெட்டியும் உட்கார்ந்திருந்தார்கள். மூவரும் சுவாமி சந்நிதியையே நோக்கி இருந்தனர். திரை விலகியது. ஸ்ரீ வேங்கடேசுவர சுவாமியைக் காண வேண்டுமென்று ஆவலோடு இருந்த ஸ்ரீ சீதாராம ரெட்டிக்கு என்ன தெரிந்தது? வேங்கடேசுவர சுவாமியின் நின்ற கோலத்தோடு சுவாமி கேசவய்யாஜீயின் மடியில் அவர் படுத்திருந்த காட்சியும் தென்பட்டது. அவர் வியந்து வீரா ரெட்டியைக் கேட்டார். அவரும் அதே காட்சியைத்தான் கண்டார்.

இந்த இரண்டு விஷயங்களாலும் இரண்டு செய்திகள் தெளிவாகின்றன. ஒன்று சுவாமி கேசவய்யாஜீயின் அதீதமான சக்தி; இரண்டாவது டாக்டர் வீரா ரெட்டி, சீதாராம ரெட்டி இவர்களின் சிறந்த பக்தி. வீரா ரெட்டியிடம் சுவாமிஜீ ஒரு குழந்தையிடம் தகப்பன் அன்பு செலுத்துவது போல் செலுத்துகிறார். டாக்டரும் சுவாமிஜீயை சொந்தத் தந்தை போல் பாவிக்கிறார். சுவாமிஜீயின் தேவைகளை முன்பாகவே யூகித்து கிரகித்துக்கொண்டு நிறைவேற்றுகிறார். சுவாமிஜீ என்றும் யாரையும் தமக்காக ஒன்றும் கேட்கமாட்டார். பாபாவைக் கூடப் பிறருக்காகவே யாசிப்பார்.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு விஷயத்தைச் சொல்லுவது பொருத்தமாக இருக்கும். சுவாமிஜிக்கு இரண்டு பெண்களும் ஒரு பிள்ளையும் இருக்கிறார்கள் என்பதை வாசகர்கள் படித்திருப்பார்கள். பிள்ளையின் பெயர் சாயி சுப்பிரமணியம். சிரஞ்சீவி சாயி சுப்பிரமணியம் பிறப்பதற்கு முன் திருமதி கோவிந்தம்மாளுக்குக் குழந்தைகள் நால்வர் பிறந்து இறந்து விட்டார்கள். வெகு காலம் வரைக்கும் பிள்ளைக் குழந்தை தங்கவில்லையே என்று சுவாமிஜியின் மனைவி மிகவும் வருந்தி, ''பாபா! நீ எல்லோருக்கும் பிள்ளைகளைக் கொடுத்திருக்கிறாய். எனக்கு மட்டும் கொடுத்துவிட்டுப் பிடுங்கிக்கொள்ளுகிறாய். இது என்ன நியாயம்?'' என்று புலம்பி பெனுகொண்டா சாயி நிலயத்தில் சுவாமிஜியின் பூஜை அறையில் ஏழு வருட காலம் கால் வைக்கவே இல்லை. ஸ்ரீ சாயி பாபா ஸ்ரீமதி கோவிந்தம்மாளுக்கு ஆண் குழந்தையைக் கொடுத்தார். சுவாமிஜியின் அநுபவங்களைக்

கணக்கிட்டுச் சொல்ல முடியாது. தாமே சிலவற்றை எழுதியிருக்கி றார். வேறு சிலவற்றைப் பக்தர்களிடம் சொல்லியிருக்கிறார். அவை சேர்ந்த தனியாக எழுத ஏற்பாடு நடந்திருக்கிறது.

சுவாமிஜியின் பக்திப் படலத்தில் இனி, சொல்லக் கூடியவை இல்லை. இவர் தியான மார்க்கத்திலிருந்து பக்தி மார்க்கத்தில் பிர வேசிக்கச் சில ஆண்டுகள் வேண்டியிருந்திருக்கலாம். ஆனால் பக்தி மார்க்கத்திலிருந்து ஞான மார்க்கத்தில் செல்லுதல் சில நாட்களி லேயே நடந்து விட்டது. அதனால் இந்தப் புத்தகத்தில், '' பக்தி பர் வம்'' பெரியதாக இல்லையென்று வாசகர்கள் குறைபடமாட்டார் கள் என்று கருதுகிறேன். ஆகையால் இத்துடன் இந்த அத்தியா யத்தை முடித்துக்கொண்டு சுவாமிஜியின் சொந்த அநுபவங்களுக்குப் போவோம்.

## சாயி பக்த கேசவய்யாஜீயின் அநுபவங்கள்

ஸ்ரீ கேசவய்யாஜியின் பக்திப் படலத்தில் சொல்ல வேண்டிய முக்கிய விஷயம் ஒன்று இருக்கிறது. இவருக்கு 1939-ஆம் ஆண்டு மே மாதத்தில் பழனி முருகன் ஆலயத்தில் ஞானோதயம் ஆயிற்று. அதே ஆண்டு ஜூலை 1-ந் தேதியன்று சாயிபாபா பிரத்தியக்ஷம் ஆனார். ஆனால் ஸ்ரீ கேசவய்யாஜி பாமிடியில் படித்துக்கொண்டி ருந்த காலத்திலேயே இவருக்கு ''முகம்மது நபி'' பிரத்தியக்ஷம் ஆனார். பள்ளியில் முஸ்லிம் மௌல்வி ஒருவர் இருந்தார். அவ ருக்குக் கேசவய்யாஜியிடம் மிகுந்த அன்பு உண்டு. முகம்மது நபி யைப் பற்றியும் குர்ஆனைப் பற்றியும் அந்த மௌல்வி சுவாமிஜிக்குப் போதிப்பார். மாணவனாக இருக்கும்போதே சுவாமி கேசவய்யாஜி கிறிஸ்தவ முஸ்லிம் மத சாரங்களைக் கிரகித்து மதாசாரியர்களைப் பற்றித் தெரிந்து கொண்டார். பிறவியில் இவர் ஹிந்து. இந்த உறவு காரணமாகவே இவர் எம்மதமும் சம்மதம் என்னும் சாயி பாபாவின் பக்தர் ஆகியிருக்கலாம்; பாபாவின் அருளுக்குப் பாத்திர ராகி இருக்கலாம்.

சுவாமி கேசவய்யாஜி ஸ்ரீ சாயிபாபாவின் அருளால் சித்தராகிய பின், பெற்ற அநுபவங்களைத் தெரிந்து கொண்டவர் இவருடைய பக்தர்களுக்கு ஏற்பட்ட அநுபவங்களையும் தெரிந்து கொள்வது அவ சியம். அதனால் பயன் உண்டு. சுவாமிஜி பல அநுபவங்களைப் பெற் றிருப்பார். இன்னும் பெற்றுக்கொண்டுதான் இருக்கிறார். இவரு டைய அநுபவங்கள் சிலவற்றை மட்டுமே வெளியிட்டார். அவை சாயி ஸுதாவில் வெளிவந்தன: கிடைத்த மட்டும் அவற்றை இங்கே எழுதுகிறேன்.

## மனைவியின் நோய்

"என் மனைவியின் காலில் புண் ஏற்பட்டு பொறுக்க முடியாமல் துன்புற்றாள். பல மருந்துகளை உபயோகித்தேன். ஊசி மருந்துகள் செலுத்தச் செய்தேன். குணமாகும் அறிகுறிகளே இல்லை. வைத்தியத்திலும் மருந்திலும் நம்பிக்கை போய்விட்டது. பாபாவின் விபூதியைப் போடு என்று என் மனைவிக்கு யோசனை சொன்னேன். விபூதியை அதிகமாக உபயோகித்ததால் சீரடியிலிருந்து வந்த விபூதி தீர்ந்துவிட்டது. 'விபூதி ஆகிவிட்டதே' என்று கவலைப்பட்டுக்கொண்டே என் மனைவி பாபாவைத் தியானித்தாள். நாங்கள் எழுதிக் கேட்காமலேயே சீரடியிலிருந்து விபூதி வந்துவிட்டது. பாபாவின் மகிமை என்று நினைத்துக் கொண்டோம். விபூதியை உபயோகித்ததில் என் மனைவியின் கால் புண் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து நன்றாகக் குணமாகிவிட்டது. அன்று முதல் எங்களுக்குப் பாபாவிடம் நம்பிக்கை அதிகரித்தது. அதிக பக்தி சிரத்தையுடன் பாபாவைப் பூஜித்து வந்தோம். எங்களுக்கு மன அமைதி கிடைத்தது. வாழ்க்கையிலும் சுகம் ஏற்பட்டது. பாபா கடவுளே தவிர சாதாரணமான சித்தர் அல்ல என்ற கருத்து எங்களுக்கு வலுத்தது.

"அந்த வருடமே நவம்பர் 27-ந் தேதியன்று எனக்கு ஓர் ஆசை தோன்றியது. சாயிபாபா வந்து அவரே எனக்குத் தீர்த்தம் கொடுக்க வேண்டும்" என்ற நினைப்பு லேசாக வந்தது. ஏதோ போகிற போக்கில் நினைத்தாலும் சாயிபாபா அன்றிரவு வந்து எனக்கு வெல்லம் கலந்த தீர்த்தத்தைக் கொடுத்தார். நான் அதை உட்கொண்டேன்.

"சாயிபாபா எந்தக் காலத்திலும் எந்த வேளையிலும் எங்களுக்கு உதவி செய்கிறார். நாங்கள் எங்கே போனாலும் பாபாவின் படத்தை எடுத்துக்கொண்டு போகிறோம். பாபாவின் அருளுக்கு ஆளான பிறகு முதல் ஆறு மாதங்களில் எனக்கு ஏற்பட்ட அநுபவங்களை எழுதுகிறேன்.

"சிலர் சொல்வது போல் பாபா. வெறும் யோகி மட்டும் அல்ல; சாக்ஷாத் கடவுளே என்பதை நான் உறுதியாகச் சொல்கிறேன். சாயிபாபா சாக்ஷியாக நான் இந்த விஷயங்களை எழுதுகிறேன். இவற்றில் அணுவளவும் பொய் இல்லை என்று பாபாவின் பெயரால் சொல்கிறேன்." (1940 ஆகஸ்ட் இதழ் சாயி ஸுதா).

## ஆபத்து நீங்கியது

ஒரு நாள் இரவு பாபா எனக்குக் கனவில் தோன்றினார். நான் பாபாவுக்குப் பூஜை செய்து கொண்டிருக்கிறேன். பாபா வந்து எனக்குத் தீர்த்தம் கொடுத்தார். நான் தீர்த்தத்தை உட்கொண்டேன். பாபா, ஓர் ஆசனத்தைக் காண்பித்து அதில் உட்காரச் சொன்னார். என்றால் அந்த ஆசனத்தில் உட்கார முடியாமல் போயிற்று. பாபா தம் இரண்டு உள்ளங்கைகளையும் ஒன்று சேர்த்து அதனுள் பார்த்து விட்டு எங்கள் விட்டுக்குள்ளே சென்றுவிட்டார். அந்த அளவில் என் தூக்கம் கலைந்துவிட்டது. பாபாவுடைய லீலையின் முக்கியத்துவத்தை என்னால் கண்டு பிடிக்க முடியவில்லை.

என் மனைவியின் பிரசவ காலங்களில் ஆயுதத்தை உபயோகித்தே குழந்தைகளை எடுப்பது வழக்கம் ஆயிற்று. இரண்டு முறைகள் இப்படியே நடந்தது. 'திரும்பவும் இப்படி நடக்கக் கூடாது. இந்த முறை சாதாரணமாக, சுகப் பிரசவம் ஆகவேண்டும் என்று பாபாவைப் பிரார்த்தித்தேன். என் மனைவியை யமன் கையிலிருந்து மீட்க வேண்டுமென்ற திட நம்பிக்கையுடன் பூஜை செய்து வந்தேன்.

நான் இப்படி மிகுந்த பக்தி சிரத்தையுடன் பூஜித்து வந்த போதிலும் என் மனைவி இறந்து போய் விட்டதாக நான் கனவு கண்டேன். பிணத்தை வைத்திருப்பது போல் தெரிந்தது. மறுபடியும் பார்த்தேன். பிணம் கிடந்த இடத்தில் பூக்கள் இருப்பது தெரிந்தது. பிறகு, ஒரு நாள் விடியற் காலத்தில் சீரடிக்குப் பத்து ரூபாய் அனுப்ப வேண்டுமென்று பாபா என்னிடம் சொன்னார். அப்படியே சீரடிக்குப் பத்து ரூபாய் அனுப்பினேன். ஒரு ஜதை வேஷ்டி வாங்கி அதைக் கந்தலாகக் கிழித்துத் தானம் செய்யச் சொல்லி மற்றொரு முறை குறிப்புக் காட்டினார். ஸ்ரீ சாயி தேவருடைய உத்தரவுபடி வேஷ்டிகளை வாங்கிக் கிழித்து, தானம் செய்தேன். இதற்குப் பிறகு எனக்குத் தைரியம் வந்தது. பாபா என் மனைவியை யமனிடமிருந்து காப்பாற்றுவாரென்ற நம்பிக்கை வந்தது.

## சுவாமிஜீயின் மனைவியாரின் கனவு

இந்த விஷயந்தான் சுவாமிஜியின் மனைவியான ஸ்ரீமதி கோவிந்தம்மாவின் கனவில் வந்தது. கனவில் கண்டதைப் பற்றி சுவாமிஜி 1940 அக்டோபர் "ஸாயிஸுதா" இதழில் தெரிவித்திருக்கிறார்.

'இந்த வருடம் ஏப்ரல் மாதத்தில் என் மனைவிக்குப் பிரசவ காலம் நெருங்கியது. தான் வீட்டினுள் இருக்கும்போது வீட்டைச் சுற்றி எங்கும் தீக் கொழுந்துகள் சூழ்ந்ததுபோல் அவள் கனவு கண் [illegible] பாபா திடீரென்று வந்து தீயை அணைத்தது போலவும் அவள் அந்தக் கனவில் கண்டாள். இந்தக் கனவு கண்ட எட்டாம் நாள் பிரசவ வேதனை கண்டது

"இதே சமயத்தில் சாயி தேவர் மற்றொரு நாள் என் கனவில் தோன்றி என் தலையில் தம் வலக் கையை வைத்து ஆசிர்வதித்தார். இரண்டு கைகளாலும் நான் பாபாவின் திருவடிக் கமலங்களைப் பிடித்துக்கொண்டு வணங்கினேன். இது என்னுடைய பாக்கியம் என்று நான் கருதினேன்.

"பாபா இவ்வளவு உறுதி கொடுத்திருந்தும் என் மனைவியின் பிரசவ நினைவு எனக்குக் குழப்பத்தையே கொடுத்து வந்தது. என் மனைவியிடம் மட்டும் 'பாபா இருக்கிறார், உன்னைக் காப்பாற்றுவார்' என்று தைரியம் சொல்லி வந்தேன்.

"எங்களுடைய சோதனைக் காலம் வந்து விட்டது. ஏப்ரல் 21-ந் தேதி இரவு 3 மணிக்கு என் மனைவிக்குப் பிரசவ நோய் எடுத்தது. பொழுது விடிந்த பின்னும் வலி குறையவில்லை; பிரசவமும் ஆக வில்லை. என்றால் அவள் படும் இம்சையைப் பார்க்க முடியவில்லை. பதின்மூன்று மணி நேரம் அவள் நோயினால் தவித்தாள். பாபா இல்லையா, காக்கமாட்டாரா, என்று தைரியப்படுத்திக்கொண்டாலும் என் மனைவி படும் வேதனையைக் கண்டு என் பக்தி, தைரியம் எல்லாமே தளர்ந்து விடுவதுபோல் உணர்ந்தேன். இன்னும் நாற்பத்தைந்து நிமிஷங்களுக்குள் என் மனைவிக்கு அபாயம் இல்லாமல் சுகப் பிரசவம் ஆகாவிட்டால், நாங்கள் பூஜிக்கும் பாபாவின் படத்தை வெளியே எடுத்துவைத்து "பாபா உதவி செய்தது பொய்" என்று எல்லோரிடமும் சொல்லிவிட வேண்டும் என்று திர்மானித்துக் கொண்டேன். பாபாவின் படத்தின் முன்னாலிருந்து எழுந்திருந்தேன். அந்தக் கணமே என் மனைவி சிறிதும் அபாயம் இன்றிப் பிரசவித்து விட்டாள். "பாபா இருக்கிறார்" அப்பொழுது எல்லோரும் பாபாவைத் துதித்தோம். அன்று முதல் அதிக நம்பிக்கையுடனும் பக்தியுடனும் பாபாவைச் சேவித்து வந்தோம்.

"சாயி தேவரை எங்கும் எப்பொழுதும் காணலாம். முற்பிறப்பின் தொடர்புக் கேற்ப, பாபா தம் பக்தர்களுக்கு உதவி செய்வார்.

சாயிபாபா எனக்கு ரக்ஷை என் யோக க்ஷேமங்களைக் கவனித்து என்னை நடத்திக்கொண்டிருக்கிறார். பாபாவின் அருளால் பிறந்த குழந்தைக்கு ராதாபாய் என்று பெயரிடும்படி அவர் உத்தரவிட்டார். அதன்படியே என் குமாரிக்கு ராதாபாய் என்று பெயர் வைத்தேன். தாயும் சேயும் சுகம். பாபா எங்களுடன் இருக்கிறார்.''

## உதவியாளர்களுக்கு உதவி

எனக்குப் பேருபகாரம் செய்த—என் நலனை விரும்பும்—ஒருவர் இருக்கிறார். அவரை மிக முக்கியமான ஓர் உத்தியோகத்தில் நியமித்தார்கள். நியாயமாக அவர் அந்தப் பதவியில் மூன்று ஆண்டுகள் இருக்க வேண்டும் அந்தப் பதவியில் பத்து மாதங்களேனும் இல்லாமல் அவரை அந்தப் பதவியிலிருந்து விலகும்படி உத்தரவு போட்டார்கள். ஓய்வில் போகும்படி மேலதிகாரிகள் சொல்லியதாகப் பத்திரிகைகளில் அறிக்கை வந்தது. நான் அந்தச் செய்தியைப் பார்த்தேன். அவரை அங்கிருந்து நகர்த்தக் கூடாது என்று நான் ஆறு நாட்கள் பாபாவை வேண்டினேன். என் வேண்டுகோளுக்குப் பாபாவிடமிருந்து பதில் இல்லை என் நலனை விரும்பும் நண்பரை அதே பதவியில் ஊர்ஜிதப் படுத்தும்வரையில் உண்ணாவிரதம் இருக்கப் போவதாகச் சபதம் செய்து சொன்னபடியே உண்ணாவிரதம் தொடங்கினேன். பதினாறு நாட்கள் வரை உண்ணாவிரதம் இருந்தேன். என் நண்பரைப் பதவியிலேயே இருக்கச் செய்வதாகப் பதினாலாம் நாள் பாபா குறிப்பாக உணர்த்தினார். தெளிவாக, குழப்பம் இல்லாமல் சொல்லும்படி பாபாவை மறுபடியும் வேண்டினேன். அப்பொழுது பாபா அந்த அரசாங்க இலாக்காத் தலைவருக்கு அருகே அமர்ந்து பழைய உத்தரவை ரத்து செய்து கடிதம் எழுதுவித்தார். அந்தக் காட்சி எனக்குத் தெளிவாகத் தெரிந்தது. நான் உடனே அந்த நண்பருக்கு, ''தங்களை தங்கள் பதவியிலிருந்து அசைக்கமாட்டார்கள்'' என்று கடிதம் எழுதினேன். பிறகு பத்திரிகைகளும் முழுதாக மூன்று ஆண்டுகள் முடியும் வரையில் அவர் அந்தப் பதவியிலேயே இருப்பார் என்று செய்தி வெளியிட்டன. பாபாவுக்குச் சிறப்பாகப் பூஜை செய்து என் உண்ணாவிரதத்தை முடித்தேன். பழைய தொடர்புப்படி தம் பக்தர்களுக்கு உதவி செய்ய, ஸ்ரீ சாயிபாபா எப்பொழுதும் தயாராக இருப்பார் என்பது இந்த நிகழ்ச்சியால் தெரிகிறது.''

**(1941-ஆகஸ்டு, சாயிஸுதா)**

## கடமையை உணர்த்தல்

ஒரு நாள் எங்கள் வீட்டில் மடி யுடுக்காமல் போளி செய்ததால் ஸ்ரீ சாயிநாதனுக்கு நிவேதனம் செய்யாமல் நாங்கள் எல்லோரும் சாப்பிட்டுவிட்டோம். அன்றிரவே சாயிபாபா என் கனவில் தோன்றி, 'எனக்கு வைக்காமல் நீங்கள் எல்லோரும் சாப்பிட்டுவிட்டீர்கள்' என்று நினைவுபடுத்தினர். பெருந்தவறு செய்துவிட்டோம் தவற்றை மன்னிக்க வேண்டும் என்று வேண்டினேன். மறுநாள் திரும்பவும் போளிசெய்து சாயிபாபாவுக்கு நிவேதனம் செய்தோம்."

(சாயிஸுதா—மார்ச் 1941

## ரக்ஷிப்பவர் சாயி

1940-ஆம் ஆண்டு ஜுலை 11-ம் தேதியன்று பாபாவைப் பூஜித்து விட்டுப் பிரார்த்தனை செய்துகொண்டிருந்தேன். பாபாவின் படத்தில் பாபாவுக்குப் பதிலாக யமதர்மராஜன் தன் வாகனத்தில் ஏறிய வண்ணம் தோன்றினர். அந்தக் காட்சியைக் கண்ட நான் பயத்தால் திகைத்த வண்ணம் என்ன விபத்து காத்திருக்கிறதோ என்று கலங்கினேன். ஆபீசுக்குப் போனேன். அதற்கு முன்பே நண்பர் ஒருவர் வந்து எனக்காகக் காத்திருந்தார். எனக்குப் பிரார்த்தனை வேளையில் தோன்றிய காட்சியைப் பற்றி அந்த நண்பரிடம் சொன்னேன். "பாபா இருக்கிறர்" என்று தைரியம் சொல்லி விட்டு அவர் போய்விட்டார்.

பாபாவைப் பூஜித்து வந்த போதிலும் என் பயம் குறையவில்லை. ஆபிசில் வேலையை முடித்துக்கொண்டு வந்து வழக்கத்தை விட முன்பாகவே சாப்பாட்டை முடித்துக்கொண்டபின் கதவுகளைப் பத்திரமாகத் தாளிட்டுவிட்டுப் படுத்துக்கொண்டோம். எனக்குத் தூக்கம் வரவில்லை. பயம் அதிகரித்து உடம்பு நடுங்கத் தொடங்கியது. "இந்த நிலையில் இரண்டு மணி நேரம் தள்ளினேன். ராத்திரி மூன்று மணிக்குத் திடீரென்று கைக் குழந்தை மூச்சுத் திணறிக் கஷ்டப்பட்டு இருமியது. கண்கள் மூடிக்கொண்டன. உடல் ஜில்லிட்டுவிட்டது. "குழந்தை நமக்குத் தக்காதோ' என்ற பயத்தில் 'ஐயோ' என்று கத்திவிட்டோம். உடனே பாபாவின் விபூதியைக் கொண்டு வந்து, "பாபா! குழந்தையைக் காப்பாற்று" என்று பிரார்த்தனை செய்து கொண்டு குழந்தையின் வாயில் விபூதியைப் போட முயன்றோம். விபூதி உள்ளே செல்லவில்லை. உடனே விபூதியைக் குழந்

தையின் உடம்பு முழுவதும் தடவிக் கீழே படுக்க வைத்து பாபா வைத் தியானித்தோம். குழந்தையின் நிலை கண்டு துக்கித்த வண் ணம் உட்கார்ந்திருந்தேன். பதினைந்து நிமிஷங்களுக்குப் பிறகு, குழந்தை சிறிது அசைந்து கொடுத்தது. குழந்தையின் வாயிலும் சிறிது விபூதியைக் கொடுத்தேன். குழந்தை விழுங்கியது. அரை மணி நேரத்துக்குப் பின் குழந்தை பழையபடி நல்ல நிலைக்கு வந்து விட்டது. சுகமாகத் தூங்கியது. சீரடிக்கு ஒரு ரூபாய் அனுப்பத் தீர்மானித்தோம். மறுநாள் அனுப்பினோம்.

''இந்தக் கண்டத்தைப் பற்றி முன்னதாகவே எச்சரிப்பதற்கா கவே அன்று காலை பாபாவின் படத்தில் யமதர்ம ராஜன் பிரத்தியட் சம் ஆனார். இந்தக் கண்டத்திலிருந்து சாயிபாபா தப்ப வைத்தார். அன்றிரவு பாபாவை நினைத்த வண்ணம் தூங்கினோம். பக்தர்களை எப்பொழுதும் காப்பேனென்று சாயிபாபா சொன்ன வண்ணம் என் குழந்தை காப்பாற்றப் பெற்றது.

## வாக்குறுதியைக் காத்தல்

''நீங்கள் எப்பொழுது, எங்கே என்னை நினைத்தாலும் அப்பொ ழுது அங்கே உங்களுடன் இருப்பேன். பயப்படாதீர்கள்'' என்று பாபா, பக்தர்களுக்கு அபயம் கொடுத்தார். என் விஷயத்தில் பாபா இந்த வாக்குறுதியைப் பல சமயங்களில் நிறைவேற்றியிருக்கிறார்.

''என் மனைவி கர்ப்பமாக இருந்தாள். மாதங்கள் நிறைந்து விட்டன. வீட்டில் துணைக்கு யாரும் இல்லை. நான் ஒருநாள் இரவு அவளைத் தனியே விட்டுப் போக நேர்ந்தது. நான் வீட்டை விட்டுப் போகுமுன் அவளிடம் சென்று ''உனக்கு ஒன்றும் பயம் இல்லை. பாபா இருக்கிறார். அவர் காப்பாற்றுவார்'' என்று சொன்னேன். நான் மறுநாள் திரும்பி வந்தபோது என் மனைவி திவ்விய அநுபவம் பெற்றுப் பாபாவின் லீலைகளை எனக்குச் சொல்லப் பரபரத்துக் கொண்டிருந்தாள்.

''இரவு பன்னிரண்டு மணிக்குப் பாபா கதையுடன் வந்து நீங் கள் உட்காரும் 'ஈஸி சேரில்' உட்கார்ந்தார். உங்களை அருகில் வந்து உட்காரும்படி கூப்பிட்டார். அருகில் உட்கார வைத்துக்கொண்டு உங்களுடன் சிறிது நேரம் மிகப் பரிவுடனும் அன்புடனும் பேசிக் கொண்டிருந்தார். நீங்கள் பாபாவின் திருவடிகளில் என்னை வணங்கச் சொன்னீர்கள். நான் பாபாவை வணங்கினேன். பாபா என்னை ஆசீர்வதித்து, உங்களுடன் சிறிது நேரம் பேசிக்கொண்டி ருந்துவிட்டுப் போய்விட்டார்.''

என் மனைவி பெற்ற இந்த அனுபவத்தால் பாபா சர்வாந்தர் யாமி என்பதும் எவ்வளவு தூரத்தில் இருந்தாலும் பக்தர்களைக் காக்க வருவார் என்பதும் ருஜுவாகிறது.

சுவாமிஜி, தம் அநுபவங்களை எழுதி சாயிஸுதாவுக்கு அனுப்புவார். அவை அப்படியே பிரசுரமாகிவிடும். முக்கியமாக 1940, 41 வருடங்களில் தெலுங்கு, ஆங்கிலப் பகுதிகளில் பிரசுரமாயின. இந்த அநுபவங்களில் 'கூறியது கூறல்' அதிகமாக இருந்தாலும் ஒரே அநுபவத்தை சுவாமிஜி இரண்டு மூன்று தடவை எழுதினாலும் எல்லாவற்றையும் அப்படியே பிரசுரிப்பதற்குக் காரணம் இருந்தது: 1940-ஆம் வருடத்து சுவாமிஜீக்கும் 1941-ஆம் வருடத்து சுவாமிஜிக்கும் மிகுந்த வேற்றுமை தெரிகிறது. 1941-ஆம் வருடத்தில் இவருடைய பக்தி பழுத்துவிட்டது. இந்த மாறுதலைப் பக்தர்கள் கவனிப்பதற்கு வசதியாக அநுபவங்களை உள்ளது உள்ளபடி பிரசுரித்தார்கள். அவற்றுள் ஒரே அநுபவத்தைக் குறித்து இவர் எழுதிய கட்டுரைகளை வரிசையாக எழுதுகிறேன்:

''இந்த வருடம் ஏப்ரல் மாதத்தில் எனக்கு இந்த ஊருக்கு (பெனுகொண்டா) மாற்றலாயிற்று. என் இரண்டாவது பெண்ணின் உடல் நிலை அவ்வளவு திருப்திகரமாக இல்லை. நாங்கள் இங்கே வந்தவுடன் சீரடிக்கு ஒரு ரூபாய் அனுப்பும்படி பாபா சொன்னார் முக்கியமாக இதுபோன்ற விஷயங்களில் பாபாவிடம் எனக்கு முழு நம்பிக்கை இருப்பதால் உடனே சீரடிக்கு ஒரு ரூபாய் அனுப்பினேன். என் இரண்டாவது பெண்ணுக்கு ஏதோ கண்டம் இருக்கிறது என்றும் அந்தக் கண்டத்தை விலக்குவதற்காக இந்தத் தட்சிணையை அனுப்பச் சொல்லி பாபா குறிப்பிட்டிருக்கிறார் என்றும் எனக்குத் தோன்றியது. 1941-ஏப்ரல் 21-ஆம் தேதி இரவு, குழந்தையின் நிலை, கவலைக்கு இடமாகியது. பாபாவைப் பிரார்த்தித்துக் குழந்தையின் வாயில் விபூதியைப் போட்டுத் தீர்த்தம் ஊற்றினேன். குழந்தையின் நிலை கவலைக்கு இடமாக இருந்ததால் எனக்குத் தூக்கம் வரவில்லை. இரவு 2-30க்கு யமதர்ம ராஜன் கறுத்த உடையைப் போட்டுக்கொண்டு இடுப்பைச் சுற்றிலும் மணிகளைக் கட்டிக் கொண்டு எங்கள் வீட்டுத் தலைவாசலில் நுழைந்தார். அந்தக் கணத்திலேயே என் பூஜை அறையின் கதவுகள் திறந்து கொண்டன. அந்த அறையிலிருந்து பாபா ஓடிவந்து ''ஹட், ஹட்' என்று யமதர்ம ராஜனை எங்கள் வீட்டிலிருந்து துரத்திவிட்டார். அப்பொழுது யமதர்ம ராஜன், பக்கத்து வீட்டில் நுழைந்து ஒரு குழந்தையை எடுத்துக்கொண்டு போய்விட்டார். 'குழந்தை இறந்துவிட்டது' என்று அழும் குரல் கேட்டது. சன்னல் வழியாக எட்டிப் பார்த்தேன். பக்கத்து வீட்டுக் குழந்தைகளுள் ஒன்று இறந்துபோய் விட்டதாகத்

தெரிந்தது. பாபா 1918-ஆம் ஆண்டில் பூத உடலை நீத்துவிட்டா லும் இப்பொழுதும் அவர் மகிமையையும் பகவத் சக்தியையும் பாருங்கள்!

"என் மனைவியை எழுப்பி பாபா எங்கள் குழந்தையைக் காப் பாற்றிய விதத்தையும் யமதர்மராஜனை வீட்டிலிருந்து விரட்டிய தையும் சொன்னேன். இந்த ஆபத்திலிருந்து காத்ததற்காக நாங் கள் பாபாவைத் தொழுதோம். நாஸ்திகர்களுக்கு இந்த நிகழ்ச்சி ஏதோ சாதாரண விஷயமாகத் தோன்றலாம். சாயிபாபா பக்தர் களுக்கு மட்டும் இந்த நிகழ்ச்சியின் முக்கியத்துவமும் பெருமையும் தெரியும். பாபா பக்த பராதீனர் என்றும், முற்பிறப்பின் தொடர்புப் படி அவர் பக்தர்களுக்கு உதவி செய்வார் என்றும் சவால் விடுவேன். பாபாவைத் தெரிந்து கொள்வது என்பது அவரவர்களே உணர்வது தான். நாங்கள் பாபாவின் பாதுகாப்பிலேயே இருக்கிறோம். அவ ரிடம் எங்களுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருக்கிறது. பாபா வைக் கேட்காமல் நாங்கள் எந்த வேலையிலுமே இறங்கமாட்டோம். அவருடைய கட்டளைப் படியே நான் சீரடிக்குப் போனேன். ஆத்மிக மலர்ச்சியைப் பெறுவதற்கு அந்தச் சந்தர்ப்பங்களில் சாயிபாபா எனக்குச் சில சூசனைகள் கொடுத்தார்.

"நாங்கள் சாயிபாபாவின் பக்தர்கள் ஆனது முதல் அவர் எங் கள் விஷயத்தில் மிகவும் அக்கறை காட்டுகிறார். குழந்தை தூங்கும் பொழுது நாம் அருகே நின்று விழிப்புடன் கவனிக்க வேண்டும்" என்று பாபா சொன்னார். நான் சொல்லப் போகும் நிகழ்ச்சியால் பாபாவின் பேச்சு, எழுத்துக்கெழுத்து உண்மை என்பது சந்தேகமற ருசுப்பிக்கப்படுகிறது.

"என் இரண்டாவது குழந்தை, சேர்ந்தாற்போல் நான்கு நாட்க ளாக இரவில் தூங்குவதில்லை. எனக்கும் அதன் தாய்க்கும் மிகவும் தொந்தரவு கொடுத்து அலுப்பை ஏற்படுத்தி விட்டது. விடிய விடிய எங்களுக்குச் சிவராத்திரிதான். ஐந்தாம் நாள் எங்களுக்கு ஒரே சலிப்பு. என் மனைவிக்கும் அலுத்துவிட்டது. பாபாவை நினைத்துக்கொண்டு 'குழந்தை ஏன் இப்படி அழுகிறது. நீங்கள் ஏன் உதவி செய்யவில்லை?' என்று அவள் கேட்டாள். நான்கு நாட் களாகத் தூக்கம் இல்லாததால் சிறிது கண்ணை அயர்த்தியது. சற்று நேரத்துக்குப் பின் திடீரென்று எழுந்திருந்தாள். குழந்தையின் அருகில் நின்று பாபா, தொட்டில் ஆட்டுவதைக் கண்டு ஆச்சரியத் தால் திடுக்கிட்டு என்னை எழுப்பி அந்தக் காட்சியை வருணித்தாள். கேட்டவுடன் வந்து உதவி செய்த பாபாவின் அன்புக்கும் பரிவுக்கும் ஆச்சரியம் அடைந்து சாயிநாதனைத் துதித்தோம்."

(—1941 செப்டம்பர்)

''தாம் சேவகர்களுக்குச் சேவகன் என்றும் பக்தர்களுக்குத் தாசன் என்றும் ஸ்ரீ சாயிபாபா, பலமுறை கோஷித்திருக்கிறார். நான் பாபாவின் பக்தன் ஆன பிறகு எனக்கு ஏற்பட்ட சில அநுபவங்களால் பாபாவின் பேச்சு எவ்வளவு உண்மை என்பது ருஜுவாயிற்று. என் அநுபவங்கள் சிலவற்றை இங்கே விவரிக்கிறேன்.

''சாயிபாபாவின் அற்புத சக்திகளை நாங்கள் உணர்ந்தது முதல் அவை எங்கள் அநுபவத்துக்கு வந்ததிலிருந்து நாங்கள் ஸ்ரீ பாபாவைக் கடவுளாகவே வழிபடுகிறோம்.

''ஒருநாள் பாபா கனவில் தோன்றி எனக்குத் தீர்த்தம் கொடுத்தார். அதை அருந்தினேன். பிறகு பாபா, தலை குனிந்து என்னை வணங்கத் தொடங்கினார். அவர் வணங்க முடியாமல் தப்பித்துக் கொண்டு சுற்றினேன். அவர் என்னைத் தொடர்ந்தார். சிறிது நேரத்துக்குப் பின் அவர் உட்கார்ந்து தம் அருகில் என்னை உட்காரும்படி சமிக்ஞை செய்தார். நான் பக்கத்தில் உட்கார்ந்தேன். பாபா ஓர் ஆசனம் போட்டு, என்னையும் அதுபோல் ஆசனம் போடச் சொன்னார். எவ்வளவு முயன்றும் என்னால் அந்த ஆசனம் போட முடியவில்லை.

''மற்றொருநாள் பாபா வந்து எனக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தார். எனக்கு ஒரே துக்கம். நான் என்ன அபராதம் செய்து விட்டேனென்று பாபா இப்படி நமஸ்காரம் செய்கிறார், என்று புலம்பினேன். உடனே பாபாவுக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தேன். அவர் என்னைக் கூப்பிட்டுத் தம் பக்கலில் அமரச் செய்தார். ஏதோ ஒரு நூலை எடுத்துக் காட்டி, 'முகம்மதியர்களுக்குச் சிறிது அநியாயம் நடந்திருக்கிறது, அப்படியெல்லாம் நடக்கக் கூடாது' என்றார். இந்த நிகழ்ச்சியின் கருத்து எனக்குப் புலப்படவில்லை.

''ஒரு நாள் பாபாவைத் துதித்துக்கொண்டிருந்தேன். பாபாவின் படத்தில் அவர் ஆப்பிள் பழங்களைக் காண்பித்தார். பாபா ஆப்பிள் பழத்தை நிவேதனமாக விரும்புகிறார் என்று ஊகித்து உடனே சேவகனைக் கடைக்கு அனுப்பி ஆப்பிள் பழம் வாங்கிவரச் சொன்னேன் அதிர்ஷ்டவசமாகக் கடைத் தெருவில் ஆப்பிள்கள் கிடைத்தன. அன்று பாபாவுக்கு ஆப்பிள் நிவேதனம் செய்ய முடிந்தது.

''சீரடிக்குச் சென்று பாபாவைத் தரிசிக்க வேண்டும் என்ற விசித்திரமான ஆசை என்னுள் தோன்றி வளர்ந்து வந்தது. 1940 ஏப்ரல் 20-ம் தேதி பாபா என் கனவில் வந்தார். அவர் கோதாவரிக் கரையில் உட்கார்ந்திருந்தார். அவருக்குச் சிறிது தூரத்தில் நான் நின்றிருந்தேன். பலர் கோதாவரியில் ஸ்நானம் செய்கிறார்

கள். பாபா என்னையும் கோதாவரியில் நீராடும்படி உத்தரவிடு கிறார். இது, பாபா என்னை சீரடிக்கு வரும்படி ஆணையிட்டதாகும் என்று நான் கருதினேன். லீவு கிடைத்தாலன்றி சீரடிக்குச் செல்லு வது சாத்தியம் இல்லை. லீவு கிடைக்குமா கிடைக்காதா என்று அறிய பாபாவின் முன் திருவுளச் சீட்டுப் போட்டேன். கிடைக்கும் என்று பதில் வந்தது. லீவு கிடைத்தது. அக்டோபர் 6 ஆம் தேதி சீரடிப் பிரயாணத்துக்கு நாள் பார்த்தேன். அன்று லீவும் கிடைத் தது. அன்றைக்கே புறப்பட்டு மறுநாள் மாலை நாலு மணிக்கு நான் சீரடி சேர்ந்தேன்.

'துவாரகாமாயியின் படி ஏறும்போதே வினை தீர்ந்துவிடும்' என் றார்கள். அது எவ்வளவு உண்மை என்று தெரிந்துகொள்ளவே நான் சீரடிக்குச் சென்றேன். மகா சமாதி மந்திரிலும் துவாரகா மாயியி லும் நான் கட்டுப்பாடாகப் பாபாவைத் தியானித்தேன். இரண்டு இடங்களிலும் நான் மிகவும் ஆனந்தம் பெற்றேன்.

"அக்டோபர் 8-ஆம் தேதியன்று நான் மகா சமாதி மந்திரில் அமர்ந்து பாபாவைப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தேன். அங்கே இருந்த தத்தாத்திரேய விக்கிரகத்தின்மேல் பாபாவுக்கு வலப் புற மாக நாற்பத்தைந்து நிமிடங்களுக்குள் ஒரு குருவி பறந்து வந்து உட்கார்ந்தால் வினை தீர்ந்துவிட்டதாகக் கருதலாம் என்று நினைத் துக் கொண்டு பாபாவைத் தியானித்தேன். நாற்பத்தைந்து நிமி டங்கள் கடந்தன. சுற்றுப் புறத்தில் எங்கும் குருவியே இருப்பதாகத் தெரியவில்லை. ஆடாமல் அசையாமல் பார்வையையும் மனத்தை யும் பாபாவின்மேல் செலுத்திப் பார்த்துக்கொண்டிருந்தேன். ஐந்து நிமிடங்களில் நான் நினைத்தபடி குருவியொன்று வந்து சாயிநாத னுக்கு வலப் புறத்தில் உள்ள தத்தாத்திரேய விக்கிரகத்தின் மேல் வந்து உட்கார்ந்தது. என் வினை தீர்ந்துவிட்டதென்றும் பாபா அதை எனக்கு இந்த விதமாகத் தெரிவித்தார் என்றும் அறிந்து கொண்டேன். முன் வினைப்படி இது நடந்தது. பாபாவுக்கு ருணா னுபந்தம் (முன் வினை) என்றால் மதிப்பு உண்டு.

கோதாவரியில் நீராடும்படி கனவில் பாபா உத்தரவிட்டார் அல்லவா? கோதாவரிக்குச் சென்றேன். அந்தக் காட்சி, பாபா எனக்குக் கனவில் காண்பித்தபடியே இருந்தது. புனித கோதாவரி யில் நீராடினேன்.

பூஜிக்கத் தகுந்த ஸ்ரீ பி. வி. நரசிம்ம சுவாமியுடன் சேர்ந்து நான் ஸக்கூரிக்குச் சென்றேன். ரஹதாவுக்கு அருகே சாலை ஓரத்தில் குஷ்டரோகி ஒருவனைக் கண்டேன். அவன் என்னைப் பிச்சை கேட் டான். திரும்பி வரும்போது கொடுப்பதாகச் சொல்லிப் போய்விட்

டோம். அது மறந்துபோய் விட்டது. சீரடிக்குத் திரும்பி வந்து துவாரகாமாயிக்குச் சென்றேன். பாபாவைத் தியானித்துக்கொண்டிருந்தேன். சாயிபாபாவின் படத்தில் அவருக்குப் பதிலாகக் குஷ்டரோகியின் உருவம் தெரிந்தது. உடனே நான் ஸ்ரீ நரசிம்ம சுவாமியிடம் சென்று நடந்தவற்றைச் சொன்னேன். உண்டியில் நாலணாவைப் போடச் சொல்லி அவர் யோசனை சொன்னார். உடனே போட்டுவிட்டு ஆராத்தி வேளைக்குத் திரும்பவும் மகா சமாதிக்குச் சென்றேன். திரும்பவும் குஷ்டரோகியின் உருவம் தெரிந்தது கலக்கம் அடைந்து அவனை அலட்சியம் செய்ததற்கு மன்னித்து விடும்படி சாயிபாபாவை வேண்டினேன். நான் திரும்பி வந்தபோது பஸ் சரியாக அந்தக் குஷ்டரோகி இருந்த இடத்திலேயே நின்றது. அவனும் பஸ்ஸிலிருந்து மற்ற பிரயாணிகளிடம் போகாமல் நேராக என்னிடமே வந்து யாசித்தான். அவனுக்கு நாலணாவைக் கொடுத்த பின்பு தான் என் மனம் அமைதி பெற்றது.

பண்டரிபுரம் போக வேண்டுமென்று தோன்றியது. உடனே சீட்டுக் குலுக்கிப் போட்டேன். போகச் சொல்லி உத்தரவு வந்தது. ஆனால் அசாத்திய மழை பெய்தது. பாபாவின் அருளால் வழியில் மழைத் தொல்லை இல்லாமல் "தோண்ட்" சென்றேன். தோண்ட் ரெயில்வே ஸ்டேஷனில் உத்தியோகஸ்தர் ஒருவர் எதிர்ப்பட்டார். என் பிரயாணத்தைப் பற்றி மிகுந்த அனுதாபத்துடனும் அன்புடனும் விசாரித்தார். நான் பண்டரிபுரம் போவதாகச் சொன்னேன். குருத்வாடி வரைக்கும் அவர் என்னுடன் வருவதாகச் சொன்னார். பண்டரிபுரம் எனக்குப் புதிது. அவரிடம் பண்டரிபுரத்தைப் பற்றி விசாரித்தேன். அப்பொழுது குருத்வாடி வந்துவிட்டோம். நான் 'சர, சர'வென்று இறங்கி, டிக்கெட் வாங்கச் சென்றேன். என்னுடன் வந்த உத்தியோகஸ்தரை மறந்தே போய் விட்டேன். அவரே என்னிடம் வந்து தாமும் பண்டரிபுரம் வந்து அவ்விடத்து விசேஷங்களை எனக்குக் காண்பிப்பதாகச் சொன்னார். புதிய ஊரான பண்டரிபுரத்தில் எனக்கு ஒன்றும் தெரியாது. அதனால் பாபாவே இந்த உத்தியோகஸ்தரை எனக்கு உதவியாக அனுப்பியிருப்பார் என்று நினைத்தேன்.

இருவரும் பண்டரிபுரம் சேர்ந்தோம். ஸ்டேஷனில் இறங்கியதும் அவரே டாங்கா பேசிச் சத்திரத்துக்கு அழைத்துச் சென்றார். டாங்கா வாலாவுக்கு அவரே கூலி கொடுத்தார். சத்திரத்தில் எனக்கு வேண்டிய செளகரியங்களை ஏற்பாடு செய்துவிட்டு விடை பெற்றுக் கொள்ளும்போது, "நீங்கள் என்னை எப்பொழுது நினைக்கிறீர்களோ, அப்பொழுது வருவேன்" என்று சொல்லிவிட்டுப் போனார்.

நான் சந்திரபாகா நதிக்குச் சென்று நீராடிவிட்டு நான்கு பூ மாலைகளை வாங்கிக்கொண்டு விட்டோபாவின் கோயிலுக்குச் சென்றேன். விட்டோபாவுக்கு இரண்டு மாலைகளையும், ருக்மணி தேவிக்கு இரண்டு மாலைகளையும் சமர்ப்பித்துப் பூஜை செய்தேன். பிறகு ஓட்டலுக்குச் சென்று சாப்பிட்டுவிட்டு நேராக ஸ்டேஷனுக்கு வந்தேன். முதல் நாள் இரவு பிரயாணத்தால் தூக்கம் இன்றிச் சோர்வாக இருந்தது. கண் அயர்ந்தேன். விட்டோபாவுக்குச் சாத்திய இரண்டு மாலைகளையும் (கனவில்) சாயிபாபாவின் சமாதியில் கண்டேன். உடனே விழிப்பு வந்தது. பாபாதான் விட்டோபா என்று தெரிந்துகொண்டேன். பாபா தன் பக்தர்களிடம் தாமே விட்டோபா என்று சொன்னர் அல்லவா?

"பாபா தம் பக்தர்கள் பூஜை செய்யும்போதும் சரி; பிரயாணம் செய்யும்போதும்சரி; எப்படிக் கவனிக்கிறுர் என்பது இதனுல் தெளிவாகிவிட்டது. அந்த முன்பின் தெரியாத உத்தியோகஸ்தர் ஸ்ரீ சாயிபாபாவேதான் என்று உறுதியாகச் சொல்லுவேன்.

(ஆகஸ்டு 1941)

சுவாமி பாலகேசவய்யா சாயி பக்த கேசவய்யாவாக மாறிய விதத்தையும் முறையையும் தெரிந்து கொண்டோம். 1939-ஆம் ஆண்டு ஜூலை 1-ஆம் தேதியன்று சர்வ வல்லமை பெற்ற சத்குரு சாயிநாதன் சுவாமிஜிக்குத் தரிசனம் கொடுத்தார். அதுமுதல் சுவாமிஜி இரண்டாண்டுகள் பாபாவின் அருளால் ஆத்மிக உயர்வு பெற்று மகிமையைச் சம்பாதித்துப் பரம பாகவதர் ஆனுர். ஆயிரக் கணக்கான பக்தர்களுக்குச் சத்குருவாகி, பாபாவின் அருட் பார்வை பரவும் மையப் புள்ளியாய் விளங்குகிறுர். 1941-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் இவர் பெனுகொண்டாவுக்கு வந்தார்.

1948-ஆம் ஆண்டு வரையில் பெனுகொண்டாவில் இருந்தார். அந்த வருடம் மே மாதத்திலேயே அங்கே சாயி மந்திரம் ஒன்றைக் கட்டுவித்தார். சென்னை அரசின் முன்னுல் கைத் தொழில் மந்திரியாய் இருந்த ஸ்ரீ எச். சீதாராம ரெட்டியைக் கொண்டு விமரிசையாக ஆரம்ப விழாக் கொண்டாடினுர். இவர் அங்கே சாயி மந்திரத்தை நிறுவியதுடன் அங்கே இவருடைய வேலை முடிந்துவிட்டதாக, பாபா கருதியிருக்க வேண்டும். அதே ஆண்டு ஜூன் மாதத்தில் சிகிச்சைக்காகச் சென்னை சென்றது, திரும்ப நோய் குணம் ஆன பிறகும் பெனுகொண்டாவுக்குப் போக வேண்டிய அவசியமில்லாமல் சென்னைக்கே மாற்றல் ஆகி இங்கேயே தங்கிவிட்டது எல்லாம் பாபாவின் விருப்பம் போலும். தம் கருணை நோக்கைப் பக்தர்களுக்கு எட்டச் செய்வதற்காகவே சுவாமி கேசவய்யாஜீயைத் தனியாகத்

தேர்ந்தெடுத்ததாக அறிஞர்களும் ஞானிகளும் கருதினார்கள். பிர
சித்தி பெற்ற பாபா பக்தரும் தென்னாட்டில் சாயிபாபாவை
பற்றிப் பிரசாரம் செய்த மகானுபாவருமான ஸ்ரீ பி. வி. நரசிம்ம
சுவாமியுங்கூட சுவாமி கேசவய்யாஜீயை சாயிநாதருடைய அன்புக்
குரிய பக்தர் என்று வருணித்திருக்கிறார். "என் பிரசங்கங்களை ஆயி
ரம் பேர் கேட்டால் அதில் நூறு பேர் மட்டுமே பயனடையலாம்.
சுவாமி கேசவய்யாஜீ நடத்தும் பாபா பூஜைக்கு ஆயிரம் பேர் கூடி
னால் அதில் தொள்ளாயிரம் பேர் பயனடைவார்கள்' என்று ஸ்ரீ நர
சிம்ம சுவாமி சொன்னார்.

சுவாமி கேசவய்யாஜீயின் பூஜை பெனுகொண்டாவுக்கு வந்த
பின்தான் பிரசித்தி பெற்றது. பாபாவின் சாக்ஷாத்காரம் ஆன
பிறகு சுமார் இரண்டரை வருடங்கள் வரையில் அவர் பக்தர்களுக்கு
பாபாவின் அருளை எட்டச் செய்யவில்லை. எதனால்? இந்தக் கேள்
விக்கு சுவாமிஜீயின் அநுபவங்களே பதில் சொல்கின்றன. அந்த
அநுபவங்களை விவரிக்கும்போது சுவாமிஜீ சில விஷயங்கள் சொன்
னார். வாசகர்கள் அவற்றைத் திரும்பவும் ஆராய்ந்தால் ஸ்ரீ சாயி
பாபா, ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீயை இந்த இரண்டரை வருட
காலம், தமக்கு உபயோகப்படக் கூடிய சிறந்த சாதனமாகத் தயார்
செய்தது தெளிவாகும். சுவாமிஜீக்குத் தீர்த்தம் கொடுத்தது; சுவா
மிஜீயின் தலைமேல் வாத ஹஸ்தம் கை வைத்தது; ஏதோ ஆசனம்
போட்டு சுவாமிஜீயை அதுபோலவே போடச் செய்தது; அப்போ
தைக்கு சுவாமிஜீ அந்த மாதிரி செய்ய முடியாமல் போனது; அப்பு
றம் சுவாமிஜீ பெற்ற சில அநுபவங்கள் எல்லாம் இந்த அபிப்பிரா
யத்தையே உறுதிப்படுத்துகின்றன. சுவாமிஜீ 1941-ஆம் ஆண்டில்
பெனுகொண்டாவுக்கு வரும்வரையில் பாபா பக்தராக மட்டுமே
இருந்ததாகவும் அதற்குப் பின்தான் அவருக்குள் பாபாவின் அம்சம்
இடம் பெற்றதாகவும் கருதலாம்.

ஆகையால் பெனுகொண்டாவில் சுவாமிஜீயின் பூஜைகளோடு
பக்தர்களுடைய அநுபவப் பகுதியையும் தொடங்குவது பொருத்த
மாக இருக்கும். வக்கீல் தொழிலில் இருந்துகொண்டு, தாமே பாபா
வின் பூஜைகள் செய்துகொண்டு பாபாவின் பக்தரான ஸ்ரீ எஸ்.
சுப்பாராவ், பெனுகொண்டாவில் சாயி மந்திரம் நிறுவ ஊக்கம்
கொடுத்த ஸ்ரீ வி. வி. ராமன், ஸ்ரீ கே. ரங்காராவ் ஆகியோர் தெரி
வித்த செய்திகளை முதலில் விவரிப்பது உசிதமாகும்.

"பெனுகொண்டாவில் சாயி பக்தி தோன்றுதல் அபிவிருத்தி"
என்ற ஓர் அழகிய புத்தகத்தை சாயி மந்திரத்தினர் ஆரம்ப விழா
வின்போது ஸ்ரீ சுப்பாராவ் வெளியிட்டார். அவரே பெனுகொண்

டாவில் சுவாமி கேசவய்யாஜீ செய்த பாபா பூஜையைப் பற்றியும், சாயிபாபா பிரசாரம் பற்றியும் விஸ்தாரமாக அதில் எழுதியிருக்கிறார். அவர் ஆங்கிலத்தில் எழுதிய கட்டுரையை இங்கே எழுதுகிறோம்:

"1941-ஆம் வருடம் ஏப்ரல் மாதம் ஏழாம் தேதியன்று ஸ்ரீ கேசவய்யாஜி பெனுகொண்டாவுக்கு வந்தார். அவர் தர்மவரத்திலும் கதிரியிலும் சப் ரிஜிஸ்திராராக இருந்து இங்கே மாற்றலாகி வந்தார் சுவாமிஜீ இங்கே வருவதற்கு முன் சாயிபாபாவின் பெருமையைப் பற்றியும் மகத்துவத்தைப் பற்றியும் சிறிதுதான் எங்களுக்குத் தெரியும். ஸ்ரீ பி. வி. நரசிம்ம சுவாமி சாயிபாபாவைப் பற்றி "சண்டே டைம்ஸ்" வாரப் பதிப்பில் எழுதுவது வழக்கம். அந்தக் கட்டுரைகளைப் படித்தபின் சாயிபாபாவைப் பற்றிய பல விஷயங்கள் தெரிந்தன. சீரடி சாயிபாபாவைப் பற்றித் தென்னாட்டு மக்களுக்கு விளக்கம் செய்தவர் ஸ்ரீ பி. வி. நரசிம்ம சுவாமி என்றால் அது மிகையன்று.

"பிறகு ஸ்ரீ கேசவய்யாஜீயால் பாபாவின் வாழ்க்கையையும் அவர் உபதேசங்கள் பற்றியும் விவரமாகத் தெரிந்துகொண்டோம். சாயிபாபாவின் ஆராதனையில் ஸ்ரீ கேசவய்யாஜீக்கு உள்ள ஆர்வமும் உற்சாகமும் எங்களைக் கவர்ந்தன. அவர் சாயிபாபாவிடம் ஆழ்ந்த பக்தி கொண்டவர் என்பது எங்களுக்கு அப்பொழுதுதான் தெரிந்தது. அவர் இங்கே வந்த பதினைந்து நாட்களிலேயே பக்தர்களுக்குப் பயனுள்ள பூஜைகளைத் தொடர்ந்தார்.

"சுவாமி கேசவய்யாஜீயிடம் பாபாவின் இலக்கியங்கள் கூட இருக்கின்றன. "பக்தர்களுடைய அநுபவங்கள்," "பாபாவின் உபதேசங்கள்", "அற்புத யோகி" என்னும் மூன்று நூல்களை அவரிடமிருந்து வாங்கிப் பக்தி சிரத்தையுடன் படித்தோம். எங்களுக்கு மன அமைதியும் ஆனந்தமும் உண்டாயின. ஒவ்வொரு நாளும் மாலையில் பாபா பக்தர்களான நாங்கள் எல்லோரும் ஒன்று கூடுவோம். நாங்கள் படித்த மூன்று புஸ்தகங்களிலும் உள்ள விஷயங்களைப் பற்றிச் சர்ச்சை நடத்தி எல்லோருடைய கருத்துக்களையும் பரிமாறிக் கொண்டிருக்க நினைத்தோம். இந்தக் கூட்டம் நாளடைவில் ஆத்மிக கோஷ்டியாக மாறியது. ராமாயணம், பாரதம், பாகவதம், பகவத் கீதைகளைப் பற்றிய சர்ச்சைகள் நீடித்தன. ராமகிருஷ்ண பரமஹம்ஸர், சுவாமி விவேகானந்தர் போன்ற மகான்களுடைய சரிதங்களிலும் ஆராய்ச்சி நடந்தது. ஆனால் எங்களை சாயிபாபாவின் ஆராதனை செய்யத் தூண்டியவர் ஸ்ரீ கேசவய்யாஜீ. அவருக்கு நாங்கள் நிரம்பவும் கடமைப்பட்டிருக்கிறோம். அவருக்கு எவ்வளவு நன்றி தெரிவித்துக்கொண்டாலும் போதாது. நாடெங்கும் சாயி

பாபா பக்தியைப் பரப்புவதற்கு சீரடி தேவர் ஸ்ரீ கேசவய்யாஜீக்கு ஆயுளாரோக்கியங்களை அருள் புரிவாராக.

"நானும் என் நண்பர்கள் சிலரும் சுவாமிஜீ நடத்தும் ஸ்ரீ சாயி பாபாவின் வியாழக்கிழமை பூஜைக்கு ஆஜராவோம். இந்தப் பூஜைக்குப் பக்தர்கள் பலர் வருவார்கள். 1941-ஆம் வருடம் ஜூன் மாதத்தில் ஒரு வியாழனன்று, பூஜை முடிந்த பின், "ஸ்கூல் ஃபைன லுக்குப் பரீட்சை எழுதிய மாணவர்கள் மூவர் இருக்கிறார்கள். இவர்களில் இரண்டு பேர்கள் தேறுவார்கள்" என்று சுவாமிஜீ சொன்னார் சில நாட்களில் பரீட்சை முடிவு தெரிந்தது. அன்று சுவாமிஜீ சொன்னபடி அப்படியே நடந்தது. சுவாமி கேசவய்யாஜீயிடம் அற்புத சக்திகள் சில இருப்பதை அப்பொழுது மக்கள் உணர்ந்தார்கள். அது முதல் வியாழக்கிழமைப் பூஜைக்கு வருபவர்கள் எண்ணிக்கை அதிகரித்தது.

ஸ்ரீ பி. வி. ராமன் எழுதும் கட்டுரைகள் முடியும் முன், முன் வெளியான சுவாமிஜீயின் சக்திகளைப் பற்றி வாசகர்களுக்குத் தெரிவித்தல் அவசியம். 1953-ஆம் வருடத்தில் சீராலாவிலிருந்து வெளியாகும், "சாயி லீலா" மே மாத சஞ்சிகையில் ஸ்ரீ கேசவய்யாஜீயின் வாழ்க்கை வரலாறு வந்தது. சுவாமி கேசவய்யாஜீ 1939-ஆம் வருடத்தில் தென்னாட்டு க்ஷேத்திராடனம் செய்கையில், ராமேசுவரத்தில் ராமலிங்க சுவாமியைத் தரிசித்தபோது இவர் பெற்ற அநுபூதியை இந்தக் கட்டுரையில் விவரித்திருக்கிறார். அந்தப் பகுதியை இங்கே உள்ளது உள்ளபடி சொல்லியிருக்கிறேன்.

"சுவாமிஜீ ஸ்ரீ ராமலிங்கேசுவர சுவாமியைத் தரிசித்த சமயத்திலேயே பக்தி உணர்ச்சிக்கு வசப்பட்டார். சுவாமி விக்கிரகத்தில் தெய்வீக சக்தி தென்பட்டது. தம்மையறியாமலேயே சுவாமிஜீ ஸ்ரீ ராமலிங்கேசுவர சுவாமியைப் பக்திப் பெருக்கால் துதித்தார். ஸ்ரீ கேசவய்யாஜீயின் மனம் தீவிர உணர்ச்சி பெற்றது. தம்மையும் அறியாமல் சில அற்புதச் சக்திகளைப் பெற்றார். எதிர்ப்பட்டவர்களுடைய முற்பிறவிச் செய்திகளையும் இப்பிறவியில் நடந்த செய்திகளையும், வருங்காலத்தையும் நாடி ஜோதிடம் படிப்பதுபோல் 'கட கட' வென்று சொல்லுவார். ஏதாவது தீமை நேரும்போலிருந்தால் அதற்குப் பரிகாரமும் சொல்லுவார். இப்படித் தமக்குத் தோன்றிய விஷயங்களை உரியவர்களுக்குச் சொல்லும் வரையில் அவர் உள்ளம் அமைதி பெறாது.

இந்த சம்பவத்துக்கு முன்பே அவர் பழனியில் தண்டாயுதபாணியின் அருளுக்குப் பாத்திரர் ஆனார். அதை ஏற்கனவே வாசகர்கள்

தெரிந்துகொண்டிருக்கிறார்கள். இனி ஸ்ரீ ராமனுடைய கட்டுரையைப் படியுங்கள்.

"ஸ்ரீ கேசவய்யாஜீயின் பூஜையைப் பற்றியும் பூஜைக்குப் பின் அவர் பக்தர்களுக்குச் சொல்லும் யோசனைகளையும் பற்றிச் சிறிது பிரசாரம் நடந்தது. பத்திரிகைகளில் முக்கியமாக, 'சண்டே டைம்ஸ்', 'சாயிஸுதா' இவைகளில்—குத்தியில் வசிக்கும் வக்கீல் ஸ்ரீ எஸ். சுப்பாராவ் சுவாமி கேசவய்யாவின் பூஜையைப் பற்றி எழுதி வந்தார். அந்தக் கட்டுரைகளைப் படித்த பக்தர்களில் சிலர் பெனுகொண்டாவுக்கு வருவார்கள். வர முடியாதவர்கள் கடிதம் எழுதுவார்கள். முதலில் ஒரு நாளைக்குப் பதினைந்து கடிதங்கள் வந்தன. சில மாதங்களுக்குப் பின் நூற்றுக் கணக்கான கடிதங்கள் வரத் தொடங்கின, ஒவ்வொரு கடிதத்துக்கும் சுவாமிஜீ தம் கைப்படப் பதில் எழுதுவார். பக்தர்களுக்கு இவருடைய ஆலோசனைகள் மிக உதவியாகவும் பயனுள்ளவையாகவும் இருக்கும்.

"பக்தர்கள் நாட்டின் பல பகுதிகளிலிருந்து கடிதம் எழுதியதோடு அவரவர்கள் ஊருக்கு வர வேண்டுமென்று சுவாமிஜீக்கு அழைப்பு அனுப்புவார்கள். சுவாமிஜீ பக்தர்களுடைய அழைப்பை, பாபாவின் அழைப்பாக மதித்து அகமத் நகர், பம்பாய், பெங்களூர், பல்லாரி, விஜயவாடா, மதுரை, சென்னை, கோயம்பத்தூர், சிராலா, ஏலூர், தெனாலி, ரேபல்லெ, குண்டூர், செகந்தராபாத், ஹைதராபாத், தொட்டபள்ளாபுரம், ஹாஸ்பெட், பொள்ளாச்சி முதலிய ஊர்களுக்குச் சென்று பக்தர்கள் பலருடைய வீடுகளில் சாயிபாபா பூஜை செய்திருக்கிறார். ஆயிரக் கணக்கான பக்தர்களுக்குத் தீர்த்தம், பிரசாதம் தந்தார். ஒவ்வொருவரையும் ஆசீர்வதித்து அவர்களுடைய வருங்காலத்தைப் பற்றிச் சொல்லுவார். தென்னாட்டில் முக்கியமாக ஆந்திரா, தமிழ், கன்னட ராஜ்யங்களில் சுவாமிஜியின் பூஜையால் இன்று பக்தர்களுடைய எண்ணிக்கை வளர்ந்துவிட்டது. சாயிபாபாவின் பக்திப் பிரசாரம் விரிவாக நடந்திருக்கிறது.

சாயி மந்திரம் ஆரம்ப விழாவின்போது, பெனுகொண்டா சாயி மண்டலியின் தலைவரான வக்கீல் ஸ்ரீ குருடி ரங்காராவ் சுவாமிஜீயை பற்றிச் சொல்லிய விஷயங்கள் நினைவு கூறத்தக்கவை.

"சமீப காலம் வரையில் இந்தப் பகுதியினருக்கு, முக்கியமாகப் பெனுகொண்டா வாசிகளுக்கு சாயிபாபாவைப் பற்றி ஒன்றும் தெரியாது. 1941—ஆம் ஆண்டில் ஸ்ரீ கேசவய்யாஜி இங்கே வந்ததால் பெனுகொண்டா வாசிகளுக்கு ஆத்மிகப் பெருஞ் செல்வம் கிடைத்தது. மகிமையுள்ளவரும் பகவத் சொரூபியும் ஆன ஸ்ரீ சாயிபாபாவைத் தெரிந்து கொண்டு ஆத்மிக அநுபூதி பெற்றார்கள்.

ஸ்ரீ கேசவய்யாஜியின் பாபா பக்தி நிறைவு பெற்ற ஒன்றுரும், அவர் முழுக்க முழுக்க சாயிநாதனுக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு விட்டார். சாயிபாபா பக்தர்களுக்கு வசப்பட்டவர். தம் அடியார்க்கு அடியவர். அதனுல் அவரும் சுவாமி கேசவய்யாஜியு டன் பெனுகொண்டாவுக்கு வந்தார். அவர் பெனுகொண்டாவைத் தம் சொந்த ஊராக்கிக் கொண்டார். சாயி பகவானைப் பற்றிய ஞானமும் நாங்கள் பெற்ற அநுபவங்களும் ஸ்ரீ கேசவய்யாஜி இட்ட பிச்சைதான். அவர் எங்களுக்குக் கிடைத்திருக்காவிட்டால் நாங்கள் பழையபடி, இன்னமும் சாயிபாபாவுக்கு வெகு தூரத்தில் இருந்திருப் போம். இதில் மிகையானதோ பொய்யோ அணுவளவும் இல்லை.

ஸ்ரீ கேசவய்யாஜியும் நாங்களும் சந்தித்தது காக்கை உட்காரப் பனம் பழம் விழுந்ததுபோல் தற்செயலாக நடந்தது. அவர் எங்க ளுக்கு அறிமுகம் ஆனவர் அல்லர். நாங்கள் யாரென்பதும் அவ ருக்குத் தெரியாது. முதல் சந்திப்பிலேயே அவர் எங்களுக்கு வெகு காலம் பழகிய நண்பர்போல் தோன்றிஞர், உறுதியான பந்தத்தால் நாங்கள் அவருக்குக் கட்டுப்பட்டு விட்டோமென்ற கருத்து ஏற்பட் டது. உண்மைதான். அந்த உறுதியான கட்டுத்தான் சாயிபகவா னுடைய கட்டு. முதல் பார்வையிலேயே இந்த அபிப்பிராயமும் அநுபவமும் மின்னல்போல் தோன்றின. அன்று முதல் நாங்கள் அடிக்கடி அவரைச் சந்தித்து வந்தோம். சாயிநாதனைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று எங்களுக்கு ஒரே தாகம். அவரை மனனம் செய்ய வேண்டுமென்று உறுதியான ஆசை எங்களைப் பிடித்துக் கொண்டது. படிப்படியாக எங்களுடைய சங்கத்தில் உறுப்பினரின் எண்ணிக்கை வளர்ந்தது. அதன் பயன்தான் இந்த சாயி மண்டலி யாக உருவெடுத்தது. ஸ்ரீ சாயியைத் தெரிந்து கொள்ளவேண்டும், அவரை நெருங்கியிருக்க வேண்டும், அவருடைய ஆத்மாவைச் சேர வேண்டும், அவருடைய ஆத்மாவை நெருக்கம் உள்ளதாகச் செய்து கொள்ள வேண்டும் என்ற ஆசையில் இந்த சாயி மண்டலியை நிறு வினேம். எங்கள் முயற்சி பயன்பெற, ஸ்ரீ கேசவய்யாஜி மிகவும் உத வினர். அவருக்கு நாங்கள் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேம். இந்த மண்டலியின் ஆத்மா, ரக்ஷகர், ஒருமைப்படுத்தும் சக்தி எல்லாம் அவரே.

எங்கள் சாயி பக்திக்கு ஆடம்பரம், விளம்பரம் எதுவும் இல்லை. சாதனைதான். சாதகர்களோடு மட்டுமே கூடி அளவோடு நிற்பது. தொடக்கத்தில் எங்கள் கூட்டங்களுக்குத் தனிப்பட்ட இடம்கூட இருக்கவில்லை. பெனுகொண்டா, குளக்கரையில் கூடி இந்த ஆத் மிகக் கூட்டத்தை நடத்துவோம். பாபாவின் பிரார்த்தனை செய்யக் கூட எங்களுக்கு இடம் இல்லை. ஸ்ரீ கேசவய்யாஜி அவருக்கு உள்ள

உதார குணத்தின் காரணமாக எங்கள் பாபா பிரார்த்தனையை நடத்தத் தம் வீட்டிலேயே சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொடுத்தார். அவரே எங்களுக்கு அர்ச்சகர். சில நாட்களில் பூஜைக்கு வருவோரின் எண்ணிக்கை பெருகியது. யாரும் முதலில் தீர்மானம் செய்து கொண்டு இங்கே வருவதில்லை. அழைப்புக் கொடுப்பதில்லை. அவரவர்களுடைய அந்தராத்மாவின் தூண்டுதலாலேயே பூஜைக்கு வருவார்கள். இப்படி வருபவர்களுடைய கூட்டம் காரணமாக சுவாமிஜீக்கு வீட்டில் அசௌகரியம் ஏற்படும். ஆனாலும் அவர் தினசரி பூஜைக்கு வருபவர்களைத் தடுக்கவில்லை. நாங்களே நிலைமையை உணர்ந்து தினசரி பூஜைக்குச் செல்லுவதை நிறுத்திக்கொண்டு வியாழக்கிழமைப் பூஜைக்கு மட்டும் ஆஜராக வேண்டும் என்று தீர்மானித்துக்கொண்டோம். வியாழக்கிழமைப் பூஜைக்கு வருபவர்களுடைய எண்ணிக்கை நூற்றுக் கணக்கில் ஏறியது. கடைசிப் பக்தன் தீர்த்தமும் பிரசாதமும் பெற்றுச் செல்லும்போது பாதி ராத்திரியாகிவிடும். நோயுற்றும், கஷ்டங்களில் துன்புற்றும் எங்கிருந்தெல்லாமோ பெனுகொண்டாவுக்கு வருவார்கள். சுவாமிஜீயின் மூலமாக சாயிபாபாவின் ஆசிகளையும் தீர்த்தப் பிரசாதங்களையும் பெற்று, சுகமும் மகிழ்ச்சியும் மனத்தை நிரப்பத் திரும்பிச் செல்வார்கள். பெருஞ் சுமையுடன் வந்து பாரம் நீங்கிய உற்சாகத்துடன் செல்வார்கள்.

மற்ற சந்தர்ப்பங்களைக் காட்டிலும் இந்தப் பூஜை வேளையே சாயி மகாத்மாவைத் தியானித்து அநுபூதி பெற உகந்ததாகும். பாபாவைப் புரிந்துகொள்ளலாம். அவருடன் பேசலாம். அவருடைய அருளுக்கு ஆட்பட்டு அவருடைய ஆசியைப் பெறலாம். தம் கவலையை ஒப்படைத்துவிட்டு பாபாவைத் தூய்மையான இதயத்தோடும் நிர்மலமான மனத்தோடும் அடைக்கலம் புகுந்த பக்தர்கள் எல்லோரும் தத்தம் தகுதிக்கு ஏற்ப, அநுபவங்களைப் பெறுவார்கள். அந்த அநுபூதியை வருணிப்பது எளிதன்று.

சுவாமிஜீயின் பூஜை அறையில் நுழைந்தவுடனேயே புனிதத் தன்மையும் ஒளியும் அமைந்த அந்தச் சூழ்நிலையில் பரவசம் ஆகாத பக்தர்கள் இருக்க முடியாது. பூஜை அறையின் மகிமை, அநுக்கிரகம், அருட்பார்வை எல்லாம் பக்தர்களைப் பனித்திரைபோல் கவிந்து கொள்ளும். தலை மிதப்பதுபோல் தோன்றும். பாபாவின் அருள் நோக்கு, பக்தர்களுக்குப் புல்லரிக்கச் செய்யும். பூஜை அறையில் சாயி மந்திரத்தில் சுவாமிஜீ ஆராதிக்கும் பாபாவின் கூரிய பார்வை, பக்தர்களுக்கு அபயமளிக்கும். அந்தக் கண்களிலிருந்து இரக்கமும், அன்பும், பரிவும் பெருகி ஓடும். சந்நிதியில் நின்று பாபாவைப் பார்த்தால், அசாதாரணமான, விவரித்துச் சொல்ல முடியாத அநுபூதி

ஏற்படும். அந்தக் கம்பீரம் பக்தர்களை நடுங்கவைத்தாலும் அவர்களுக்கு உறுதியையும் ஆசையென்னும் ஒளியையும் கொடுக்கும். தடுப்பதுபோல் காணப்பட்டாலும் அமைதியையும் இன்பத்தையும் தரும். சாயிபாபாவின் படத்தருகே அமைதியே உருவாய் அமர்ந்திருக்கும் சுவாமி கேசவய்யாஜி, பாபாவின் ஆசிகளை நமக்கு அள்ளித் தருகிறார் என்று நினைக்காத பக்தர்களே இல்லை. அது மட்டுமா! மண்டபத்தில் இருக்கும் சாயிநாதனுக்கும் அருகே உட்கார்ந்திருக்கும் அவருடைய பக்தரான கேசவய்யாஜிக்கும் எடுத்துக் காட்டமுடியாத ஒற்றுமை தெரியும். சாயிபாபாவுக்கும் கேசவய்யாஜிக்கும் இடையே ஏதோ பேச்சு நடப்பதுபோல் காணப்படும். அந்த நான்கு கண்களும் தமக்குள் பேசுவது போலவே தோன்றும். ஸ்ரீ கேசவய்யாஜியை ஏதோ ஒரு திவ்ய தேஜஸ் ஆட்கொண்டது போலும், பாபா தம் பக்தனை ஊக்குவித்து தரிசனத்துக்காக வந்த பக்தர்களுக்கு யோசனை சொல்லச் செய்வதுபோலும் ஆசிகளை அருள்வது போலும் தெரியும். பாபாவின் மனோபாவத்தையே சுவாமிஜி நமக்குத் தெரிவிக்கிறார் என்றும் நம்பிக்கை உண்டாக்கும். பக்தர்கள் பலர், சாயிபாபாவும் சுவாமிஜியும் ஒன்றே என்பதைக் கவனித்து அநுபவித்திருக்கிறார்கள். இந்த அறிவின் பயனாகச் சுகத்தையும் அமைதியையும் பெற்றிருக்கிறார்கள். நேரில் பெனுகொண்டா வந்தோ, அல்லது கடித மூலமாக எழுதியோ தத்தம் துன்பங்களை நமது—இந்த சாயிபாபாவிடம் கொட்டி முறையிட்டவர்கள் பலர் இருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களுக்கு, பாபா தம் படத்திலிருந்து வெளியே வீசும் உயிருள்ள பொருள் பொதிந்த பார்வை மூலமாகவும் தன் வாக்காகிய பக்த கேசவய்யாஜியின் வழியாகத் தேறுதல் சொல்லி அவர்களைக் காக்கிறார். சுவாமி கேசவய்யாஜியின், பேச்சு, செயல், எழுத்து எல்லாவற்றிலுமே பக்தர்கள் பாபாவின் குரலைக் கேட்கிறார்கள். சாயிபாபாவிடமிருந்து எவ்வளவு திருப்தியையும் சந்தோஷத்தையும் பெறுகிறார்களோ அவ்வளவு திருப்தியையும் சந்தோஷத்தையும் சுவாமி கேசவய்யாஜியிடமிருந்தும் பெறுகிறார்கள். சுவாமிஜியின் பேச்சில் பாபாவின் குரலைக் கேட்கிறார்கள். அவருடைய செய்கைகளில் பாபாவின் தன்மையை உணர்கிறார்கள்.

ஸ்ரீ கேசவய்யாஜி வாழ்க்கை நடத்தும் முறை எவ்வளவு பெருமையைக் கொண்ட யோகிக்கும் கௌரவம் தருவதாகவே இருக்கிறது. அவர் அசாதாரணமானவர், உத்தமர் என்று தைரியமாக எடுத்துச் சொல்லலாம். அப்படிப்பட்ட பரம பாகவதோத்தமரிடம் சாயிபாபா அன்பு வைத்தாரென்றால் பாபா தம்மை அவருக்குக் காட்டியது போலவே அவரைப் பக்தர்களுக்குக் காண்பிக்கிறார்' என்பதில் ஆச்சரியப்பட வேண்டியதில்லையே. அவ்வளவு ஏன்? சாயிபாபா சுவாமி கேசவய்யாஜியில் வாழ்கிறார்.



பெணுகொண்டா சாயி மந்திரில் சுவாமிஜி பூஜித்து வந்த
ஸ்ரீ சாயி பாபா படம்



பெனுகொண்டாவில் உள்ள ஸ்ரீ சாயி மந்திரம்



பெனுகொண்டாவில் சுவாமி கேசவய்யாஜி குடியிருந்த வீடு

ஸ்ரீ அருளுக்காகவே—அவருடைய கடாக்ஷத்தைப் பெற்றுத்தம் விருப்பங்களை முடித்துக்கொள்வதற்காகவே- பெனுகொண்டாவுக்கு வந்த பக்தர்களுடைய அநுபவங்களை நாள் கணக்கில் சொல்லிக் கொண்டிருக்கலாம். எழுதினுல் பல புத்தகங்கள் எழுதலாம். கேசவய்யாஜீயின் தரிசனத்துக்காக வரும் பக்தர்களை வரவேற்று வசதி செய்வது மண்டலிக்கு ஒரு பெரும் பிரச்னையாகி விட்டது. தவிர, யார் வேண்டுமானுலும் பாபாவை வழிபடுவதற்கு ஒரு கோயில் இல்லாத குறையும் நன்ருகத் தெரிந்தது. இந்த இரண்டு குறைகளையும் ஸ்ரீ கேசவய்யாஜீ கவனித்த அளவுக்கு வேறு யாரும் கவனிக்கவில்லை. இந்தக் குறைகளை நீக்குவதற்காக அவர் உழைத்த அளவு தீவிரமாக வேறு யாரும் உழைக்கவில்லை. இப்பொழுது இங்கே ஆரம்பவிழா நடந்து கொண்டிருக்கும் இந்த சாயி மந்திரம் (கோயில்) சுவாமிஜீயின் ஆடம்பரம் அற்ற உழைப்பும் அவருடைய பக்தர்களது உதார குணமும் எழுப்பியதேயாகும்.

"ஸ்வாமி கேசவய்யாஜீயின் வியாழக்கிழமைப் பூஜையைப்பற்றி மற்ருெரு விஷயம் சொல்ல வேண்டியிருக்கிறது. பாபாவை தரிசிக்க வரும் பக்தர்கள், பழம், பூ, பூஜாதிரவியங்களுடன் தங்கள் சக்திக்கு ஏற்றபடி தட்சிணையும் வைப்பார்கள். சுவாமிஜீ பக்தர்களுக்குத் தீர்த்தப் பிரசாதங்கள் வழங்கும் போது இந்தத் தட்சிணையையும் திருப்பிக் கொடுத்து விடுவார். தங்களுடைய தட்சிணையை, பாபா மறுத்து விட்டாரென்ற கருத்தில் பல பக்தர்கள் வருந்துவார்கள். ஸ்வாமி தட்சிணையை மறுக்கவில்லை. அது அவருடைய எண்ணமும் இல்லை. இருந்தாலும் பக்தர்கள் மிகவும் வருந்துவார்கள். பக்தர்களுக்கு அந்த வருத்தம் ஏற்படாமலிருக்கவும் அவர்கள் தவருக நினைப்பதைத்தடுக்கவும் கடைசியில் ஒரு வழி கண்டு பிடித்தோம். தட்சிணைகளை யெல்லாம் சேமித்துவைத்து, பாபாவின் உற்சவங்களுக்குப் பயன் படுத்த எண்ணிேம். அவ்வாறே நிதி ஒன்று ஏற்படுத்தி, பக்தர்கள் தரும் தட்சிணைகளை அதில் சேமித்து வைத்து, பாபா மகா சமாதி விழாவன்று ஏழைகளுக்கு அன்னதானம் செய்ய அந்த நிதியை உபயோகித்து வந்தோம்.

பாபாவின் அருளாலும் ஸ்வாமிஜீயின் உழைப்பாலும் பெனுகொண்டாவில் சாயி மந்திரம் ஏற்பட்டது. நாளடைவில் தக்ஷிண சீரடி என்று பிரசித்தியடைந்தது. இதை 1948-ஆம் ஆண்டு மே மாதம் 23-ஆம் தேதியன்று சென்னை அரசாங்கத்துக் கைத் தொழில் இலாக்கா மந்திரியான ஸ்ரீ எச். சீதாராமரெட்டி ஆரம்பித்து வைத்தார்.

இந்த விழாச் சந்தர்ப்பத்தில் ரிஷிகேசத்திலிருந்து அருள்வழி சங்கத் (டிவைன் லைஃப் சொசைட்டி) தலைவர் சாயி பக்த ஸ்வாமி கேசவய்யா ஜீக்கு அனுப்பிய வாழ்த்துச் செய்தியுடன் இந்த அத்தியாயத்தை முடிக்கிறேன்.

## அன்பு மிக்க-பூஜிக்கத் தக்க ஆத்மாவே!

சாஷ்டாங்க நமஸ்காரங்கள், ஓம் நமோ நாராயண!

"ஸ்ரீ சாயிமந்திரப் பிரவேசோத்ஸவம் கூடிய புண்ணியகாலத்தில், பாரத தேசத்து மகாயோகியும் சித்தரும் ஆன ஸ்ரீ சாயிபாபாவுக்கும் அவருடைய பக்தர்கள் எல்லோருக்கும் முக்கியமாக இந்த 'மந்திரம்' யாருடைய குற்ற மற்ற சேவையால் உருவாயிற்றோ அப்படிப்பட்டதங்களுக்கும் மிக வணக்கத்துடன் நமஸ்கரிக்.

"ஸ்ரீ சாயிபாபா தெய்வாம்சமாகப் பிறந்தவர், தெய்விகத் தன்மை பெற்ற மகான்; ஞானி. சேவை, தியான மார்க்கம், பக்தி மார்க்கம் ஆகிய எல்லாம் அவரிடம் ஒன்று சேர்ந்திருக்கின்றன. எல்லாமதங்களையும் இணைப்பதற்கு சாயிநாத் விராட்-இன்று பாரத நாட்டுக்கு மிக மிக அவசியமான ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையை அன்றைக்கே பாபா வலியுறுத்தினார். அவர் அப்படி வாழ்ந்து ஒற்றுமையைப் பிரசாரம் செய்தார். அவர் பக்தியே உருவானவர். தியான மூர்த்தி. உலகம் இப்பொழுதாவது அவருடைய உபதேசத்தைக் கடைப் பிடித்துப் போருக்கும் அழிவுக்கும் செல்லும் வழியை விட்டு விட்டு நல்வழியில் செல்ல வேண்டும் என்று விரும்புகிறேன்.

"இந்தப் புனித மந்திரம் எல்லோருக்கும் எப்பொழுதும் அமைதியையும் சௌக்கியத்தையும் ஆனந்தத்தையும் காவலையும் அருளட்டும்.

உலகின் நாற்புறங்களிலிருந்தும் பக்தர்கள் சாயிபாபாவின் திருவடிக்கமலங்களில் சேர்ந்து இந்த மந்திரத்தில் ஸ்தாபிக்கப் பெற்ற ஞான ஜோதியிலிருந்து தங்களுடைய ஆத்ம ஜோதியை ஏற்றிக் கொள்ளட்டும். பகவானாகிய ஸ்ரீசாயிபாபா நம் எல்லோரையும் ஆசீர்வதிக்கட்டும்."

எவ்வளவு மைல் தூரத்தில் தம் பக்தர்கள் இருந்தபோதிலும் ஸ்ரீ சாயிபாபா அவர்களை சீரடிக்கு வரவழைத்துக் கொள்வார். ஸ்ரீ ஸ்வாமி கேசவய்யாஜீயின் விஷயமும் அப்படித்தான். அவர் பெனு

கொண்டாவில் இருக்கும் போதே கல்வியில் வல்லவர்களும் உயர்ந்த அதிகாரிகளும், செல்வந்தர்களும் எல்லா வகுப்பினரும் எல்லா மதத்தினரும் அவரிடம் வருவார்கள். எல்லோரும் தம் முற் பிறவியின் புண்ணியம் காரணமாகவும் இப் பிறவியில் செய்த தான தருமங்களின் பயனாகவும் பாபாவின் அருளுக்கு இலக்கானார்கள். ஸ்ரீ பி.என். தத்தார் அப்படித்தான் வந்தார் அப்பொழுது அவர் பெல் காம் சட்டக் கல்லூரியில் உதவிப் பிரின்ஸிபாலாக இருந்தார். பிறகு அரசியலில் ஈடுபட்டு மத்திய அரசாங்க உள்துறை இலாக்கா ராஜாங்க மந்திரி பதவி ஏற்றுத் திறமையாக நிருவகித்தார். சமீப காலத்தில்தான் சாயி திருவடிகளில் சேர்ந்தார். அவர் 1946 ஆகஸ்டு சாயிஸுதாவில் ஸ்வாமி கேசவய்யாஜீயைத் தரிசித்தபின் பெற்ற அநுபவங்களைப் பற்றி அழகாக எழுதியிருக்கிறார். ஸ்வாமி ஜீயைப் பற்றி அவ்வளவு திறமையாகவும் சுருக்கமாகவும் எழுதிய வர்களும் எழுதப்போகிறவர்களும் இல்லை.

சாயி பக்த கேசவய்யாஜீயுடன் வெகு நேரம் பேசும் அதி ருஷ்டம் எனக்குக் கிடைத்தது. தமது சொந்த விஷயங்களைப் பற்றிப் பேசும் போது 1939-ஆம் ஆண்டில் பாபாவின் பக்தர் ஆவதற்கு முன்னால் தம் கருத்துக்கள் எப்படியிருந்தன என்பதைப் பற்றி அவர் சொன்னார். ஆங்கிலக் கல்வி கற்ற பலரைப் போலவே இவரும், ''கடவுளா, யார் அது? எங்கே இருக்கிறார்?'' என்று கேட்கும் மன நிலை உள்ளவராய் இருந்திருக்கிறார். அவர் அரசாங்க உத்தியோகஸ்தர் ; அதிலும் சப்ரிஜிஸ்திரார் வேலை. கடவுளைப்பற்றி நினைக்க வேண்டிய தேவை இல்லை. ஒய்வு கிடைக்கவே கிடைக்காது.

இரண்டாவது உலகப்போர் தொடங்குவதற்கு இரண்டு மாதங்களுக்கு முன் ஸ்ரீ கேசவய்யா ஒரு வக்கீல் நண்பர் வாயிலாக சாயிபாபாவின் பெயரைக் கேட்டார். அவரை வழிபட்டால் கஷ் டங்கள் விலகிவிடுமென்று அந்த நண்பர் சொன்னார். அன்றைக்கே சாயிபக்தர்களுக்கு அதிர்ஷ்டம் அடித்தது. புண்ணியம் பலித் தது. அன்றிரவே சாயிபாபா கேசவய்யாஜீக்குத் தரிசனம் தந்தார். கேசவய்யாஜீயின் மனது பாபாவினிடம் லயித்தது. இவருடைய இதயத்தில் பாபாவின் விக்கிரகம் நிலைபெற்றது. அன்று முதல் ஸ்ரீ கேசவய்யாஜீ பாபாவுக்குள்ளே வாழ்கிறார். பாபாவும் நம் ஸ்வாமி ஜீயைத் தம் கருவியாக உபயோகிக்கத் தொடங்கினார். கேசவய் யாஜீன் உதவியும் ஆசியும் கிடைத்தால் பாபாவின் அருளுக்கு ஆளா வது எளிது. ஸ்ரீ கேசவய்யாஜீ பாபாவின் சேவைக்காகத் தம் வாழ்க்கையை அர்ப்பணித்து விட்டார். பாபாவின் சேவைக்காக இனிமேல் சர்வ சங்க பரித்தியாகம் செய்யவேண்டியிருக்கும் என்று ஸ்வாமிஜீ என்னிடம் சொன்னார். இந்த நிலைக்கு வர. வெகு காலத் துக்கு முன்பே தயாராகி விட்டார்.

ஸ்ரீ கேசவய்யாஜீ வியாழக்கிழமை தோறும் செய்யும் பாபாவின் பூஜையை முதல் முதலில் பெனுகொண்டாவில் பார்த்தேன். 1946-ஆம் ஆண்டு, மே மாதம் 30-ஆம் தேதியன்று நான் குடும்பத்தாருடன் பெனுகொண்டாவுக்குப் போனேன். அதற்குமுன்பே கடிதப் போக்குவரத்தால் ஸ்ரீ கேசவய்யாஜீயுடன் எனக்குப் பழக்கம் ஏற்பட்டிருந்தது. என் பெண்களுடைய கல்யாண விஷயம் அவர் சொன்னபடிதான் நடந்தது. அதனால் ஸ்ரீ கேசவய்யாஜீயை நேரில் தரிசிக்க வேண்டுமென்ற ஆசை உறுதிப்பட்டது. வியாழக்கிழமைகளில் அவர் பாபாவுக்குப் பூஜை செய்வதைக் காணவேண்டுமென்ற ஆசையும் மேலிட்டது.

விஜய நகர மன்னர்களுடைய கோடை வாசஸ்தலமாய் இருந்து வரலாற்றுப் புகழ் பெற்ற பெனுகொண்டா ஆத்மிகத்தில் அவ்வளவு முக்கியத்துவம் பெறவில்லை. ஸ்ரீ கேசவய்யாஜீ உத்தியோக முறையில் பெனுகொண்டா வந்ததாலும் அவர் வியாழக்கிழமைகளில் பாபா பூஜை செய்து வந்ததாலும் இந்த நகரம் ஆத்மிகச் சிறப்பைப் பெற்றுவிட்டது. இந்த வியாழக்கிழமைப் பூஜைக்கு மக்கள் எங்கிருந்தெல்லாமோ வருகிறார்கள். ஸ்வாமி கேசவய்யாஜீயின் பூஜைமுறையைக் கண்டு நான் பரவசம் அடைந்தேன். அந்தக் கணத்தில் ஏதோ பெரிய மாறுதல் ஏற்பட்டது. பூஜை அறையில் ஸ்வாமிஜீயின் எதிரில் சாயிபாபாவின் சந்நிதியில் நின்றபோது ஏதோ சொல்லமுடியாத அபூர்வ அநுபூதி கிடைத்தது. ஸ்ரீ கேசவய்யாஜீயின் முகத்தில் அற்புதமான திவ்விய ஒளி எனக்குத் தெரிந்தது.

ஸ்ரீ கேசவய்யாஜீ வசிக்கும் வீடு மிகவும் பெரியது. அந்தப் பெரிய வீட்டில் பெரியதான அறையை, அவர் சாயி மந்திரமாக பூஜை அறையாக — மாற்றி விட்டார். அறைச் சுவர்களில் வேங்கடேசப்பெருமாள், தத்தாத்திரேயர் முதலியோரின் மூவர்ணப் படங்கள் வெகு அழகாக மாட்டப் பெற்றிருந்தன. வியாழக்கிழமையன்று பூஜைக்கு இரண்டுமணி நேரத்துக்கு முன்பிருந்தே ஸ்வாமிஜீ தாமே அந்தப் படங்களைத் துடைத்து, பூஜை அறையையும் சுற்றுப்புறங்களையும் நன்றாகச் சுத்தம் செய்வார். அறையில் உள்ள தெய்வப் படங்களைப் பூமாலைகளால் அழகாக அலங்கரிப்பார். ஊதுபத்திகளைக் கொளுத்திப் படங்களின் அருகே சொருகி வைப்பார். அத்தரையும் பன்னீரையும் தெளிப்பார். சுற்றுப்புறம் எல்லாம் பூஜைப் புஷ்பங்களின் வாசனையாலும் அத்தர், பன்னீர், ஊதுபத்திகளின் 'கம்' மென்ற மணத்தாலும் சந்தோஷத்தைக் கொடுப்பதாகவும் ஆனந்தம் தருவதாகவும் அமைந்து மனத்துக்கு உல்லாசத்தைத் தரும்.

"ஸ்ரீ கேசவய்யாஜி சாயி அறையைத் தாமே அலங்கரித்து முடித்து, பட்டாடைகளை அணிந்து ஸ்ரீ சாயிபாபாவின் சித்திரம் வரைந்த படத்தை அமர்த்திய மண்டபத்தின் அருகே பத்மாசனம் இட்டுத் தியானத்தில் ஆழ்ந்து விடுவார். உள்ளே நுழையும் போதே அறைக் கதவை மூடிக்கொள்வார். சுமார் இரண்டு மணி நேரம் ஏகாந்தமாக சாயிபாபாவைத் தியானிப்பார். பிரார்த்தனை முடிந்தபின் பாபாவுக்கு நிவேதனம் செய்து ஹாரத்தி எடுத்த பின் பூஜை அறையின் கதவைத் திறப்பார். ஸ்வாமிஜீயைத் தரிசித்துக் கொண்டு தீர்த்தமும் பிரசாதமும் பெற வந்திருக்கும் பக்தர்கள், ஓசைப்படாமல் பூஜைச் சாமான்களைக் கையில் வைத்துக் கொண்டு, மனத்தை ஸ்வாமிஜியுடன் இணைத்துப் பார்வையைப் பூஜை அறை கதவின் மேலேயே செலுத்தி, அழைப்புக்காகக் காத்திருப்பார்கள். அது போன்ற ஒழுங்குப் பயிற்சியை வேறு எங்குமே காண முடியாது.

"பக்தர்கள் பல நூற்றுக் கணக்கில் இருந்தாலும் சுவாமிஜீ தம் கையாலேயே அவர்களுக்குத் தீர்த்தப் பிரசாதங்கள் தருவார். ஒவ்வொருவருடைய கேள்விக்கும் பதில் சொல்லுவார். அந்தப் பதில்கள் சரியாகவும் திருப்தியாகவும் இருப்பதாகப் பக்தர்கள் எல்லோரும் சொன்னார்கள். சாயிநாதனே ஸ்ரீ கேசவய்யாஜியின் வாயிலாகப் பதில் சொல்லுவதுபோல் தோன்றும்.

எழுத்தறிவு இல்லாதவர்களும் மூட நம்பிக்கை உள்ளவர்களும் தான் வியாழக்கிழமைப் பூஜைக்கு வருகிறார்கள் என்பதில்லை. கற்ற அறிஞர்களும் அயல்நாடு சென்று விஞ்ஞான அறிவு பெற்றவர்களும் உயர்ந்த பதவியில் உள்ள அதிகாரிகளும் சாமானியர்களும் கூட ஸ்வாமி கேசவய்யாஜி செய்யும் வியாழக்கிழமைப் பூஜைக்கு வருகிறார்கள்.

சில நாட்களுக்குமுன் ஸ்ரீ கேசவய்யாஜி சென்னையில் நடத்திய பூஜைக்கு மூன்று நான்கு ஐ.ஸி.எஸ். உத்தியோகஸ்தர்களும் வந்திருந்ததாகக் கேள்விப்பட்டேன். ஆந்திர நாட்டில் ஸ்ரீ கேசவய்யாஜீயின் புகழ் மிகவும் அதிகரித்துவிட்டது. குண்டூர், தெனாலி, சிராளா, ரேபல்லி, ஏலூரு, ஹைதராபாத் முதலிய நகரங்களில் ஸ்வாமிஜீ செய்த சாயி பூஜைகளுக்குப் பக்தர்கள் ஆயிரக் கணக்கில் வருவார்கள் என்று கேள்விப்பட்டேன்.

"நான் பெனுகொண்டாவுக்குப் போனபோது ஸ்வாமிஜீயிடம் அவ்வளவு பிடிப்பு ஏற்படவில்லை. சாயிபாபாவிடம் பக்தியும் இல்லை. சந்தேகத்துடனும் விமரிசன நோக்குடனும் நான் பெனுகொண்டாவுக்குப் போனேன். அதற்கு முன்பே பத்திரிகைகளில் ஸ்வாமிஜீயின் கட்டுரைகளையும் உபந்நியாசங்களையும் படித்தேன்; சிரத்தையுடன் தான் படித்தேன். அவருடைய சக்தியைப் பற்றியும் சாதனையைப்

பற்றியும் மற்றவர்கள் பெருமையாகச் சொல்லுவது எனக்கு வியப்பை உண்டாக்கியது. எல்லாம் ஆத்மஸ்துதி என்றே எனக்குத் தோன்றியது. இவருக்கு அகங்காரமும் அகம்பாவமும் அதிகமாகி விட்டதோ?' என்று நினைத்தேன். இந்த அபிப்பிராயத்துடனும் பாவத்துடனும் ஸ்ரீ கேசவய்யாஜீயைப் பார்க்கப் பெனுகொண்டா வுக்குப் போனேன். அவர் செய்யும் பூஜையைப் பார்த்தேன். அவரு டைய உபந்நியாசங்களைக் கேட்டேன். என் கருத்து தவறு என்றும் என் அபிப்பிராயம் சரியல்ல என்றும் உடனே தெரிந்துகொண் டேன்.

சாயிபாபாவிடம் ஸ்வாமிஜீக்கு உறுதியான பக்தி இருக்கிறது; அசைக்க முடியாத நம்பிக்கையும் இருக்கிறது. பக்தர்களை பாபா, காப்பாற்றியே தீருவார் என்று ஸ்வாமிஜீ ஆணித்தரமாக வாதிப் பார். பாபாவிடம் அவருக்குள்ள நம்பிக்கையிலிருந்து இந்த வாதத் துக்குப் பலம் கிடைக்கிறது. சாயிபாபாவின் வழிகள் அபூர்வ மானவை. யூகித்து அறியமுடியாதவை -ஸ்ரீ கேசவய்யாஜீ வாயிலாக அந்த வழிகள் நமக்குச் சிறிது தெரிகின்றன. ஸ்ரீ கேசவய்யாஜீ பாபா வின் கையிலுள்ள ஓர் கருவி: வெறும் கருவிதான்''

ஸ்வாமிஜீ வியாழக்கிழமையன்று செய்யும் பூஜையைப் பற்றிப் பக்தர்கள் பலர் எழுதியிருக்கிறார்கள். ஸ்ரீ பி.என். தத்தார் விவ ரித்துச் சொன்ன பின்பு ஸ்வாமிஜீயின் பூஜை முறையைப் பற்றி மறுபடியும் எழுதவேண்டிய அவசியம் இல்லை. ஸ்வாமிஜீயின் பூஜைக் குப்பிறகு பக்தர்கள் பெற்ற அநுபவம் தான் முக்கியம். பக்தர்கள் எல்லோருடைய எல்லா அநுபவங்களையும் நூலாக எழுதுவது முடியாது. அந்த அநுபவங்களே சில பாகமாகும். தனியாகச் சேகரித்துக் கிடைத்ததை மட்டும் இங்கே எழுதுகிறேன். பக்தர் களுடைய அநுபவப் பகுதியைத் தொடங்குவதற்கு முன் ஸ்வாமி ஜீயின் பூஜையைப் பற்றி ஸ்ரீ பி.வி. நரசிம்மசுவாமிகளும் திவான் பகதூர் ஸ்ரீ கே.எஸ். ராம சுவாமி சாஸ்திரிகளும் வேறு சிலரும் எழுதிய முக்கிய விஷயங்களை வாசகர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். ஸ்ரீ தத்தார் 1941ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் சாயிஸுதா இதழில் எழுதிய மனக்கிளர்ச்சியைத் தூண்டும் கட்டுரையின் அநு பந்தமாக 1948-ஆம் ஆண்டு மே மாதம் பெனுகொண்டா சாயி மண்டலியார் வெளியிட்ட "சாயி பக்தியின் பிறப்பும் வளர்ச்சியும்" என்னும் கையேட்டுக்கு ஸ்ரீ தத்தார் அறிமுகம் எழுதினார். அந்தக் கட்டுரையை அப்படியே வெளியிடாமல் முக்கியமான பகுதிகளை மட்டும் சொல்லுகிறேன்.

"ஸ்ரீ கேசவய்யாஜீ சிறந்த சாயிபக்தர். பாபாவின் பெயர், புகழ், சித்தாந்தம், நல்லுரைகள் ஆகியவற்றை நாட்டின் பத்துத் திசைகளிலும் பரவச் செய்வதற்காகத் தெய்வம் ஸ்ரீ கேசவய்யாஜீயைத் தேர்ந்தெடுத்தது போல் தோன்றியது. நோயாலும் வறுமையாலும் அவதிப்படும் மானிட வர்க்கத்துக்கு சாயிபாபா இவர் வாயிலாக உதவியைச் செய்கிறார்.

"1946—47ஆம் வருடங்களில் கோடை விடுமுறைகளில் பெனுகொண்டாவில் ஸ்ரீ கேசவய்யாஜீயைச் சந்தித்தேன். அதற்கு முன் எங்கள் இருவருக்கும் வேண்டிய நண்பர்களாலும் சுவாமிஜீ எழுதிய கட்டுரைகள் வாயிலாகவும் அவரைப்பற்றித் தெரிந்து கொண்டேன். என் முதல் தரிசனத்தின் போது ஏற்பட்ட அனுபவங்களைப் பற்றி 1946 ஆகஸ்ட் சாயி ஸுதாவில் எழுதினேன் அதைப் பார்த்த என் நண்பர்கள் சிலர் என்னைப் பரிகசித்தார்கள். நான் குருட்டுத்தனமாகச் சுவாமிஜீயின் மயக்கத்தில், கண்கட்டு வித்தையில் சிக்கி விட்டதாகப் பேசினார்கள். இப்படி விமர்சித்தவர்கள் எப்படிப் பட்டவர்கள்? ஸ்ரீ கேசவய்யாஜீயைபற்றி அரைகுறையாக அறிந்தவர்கள். சுவாமிஜி செய்த அசாதாரணமான பிரகடனத்தால், அந்தப் பிரகடனங்கள் பிற்காலத்தில் நிஜமாகப் போகின்றன- ஒரே குழப்பத்தில் ஆழ்ந்துவிட்டவர்கள். பாபாவின் ஆதரவின் கீழ் இருந்த போது அவருடைய வழக்கத்துக்கு மாறான குழந்தைச் சேஷ்டைகளால் ஆச்சரியமடைந்தவர்கள். இந்த விமர்சனங்களின் காரணமாகக் கடந்த பதினெட்டு மாதங்களாக நான் என் உள்ளத்தையே நன்கு ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறேன். தீவிரமாக இப்படிச் செய்து வருகிறேன். ஸ்வாமி கேசவய்யாஜீயின் அரும் பெரும் உழைப்பைப் பற்றியும் பாபாவின் பக்தராய் அவர் நிகழ்த்தும் மகிமைகளைப் பற்றியும் அந்தக் கட்டுரையில் நான் எழுதிய ஒவ்வோர் எழுத்துக்கும் நான் இன்னும் கட்டுப் பட்டுத்தான் இருக்கிறேன். அதில் ஒரு சொல்லைக் கூட மாற்ற வேண்டாம் என்று சொல்கிறேன். உலக ஆசைகளிலும், கட்டுப்பாடுகளிலும் சிக்குண்டு அதோகதியில் இருந்து மேலேவர நினைக்கும், இருட்டிலிருந்து வெளியே வர முயலும் மக்களின் முன்னேற்றத்துக்கு ஸ்ரீ சாயிபாபா புரட்சிகரமான ஆச்சரியகரமான வழிகளில் ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீயின் வாயிலாக வேலை செய்கிறார். சில சித்தர்களும் யோகிகளும் பக்தர்களுடைய லௌகிகப் பிரச்னைகளைத் தீர்க்கும் விஷயத்தில் உதவப் பின்வாங்குவார்கள். பாபா அப்படி இல்லை. பக்தர்களுடைய லௌகிகத் துன்பங்களை முதலில் நீக்கி விட்டு அவர்களுக்கு எந்த விதக் கவலையும் இல்லாமல் செய்து அதன் பிறகு அவர்களுக்கு ஆத்மிக மலர்ச்சி ஏற்படச் செய்வார். உலகத்தைச் சீரமைக்கும் மாபெருஞ் செயலை நிர்வகிக்க சீரடிசித்தர்

சுவாமி கேசவய்யாஜியைத் தயார் செய்து கொண்டிருக்கிறார் என்று நான் நம்புகிறேன். ஸ்ரீ.பி.வி. நரசிம்மசுவாமியும் ஸ்ரீ. எஸ்.பி. கேசவய்யாஜியும் தென்னாட்டு மூலை முடுக்குகளில் கூட சாயி பாபாவின் உபதேசங்களை எட்டச் செய்யும் பரம பக்தர்கள் ஆவார்கள்.

''வியாழக்கிழமை யன்று ஸ்ரீ கேசவய்யாஜி செய்யும் பூஜையும் பூஜைக்குப்பின் ஒவ்வொரு பக்தருக்கும் வருங்காலத்தைப் பற்றி அவர் சொல்லும் விஷயங்களும் என்னை முழுதும் மெய்ம்மறக்கச் செய்துவிட்டன. பூஜை அறைக்கு அருகே நான் நின்ற போது அங்கே சாயிபாபா இருப்பதாகவே நான் உணர்ந்தேன். சுவாமி ஜியின் பூஜைக்கு ஆஜரானபோது எனக்கு ஓர் எழுச்சியும் பரவசமும் உண்டாயின. இந்த அநுபூதி என்றைக்கும் மறக்க முடியாதது.

''என்னையும் என் குடும்பத்தையும் என் நண்பர்களையும் சாயி பக்தி, ஆத்மஞானம் என்னும் வழியில் ஸ்ரீ கேசவய்யாஜி நடத்தி வருகிறார். வேறு சில பக்தர்களுக்கும் எனக்கும் இந்த பக்தி வாயிலாக சாயிபாபா பிரத்யக்ஷமாக இருக்கிறார். பேசும் பேச்சுக்களிலும் செய்யும் வேலைகளிலும் சுவாமி கேசவய்யாஜி, கர்வமும் அகங்காரமும் இல்லாமல் நடந்து கொள்கிறார் என்று நான் நம்புகிறேன். ஸ்ரீ சாயிபாபா தம் மூலமாக வேலை செய்கிறார். என்றும் ஆனந்தத்தால் தோன்றிய தன்னம்பிக்கையோடு பகவானுடைய குழந்தைபோல் வாழ்ந்து வருகிறார்.

''காலப் போக்கில் சாயிபக்தி பரவவும் தினந்தோறும் வளர்ந்து வரும் துன்பத்தில் அவதியுறும் மனித கோடிகளுக்குப் பாபாவின் அமோகமான உதவியை எட்டச் செய்வதற்கும் ஸ்ரீ கேசவய்யாஜி நியமனம் பெறப் போகிறார்.

''பாபாவின் பக்தர்களுள் பிரமுகரும் அகில பாரத சாயி ஸமாஜத் தலைவருமான ஸ்ரீ பி.வி. நரசிம்ம சுவாமிஜீ ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீ பெற்ற மகிமைகளைப் பற்றிப் பல சந்தர்ப்பங்களில் சொல்லியிருக்கிறார். தம் உபந்நியாசங்களால் நூற்றுக்குப் பத்துப் பேர் பயனடைந்தால் சுவாமி கேசவய்யாஜீயின் பூஜையால் நூற்றுக்குத் தொண்ணூறு பேர் பயனடைகிறார்கள் என்று ஸ்ரீ நரசிம்ம சுவாமி சொன்னதை வாசகர்கள் ஏற்கனவே கவனித்திருப்பார்கள்''

## ஸ்ரீ பி. வி. நரசிம்ம சுவாமியின் முன்னுரை

இந்தச் சிறு புத்தகத்தில் ஹைதராபாத் ரேடியோவில் 19-5-45 இல் ஸ்ரீ சாயிபாபாவைப் பற்றி ஸ்ரீ எஸ்.பி. கேசவய்யா பேசிய தெலுங்குப் பேச்சின் ஆங்கில மொழி பெயர்ப்பும், தெலுங்கில் சாயி நாத அஷ்டகம் முதலியவைகளும் அடங்கியுள்ளன. இதற்குச் சுருக்கமான ஒரு முகவுரை எழுதும் வாய்ப்புக் கிடைத்ததற்கு மகிழ்கிறேன்.

வெகுவிரைவில் ஸ்ரீ எஸ்.பி. கேசவய்யாவின் பல பிரசங்கங்களையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் கையடக்கமான ஒரு புத்தகமாக வெளியிடுவார்கள் என்று எதிர்பார்க்கிறேன். ஸ்ரீ எஸ். பி. கேசவய்யா ஒரு தீவிர சாயி பக்தர். சாயிபாபாவின் படத்துக்கு முன்னால் உட்கார்ந்து பூஜை செய்யும்போது பல மணி நேரம் மனத்தை ஒருமுகப்படுத்திய நிலையில் நிற்பது மட்டும் இவர் பக்தியின் சிறப்பல்ல: அந்தப் பூஜையினால் ஏற்படும் பலன்களும் இதில் அடங்கும். முக்கியமாக வியாழக்கிழமைதோறும் அவர் செய்யும் பூஜையின் சிறப்பான அம்சம் இதுதான். பூஜையில் இருந்த ஒருமுகப்பாடு கலைந்தவுடன் அவர் பூஜை அறைக் கதவைத் திறந்துவிட்டு அதுவரையில் வெளியே காத்திருந்த பக்தர்களை உள்ளே அநுமதித்து விடுகிறார். அந்தச் சமயத்தில் பூஜை அறையில் நுழையும் ஒவ்வொருவரையும் பார்த்து அவர் சொற்கள், அவருக்குத் தெரிய முடியாதபடி வெகு தூரத்தில் நடக்கும் நிகழ்ச்சிகளைச் சுட்டுவனவாக இருக்கின்றன. எதிர்காலத்தைப் பற்றி அவர் சொன்ன செய்திகளும் பலித்திருக்கின்றன.

> கியதா, வியாஸஸ்ச தாஸஸ்ச யயோ நம்ருத்யுனு
> காலஸ்ய க்ருஹம் ஆயாந்தி ததா தாஸோ மரிஷ்யதி

என்ற சுலோகம், எதிர்காலத்தைத் தேவர்களாலும் அறிய முடியாது என்பதைக் கூறுகிறது. இதில் கண்ட நிகழ்ச்சி பின் வருவதாகும். வியாச மகாமுனிவரின் சிஷ்யர்களுள் ஒருவரான தாசர் என்பவர், தம் மரண காலத்தைக் கணக்காக அறிய விரும்பினார். எனவே வியாசரைக் கேட்டார். வியாசர் அவருக்கு இதைச் சொல்ல விரும்பவில்லை. எனவே இருவரும் யமதர்மனிடம் போய்க் கேட்டார்கள். அவருக்கே அது தெரியவில்லை; அவர் மிருத்யுவைக் கேட்கும்படி சொன்னார். அவராலும் இதைச் சொல்ல முடியவில்லை. நால்வரும் காலனிடம் போய் இந்தக் கேள்வியைக் கேட்டார்கள். அதே

நிமிடத்தில் தாசன் இறந்து விழுந்து விட்டான். காலனுடைய கணக்குப் புத்தகத்தில் இந்தச் சுலோகம் இருந்தது; தாசன் எப்போது மரணமடைவான் என்ற கணக்கு அதில் இருந்தது. மற்ற மூவரும் பிறகு தெரிந்து கொண்டார்கள்,

ஒருவகையில் மக்களுக்குத் தெரியாமல் எதிர்காலம் மறைந்து தான் இருக்கிறது. சில கால எல்லைவரை சில தேவதைகளுக்கும் இது தெரியாது. என்றாலும் எதிர்காலம் பற்றிய சில செய்திகள் சில சமயம் மக்களுக்குக் கூடத் தெரியவருகின்றன; ஆனால் இதற்கு ஓர் எல்லை உண்டு. சாயிபாபாவிடம் நம்பிக்கை வைத்துத் தீவிரமான ஒரு முகப்பாட்டைச் சாதிக்க முடியுமானால் வெறும் ஆத்மிக லாபம் மட்டும் கிடைக்கும் என்பதில்லை; மேற்சொன்னது போல் எல்லைக்கு உட்பட்ட எதிர்கால அறிவும் சில சித்திகளும் கூடக் கிடைக்கும்.

ஸ்ரீ எஸ்.பி. கேசவய்யா எதிர்காலம் பற்றிச் சொன்ன பல செய்திகள் ஆச்சரியகரமாகப் பலித்திருப்பதைக் காட்டும் மிகப் பல நிகழ்ச்சிகளை சாயி ஸுதா என்ற பத்திரிகையில் காணலாம். இந்த நிகழ்ச்சிகள் எல்லாம் உண்மையானால் சாயிபாபாவே இவர் என்று ஜனங்கள் நம்பத் தொடங்கிவிடுவார்கள். ஸ்ரீ சாயிபாபாவின் அருளால் தமக்குக் கிடைத்திருக்கும் எல்லைக்கு உட்பட்ட சில சித்திகளால் தாம் சாயி பாபா ஆகிவிடமுடியாது என்பதை ஸ்ரீ எஸ்.பி. கேசவய்யா வெளிப்படையாகக் கபடின்றி ஒப்புக் கொள் கிறார். இந்த அடக்கம், கபடின்மை, உண்மை இவற்றுக்காக இவரை நாம் பாராட்டத்தான் வேண்டும். இந்த மாதிரி சித்திகள் சாதகனது ஆத்மிக முன்னேற்றத்தைக் காட்டுகின்றன. ஸ்ரீ எஸ்.பி. கேசவய்யா நடுவயதுக் காரர். இவர் பல்லாண்டு வாழ்ந்து ஆத்மிக பலத்தால் மேலும் பல சித்திகளைப் பெற்று, இவற்றின் மூலம் மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகி அதனால் மக்களுக்குப்பெரிய பாராட்டுக்கு உரிய சேவை செய்யும் வாய்ப்பைப் பெறுவாராக.

''சுவாமிஜீயின் சாயிபாபா பக்தி மிக ஆழ்ந்தது. ஒரே உறுதியோடும் பிடிவாதத்தோடும் பாபாவின் படத்தின் முன் மணிக்கணக்கில் தியானம் செய்வதிலேயே அவருடைய பாபா ஆரா தனையும் தியானமும் சிறப்படைவதில்லை. பிரார்த்தனைக்குப் பின் கிடைக்கும் பயனிலும் வெற்றியிலுமே அவருடைய பூஜையின் சிறப்பு அடங்கியிருக்கிறது. பூஜை முடிந்தபின் அறைக் கதவைத் திறந்து பக்தர்களுக்குத் தரிசனம் கொடுப்பார். அப்போது சுவாமி கேசவய்யாஜியின் வாயிலிருந்துவரும் ஒவ்வொரு சொல்லும், பக்தர் களுக்குச் சொல்லும் ஒவ்வொரு விஷயமும் வருங்காலத்தில் எப்பொ ழுதோ நடக்கப் போகிறவற்றைக் குறிக்கின்றன. பல சந்தர்ப்பங்

களில் அவர் வருங்கால நிகழ்ச்சியைப் பற்றிச் சொன்னவை உண்மையாயின. (1946—ஜூன் சாயி ஸுதா)

''சாயிப் பிரசார திட்டத்துக்கு உறுதியான மூலஸ்தம்பங்களில் இவரும் ஒருவர். சுவாமிஜீயின் உழைப்பு, முக்கியமாக அவர் நடத்தும் ஸ்ரீ ராமநவமி, மகா சமாதி உற்சவங்கள், இவை ஸ்ரீ சாயிப் பிரசார திட்டத்துக்கு அளவற்ற பலத்தைக் கொடுக்கின்றன. பாபா பக்தர்கள் ஒவ்வொருவருடைய உதவிக்கும் வணக்கத்துக்கும் ஸ்ரீ கேசவய்யாஜீ தகுதியுள்ளவர். ஆழ்ந்த சக்திமிக்க அவருடைய பக்தியின் மூலமாக அவர் பலரை சாயிபாபாவின் திருவடிகளுக்குக் கவர்ந்தார். ஸ்ரீ கேசவய்யாஜீ இப்பொழுதும் இனிமேலும் செய்யும் சேவைக்கு ஸ்ரீ சாயிபாபா வெற்றியைக் கொடுப்பார்.''

(1954-ஏப்ரல் சாயி ஸுதா)

''பெனுகொண்டாவில் சுவாமிஜீயின் பூஜைக்கு அளவற்ற பக்தி சிரத்தையுடன் ஆஜரான பக்தர்களுள் முக்கியமானவர் குத்தி வக்கீலான ஸ்ரீ எஸ். சுப்பாராவ். இவர் பாபாவின் பக்தர். தினந்தோறும் அவர், தம் வீட்டில் சாயிபாபாவைப் பூஜை செய்வார். அவர் சுவாமிஜீயின் பூஜைக்கு ஆஜராகிப் பெற்ற அநுபவங்களையும் மற்ற பக்தர்களுடைய அநுபவங்களையும் பற்றி அவர் சேகரித்த விஷயங்களை 1941 நவம்பர், டிசம்பர் ''சாயி ஸுதா'' சஞ்சிகைகளிலும் பிறகும் வெளியிட்டு வந்தார். சுவாமிஜியை பெனுகொண்டாவில் தரிசித்து அவர் பெற்ற அனுபவங்களை முதலில் சொல்லுவது பொருத்தமாக இருக்கும். ஸ்ரீ சுப்பாராவின் கட்டுரையுடன் இந்த அத்தியாயத்தைத் தொடங்குவோம்:

''ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாஜீ அனந்தபுரம் ஜில்லாவில் வசிப்பவர் 1938-ம் ஆண்டில் அவர், ஒரு மாத காலம் தென்னாட்டுப் புண்ணிய ஸ்தலங்களைத் தரிசித்து வந்தார். அது முதல் தெய்வ பக்தரானார். உத்தியோகஸ்தராக இருந்து, நியாயத்துக்கும் நேர்மைக்கும் உதாரணமாகப் பெயர் பெற்றார். இப்பொழுது அவர் பெனுகொண்டாவில் சப் ரிஜிஸ்திராராக இருக்கிறார். வயது 40 இருக்கும். அவர் 1939 ஜூலை 1-ம் தேதியன்று சாயிபாபாவைப் பற்றிக் கேள்விப்பட்டார். அன்று முதல் அவர், பாபாவின் பக்தரானார். ஆறு மாதங்களுக்குள் மூன்று முறை சீரடிக்குப் போய் வந்தார். பாபா அவரிடம் மிக்க தயை காட்டுகிறார். சமீப காலத்தில் சாயிபாபா, அவர் மீது அன்பைப் பொழிந்திருக்கிறார். அவர் நோய்களைக் குணப்படுத்துவதில் அற்புத சக்தி பெற்றார். நோயாளியை அவர் தொட்டால் போதும், நோய் குறையத் தொடங்கிவிடுகிறது. சில சந்தர்ப்பங்க

ளில் அவரே அந்த நோயை ஏற்றுக்கொண்டு பக்தர்களுக்கு எந்த நோயும் இல்லாமல் செய்வார்கள். பக்தர்களுடைய நோய் தீர்வதும் அப்புறம் அந்த நோயால் சில நாட்கள் சுவாமிஜீ துன்புறுவதும் பல சமயங்களில் நடந்திருக்கின்றன. சில்லறை நோய்களை சாயி பாபாவின் விபூதியைக் கொண்டு தீர்த்திருக்கிறார்.

''ஒவ்வொரு வியாழக்கிழமையும் தம் வீட்டிலேயே அவர் பாபாவைப் பூஜிப்பார். பூஜை முடிந்த பிறகு பக்தர்கள், பூஜைஅறைக்குச் சென்று பாபாவுக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்வார்கள். பாபாவின் ஆசிகளைப் பெறுவார்கள். வாரந்தோறும் பக்தர்கள், இருநூறு தேங்காய்களையும் இரண்டு சேர் சர்க்கரையையும் கொண்டுவருவார்கள். சர்க்கரையைப் பாபாவுக்கு நிவேதனம் செய்துவிட்டுப் பக்தர்களுக்குப் பங்கிட்டுக் கொடுப்பார்கள். பக்தர்கள் எவ்வளவு பேர் இருந்தாலும் எல்லோருக்கும் கொடுத்த பின்பும் பத்துப் பன்னிரண்டு பக்தர்களுக்குக் கொடுக்கும் அளவுக்கு மிஞ்சும்.

''பக்தன் பாபாவுக்குச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்ததுமே ஸ்ரீ கேசவய்யாஜீ பக்தனுடைய மனத்தைத் தெரிந்துகொண்டுவிடுவார். உடனேயே பாபாவிடமிருந்து நேரான பதிலைப் பெறச் செய்வார். இப்படி சுவாமிஜீ, பக்தர்களுக்குச் சொல்லிய பதில்கள் எல்லாம் சரியானவையே. கேள்விகளுக்குப் பதில் கொடுக்கும் சமயத்தில் ஸ்ரீ கேசவய்யாஜீக்குத் தமது நினைவும் தன்மையும் இருக்கமாட்டா. பாபா அவர்மேல் ஆவேசித்திருப்பார். ஸ்ரீ கேசவய்யாஜீ வாயிலாக பதில் கொடுப்பார். நேரில் பூஜைக்கு வர முடியாத பக்தர்கள், கடித மூலமாகத் தங்கள் பிரச்னைகளை சுவாமிஜிக்குத் தெரிவிப்பார்கள். சுவாமிஜி அந்தக் கடிதங்களைப் பாபாவின் எதிரே வைத்து, வரிசையாகப் பதிலைப் பெற்று, உடனே பக்தர்களுக்குத் தெரிவிப்பார். சாயிபாபாவின் உத்தரவில்லாமல் அவர் எதுவும் செய்யமாட்டார். 'வாரத்தில் நாலைந்து நாட்கள், ஒரு நாளுக்கு நூறு கடிதங்கள் வீதம் வந்துகொண்டிருக்கும். மங்களூர், பெங்களூர், யாழ்ப்பாணம், சென்னை, சித்திர துர்க்கம், மதுரை, கும்பகோணம் முதலிய பல பகுதிகளிலிருந்தும் கடிதங்கள் வரும். சாதாரணமாக எல்லாக் கடிதங்களுக்கும் பதில் எழுதுவார். ஏதாவது கடிதங்களுக்குப் பதில் அனுப்பாவிட்டால் அந்த விஷயத்தை அதோடு விட்டுவிட வேண்டும் என்பது பாபாவின் சூசனை.

''அக்டோபர் 16-ம் தேதி வியாழக்கிழமையன்று, பெனுகொண்டா போய் ஸ்ரீ கேசவய்யாஜீயின் பூஜைக்கு ஆஜரானேன். சென்னையிலிருந்தும், பெங்களூரிலிருந்தும் இன்னும் தொலைவிலிருந்

தும் பல பக்தர்கள் வந்திருந்தார்கள். அவர்களுக்கு விபூதியும் பிரசாதமும் கொடுத்து அன்றிரவே அனுப்பிவிட்டார்.

"பாபாவின் அழைப்புக்கு இணங்கி, ஸ்ரீ கேசவய்யாஜீ நான்காம் தடவையாகச் செப்டம்பர் 27-ம் தேதியன்று சீரடிக்குச் சென்று அக்டோபர் 4-ம் தேதியன்று திரும்பி வந்தார். சீரடியில் அவர் அதி அற்புதமும் அபூர்வமுமான அநுபவம் பெற்றார். ஸ்ரீ கேசவய்யாஜீயின் பூஜை அறையில் நான் பெற்ற அநுபவம் எல்லையில்லாத ஆச்சரியத்தைத் தருவது. வழக்கமாக நான் தியானத்தில் உட்கார்ந்தால் இரண்டு மூன்று நிமிடங்களுக்கு மேல் என்னால் பாபாவின் மேல் மனத்தை நிறுத்திவைக்க முடியாமல் போய்விடும். அக்டோபர் 16-ம் தேதியன்று கேசவய்யாஜீயின் பூஜை அறையில், கிட்டத்தட்ட பதினைந்து நிமிடங்கள் வரை, மனத்தை ஒரே முகமாக நிறுத்தி பாபாவைத் தியானிக்க முடிந்தது. அப்படியும் அந்த அறையில் சிறிது நேரம் நான் பெற்ற அநுபூதி விவரித்துச் சொல்ல முடியாதது பாபாவின் அபரிமிதமான கருணையைப் பெற்றவர்கள் வெகு சிலரே. மக்களுக்குச் சேவை செய்ய வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன், சுயநலமற்ற, குற்றம் இல்லாத பாபா பக்தராய் ஆத்மிக உயர்வு பெற்ற மகாநுபாவர், சிறந்த ஆத்மா, ஸ்ரீ கேசவய்யாஜீ. கருணையே உருவான பரமேசுவரன், மக்களுக்குச் சேவை செய்யும் பொருட்டு ஸ்ரீ கேசவய்யாஜீ பல்லாண்டுகள் ஆயுளாரோக்கிய ஐசுவரியங்களுடன் வாழ அருளுவாராக".

புத்தியில் மழையே இல்லாமல் மக்கள் தவித்தபோது ஸ்ரீ சுப்பாராவ் சுவாமிஜீக்குத் தெரியப்படுத்தினார். 'மழை பெய்யும்!' என்று சுவாமிஜீ பதில் எழுதினார். அன்றிரவே மழை கொட்டித் தீர்த்தது என்று ஸ்ரீ சுப்பாராவ் எழுதினார்.

(சாயி ஸுதா 1941 நவம்பர்—டிசம்பர்)

பக்தர்களுடைய சொந்த அநுபவங்களை விவரிக்கும் முன் பிரமுகர்கள் சிலர் சுவாமிஜீயைப் பற்றித் தெரிவித்த அபிப்பிராயங்களை வெளியிடுகிறேன்.

ஓய்வுபெற்ற நீதிபதி திவான் பகதூர் ஸ்ரீ கே. எஸ். ராமசுவாமி சாஸ்திரிக்கு, சுவாமி கேசவய்யாஜீயிடம் மிக நெருங்கிய பழக்கம் உண்டு. ஷெனாய் நகர் சாயி நிலையத்தில் சுவாமிஜீயின் ஸ்ரீ ராமநவமி மகா சமாதி உற்சவங்களுக்குப் பலமுறை அவர் ஆஜராகியிருக்கிறார். இவர் 1955-ம் ஆண்டு, 'ஃப்ரீ இண்டியா' என்னும் ஆங்கில வாரப் பத்திரிகையில் "ஸ்ரீ சாயிபாபா அவர்களுடைய பக்தர்கள்" என்று

ஒரு கட்டுரை எழுதினர். அதில் சுவாமி கேசவய்யாஜியைப் பற்றி அவர் வெளியிட்ட அபிப்பிராயங்களை இங்கே தருகிறேன்.

ஸ்ரீ எஸ். பி. கேசவய்யா இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஆஃப் ரிஜிஸ்திரேஷன் ஆபீசில் பெரிய உத்தியோகம் செய்துகொண்டிருந்து அண்மையில் ஓய்வு பெற்ருர். (1954 ஜூன் 30-ம் தேதியிலிருந்து ஓய்வு பெற்ருர். 1922 அக்டோபர் 3-ம் தேதியன்று அனந்தபுரம் ஜில்லா ரிஜிஸ்திரார் ஆபீசில் குமாஸ்தாவாகச் சேர்ந்தார்.) ஸ்ரீ பி. வி. நரசிம்ம சுவாமியைப் போலவே, ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாவும் இடைவிடாமல் பாபாவை ஆதரிப்பவர். தென்னுட்டில் பல நகரங்களைப் பார்த்து, பாபாவின் நல்லுரைகளைப் பரவச் செய்திருக்கிருர். ஒவ்வொரு வியாழனன்றும் இவர் வீட்டில் சாயிபாபாவுக்குப் பூஜை நடக்கிறது. பூஜைக்கு நூற்றுக் கணக்கில் பக்தர்கள் வருகிருர்கள்.

"வியாழக்கிழமைப் பூஜையை நான் நேரில் பார்த்தேன். சில நூறு பேர் பக்தர்கள் பாபாவைத் தரிசிக்கவும் சுவாமிஜீயின் ஆசி பெறவும் வருகிருர்கள். எல்லோரும் மிக ஒழுங்காக வரிசைப்படி, ஒருவர் பின் ஒருவராக நிற்பார்கள். சுவாமிஜீ பூஜை செய்யும் அறையிலிருந்து வரும் மணம் அவ்விடத்துப் புனிதச் சூழ்நிலையைச் சுமந்து வரும். பவித்திரமான சூழ்நிலை அமைந்த அந்தப் பூஜை அறையில் சுவாமிஜீ நின்று பக்தர்கள் ஒவ்வொருவருக்கும் தீர்த்தமும் பிரசாதமும் கொடுப்பார். அந்த அறையில் சூழ்ந்த தூப. தீப, அலங்காரங்களும் பூமாலைகளின் வாசனையும் சுவாமிஜி பாபாவுக்கு எடுத்த கற்பூர ஹாரத்தியும் என் மனத்தில் அழியாத முத்திரைகளாக நிலைத்துவிட்டன.

"அடக்கம் இவரிடம் குடியேறிவிட்டதுபோல் இருக்கும் பூஜைக்கு வந்த பக்தர்கள் தமக்கு ஏதோ பேருதவி புரிந்துவிட்டது போல் சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜீ நடந்து கொள்வார். உண்மையில் சுவாமிஜீ அந்தப் பக்தர்களுக்குப் பேருபகாரம் செய்கிருர். பக்தர்களுடைய யோக க்ஷேமங்களில் சுவாமிஜீ மிகவும் அக்கறை காட்டுகிருர்.

சுய நலத்துடன் சுக போகங்களில் ஆசை மலிந்து பௌதிக வாதம் ஓங்கிவிட்ட இந்த உலகத்தில் இவருடைய பெருந்திட்டம் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளரட்டும்."

மற்ருெருவர் ஓய்வு பெற்ற மாவட்ட நீதிபதி ஸ்ரீ எம். ராமச்சந்திர ராவ். இவர் பாரிஸ்டர். பெருங் கல்விமான். 1942-ம் ஆண்டு முதல் இவருக்கு ஸ்ரீ சுவாமி கேசவய்யாஜீயுடன் பரிசயம்

உண்டு. சுவாமிஜி செய்யும் மக்கள் சேவையைப் பற்றி 1959-ம் ஆண்டு ஜனவரி 12-ம் தேதியன்று தம் அபிப்பிராயத்தை ஸ்ரீ ராமச்சந்திர ராவ் பின்வருமாறு சொல்லுகிறார்.

"சுவாமி கேசவய்யாஜி பல வருடங்களாக, வாரந்தோறும் சொல்லால் விவரிக்க முடியாத ஒரு சக்தியுடன் மக்களை உற்சாகப்படுத்துகிறார். ஒரு காணிக்கையை எடுத்துச் செல்லும் தூதராக அவர் நம் பிரார்த்தனைகளை பாபாவுக்கு எட்டவைக்கிறார். 'மக்களுக்கு நல்லுதவி செய்யும் பொருட்டு சுவாமிஜி இந்த உழைப்பில் பல்லாண்டு ஈடுபட்டு வாழ வேண்டும்' என்று நாம் கடவுளை வேண்டுகிறோம். பக்தர்கள் சுவாமிஜியின் சேவையை எவ்வளவு மெச்சுகிறார்கள் என்பதையும் புகழுகிறார்கள் என்பதையும் நான்கு வார்த்தைகளில் சொல்லிவிட முடியாது. மக்கள் சுவாமி கேசவய்யாஜியிடம் எவ்வளவு பக்தியும் கௌரவமும் வைத்திருக்கிறார்கள் என்பதை வியாழக்கிழமை தோறும் சாயி நிலையத்தில் கூடும் நூற்றுக்கணக்கான பக்தர்களுடைய சிரத்தையும் ஆசையுமே தெரிவிக்கின்றன. சுவாமிஜி யோசனை சொல்லும் முறையும் வருங்காலத்தைப் பற்றிச் சொல்லும் விஷயங்களும் பக்தர்களை மயக்கி விடுகின்றன. சுவாமிஜிக்குக் கிடைத்த சக்திகள் அற்புதமானவை. மனித கோடிக்கு அவர் செய்யும் சுயநலமற்ற சேவையின் பயனாக சாயிபாபா இவருக்கு இந்தச் சக்திகளை அருளியிருப்பதாகத் தெரிகிறது."

## பிரத்யக்ஷ சாயிபாபா சத்குரு

ரேபல்லேயில் அரசாங்க வக்கீலாக இருக்கும் ஸ்ரீ போலவரம் ராமப்ரம்மம் அவர்கள் 1948 ஜனவரி 17-ம் தேதியன்று பெங்களூரிலிருந்து வெளியாகும் 'டெய்லி நியூஸ்' ஆங்கிலப் பத்திரிகையில் 'சுவாமி கேசவய்யாஜியின் தரிசனம்' என்ற தலைப்பில் இப்படி எழுதியிருக்கிறார்.

"என் குருவும் மஹா யோகியும் ஆன சுவாமி கேசவய்யாஜியை தரிசிக்க வேண்டும் என்று வெகு காலமாக ஆசைப்பட்டுக்கொண்டிருந்தேன். மலைகளையும் காடுகளையும் ஆறுகளையும் கடந்து நானூறு மைல் தொலைவில் உள்ள பெனுகொண்டாவுக்குப் போனேன். குண்டூரிலிருந்து பெனுகொண்டாவுக்குப் பிரயாணம் செய்யும் போது இயற்கை அன்னையின் எழிற் கோலங்களைக் காணும் பாக்கியம் பெற்றேன். அந்தப் பகுதியை நான் இன்றுவரைப் பார்த்ததில்லை. முழுக்க முழுக்கப் புதிய காட்சிகள். அனந்தபுரத்தில் விஷ நோய் ஒன்று பரவியிருக்கிறதென்று கேட்டு மிகவும் பயப்பட்டேன். குழப்

பம் அதிகரித்தது. எங்கேயாவது பழகிய முகம் தெரியாதா? தெரிந்தவர்கள் இருக்க மாட்டார்களா? என்று தேடினேன். குறிப்பிட்ட ஊருக்குப் போனபின் தங்க இடம் கிடைக்குமா? என்று யோசித்தேன். என்றும் கருணையே நிரம்பிய ரக்ஷகர் சாயிபாபா, எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டுதான் இருப்பார். பெனுகொண்டாவின் காடுகளில் இருந்தாலும் தம் பக்தர்களை மறக்க மாட்டார். தர்மவரம் ஸ்டேஷனில் பெரிய மனிதர் ஒருவர், என் வண்டியில் ஏறி என் அருகேயே வந்து உட்கார்ந்தார். பெனுகொண்டாவில் அவர் வக்கீல் என்பது பிறகு தெரிந்தது. அவர் என்னை அன்புடன் க்ஷேம சமாசாரங்கள் விசாரித்துப் பேசிக்கொண்டிருந்து விட்டு என்னைத் தம் வீட்டுக்கே வரும்படி அழைத்தார். அவருடைய விருந்துபசாரத்தையும் உதார குணத்தையும் என்னால் மறக்கவே முடியாது,

அடுத்தபடி சாயி பக்த ஸ்ரீ கேசவய்யாஜியின் தரிசனம் எப்போதும் மறக்க முடியாத அநுபவம் ஆகும். என்னைப் பொறுத்த மட்டில் அவர் சாக்ஷாத் சாயிபாபாவேதான். கம்பீரம் மிக்கவரும் அருள் மிகுந்தவருமான அந்தப் புனித மூர்த்தியின் முன் நின்றேன். என்னை அறியாமலேயே தலை வணங்கி அவருடைய ஆசீர்வாதத்தை வேண்டினேன். அவர் தொட்டவுடன் அளவற்ற தைரியமும் பக்தியும் சுகமும் அளவற்ற பரமானந்தமும் கிடைத்து விடுகின்றன. என் குருவிடம் பிராசீனமான மிக உயர்ந்த ஹிந்துப் பண்பாடும் மரபும் குடியிருந்திருக்கின்றன என்பது யாருக்குத் தெரியும்? ஆத்மிக ஆறுதலுக்காகத் தேடி அலையும் இதயம் இவருக்குள் பக்குவமாக இருக்கிறது என்பதை யார் கவனித்தார்கள்? அலைபாயும் சம்சாரக் கடலின் நடுவில் சாமான்ய மனிதர்களுக்குச் சர்வ சாதாரணமான சுக துக்கங்களின் இடையில் சாதாரணமான மக்களிடையில் நான் இந்தப் புருஷோத்தமனுடைய திருவடிகளைத் தொட்டேன். ஏகாந்த நிலையையும் ஆறுதலையும் பெறக் காட்டுக்குப் போக வேண்டிய அவசியமே இல்லை. துன்பம், துக்கம், கொடுமை, ஏமாற்றம், தோல்வி இவற்றால் நிறைந்து, பாபத்துக்குக் காரணமான தற்கால வாழ்க்கையில் நமக்கு ஆறுதல் கிடைக்கச் செய்து ஊக்கம்தர சுவாமி கேசவய்யாஜி போன்ற மகானுபாவர்கள் இருக்கிறார்கள்.''

''நமது புராணங்களிலும் நமது பழைய இலக்கியங்களிலும் மகான்கள், யோகிசுவரர், மகரிஷிகள் இவர்கள் தோன்றித் தங்கள் காலத்தவரைக் கரையேற்றினார்கள் என்பதைப் படிக்கும் போது நாம் அவ்வளவு அதிர்ஷ்டத்துக்கும் பாக்கியத்துக்கும் கொடுத்து வைக்கவில்லையே என்று ஏமாற்றமும் வெறுப்பும் அடைவோம். அப்படிப்பட்டவர்களை எப்பொழுதாவது அபூர்வமாகத்தான் காண முடியும். நாம் கண்ணாரக் கண்டு நேரில் அனுபவித்தாலன்றி எதையும்

நம்பமாட்டோம். நம் நினைவுக்கு எட்டாதவற்றையும் நம்பமாட்டோம். ஆத்மிக விஷயங்களுக்குப் பிரத்தியட்சப் பிரமாணம் வேண்டும் என்றும், ருஜுவாக வேண்டும் என்றும் சொல்லுவோம்.

"ஸ்ரீ கேசவய்யாஜி, ஒவ்வொரு நிமிடமும் மகா யோகியாகவே வாழ்கிறார். அவருடைய அமைதி, பொறுமை, பிறரிடம் அநுதாபம், பாபாவிடம் பக்தி எல்லாம் அற்புதமானவை; உதாரணமானவை. அவருடைய வாழ்க்கையில் வியாழக்கிழமை மிகவும் முக்கியமானது அவர் பாபாவைப் பூஜிக்கும் அன்றைக்கு அவர் வீட்டில் பணக்காரர் ஏழை, உயர்ந்த அதிகாரிகள், வேலை இல்லாதவர்கள், நோயாளிகள், ஆரோக்கியம் உள்ளவர்கள் ஆகிய எல்லோரும் நூறாயிரம் பிரச்னைகளோடு அமைதியையும் சுகத்தையும் விரும்பிக் கூடுவார்கள். பூஜை முடிந்தபின் சுவாமிஜி சாயி அறையின் கதவுகளைத் திறப்பார். நாம் உள்ளே நுழையும்போது எதிரில் பாபாவின் படத்தருகே நிற்கும் ஸ்ரீ கேசவய்யாஜி காணப்படுவார். அந்தக் காட்சி, நமக்கும் ஆனந்த ஒளியைப் பெருக்கெடுத்தோடச் செய்யும். ஜொலித்துக்கொண்டிருக்கும் பகவானுடைய சந்நிதியில் ஏற்படும் அநுபவம் உண்டாகும். சீரடி சாயிபாபாவின் சக்தி, பெருமை, வைபவம், அழகு எல்லாவற்றையும் காட்டக் கூடிய சிறந்த ஆத்மாவின் எதிரில் நின்றிருக்கிறோம் என்ற எண்ணம் உண்டாகும். அங்கே சாயிபாபா இருப்பதை என்னால் உணர முடிந்தது. அந்த அநுபவம் என்றும் மறக்க முடியாதது.

"இங்கே பரம பாகவதோத்தமர் இருக்கிறார். தம் முக்திக்கு மட்டுமின்றிப் பிறருடைய முக்தி, சாந்தி, சுகங்களுக்காக ஓயாமல் உழைத்துக்கொண்டிருப்பார். சாயிபாபாவின் உடல் (பௌதிக சரீரம்) பஞ்ச பூதங்களுள் கலந்து விட்டது. அவருடைய ஆத்மா மட்டும் சீரடி சமாதியில் வாழ்கிறது. பாரத தேசம் எங்கும் இருக்கும் ஆயிரக்கணக்கான பக்தர்களுக்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் கொடுக்கிறது. அது மட்டுமா? ஸ்ரீ கேசவய்யாஜியினுள் ஸ்ரீ சாயிபாபாவின் உயிருள்ள ரூபம் தெரிகிறது. அவருக்கு என் வணக்கங்கள். தென்னாட்டு சீரடி பெனுகொண்டாதான்.

"நாலு வருடங்களுக்குப் பிறகு இவர் சீராலாவிலிருந்து வெளிவரும் "சாயிலீலா" பத்திரிகையில் வேறு சில விஷயங்களை வெளியிட்டிருக்கிறார்.

"கேசவய்யா அவர்களின் வாழ்க்கை, தெய்வ பக்தி, பக்தியைத் தூண்டும் பிரசங்கங்கள் எல்லாம் ஒருவகையான புனிதச் சூழ்நிலையை ஏற்படுத்துகின்றன. ஒரு மகா சக்தியின் சாந்நித்தியத்தில் இருப்பதுபோல் உணர்வோம். அவருடைய முகத்திலிருந்து வெளிப்

படும் திவ்ய தேஜஸ், பார்ப்பவர்களைக் கவர்ந்து இழுக்கும். வேத ரிஷிகள் மரபானது இவரது சந்நிதியில் நூறாயிரம் முகமாக மலர்கிறது. அந்தச் சூழ்நிலையில் பார்ப்பவர்கள் லயமடைகிறார்கள். சாதாரண மனிதர்கள்முன் நமக்கு மனச் சம்மந்தமான எந்தவிதச் சலனமும் ஏற்படாது. ஞானமும், தெய்வ சக்தியும் எதிரே பிரத்யக்ஷமாய் ஆனந்தத்தால் ஒளி வீசும் ஒரு தேஜஸை சில மனிதர்களிடம் மட்டுமேதான் பார்க்க முடிகிறது. பார்த்த மாத்திரத்திலேயே நம்மைக் கவர்ந்துவிடுகிறார். பார்த்த மாத்திரத்திலேயே நம் மனம் வாக்குக் காயங்களை வசீகரித்து விடுகிறார். ஸ்வாமி கேசவய்யாஜீயின் சுத்த ஸாத்விகம், குறைவற்ற தெய்வபக்தி, தெய்வத்துவம், சாந்தம் ஆகியவற்றைக் காண்கிறோம். அவருடைய இனிய பேச்சில் ஒரு வகையான விவரிக்க முடியாத சிறப்பு அமைந்திருக்கிறது. இந்த இனிமையை அநுபவிக்கச் சிறுவர்களும் பெரியோர்களும், ஆண்களும், பெண்களும், பண்டிதர்களும், பாமரர்களும் ஸ்வாமிஜீயின் சந்நிதியை விரும்புகிறார்கள்.

நவீன தத்துவ ஆராய்ச்சியாளர்கள் சிறந்த பக்தர்கள் ஆகியோருடைய நல்லுபதேசங்களைத் தலைவணங்கி ஏற்று, அதைக் கடைப்பிடித்து, அதனால் ஒரு திவ்விய தேஜஸைச் சம்பாதித்து, தாம் கரையேறியதோடு எல்லா மனிதர்களுக்கும் பகிர்ந்துகொடுக்கிறார் கேசவய்யாஜீ. அவருடைய வாக்கில் மிளிரும் சொற்கள் மிகச் சக்தியுள்ளவை. விரும்பிய பொருளைக் கொடுப்பவை. முன்னேறுவோர் பலர், அவருடைய ஆசிகளுக்காகக் காத்துக் கிடக்கிறார்கள். ஸ்ரீ கேசவய்யாஜீயின் இனிய தன்மைக்காகவே அவர் அருகில் இருப்பதை மட்டுமே பலர் விரும்புகிறார்கள். கனவில்கூட கடுமையை அறியாத கருணாமூர்த்தி இவர். நோயாளிகள், ஏழை எளியவர்களுடைய கஷ்ட நிஷ்டுரங்களைக் கேட்டு அவர்களுக்கு மன அமைதியையும் தெய்வ பக்தியையும் கொடுத்து உற்சாகப்படுத்துவதற்காக ஸ்ரீ கேசவய்யாஜீ இரவும் பகலும் பாடுபடுகிறார். தம்முடைய பிரத்தியக்ஷ தெய்வமான ஸ்ரீ சாயிநாதனுடைய எல்லையற்ற அருள் நோக்கும் அந்த அருள் வளமும் எல்லோருக்கும் கிடைக்கும்படி செய்கிறார்.

சாயி பூஜை அறையில் ஸ்ரீ கேசவய்யாஜீயின் மின் ஒளி உருவத்தை மனப் பலகையின் மீது சித்தரித்துக்கொண்டு அருட்செல்வம் பெற்றவர்கள் இருக்கிறார்கள். இவருடைய வழி என்றோ ஆரிய வர்க்கத்தில் அடர்ந்த காடுகளின் நடுவில் குகைக்குள் தபோநிஷ்டையில் உறுதியுள்ளவர்களாய் திவ்விய ஒளிப் பிழம்பாய் இருந்த ரிஷிகளின் வழியாகும். இந்த இருபதாம் நூற்றாண்டிலும் நமக்கு இது கேசவய்யாஜீயின் வாழ்க்கையில் காணப்படுகிறது.

(சாயிலீலா 4—4—1951)

## துன்புற்றவர்களுக்கு வரப்பிரசாதம்

சென்னை காந்தி நகர்ப் பள்ளித் தலைமை ஆசிரியரான ஸ்ரீ எஸ். ராஜகோபாலராவ், எம் ஏ.எல்.டி. 1951 ஜூன் மாதத்து 'சாயிலீலை யில் ஸ்ரீ சாயி பக்த கேசவய்யாஜீயைப் பற்றி பின்வருமாறு எழுதி யிருக்கிறார். ''அருள் வடிவமான சாயிபாபா, ஸ்ரீ கேசவய்யாஜீ போன்ற சத்புருஷர்களுக்கு நிறைந்த அருள் தந்து, மக்களைக் கரை யேற்றச் சில அரிய சக்திகளைக் கொடுத்திருக்கிறார். ஸ்ரீ கேசவய்யாஜீ ஆடம்பரம் அற்றவர். உத்தியோகம் செய்துகொண்டே தக்க முறையில் சாதாரணமான வாழ்க்கை நடத்துகிறார். அவர் பாபா வின் பக்தர் என்பதையோ அபூர்வ சக்தி படைத்தவர் என்ப தையோ அவருடன் பழகினாலன்றித் தெரிந்துகொள்ள முடியாது. அவரிடம் எந்த மருந்தும் இல்லை. பகவான் சில சக்திகளைத் தமக்கு அருளியிருப்பதாகவோ, எந்தக் காரியத்தையும் சாதித்து விடுவேன் என்றோ அவர் சொல்லமாட்டார். ''பாபா தயவினால் நன்மை உண்டாகும்''. என்று ஆசீர்வதிப்பதுதான் அவர் செய்யும் வேலை. சாந்தமே உருவானவர். பொறுமையுடன் யார் எதைச் சொன்னாலும் கேட்பார். தந்தை மகனை அழைப்பதுபோல் எல் லோரையும் 'நாயனா' என்று கூப்பிடுவார். பெண்களை, ''அம்மா, தாயே, தல்லி'' என்பார். நாம சங்கீர்த்தனத்தில் சாயி ஸ்மரணை அவருக்கு மிக பிடித்த ஒன்று. பரம ஏழை, பிறவி தரித்திரம், பணக் காரன் என்ற வித்தியாசம் இல்லாமல் எல்லோரையும் மிகுந்த ஆதரவுடன் கவனிப்பார். அவருடைய பேச்சே ஆசீர்வாதம். அவ ருக்கு அருகில் இருக்கும்போது ஒரு முனிவருக்கு அருகே இருப்பது போல் தோன்றும்.'' ''சிறப்பாக, ஒவ்வொரு வியாழனன்றும் நூற்றுக் கணக்கான மக்கள் ஷெனாய் நகர் சாயி நிலையத்துக்குச் சென்று பாபாவை தரிசித்து ஸ்ரீ கேசவய்யாஜீயிடம் தம் குறைகளைச் சொல்லி, அவருடைய அநுக்கிரகம் பெற்று, பிரசாதத்தையும் ஆசி யையும் பெற்றுத் திரும்புவார்கள். வியாழனன்று மட்டும்தானா? என்றைக்கு வேண்டுமானாலும் அவரைப் பார்க்கலாம். மக்களுக்கு எட்டக் கூடியவராய் இருந்து தக்க யோசனைகளைச் சொல்லி அனுப்புவார். சாயிபாபாவை நினைப்பதுதான் அவருடைய மந் திரம். பகவத் பக்திதான் அவருடைய சக்தி. பாபாவின் விபூதியே அவர் தரும் தெய்வீக மருந்து. ஸ்ரீ கேசவய்யாஜீயின் ஆசி ஏழை களுக்கு வரப்பிரசாதமாக இருக்கிறது.

மற்ற வழிகளில் தீராத நோய்களும் மற்ற துன்பங்களும் சாயி பக்தருடைய தரிசனத்தாலும், இவர் கொடுக்கும் விபூதி பிரசாதங் களாலும் அதிசயமாக தீர்ந்துவிடுகின்றன. ஆந்திரப் பகுதியிலும் சரி மற்ற பகுதிகளிலும் சரி இது பலருக்கு அனுபவமான விஷயம். இந்த சாயி பக்தர் நாற்பது முறை (1942-1947) சீரடிக்குச் சென்று

வந்திருக்கிறார். பிறகு 1961ம் வருஷம் வரை பாபா சீரடி செல்ல இவருக்கு அனுமதி தரவில்லை. 1961ம் வருஷம் பிப்ரவரியிலும், ஜூனிலும் சீரடி செல்ல, பாபா அனுமதித்தார். 1963ம் ஆண்டு மே மாதம்வரை இவர் 55 முறைகள் சீரடிக்குச் சென்றிருக்கிறார், பாபாவைச் சேவித்து வந்திருக்கிறார். பாபா உத்தரவு கொடுத்தால் வேறு யோசனை செய்யாமல் அந்தக் கணமே சீரடிக்குப் புறப்பட்டுவிடுவார். சாயிபாபா இவருக்கு பிரத்தியக்ஷமாக காட்சி தருவதாகவும் சில சமயங்களில் இவருடன் பேசுவதாகவும் கேள்வி. இல்லையென்று மறுக்கக் காரணம் இல்லை. பாபா தம் பக்தருடைய உருவிலும் தம் பக்தரின் மூலமாகவும் மற்ற பக்தர்களைக் காண்கின்றார். இது முக்காலும் உண்மை. சந்தேகம் இல்லை. ஸ்ரீ கேசவய்யாஜீ கொடுத்த பிரசாதத்தால் குஷ்டமும், க்ஷயமும் தீர்ந்தன. கொடிய நோய்களும் ஒழிந்தன. விஷ நோய்கள் போயின. சாயி பக்த கேசவய்யாஜீயை அண்டியவர்கள் துன்பங்களிலிருந்து விடுபட்டு, பாபாவின் பக்தர்கள் ஆனார்கள். சுகமாக இருக்கிறார்கள்.

என் பூர்வ புண்ணிய வசத்தால் நான் இவருடைய செய்தியைக் கேள்விப்பட்டேன். ஆறு ஆண்டுகளுக்குமுன் இவருடைய அறிமுகம் கிடைத்தது. அப்பொழுது நாங்கள் நேருக்கு நேர் பார்த்துக் கொள்ளவில்லை. கடிதப்போக்குவரத்து வாயிலாக எங்கள் அறிமுகம் கிடைத்தது. அப்பொழுது இவர் பெனுகொண்டாவில் சப்-ரிஜிஸ்திராராக இருந்தார். ஒரு பெரிய நிகழ்ச்சி நடக்கப் போகிறதென்று அவர் எனக்கு எழுதினார். அதற்குச் சந்தர்ப்பம் இல்லையென்றே நான் நினைத்தேன். ஆனால் அவர் எழுதியபடிதான் நடந்தது. பிறகு என்ன சொல்ல இருக்கிறது; எனக்கு எந்தச் சந்தேகம் வந்தாலும் துன்பம் வந்தாலும் குருவுக்கு ஒப்பான சாயி பக்த ஸ்ரீ கேசவய்யாஜீதான் எனக்குப் புகலிடம். அவர் எப்படி உத்தரவிடுகிறாரோ அப்படியே எழுத்துக்கெழுத்து நடக்கும். எங்கள் வீட்டில் பிரசவத்தைப்பற்றி நாங்கள் மிகவும் பயப்பட்டோம். பிரத்தியட்ச பாபாவின் பிரசாதத்தின் காரணமாக எந்த ஆபத்தும் இல்லாமல் சுகப் பிரசவம் ஏற்பட்டது. இதுபோல் பல உதாரணங்கள் உள்ளன.''

## ஸ்வாமிஜீயுடன் அறிமுகம்

[ஸ்ரீ எம். ராமானுஜாச்சாரி, மாவட்ட நீதிபதி (ரிடையர்டு)]

கடவுளுடைய வழி ஊகிக்க முடியாதது. விவரித்துச் சொல்ல இயலாதது. ஸ்ரீ சாயிபாபா அவர்கள் இருப்பதை நாம் உணரும்படி செய்யும் விதம் அற்புதமானது. சாயிபாபா பக்தர்களுடைய லௌகீக வாழ்வில் அக்கறை கொள்கிறார். நோயாளிகளின் நோயை முதலில் தீர்த்து வைக்கிறார். வேலையற்றவனுக்கு வேலை

கொடுக்கிறார். பணம் இல்லாதவர்களுக்குப் பணம் கிடைக்கச் செய்கிறார். இப்படி முதலில் அவர்களுடைய இம்மைத் தேவை களைப் பூர்த்தி செய்தபின் நாளடைவில் அவர்களுடைய பார் வையை பகவானிடம் திருப்புகிறார். அவர்களை பாகவதர்களாக மாற்றிவிடுகிறார். நான் கோயம்பத்தூரில் 1944-ஆம் ஆண்டு மாவட்ட நீதிபதியாக இருந்தபோது முதன் முதலாக ஸ்வாமி கேசவய்யாஜீயை சந்தித்தேன். என் பெண் நோயாளி. வைத்தியர் கள் எவ்வளவோ சிகிச்சை செய்தும் எவ்வளவோ மருந்துகளை உண்டும் குணம் காணவில்லை. ஸ்வாமிஜீ அப்பொழுது கோயம்பத் தூரில் இருந்தார். அவரைப் பார்க்கும்படி என் ஆபிஸில் வேலை செய்யும் ஒருவர் எனக்கு யோசனை சொன்னார். சாயி பாபாவைப் பற்றியோ அவருடைய பக்தரான எஸ். பி. கேசவய்யாஜீயைப் பற் றியோ அப்பொழுது எனக்கு ஒன்றும் தெரியாது. ஆனாலும் நான் ஸ்வாமிஜீயிடம் சென்று எங்கள் வீட்டுக்கு வர வேண்டுமென்று கேட்டேன். ஸ்வாமிஜீ வந்தார். எங்கள் வீட்டிலேயே பாபாவை பூஜித்து என் பெண்ணுக்குச் சில குறிப்புகள் சொன்னார். அவள் அவர் சொன்னபடியே செய்தாள். நோய் முழுவதும் தீர்ந்துவிட் டது. உடனே எங்களுக்குப் பாபாவிடம் நம்பிக்கை உண்டாகி விட்டது. நாங்கள் சாயிபாபாவின் பக்தர்கள் ஆனோம்.

ஸ்ரீ கேசவய்யாஜீ அப்போது அரசாங்க வேலையில் இருந்தார். அதனால் அவர் அபூர்வமாகத்தான் கோயம்பத்தூருக்கு வருவார். கோயம்பத்தூர் செல்வர்கள் சுவாமிஜீக்குத் தேவையான வசதிகளை யெல்லாம் செய்கிறோம் என்றும் அங்கேயே நிலையாகத் தங்கிவிட வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்கள்; வேண்டினார்கள். ஸ்ரீ கேசவய்யாஜீ ஒப்புக்கொள்ளவில்லை. உத்தியோகம் செய்து கொண்டு ஆடம்பரமின்றி வாழ்ந்து வந்தார்.

நான் பிறகு மாற்றலாகிப் பல ஊர்களுக்குச் சென்றேன். கடை சியில் கர்நூல் சென்றேன். அதுவரையிலும் ஸ்வாமிஜீயுடன் தொடர்புவிட்டிருந்தது. 1950-ஆம் ஆண்டு வேலையிலிருந்து ஓய்வு பெற்றுச் சென்னையில் என் சொந்த வீட்டில் குடியேறினேன். அப் பொழுது ஸ்வாமி கேசவய்யாஜீ ஷெனாய் நகரில் இருப்பது தெரிந் தது. வியாழனன்று சாயங்காலம் மட்டும் பூஜை செய்து பக்தர் களுக்குத் தீர்த்தம் கொடுத்துவந்தார். பாபாவின் வரப்பிரசாதம் பெறுவதற்காக பக்தர்கள் ஸ்வாமி கேசவய்யாஜீயின் வீட்டில் ஒன்று சேருவார்கள்.

ஸ்வாமிஜீயின் கிருபையால் எனக்கும் பல அனுபவங்கள் ஏற்பட் டன. என் பெண் 1951ஆம் ஆண்டு திரும்பவும் நோயுற்றாள். ஸ்வாமிஜீயைத் தரிசித்தோம். திருப்பதிக்குச் சென்று திருமலையில்

மூன்றிரவுகள் தங்கி வெங்கடேசுவரப் பெருமாளை ஆராதித்துச் சேவித்து வரும்படி ஸ்வாமிஜி என் பெண்ணுக்கு யோசனை சொன்னார். என் பெண் என்னையும் தன்னுடன் வரவேண்டுமென்று கேட்டுக் கொண்டாள். நான் சம்மதித்தேன். என் பெண், மாப்பிள்ளை, நான் ஆக மூவரும் திருப்பதி மலைக்குச் சென்று மூன்றிரவுகள் தங்கி பெருமாளை ஆராதித்தோம். சுமார் இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பின் நான் பாலாஜியைத் தரிசிக்க வேண்டும் என்பது பாபாவின் திருவுள்ளம் போலும். என்னை இப்படி திருப்பதிக்கு அழைத்துச் செல்ல வேறு தனிப்பட்ட காரணமும் இருக்கலாம். அது பாபாவுக்குத்தான் தெரியும். நாங்கள் திருப்பதியிலிருந்து திரும்பிய ஒரு மாதத்தில் சென்னை அரசினர், நான் கேட்டுக்கொள்ளாமலேயே திருமலை—திருப்பதி தேவஸ்தானம் தர்மகர்த்தாக்கள் குழுவில் என்னை அங்கத்தினனாக நியமித்தார்கள். இந்த நியமனம் கிடைக்கும் என்று நான் கனவிலும் கருதவில்லை. மூன்றிரவுகள் பாபாவின் உத்தரவுப்படி நான் வெங்கடேசுவரரை சேவித்ததற்கு மூன்றாண்டு காலம் ஸ்வாமியின் சேவை செய்ய சந்தர்ப்பம் கிடைத்தது. வாழ்க்கையில் பல சந்தர்ப்பங்கள் கிடைக்கின்றன. ஆனால் அவை எல்லாவற்றுள்ளும் பாபாவின் அருளால் கிடைத்த இந்த வாய்ப்பு மிகச் சிறந்தது.

"வருங்காலத்தில் நடக்கப் போகும் பல நிகழ்ச்சிகளை ஸ்வாமிஜி முன்னதாகவே எனக்குச் சொல்லியிருக்கிறார். எல்லாம் பலித்தன. என் பிள்ளைக்கும் முதலில் வரும் ஜாதகத்துப் பெண்ணுக்கும் திருமணம் நடக்காதென்றும் வேறொரு பெண்ணுடன் நடக்கும் என்றும் சொன்னார். அவர் சொன்னபடியே இரண்டாம் தடவை வந்த பெண்தான் அமைந்தது. சில வருஷங்களுக்குப் பின் நாங்கள் யாரும் கவனிக்கும் முன்பே அவர் என் மருமகள் கருவுற்றிருப்பதாகவும் எனக்கு பேரன் பிறப்பான் என்றும் சொன்னார். அவ்வாறே நடந்தது. மருமகளுக்குப் பிரசவம் மிகச் சிக்கலாக இருக்குமென்று டாக்டர்கள் சொல்ல, ஸ்வாமிஜீ சுகப் பிரசவம் ஆகும் என்றார். அப்படியே சுகப் பிரசவம் ஆயிற்று. என் மருமான் நரம்புத் தளர்ச்சியால் துன்புற்றார். பாபாவின் அருளாலேயே அவருக்கு நரம்புத் தளர்ச்சி நீங்கி முழுதும் ஆரோக்கியம் உண்டாயிற்று. அவர் முடிந்தமட்டும் ஒவ்வொரு வியாழக் கிழமையும் ஸ்வாமிஜீயிடம் சென்று கொண்டிருக்கிறார்.

சாயிபாபாவின் பக்தர்களுள் முதன்மையானவரும் சிறந்தவரும் ஆவார் ஸ்ரீ கேசவய்யாஜீ. குல, மத, ஜாதி பேதங்கள் இல்லாமல் மனிதர்களிடையே பரஸ்பர அன்பும் ஒற்றுமையும் வளர, ஸ்வாமி கேசவய்யாஜீ செய்யும் சேவை பயனுள்ளதாவதற்கு நாம் இயன்ற

அளவு அவருக்கு உதவ வேண்டும். ஆதரவாக இருக்க வேண்டும். ஸ்வாமிஜீ ஷெணய் நகரில் 116-ம் வீட்டில் இருக்கிறார். அவருக்கு இந்த வீடு கிடைக்க எவ்வளவோ தடைகள் நேர்ந்தன. பாபாவின் தயவால் தடைகள் நீங்கி இந்த வீடு சாயி பாபாவுக்கும் அவருடைய அருமை பக்தர்களுக்கும் இருப்பிடமாயிற்று. (1959)

:o:·

# இரண்டாம் பகுதி

## பக்தர்களின் அனுபவங்கள்

இதுவரை வாசகர்கள் சாயிபாபாவைப் பற்றியும் சுவாமி கேசவய்யாஜியைப் பற்றியும், அவர் 1939-ஆம் ஆண்டு சாயிபாபாவின் பக்தரானபின், அவரைப்பற்றி பக்தர்கள் சிலருக்கு ஏற்பட்ட அபிப்பிராயங்களையும், சந்தர்ப்பவசமாக அவர் பெற்ற சில அனுபவங்களையும் தெரிந்துகொண்டார்கள். சுவாமிஜீயின் பக்தர்களுடைய அனுபவங்களை கிடைத்தமட்டும் வெளியிடவேண்டுமென்பது நமது ஆவல். சுவாமி கேசவய்யாஜீயின் பக்தர்கள் ஆயிரக்கணக்கில் இருக்கிறார்கள். அவர்களின் எண்ணிக்கை நாளுக்குநாள் அதிகமாகிக்கொண்டே யிருக்கிறது. பக்தர்களுடைய எண்ணிக்கையோடு அவர்களின் அனுபவங்களும் வளர்கின்றன. இவற்றையெல்லாம் ஆராய்ந்து அறிந்தபின்னும் "விபூதியால் இவ்வளவு நன்மைகள் ஏற்படுமா. பாபா செய்யக்கூடிய வேலைகளை எவ்வளவுதான் அவரின் அருளுக்குப் பாத்திரராக இருப்பினும் அவர்களுடைய பக்தர்களால் செய்ய முடியுமா?" என்று வினவக்கூடிய அறிவாளிகளும் நாத்திகர்களும் இருக்கத்தான் இருப்பார்கள். கூடியமட்டும் சந்தேகங்களை நிவர்த்தி செய்வது சுய அனுபவம் பெற்ற பக்தர்களுடைய புனிதமான கடமை. சாயிபாபா சரித்திரத்துக்கு எட்டாத புராணங்களில் வரும் அவதார புருஷர் அல்ல. பாலகங்காதர திலகர் போன்ற அரசியல் தலைவர்களைக்கூட தன்பால் கவர்ந்து இழுத்த பெருமை உள்ளவர். பாலகங்காதர திலகர் இங்கிலாந்துக்குப் போகுமுன் சாயிபாபாவைத் தரிசித்ததாகவும் அப்போது பாபா, "நாடு சுதந்திரம் பெறப் போகிறது. நீ அதற்காக அனாவசியமாகக் கவலைப்பட வேண்டியதில்லை' என்று சொன்னதாகத் தெரிகிறது. ஏறக்குறைய அதே சமயத்தில் பதினான்கு பதினைந்து வயதுள்ள ஸ்ரீ சுவாமி பாலகேசவய்யா, "பிரிட்டிஷார் பாரதநாட்டைவிட்டுப் போய்விடுவார்கள் என்றும், இந்தியர்கள் சுதந்திரம் பெற்றுவிடுவார்கள் என்றும், காங்கிரஸ் பதவிக்கு வரும் என்றும், ஸ்ரீ லெக்லருடன் தர்க்கம் செய்தது நமக்கெல்லாம் தெரிந்ததே. இதுபோலவே சுவாமிஜீ பாபாவின் பக்தரான பிறகு 1943-ஆம் ஆண்டில் நாஜீ ஜெர்மனி வெற்றி முழக்கம் செய்துகொண்டிருந்தபோது "நேச நாடுகள்தாம் இந்தப்போரில் வெற்றிபெறும்" என்று சொன்னார். பாபாவின் அருளுக்கு ஆளானவர்களால் எதையும் செய்ய முடியும் என்று ஸ்ரீ சாயி சத் சரிதை நிரூபித்திருக்கிறது. அந்த நூலிலிருந்தே

சில நிகழ்ச்சிகளை விவரித்துப் பக்தர்களுடைய அனுபவங்களையும் சொன்னால் வாசகர்களுக்கு விவரம் எளிதில் புரியும்.

## வருங்காலம் அறிதல்

வருங்காலத்தை உள்ளங்கை நெல்லிக் கனிபோல் பார்க்கும் சக்தி சுவாமி கேசவய்யாஜீக்கு 1939-ஆம் ஆண்டு மே மாதத்தில், ராமேசுவரத்தில் ஸ்ரீ ராமலிங்கேசுவரர் சந்நிதியில் கிடைத்தது. 1939-ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் பாபா பிரத்தியட்சமான பிறகு சுவாமிஜீயிடம் இந்தச் சக்தி கிரமம் தவறாமல் சந்தர்ப்பத் துக்குத் தக்கதாய் வெளிப்பட்டு வந்துகொண்டிருந்தது. இந்தச் சந்தர்ப்பத்தில் சாயிபாபா பக்தரும் கோடீசுவரருமான 'பாபு சாகேப் பூட்டி' என்பவருக்கு சோதிட சாஸ்திர ஞானத்தை எப்படி அருளினார் என்பதைத் தெரிந்துகொள்வது நல்லது.

சோதிட சாத்திரத்தில் வல்லவர் ஒருவர் சாயிபாபாவின் பெருமையைப் பற்றிக் கேள்விப்பட்டார். சோதிட சாத்திரத்தை ஒரு பெரிய நூலாக எழுதி அதற்குப் பாபாவின் ஆசியைப் பெற சீரடிக்கு வந்தார். சோதிட சாத்திரம் முழுவதையும் அடக்கித் தாம் எழுதிய நூலை அவர் பாபாவிடம் சமர்ப்பித்தார். பாபா கையில் கொடுத்துத் திருப்பிப் பெற்றுக்கொண்டால் தாம் மகா பண்டிதனாகிவிட முடியும் என்றும் ஏராளமாக பணம் சம்பாதித்துவிடலாம் என்றும் அவர் மனோராஜ்யம் செய்துகொண்டிருந்தார். ஆனால் பாபா, அந்தச் சோதிடரின் சுயநலத்தைத் தெரிந்துகொண்டு அந்த நூலை ஜோதிடர் எவ்வளவு கேட்டும் திருப்பிக் கொடுக்காமல் அருகில் இருந்த பாபு சாகேப் பூட்டி என்பவரிடம் கொடுத்தார். இவருக்கு லௌகிகமாக ஆசை எதுவும் இல்லை. ஆனாலும் பாபா "பாபு இதை வாங்கிக்கொள்" என்று சோதிட நூலை அவர் கையில் கொடுத்தார். பாபாவின் ஆணைப்படி பாபுசாகேப் அந்த நூலை வாங்கிக்கொண்டார். சோதிடருக்குப் பெரும் ஏமாற்றம் ஏற்பட்டது.

அதன் பிறகு என்ன நடந்தது? பாபு சாகேப் எந்த நூலையும் படித்ததில்லை இந்நூல் பாபா அருளிய பிரசாதம் அல்லவா? என்று அடிக்கடி அந்த சோதிட நூலின் பக்கங்களைத் திருப்புவார். சோதிட நூலில் பழக்கம் இல்லாவிட்டாலும் ஓரளவு சோதிடம் தெரிந்திருந்தது. அது வெறும் பொழுதுபோக்காகத் தெரிந்துகொண்டது தான். ஆனால் இந்த நூலை அடிக்கடி திருப்பிப் பார்த்ததினால் பாபு சாகேப் பூட்டி சோதிட சாத்திரத்தில் பெரிய பண்டிதராகிவிட்டார். பாபாவின் பக்தர்கள் பலருடைய குண்டலி, அவர் விரல்

நுணிகளில் இருந்தது. பக்தர்கள் எந்த நாளில் எந்த நிமிடத்தில் என்ன செய்து கொண்டிருப்பார்கள் என்பதைக் கச்சிதமாகச் சொல்லிவிடுவார்.

ஓர் உதாரணத்தின் மூலம் இந்த விஷயத்தை தெளிவாகத் தெரிந்துகொள்ளலாம். ஓர் ஊரில் தேர்தல்ஒன்று நடக்க இருந்தது. தேர்தலில் பாபு சாகேப் பூட்டியின் நண்பர் ஒருவர் போட்டியிட்டார். அவரிடம் பாபுசாகேப் இப்படிச் சொன்னார்: "8-30 மணிக்குள் தேர்தல் முடிந்துவிட்டால் உங்களுக்கு வெற்றி பூஜ்யம்தான், ஆனால் 9 மணிவரை நீடித்தால் ஐம்பது சதவீதம் உங்களுக்கு வெற்றி. 9-30 மணிவரை நீடித்தால் உங்களுக்கு நிச்சயமான வெற்றிதான். சிறிது சிரமப்பட்டுத் தேர்தலை 9-30 மணிவரையில் தள்ளிக்கொண்டு போகவும். உங்களால் முடியும். தேர்தலில் வெற்றி பெறவும் போகிறீர்கள்".

பாபு சாகேப்பின் நண்பர் தேர்தல் கூட்டத்திற்குப் போனார். அங்கே எல்லாம் பாபு சொன்னது போலவே நடந்தது. தேர்தல் 9-30 மணிவரை நடந்தது. பாபுசாகேப் நண்பர் வெற்றி பெற்றார்.

பாபா அருள் செய்தால் பக்தர்களுக்கு அடைய முடியாத சக்தி இல்லை. சாயி பக்த கேசவய்யாஜீ, பாபா கொடுத்த சக்தியாலேயே வருங்காலத்தை உணர்ந்து பட்டுக் கத்தரித்தாற்போல் விஷயங்களைச் சொல்ல இயலுகிறது என்பதை இந்த நிகழ்ச்சி நிருபிக்கிறது.

## ஸ்ரீ சாயிபாபாவின் விபூதிப் பிரசாதம்

ஒரு லட்சியத்தை அடைய எந்த முயற்சி செய்ய வேண்டுமென்றாலும், முதலாவதாக அடைய நினைத்த லட்சியத்தில் முழு நம்பிக்கை இருக்க வேண்டும். பிறகு லட்சிய சாதனைக்காக நாம் கையாளும் முறையில் நம்பிக்கை இருக்க வேண்டும். எதற்கும் முக்கியமானது நம்பிக்கைதான். தன்னம்பிக்கை இல்லாதவர்களால் எந்தச் சிறிய வேலையையும் செய்ய முடியாது. முழு நம்பிக்கை இருந்தால் மனிதன் விண்வெளிப் பயணம் செய்து அலுங்காமல், தலுங்காமல் திரும்பிவிடுகிறான். எவரெஸ்ட் சிகரத்தில் ஏறிவிட்டு வருகிறான். ஸ்ரீ சாயிபாபா உயிருடன் இருந்தபோதே அவருடைய பக்தர்கள் பாபாவின் அருளினால் ஆச்சரியகரமான செயல்களைச் செய்தார்கள். நடுத்தெருப் புழுதியை எடுத்து விபூதியாக மாற்றி நோய்களைத் தீர்த்தார்கள். சாயிபாபாவின் பிரசாதத்தைப் பெற்ற

பக்தர்கள் எல்லோராலுமே பாபா செய்தவற்றை செய்ய முடிந்தது. பாபாவே அவர்களைக் கொண்டு செய்வித்தார். சாயிபாபாவின் அருளால் சித்திபெற்று, அவருடைய பிரசாதத்தையும் அனுக்கிரகத்தையும் அடைந்த பக்தர் சுவாமி கேசவய்யாஜீ. அவர்களால் செய்ய முடியாத வேலை இருக்குமா?

நாசிக்கில் நாராயண் மோதீராம் ஜானி என்ற பாபாவின் பக்தர் ஒருவர் இருந்தார். ஒருநாள் ஜானியின் நண்பரைத் தேள் கொட்டிவிட்டது. அவன் வலி பொறுக்க முடியாமல் துடித்தான். மோதீராம் பாபாவின் விபூதிக்காக வீட்டை சல்லடைபோட்டுத் தேடியும் ஒரு சிட்டிகை விபூதிகூடக் கிடைக்கவில்லை. பூஜை அறைக்குச்சென்று பாபாவின் படத்தின்முன் நின்று தியானித்தார். ஊதுவத்தியிலிருந்து விழுந்த சாம்பலை எடுத்து அதையே பாபாவின் விபூதியாக நம்பித் தன் நண்பனுக்குத் தேள் கடித்த இடத்தில் தடவினார். மறுகணமே அவருடைய வலி நின்றுவிட்டது.

பாபாவின் பக்தர்களுள் தலைசிறந்தவர் நானா சாகேப் சண்டோர்க்கர். நானாவின் நண்பர் ஒருவர் பந்த்ராவில் வசிக்கிறார். அவருடைய பெண் சிறிது காலமாக நோய்வாய்ப்பட்டிருக்கிறாள். திடீரென்று வியாதி கடுமையாகி நிலைமை ஆபத்தாய் இருப்பதாக நானாவின் நண்பருக்குச் செய்தி வந்தது. செய்தி வந்தவுடன் அவர் பாபாவின் விபூதி எங்கேயாவது வீட்டில் இருக்குமோ என்று தேடினார். வீட்டில் பாபா விபூதி கிடைக்கவில்லை. உடனே நானாவுக்கு ஆள் அனுப்பினார். நானா ஊருக்குப் புறப்பட்டுக்கொண்டிருக்கிறார். அவருடைய நண்பர் அனுப்பிய ஆள், நானாவை தானா ரெயில்வே நிலையத்திற்கு அருகே சந்தித்துச் செய்தியைச் சொன்னான். அப்பொழுது நானாவிடம் விபூதி இருக்கவில்லை. தெருவில் கிடந்த மண்ணை ஒரு சிட்டிகை எடுத்துப் பாபாவைத் தியானித்து பக்கத்திலேயே இருந்த தம் மனைவியின் நெற்றியில் இட்டார். நானாவின் நண்பருக்கு இந்தக் காட்சி கனவுபோல் தெரிந்தது. தாம் அனுப்பிய ஆள் வருவதற்குமுன்பே அவர் தம் பெண்ணைப் பார்க்கச் சென்றார். மூன்றுநாட்களாக ஆட்டிப்படைத்த அந்தப்பெண்ணின் நோய் அப்பொழுதே குறையத் தொடங்கியது.

சுவாமிஜீ பாபாவின் விபூதியால் பலருக்கு நோய்களைத் தீர்த்து வைத்ததில் ஆச்சரியப்பட எதுவுமில்லை. அவரும் எல்லா நோய்களையுமே பாபாவின் விபூதியால் தீர்த்துவிடுவதாகச் சொல்லுவதில்லை. அறுவை சிகிச்சை தேவைப்பட்டால் அவ்வாறே செய்யச் சொல்லி யோசனை சொல்லுவார். ஆனால் டாக்டர்கள் அறுவை

செய்தே தீரவேண்டுமென்ற சந்தர்ப்பங்களில் சுவாமிஜீ தேவை யில்லையென்று யோசனை சொன்னதும் உண்டு.

பக்தர்களுடைய நோய் தீர்ந்ததும் சுவாமிஜீ அதே நோயால் சில நாட்கள் துன்புற்றதும் பல சமயங்களில் நடந்த நிகழ்ச்சிகளா கும். அநேகமாக, இப்படித்தான் 1948ல் அவருக்கு க்ஷயரோக நோய் வந்திருக்க வேண்டும். சாயிபாபாவும் முதன்முதலில் இப் படித்தான் துன்புறுவார். ஒரு பக்தனுடைய மகனுக்கு 'பிளேக்' நோய் கண்டது. பாபா அந்தச் சிறுவனைக் காப்பாற்றும் பொறுப்பை மேற்கொண்டார். அவ்வளவுதான்; சிறுவனுடைய உடலிலிருந்த கட்டிகள் எல்லாம் பாபாவின் உடலில் காணப்பட்டன. சிறுவனுக்கு நோய் நீங்கி நன்ருகக் குணமாகிவிட்டது. பாபா அந்த நோயைத் தமக்குள் சிரணித்துக்கொண்டார்.

சுவாமிஜீயின் பக்தர்கள் இந்த அனுபவங்கள் எல்லாவற்றையும் நேரில் பார்த்தபின்பே சுவாமிஜீயைப் பிரத்தியக்ஷ சாயிபாபா என்று துதித்தார்கள். இன்றும் நம்புகிருர்கள். ஆனால், "நாட்டில் எவ்வளவோ பக்தர்கள் இருக்க, பாபா ஏன் ஸ்ரீ கேசவய்யாஜீயை தேர்ந்தெடுத்தார்?" என்று சிலர் கேட்பார்கள். இந்தக் கேள்விக்கு நேராக விடை சொல்ல வேண்டியவர் பாபா அவர்களே. ஆனாலும் சுவாமிஜீயின் வாழ்க்கை முறையைக் கொண்டும் சூழ்நிலையைக் கொண்டும் நாமே அந்த வினவுக்கு விடையை அறிந்து கொள்ள முயற்சிக்கலாம்.

கடவுள் என்ருல் என்ன? பக்தி, தியானம், பிரார்த்தனை என் ருல் என்ன? என்பவற்றைப் புரிந்துகொள்ளமுடியாத வயதிலே அதாவது ஒன்பது அல்லது பத்து வயதில் சுவாமிஜீ ஆஞ்சநேயர் முன் தியானத்தில் அமர்ந்துவிடுவார். சென்ன கேசவ சுவாமி கோயிலிலும் சிவாலயத்திலும் தியானம் செய்வார். கல்விப் பயிற்சி முடிந்தபின் 'கடவுள் யார்'? என்று அவர் கேட்டபோதும் அவருக் குள்ளே தெய்வ சிந்தனை இருந்திருக்கிறது.

1939-ஆம் ஆண்டில் சுவாமிஜீக்குப் பிரத்தியட்சமான சாயி பாபா 1899-ஆம் காலத்து சாயிபாபாவென்று தோன்றுகிறது. சுவாமிஜீக்கு 1939-ஆம் ஆண்டில் பிரத்தியட்சமான பாபாவின் படத்தை வாசகர்களின் பார்வைக்காக இங்கேயே பிரசுரிக்கிருேம். 1939-ஆம் ஆண்டில் மற்ருெரு சம்பவம் நிகழ்ந்தது. பாபாவுக்கு ஆப்த பக்தரான மாதவராவ் பலவந்த் தேச் பாண்டே சியாமா என்பவர் சாயி சாயிசாந்நித்தியம் அடைந்தார். 1918-ஆம் ஆண் டில் பாபா மகா சமாதி ஆனபின்பு சியாமா, சீரடிக்கு வரும் பக்தர் கள் எல்லோருக்கும் "என் என்ருல் எண்ணெய்யாக" இருந்து மிகவும் உதவி செய்வார். இவர்தாம் சாயி சத் சரிதை எழுத கோவிந்தராவ் ரகுநாத் தபோல்கருக்கு, பாபாவின் அனுமதியையும்

ஆசியையும் வாங்கிக் கொடுத்தார். மாதவராவ் தேச பாண்டே யைப்பற்றி, ''சீரடி சாயிபாபா'' என்னும் நூலில் ஸ்ரீ ராவ் பகதூர் எம். டபிள்யூ. பிரதான் இப்படி எழுதியிருக்கிறார்.

த்வாரகா மாயிக்கு அருகிலேயே பள்ளிக்கூடம் ஒன்று இருந்தது. ஸ்ரீ மாதவராவ அந்தப் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயராக இருந்தார். அவர் பள்ளிக்கூடம் விட்டதும் பாபாவிடம் வந்து ஹுக்கா தயாரிப்பார். பாபாவுடன் தாமும் ஹுக்கா குடிப்பார். அங்கேயே அதிக நேரத்தைக் கழிப்பார். இப்படிச் சிறிது காலம் சென்றது. மாதவ ராவ் தேஷ் பாண்டேக்கு, பாபாவிடம் அன்பு அதிகரித்தது. படிப்படியாக எல்லாப் பற்றுக்களையும் விட்டுவிட்டு சீரடிக்கு வெள்ளம்போல் வரும் பக்தர்களுக்கு சேவை செய்வதையே தம் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டிருந்தார். இந்தச் சேவைக்கு, 'சியாமா' பயனை எதிர்பார்க்கவில்லை. சுயநலமின்றிப் பயனை விரும்பாமல் சியாமா 1939ஆம் ஆண்டு வரையில் பாபாவின் பக்தர்களுக்குச் சேவை புரிந்து வந்தார். அவர் சிரடி சாயிபாபா வின் நடமாடும் அகராதியாக இருந்து அங்கே வரும் புதிய பக்தர் களுக்கு 'வழி' காட்டி வந்தார். 1939ல் சியாமாவின் மரணத்தால் ஏற்பட்ட குறையை மற்றொரு விதத்தில் நிரப்பிவிட்டதாகத் தோன்றுகிறது.

சுவாமிஜீ சுயநலம் இல்லாமலும், பயனை விரும்பாமலும் பாபா வின் பக்தர்களுக்குச் சேவை செய்து வருகிறார். துன்புற்றவர் களுடைய துயரைத் துடைத்து அவர்களை பாபாவின் பக்தர்களாக் குகிறார். ''பாபாவின் அருள்; எல்லாம் அவர் செயல். நான் செய் வது ஒன்றும் இல்லை. பக்தர்களின் கால் தூசிக்குக்கூட நான் ஈடாக மாட்டேன். வியாழக்கிழமையன்று பூஜை அறைக்குப் பக்தர்கள் எல்லோரும் வந்துவிட்டுபோனபின்பு, அவர்கள் அங்கே விட்டுச் சென்ற பாத தூளியை நான் என் சிரமேல் தெளித்துக்கொள் கிறேன்'' என்பார் சுவாமிஜீ.

இதே ஆண்டில், சுவாமிஜீயைப் பற்றி 'மதராஸ் மெயில்' ஆங் கில தினப் பத்திரிகையில் வெளியான மகத்தான செய்தியை வாச கர்களுக்கு அறிமுகப்படுத்துவது அவசியம்.

## தந்திரமோ மந்திரமோ அல்ல; நம்பிக்கையுள்ள பக்தர்

அன்று வியாழக்கிழமை. மாலை சுமார் நான்கு மணி. மார்ச் மாதமானாலும் வெயில் அன்று கடுமையாகத்தான் இருந்தது. வேஷ்டியும், சட்டையும் அணிந்த நடுவயதினர் ஒருவர், பத்து

வயதுச் சிறுவனைக் கையில் பிடித்தவண்ணம் பூந்தமல்லிப் பெருஞ் சாலையில் வேகமாக நடந்து போய்க் கொண்டிருந்தார். வழி யில் எதிர்ப்பட்ட சிலரை, "ஷெனாய் நகருக்கு எப்படிப் போகவேண் டும்?" என்று கேட்டார். அவருக்கு நான் வழி சொன்னேன். பிறகு, "சாயிபாபா சுவாமிஜீ எங்கே யிருக்கிறார் தெரியுமா"? என்று கேட்டார். நானும் அங்கேதான் போய்க்கொண்டிருப்ப தாகச் சொன்னவுடன் அவருக்குத் தாங்கமுடியாத சந்தோஷம் உண்டாகிவிட்டது. தம் விஷயத்தைச் சொல்லத் தொடங்கினார்.

"நான் ஒரிஸ்ஸா ராஜ்யத்திலிருந்து வருகிறேன். சமீபத்தில் நேர்ந்த விபத்து ஒன்றில் எனக்கு ஒரு கண் பார்வை போய்விட்டது. டாக்டர்கள் அந்தக் கண்ணில் இனிப் பார்வை வராதென்று சொல்லிவிட்டார்கள். என் நண்பர்கள் சிலர் இந்த சுவாமிஜீயைப் பார்க்கச் சொன்னார்கள்........" என்றார். அதற்குமேல் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை அல்லவா?

மனிதனுடைய வாழ்க்கைக்கு வேண்டிய நம்பிக்கை இருக் கிறது. இழந்துவிட்டப் பார்வை, தெய்வக் கிருபையால் கிடைக்கும் என்ற ஆசையும் நம்பிக்கையும் அவருக்கு இருக்கின்றன. அந்த நம்பிக்கையும் ஆசையும்—அவை எப்பொழுது பலிக்குமோ—அவை தாம் அவருக்குப் பிடிப்பு.

இருவரும் சுவாமி கேசவய்யாஜீயின் வீட்டிற்குச் சென்றோம். நாளுக்கு நாள் பெருகி வரும் பக்தர்களுடைய எண்ணிக்கையோடு அந்தக் கணத்தில் மற்றொருவர் சேர்ந்தார். அப்பொழுதே 'க்யூ' மிக நீண்டிருந்தது. வெகு நேரத்திற்கு முன்பிருந்தே பக்தர்கள் பொறுமையுடன் கையில் பழம், பூ, பூஜைத் திரவியங்கள் ஆகிய வற்றை வைத்துக்கொண்டு நின்றிருக்கிறார்கள். சாயிபாபாவைத் தரிசித்து, சுவாமி கேசவய்யாஜீயின் ஆசி பெற்று ஒவ்வொருவராகத் திரும்பிப் போவார்கள். பாபா தாமாகத் தேர்ந்தெடுத்த பக்தர் சுவாமி கேசவய்யாஜீ.

நாட்டில் லட்சக் கணக்கான மக்கள் தங்களுடைய உடல் நலி வாலும் மனத் துயராலும் சம்சாரக் கடலில் கொந்தளிக்கும் புய லின் நடுவில், வாழ்க்கைக் கப்பலுக்கு நங்கூரமாக உதவக் கூடிய மகான்களை என்றென்றும் தேடிக்கொண்டிருப்பார்கள். இந்த லட் சக் கணக்கான மக்களின் நம்பிக்கை இந்த மாபெறும் பக்தருடைய உருவில் வந்திருக்கிறது. மக்களின் நம்பிக்கையின் சின்னம் இவர்.

ஒவ்வொரு வியாழக்கிழமை அன்றும் நூற்றுக் கணக்கான பக் தர்கள், ஆசை துளிர்க்கும் இதயத்துடனும் பிரார்த்திக்கும் பாவத்

துடனும் சுவாமிஜீயின் வீட்டின் முன் வரிசை முறையில் வெகு ஒழுங்காக நிற்பார்கள். சுமார் எட்டு வருட காலமாக இப்படி நடந்து வருகிறது. முதலில் பக்தர்கள் சிலர்மட்டுமே வியாழக் கிழமை பூஜைக்கு வந்துகொண்டிருந்தார்கள். இப்பொழுது பக்தர் களுடைய எண்ணிக்கை நூற்றுக் கணக்கில் ஏறிவிட்டது.

சென்னை மாகாணம் பிரிக்கப்படாத காலத்தில் ஸ்ரீ கேசவய் யாஜீ சப்-ரிஜிஸ்திராராக இருந்தார். நாணயத்திற்கும், நேர்மைக் கும் கடமைக்கும் உறுதிக்கும் சிறந்தவர் எனப் புகழ் பெற்றார். பெனுகொண்டாவில் வேலை செய்துகொண்டிருந்த காலத்திலேயே இவருடைய வியாழக்கிழமை பூஜை மூலை முடுக்குகளில் உள்ளவர் களை யெல்லாம் கவர்ந்தது.

ஈசுவர கடாட்சத்தால் சுவாமி கேசவய்யாஜீ தம்மிடம் வரும் ஆயிரக் கணக்கான பக்தர்களுக்கு விபூதி கொடுத்து மன அமை தியை அருளுகிறார். 1948-ஆம் ஆண்டில் பெனுகொண்டாவில் பாபாவின் கோயிலை கட்டுவித்தார். அதுமுதல் பக்தர்கள் அங்கே ஏராளமாக வருகிறார்கள். அந்த ஆண்டிலேயே அவர் க்ஷயரோக நோய் தாக்கப்பட்டு சிகிச்சைக்காக சென்னைக்கு வந்தார். டாக்டர் கள் பதினெட்டு மாதங்கள் சிகிச்சை செய்தார்கள். சுவாமிஜீ சாயி பாபாவின் மேலேயே பாரத்தைப் போட்டார். அவருக்கு நோய் நீங்கியது. பிறகு சென்னைக்கு மாற்றலாகி இங்கேயே தங்கிவிட் டார்.

(''கௌண்டின்ய'' 1958)

## சாயி நிலையத்தில் வியாழக்கிழமை

ஷெணய் நகரில் சுவாமி கேசவய்யாஜி வியாழக்கிழமைதோறும் செய்யும் பூஜைகளை அக்கறையுடன் கவனித்தேன். சுமார் நாற்பது ஐம்பது வியாழக்கிழமைகள் போயிருப்பேன். சில வியாழக்கிழமை களில் சுவாமிஜி அளித்த விசேஷ அனுமதியின்பேரில் ஏழு அல்லது எட்டு மணிக்கே விபூதியையும் பிரசாதத்தையும் பூவையும் பெற்றுக் கொண்டு போய்விடுவேன். அங்கே பக்தர்களுக்குச் சேவை செய் யும் ஸ்ரீ நடராஜன், ஸ்ரீ பாப்ஜி நாயுடு, ஸ்ரீ சுந்தரேசன், அவருடைய தம்பி ஆகியோர் பக்தர்கள் சென்றபின் தீர்த்தப் பிரசாதங்கள் பெற்றுக்கொண்டு இரவு ஒரு மணிக்கு அல்லது இரண்டு மணிக்கு வீட்டுக்குப் போவார்கள். சில வியாழக்கிழமைகளில் நான் போகும் போதே நேரம் ஆகிவிடும். எல்லோரும் போனபின்பு சுவாமிஜி

ஸ்ரீ நடராஜன் முதலியவர்களை நான் வரவில்லையா என்று கேட்பாராம். அவர், வாரந்தோறும் என்னை வரச்சொன்னது இல்லை. நானாகவே போய்க்கொண்டிருந்தேன். இங்கே நான் என் அனுபவத்தை எழுதவில்லை. சாயி நிலையத்தில் குருவாரம் எப்படியிருக்கும் என்பதை விவரிப்பதுதான் என் எண்ணம். நான் ஒருநாள் பகல் இரண்டு மணிக்கு ஒரு நண்பனின் உடல்நிலையைப்பற்றிச் சொல்வதற்காக முதல் முதலாக சாயி நிலயத்துக்குப் போனேன். அன்று வியாழக்கிழமை என்ற நினைவில்லை. சாயி நிலையம் 'காம்பவுண்டுக்குள்' நுழைந்தபோது அங்கே வரிசையாகச் சில மூட்டைகள் இருப்பதைக் கவனித்தேன். சிலர் மர நிழலில் உட்கார்ந்திருந்தார்கள். நாலைந்துபேர் சாயி நிலயம் தாழ்வாரத்துக்கு அருகே உள்ள அறை வாயிலில் முன்னும், சிலர் படிகளிலும் உட்கார்ந்திருந்தார்கள்

"சுவாமிஜீயுடன் சுமார் அரை மணி பேசி விட்டு என்னை அறிமுகம் செய்து வைக்க அழைத்துச் சென்ற சிறுவனிடம் 'இந்த மூட்டைகள் என்ன? இவர்கள் எல்லோரும் யார்?' என்று கேட்டேன். 'என்னையே ஏன் கேட்கக் கூடாது?' என்பது போல் அதற்கு சுவாமிஜி இப்படிப் பதில் சொன்னார்.

"இவர்கள் எல்லோரும் வரிசையாகக் க்யூவில் நின்று தங்கள் முறை வந்த போது தீர்த்தப் பிரசாதங்களைப் பெற்றுக் கொண்டு செல்வார்கள். பாவம்; பலர் வெளியூரிலிருந்து வருபவர்கள். இரவு நேரமாவதற்குள் வீட்டுக்குத் திரும்பிவிட வேண்டும் என்பதால் காலை பத்து மணியிலிருந்தே வந்து அடையாளம் வைத்து விட்டு அந்த மரங்களின் நிழலில் பொழுது போக்குகிறார்கள். வேறு சிலர் பூஜை அறை வாயிலில் மாலை ஆறு மணிக்கு நான் கதவைத் திறக்கும் வரையில் உட்கார்ந்திருப்பார்கள்."

கேவலம் பக்தியுடன் பாபாவைத் தரிசிப்பதற்கு என்றால் எப்பொழுதோ முடிந்தபோது சந்தர்ப்பம் கிடைத்தபோது அங்குவந்து விட்டுப் போகலாம். ஆனால் கிட்டத்தட்ட எட்டு மணி நேரம் அங்கு காத்திருப்பதென்றால் அது ஆச்சரியமாகத்தான் தோன்றியது. சிறு வயதில் கோவாடா என்னும் ஊரில் பால கோடேச்வர ஸ்வாமியின் கோயிலில் காத்துக்கிடக்கும் பெண்களைப் பார்த்திருக்கிறேன். திருப்பதியில் ஸ்ரீவேங்கடேச்வர சுவாமியின் சன்னிதியிலும் பார்த்திருக்கிறேன். ஆனால் பக்தர்கள் இவ்வாறு உற்சாகத்தோடு உட்கார்ந்திருப்பதைப் பார்த்ததில்லை.

முதல் நாளே சாயிநிலையத்தில் வியாழக்கிழமை பூஜையின் விசேடங்களைவிட இதர விவரங்களை அறிந்து கொள்ள வேண்டியது

அவசியம் என்று நினைத்தேன். நிதானமாக விசாரித்து வெளியில் காணப்படும் விவரங்களைச் சேகரித்தேன். கண்ணுக்குப் புலனாகாத அனுபவங்களைப்பற்றி சுவாமிஜீ அடிக்கடி சொல்லி வந்தார். "எந்த வியாழனன்றும் வரும் மக்கள் இரண்டாயிரம் பேருக்குக் குறை வில்லை. ஒவ்வொரு வியாழனன்றும் அவ்வளவு பக்தர்களும் நிசப்த மாக வரிசை தவறாமல் கட்டுப்பாட்டுக்கு அடங்கித் தங்கள் முறை வரும் வரைக்கும் காத்திருப்பார்கள். ஒவ்வொருவர் முகத்திலும் ஆவல் நிறைந்திருக்கும்.

ஐந்து ரூபாய் கொடுத்தால் நமது சுந்தரேச்வர ராவோ வேறு யாராவதோ சென்று பூஜைக்கு வேண்டியவற்றை எல்லாம் வாங்கி வருவார்கள்" என்று சுவாமிஜீ சொன்னார். 'சாயிபாபா பூஜைச் செலவு ஐந்து ரூபாய்தானா' என்று நினைத்தேன் சில கோயில்களில் சகஸ்ரநாமம், அபிஷேகம், அர்ச்சனை முதலியவை செய்ய வேண்டு மானால் பத்து ரூபாய் பிடிக்கும். ஸ்வாமிக்கு, ஆரத்தி எடுத்தபின் அர்ச்சகருக்கு ஐந்துரூபாய் கொடுத்த சந்தர்ப்பங்களுமுண்டு. 'ஐந்து ரூபாய்க்கு பூஜைக்குரிய பொருள்கள் எவ்வளவு வரும்?' என்று நினைத்தேன். பாபா விரும்புவது ஐந்து ரூபாய் அல்ல; நம் சுத்தமான மனம்தான் என்பதைத் தெரிந்து கொண்டேன்.

இந்த வேலைகளைக் கவனிக்கும் பக்தர்களிடம், "ஐந்து ரூபாயில் என்ன வாங்குவீர்கள்?" என்று கேட்டேன். "ஒன்றரை ரூபாயில் பாபாவுக்கென்று தனியாக ஒரு ரோஜா மாலை வாங்குகிறார்கள். பூஜை அறை வாயிலின் வெளிச்சுவரில் மாட்டியிருக்கும் பாபா படத் திற்கும், பூஜை அறையில் உள்ள பல தெய்வப் படங்களுக்கும் மல் லிகைச் சரங்கள் வாங்குகிறார்கள். பாபாவுக்கு ஊதுவத்திகள். பன் னீர், நிவேதனத்துக்குத் தித்திப்புப் பண்டங்கள், தேங்காய்கள், வெற்றிலை பாக்கு ஆகியவற்றையும் வாங்குகிறார்கள் ஒரு பைசா கூடுவதும் இல்லை; குறைவதும் இல்லை" என்ற பதில் கிடைத்தது.

வியாழக்கிழமையன்று சுவாமிஜி எதுவும் சாப்பிட மாட்டார். இருந்தாலும் பூஜை அறைக்கு அடுத்த அறையில் அமர்ந்து மாலை மூன்று மணி வரையில் வழக்கம்போல் வந்தவர்களைச் சந்தித்து ஆத்மீக விஷயங்கள் பற்றிப் பேசிக்கொண்டிருப்பார். பக்தர்கள் திரும்பிப் போவதற்கு இரவில் நேரம் அதிகம் ஆகிறதென்று அவர் களுடைய சௌகரியத்திற்காக நாலு மணிக்கே பாபா பூஜையைத் தொடங்கி ஐந்தரை அல்லது ஆறு மணிக்குப் பூஜை அறையைத் திறப்பார். பக்தர்கள் உள்ளே செல்லத் தொடங்குவார்கள் பந் தோபஸ்துக்கு இரண்டு போலீஸ்காரர்கள் நிற்பார்கள். இருப் பினும் அவர்களுக்கு வேலை ஒன்றும் இருக்காது. வரிசையை ஒழுங்

துச் செய்யும் வேலையோ, ரகஸியை அடக்கும் வேலையோ அவர்களுக்கு இருக்கும்படி பக்தர்கள் வைப்பதில்லை.

பூஜை அறையை சுவாமிஜீயே சுத்தம் செய்வார். பாபாவுக்குச் சிறப்பாக அலங்காரம் செய்வார். பூஜை அறைச் சுவர்களில் மாட்டியிருக்கும் ஸ்ரீ வெங்கடேசுவரர், ஸ்ரீ தத்தாத்திரேயர், ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்ஸர், ஸ்ரீ முருகன், ராஜராஜேசுவரி, ஐயப்பன், விநாயகர் ஆகியோர் படங்களைச் சுத்தமாகத் துடைத்து, பூமாலைகள் சாத்தி, ஊதுவத்திகளை ஏற்றிவைத்து அலங்கரிப்பார். இந்த அலங்காரத்துக்குக் கிட்டத்தட்ட அரைமணி நேரமாகும். சுவாமிஜி சிவப்புப் பட்டுக் கட்டிக்கொண்டு பாபாவின்முன் அமர்ந்து பூஜை செய்துவிட்டு சுமார் ஒரு மணி நேரம் தியானத்தில் இருப்பார். பாபாவின் படத்தைத் தனி மண்டபம் ஒன்றில் வைத்திருக்கிறார். துவாரகா மாயியில் இருப்பதுபோல் இரு புறங்களிலும் குத்து விளக்குகள் சுடர்விட்டு ஒளிர்கின்றன. வருடம் முன்னூற்று அறுபத்தைந்து நாட்களும் அப்படியே எரிந்துகொண்டிருக்கின்றன. சீரடியில் ஹோமகுண்டம் கனிவதுபோல் இவர் 'ஊதி' (ஹோமரக்ஷை) தயாரிப்பதில்லை. சீரடியிலிருந்தே சுவாமிஜீக்கு 'ஊதி' வருகிறது. வேறு விபூதிகளை இவர் உபயோகிப்பதில்லை.

இவர் தம் பூஜை அறையில் பக்தர்களை ஆதரிக்கும் முறை விந்தையாகவும், ஆச்சரியமுள்ளதாகவும் இருக்கும். இதைக் கவனித்தால் யாருடைய பூர்வ ஜென்ம புண்ணியம் எப்படி இருக்கும் என்பதும், இந்த ஜென்மத்தில் யார் எவ்வளவு நீதியுடன் இருப்பார்கள் என்பதும் எளிதில் தெரிந்துவிடும். பதவியையும், செல்வத்தையும் பார்த்து சுவாமிஜி பக்தர்களை ஆதரிப்பதும் ஆசீர்வதிப்பதுமில்லை. அவரவர்களுடைய பூர்வ ஜன்ம புண்ணிய பாவங்களைப் பொறுத்து பாபாவின் அருளைப் பக்தர்களுக்குக் கிடைக்கச் செய்கிறார்.

பக்தர்கள், இரண்டு கைகள் நிறைய பழம், மலர், ஊதுவத்தி, மிட்டாய் இவைகளை வாங்கி வருவார்கள். சுவாமிஜீ சிலரிடமிருந்து எல்லாவற்றையும் வாங்கி பாபாவுக்குக் கொடுத்துவிட்டு அவர்களுக்கு வேறு மலர்களும், பழங்களும் கொடுப்பார். வேறு சிலருக்கு கொண்டுவந்த பழங்களையும், மலர்களையும் கையில் வாங்கி பாபாவிடம் காண்பித்துவிட்டு அதையே அவர்களுக்குத் திருப்பிக் கொடுத்துவிடுவார். வேறு சிலர் கொண்டுவந்தவற்றை வாங்கிக் கொள்ளாமல் அவற்றைத் தம் கையால் தொட்டுவிட்டு எடுத்துக் கொண்டு போகச் சொல்லுவார். மற்றும் சில விஷயங்கள் வேடிக்கையாக இருக்கும். அவர்கள் கொண்டுவந்த எல்லாவற்றையும் வாங்கி பாபாவிடம் சமர்ப்பித்துவிட்டு விபூதிமட்டும் கொடுத்து அனுப்பிவிடுவார், சிலர் பெயருக்கு ஒரு பழமும் ஒரு பூமாலையும்

வாங்கிக்கொண்டு சென்றிருப்பார்கள். அவர்களுக்குச் சுமக்க முடியாத அளவுக்குப் பூவும், பழமும் கொடுத்து ஆசீர்வதித்து அனுப்புவார். சிலர் ஒன்றும் கொண்டு போகாவிட்டாலும் கொடுத்தனுப்புவார்.

சில பக்தர்கள் சுவாமிஜியை சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்வார்கள். அப்பொழுது சுவாமிஜி தம் கையால் அவர்கள் முதுகைத் தடவிக் கொடுப்பார். உடனே உடலில் உள்ள எல்லா நோய்களும் போய்விட்டதுபோல் தோன்றும். புதிய உடம்பைப் பெற்றுவிட்டது போல் இருக்கும். சிலருடைய முதுகில் தட்டுவார்; மற்றும சிலர் முதுகில் பலமாக இரண்டு மூன்று அடிகள் கொடுப்பார்; சிலரைத் தொடவே மாட்டார். சில பக்தர்கள் தலை குனிந்து வணங்குவார்கள். தாய் குழந்தையின் தலையைத் தடவிக் கொடுப்பதுபோல் அவர்கள் தலையைத் தடவிக் கொடுப்பார். சிலருடைய தலையைப் பலமாக அழுத்துவார். சிலரைத் தொடவே மாட்டார். சாதாரணமாக எதிரில் நிற்கும்போது எல்லோரையும் ஒரே மாதிரியாகத்தான் பார்ப்பார். வாயில் விபூதியைப் போடுவார். நெற்றியில் சிவனுக்கு மூன்றுவது கண் இருக்கும் இடத்தில் (புருவ மத்தியில்) கட்டை விரலால் அழுத்துவார். சிலர் நெற்றியில் இரண்டொரு நிமிடங்கள் அப்படியே வைத்துக் கொண்டிருப்பார். இதற்கிடையில் 'அல்லா மாலிக்' என்று சொல்லிக்கொண்டு விசித்திரமான ஓர் அசைவைக் கொடுப்பார். அதற்குப் பிறகு தம் கையை அரை நிமிஷமோ ஒரு நிமிஷமோ தரையில் அழுத்திக் கொண்டிருப்பார். பிறகு சொல்ல வேண்டிய விஷயங்களைச் சொல்லுவார். என்னக் காரணத்தாலோ சிலருக்கு இப்படியெல்லாம் செய்யாமல் கையில் விபூதியை மட்டும் போட்டுப் போகச் சொல்வார். சிலருக்கு எல்லா விஷயங்களையும் சொல்லுவார். சிலரை ஏழு வாரம், ஒன்பது வாரம், நாற்பது வாரங்கள் குறிப்பிட்டு வரச் சொல்லுவார்.

சுவாமிஜி நம் நெற்றியை அழுத்தும் போதும் தரையை அழுத்தும் போதும் ஏதோ மின்சார சக்தி உடலில் பாய்வது போல இருக்கும். அந்த பூஜை அறையில் சுவாமிஜி, பாபாவின் அருகில் சுமார் ஆறு அல்லது ஏழு மணி நேரம் நின்று பக்தர்களுக்குத் தீர்த்தப் பிரசாதங்கள் கொடுக்கும் போது அவரிடமிருந்து ஏதோ ஒளிக்கூட்டங்கள் வெளிப்படுவது போலும் அவை நமக்குள் புகுவது போலும் தோன்றும்.

நாம் காரியார்த்தமாகப் போனாலும், வேறு ஏதாவது விரும்பிச் சென்றாலும் இவை எதுவுமின்றி சுவாமிஜீயைத் தரிசிப்பதற்கு மட்டுமே போனாலும், அவர் எல்லோரையும் மிகுந்த அன்புடன் ஆதரிப்பார். சிலரை 'வாருங்கள், எல்லோரும் சுகமா? என்ன

விசேஷம்?' என்று குசலப் பிரச்னம் செய்து அன்புடன் பேசுவார். "வா, அப்பா! என்ன விஷயம்! ஒன்றும் பயம் இல்லை. பாபாவை நம்பு. எல்லாம் அவர் பார்த்துக்கொள்வார்" என்று வேறு சிலருக்கு ஆறுதல் சொல்வார். அவர் அப்படி விசாரிக்கும்போதே இதயத்தின் சுமை, பாதி குறைந்துவிடும். அவர், பாபாவின் அனுக்கிரகத்தை நம்மேல் பரவச் செய்து தமது குறையாத தவச் செல்வத்தில் நமக்குக் கொஞ்சம் பங்கிட்டுக் கொடுத்து, நம் பாபத்தைக் கழுவி துன்பத்தைப் போக்குகிறார். பூஜையறைக்குப் போய்விட்டுத் திருபுகிறவர்களைப் பார்த்தால் அவர்கள் முகத்தில் திருப்தி, ஆவல், தன்னம்பிக்கையெல்லாம் தெரியும். ஏக்கம் நீங்கித் தெய்வ பக்தியைப் பெற்றுத் திரும்பி வருவார்கள். திரிவேணி சங்கமத்தில் ஸ்நானம் செய்து கரையேறியவர்கள்போல் வருவார்கள். அதில் என்ன அதிசயம்! பாபாவின் இரண்டு பாதங்களிலிருந்தும் கங்கையும் யமுனையும் பெருக்கெடுத்தோடவில்லையா?

சுவாமிஜீ சிலரைத் தீவிரமாகக் கண்டிப்பார். பாபா துரத்துவதுபோல சிலரைத் துரத்துவார். "செய்யத் தகாததை செய்துவிட்டு பாபாவின் அனுக்கிரகத்தைப் பெறலாம் என்று வந்திருக்கிறாயா? யாரை ஏமாற்றுகிறாய்?" என்று கர்ஜித்தால் பக்தர்கள் நடுங்கிவிடுவார்கள். ஆனால் அவர்களுடைய அதிர்ஷ்டம் காரணமாக அவர்களுடைய வினை அழிந்துபோகும். காலம் நெருங்கும்போதுதான் சுவாமிஜி பக்தர்களை இவ்வாறு கண்டிப்பார்.

வறுமையில் வாடுபவர்கள் வந்தால் சுவாமிஜி பாபாவின் முன் இருக்கும் கிண்ணத்திலிருந்து ஒரு பைசா, இரண்டு பைசா, கால் ரூபாய், அரை ரூபாய், ரூபாய் நோட்டு இவற்றுள் ஏதோ ஒன்றை எடுத்துக் கொடுத்து அதைக் கூடவே வைத்திருக்கும்படி சொல்லுவார். நோயும், கவலையும் உள்ளவர்களுக்கு விபூதிக் கொடுத்துக் கையிலே வைத்துக்கொள்ளச் சொல்லுவார்.

கைக் குழந்தையை இடுப்பில் வைத்துக்கொண்டு தாய்மார்கள் வருவார்கள். கிழவர்களை அழைத்துக்கொண்டு சிறுவர்கள் வருவார்கள். கணவன் மனைவியரும், அப்பாவும் பிள்ளையும், வியாபாரிகளும் அதிகாரிகளும் வருவார்கள். வேலையில்லாதவர்களும், பல மதத்தினரும் வருவார்கள். சுவாமிஜி எல்லோரையும் சமமாகப் பார்த்து அவர்களுடைய பிரச்னைகளின் பரிகாரத்துக்கு வழி சொல்லுவார். துன்பங்களை விலக்க வழி காட்டுவார்.

நாம் இத்தனை வாரங்கள் வியாழக்கிழமை பூஜைக்கு வருகிறோம் என்று கணக்கு வைத்துக்கொள்ளாமல் ஒவ்வொரு வியாழன்

அன்றும் சுவாமிஜீயின் பூஜைக்கு ஆஜராகிறவர்கள் இருக்கிறார்கள். பெரும் பணக்காரர்கள், உத்தியோகத்தில் இருப்பவர்கள் பாபா வின் அருளுக்கு பாத்திரர்களான சாமான்ய மனிதர்கள் எல்லோ ருமே சுவாமிஜீயைத் தரிசிக்கலாம்.

முன்பெல்லாம் சுவாமிஜி நின்றவண்ணமே பக்தர்களுக்கெல் லாம் தீர்த்தப் பிரசாதங்கள் கொடுத்துக் கொண்டிருந்தார். அவ ருக்கு இப்போது வயது அறுபத்தொன்பது. சில வருடங்களாக பாபாவின் அருகே நாற்காலியிலமர்ந்து தீர்த்தப் பிரசாதங்களைக் கொடுக்கிறார். பூஜை முடிந்த கையோடு சொன்னால்தான் சுவாமிஜி நன்றாக சொல்லுவார் என்ற தவறான கருத்து சிலருக்கு உண்டு. அவர் பூஜை அறைக் கதவைத் திறந்து திரும்பவும் மூடும் வரையில் ஒரே சம நிலையில் இருப்பார். பக்தர்கள் எல்லோரும் சென்றபின் கதவை மூடிவிட்டு அறையில் உதிர்ந்த பக்தர்களுடைய கால் தூசியை சுவாமிஜி எடுத்துத் தம் தலைமேல் வைத்துக்கொண்டு பாபாவினுடைய தீர்த்தத்தை உட்கொண்டு பூஜை அறையிலிருந்து வீட்டில் நுழையும்வரையில் அவருக்குக் களைப்பே தோன்றுவதில்லை. சுவாமிஜி பாபாவின் பூஜையைத் தொடங்கியதுமுதல் இன்றுவரை வியாழக்கிழமை பூஜைக்குச் சென்று பாபாவின் பக்தர்களானவர் கள் ஆயிரக்கணக்கில் உள்ளனர். வியாழக்கிழமை பூஜையின் மகிமைக்கு இதுதான் எடுத்துக்காட்டு.

இதுவரையில் சுவாமிஜியின் மூலமாக நற்பயன் பெற்ற பக்தர் களுடைய அனுபவங்களை விஸ்தரித்து எழுதினோம். வாசகர்கள் இந்த அனுபவத்தை அக்கறையுடன் கவனித்தால் நலம் பெறலாம்.

## கடிதம் வாயிலாக சிகிச்சை

**ஸ்ரீ டி. வி. ரமணையா, கோபர்கான்**

சீரடி, சாயிபாபா என்னும் இரண்டு சொற்களும் ஒன்றுக் கொன்று துணையானவை. சீரடி மிகப்புனிதமான தலம். ஆகையால் சாயிபாபா அங்கே வசித்தார்கள். பாபா உயிரோடு இருந்த போதும் சரி, சமாதியான பின்பும் சரி, ஆயிரக்கணக்கான பக்தர் கள் சீரடிக்குச் சென்றார்கள்; சென்று கொண்டிருக்கிறார்கள். இவர் களுள் பலவகை உண்டு. பல கோரிக்கைகளுடன் சீரடிக்குப் போகி றார்கள். சாயிபாபாவோடு பழகி எனக்கு ஏற்பட்ட அனுபவங்கள் காரணமாக அவர் மகாயோகி என்று சொல்லுகிறேன். பாபாவைத் தரிசித்தவர்கள் யாருமே அதிருப்தியுடன் சென்றதில்லை,

பாபாவைப்போலவே அவர்பக்தர்களும் மகிமை பெற்றவர்கள். சாயிபாபாவின் அநுக்கிரகம் பெற்ற பிரமுகரான, பிரசித்த பக்தரிடம் நான் பெற்ற அனுபவங்கள் சிலவற்றைச் சொல்லுகிறேன். நான் பெற்ற அனுபவங்கள் மிக அற்புதமானவை. அந்தச் சிறந்த பக்தர், சுவாமி கேசவய்யாஜி சாதாரண எஸ். பி. கேசவய்யாவாக சீரடி வந்து கொண்டிருந்த காலத்திலேயே அவரை எனக்குத் தெரியும். பக்தி மார்க்கத்தில் அவர் மிகவும் முன்னேறிவிட்டார். சுவாமி பால கேசவய்யாவாகப் பிறந்து சாயி பக்த கேசவய்யாவாகப் பக்குவம் பெற்று, சுவாமி கேசவய்யாவாக வளர்ந்து வருகிறார். இந்த வளர்ச்சியில் வியக்கத்தக்கது எதுவும் இல்லை. சென்னை சென்று நேரில் இவரைச் சந்திக்க இயலாததால் நான் இவருடன் கடிதப் போக்குவரத்து மூலம் அறிமுகம் செய்து கொண்டேன். பழக்கம் நீடித்தது. அதிர்ஷ்ட வசமாய்க் கிடைத்த பழக்கத்தை உயிர் போல் போற்றிப் பேணி வந்தேன். சென்னை ஷெணய் நகரில் வியாழனன்று இவர் செய்யும் பூஜையும் பிறகு கொடுக்கும் பிரசாதத்தினால் ஏற்படும் பலன்களும் பிரசித்தமானது. சுவாமிஜியைப் பற்றி இந்த நான்கு வார்த்தைகள் எழுதும் உற்சாகம் ஏற்படுவதற்கு, எனக்கு இரண்டு முறை ஏற்பட்ட பலன்கள்தாம் காரணம். முதல் அனுபவம் 1956-ஆம் ஆண்டிலும், இரண்டாம் அனுபவம் 1959-ஆம் ஆண்டிலும் ஏற்பட்டன.

எந்தப் பாவத்தையும் அறியாத என்மேல் விதி சீறிப் பாய்ந்தது. அந்த அடிக்கு நான் படுகுழியில் விழுந்திருக்க வேண்டியவன். நான் நிலைமையை விளக்கி நான் நிரபராதி என்பதையும் காட்டி சுவாமிஜீக்கு எழுதினேன். கோபர்கானில் இருந்தால் சீரடிக்குப் போய் வருவேன். பாபாவிடத்திலும் அவருடைய அருளிலும் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை உண்டு.

ஒருநாள் சுவாமிஜீயிடமிருந்து கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தின் செய்தி எனக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தியது. சுயநலம் மிக்க சிலருடைய தந்திரத்தால் மேலதிகாரிகள் என்னை கோபர்கான் ஸ்டேஷனிலிருந்து ஒரு சின்ன ஸ்டேஷனுக்கு மாற்ற திட்டமிட்டுக் கொண்டிருந்தார்கள். தர்மம் வெல்லும் என்ற நம்பிக்கை இருந்தாலும் 'முடிவு என்னவாகுமோ' என்ற பயமும், சந்தேகமும் துளைத்தன.

"பாபாவைப்பற்றி எந்தவிதமான சந்தேகமும் வைத்துக் கொள்ள வேண்டாம்; அவருடைய பக்தர்கள் துன்பத்துக்கு ஆளாக மாட்டார்கள். மேலதிகாரிகளுடைய உதவியை வேண்டி இந்த மாற்றலை தடுத்துக்கொள்ளலாம். ஆனால் இந்தமுறை பாபாவிடம்

நம்பிக்கையில்லை என்பதைக் காண்பிக்கும் உங்களுக்கு மாற்றல் ஆனாலும் அது பதவிஉயர்வுடன் வரும்'' என்று சுவாமிஜீ எழுதினர்.

சரியாக அப்படியேதான் நடந்தது. என்னை என்னவோ மாற்றினார்கள். ஆனால் நான் இருந்ததைவிட மேல் பதவிக்குத்தான் என்னை மாற்றினார்கள். ஸ்ரீ பாபா, சுவாமிஜீயின் மூலமாக அருள் செய்துகொண்டிருக்கிறார். ''எங்கே என் பக்தர்கள் என்னைப் பாடுகிறார்களோ அங்கே நான் இருப்பேன்'' என்று மகாவிஷ்ணு நாரதரிடம் சொல்லவில்லையா?

மூன்று வருடங்கள் பல இடங்களில் வேலை பார்த்தப்பின் அதிர்ஷ்ட வசமாக இந்த ஊர்கள் எல்லாம் சீரடிக்குப் பக்கத்திலேயே இருந்தன, ஒரு புதுப் பிரச்னைக்கு ஈடு கொடுக்கும்படி நேர்ந்தது. பதவி உயர்வு கொடுத்து என்னை செகந்தராபாத்துக்கு போகச் சொன்னார்கள். சீரடிக்கு மிக தூரத்திலிருக்கும் அங்கே போக எனக்கு மனம் ஒப்பவில்லை. இந்த மாற்றல் உத்தரவுகள் கிழக்கே உதிக்கும் சூரியன் மேற்கே உதித்தாலும் மாற்ற முடியாதது. மாற்றல் உத்தரவை தலைமேல் ஏற்று செகந்தராபாத் போக வேண்டியதுதான்; வேறு ஒன்றும் செய்ய முடியாது. ஆனாலும் பழைய அனுபவத்தை ஒட்டி எனக்குச் சிறிது நம்பிக்கை இருந்தது. 1959ம் வருடம் ஆகஸ்ட் மாதம் 28ம் தேதியன்று கேசவய்யாஜீயிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. என்னை செகந்தராபாத்துக்கு மாற்றமாட்டார்கள் என்றும் அப்படி மாற்றினாலும் மூன்று மாதங்களுக்குப்பின் நான் திரும்பி இருந்த இடத்திற்கே வந்துவிடுவேன் என்றும் அவர் தெளிவாக எழுதியிருந்தார். சுவாமிஜீயின் பேச்சில் எனக்கு முழு நம்பிக்கை உண்டு. ஆனால் மேலிடத்து உத்தரவுகள் மாற்ற முடியாத ஒன்று. நிலைமை மட்டும் சற்று அநுகூலமாகவே இருந்தது. பலநாட்களாக எனக்கு மாற்றல் உத்தரவு வரவே இல்லை; சரியாக மூன்று மாதங்களுக்குப் பின், நவம்பர் 28ம் தேதி மாற்றலை ரத்து செய்து புத்தம் புதிய உத்தரவு கோபர்கானுக்கு வந்தது. இது விதியின் செயல் அன்று; பாபாவின் அநுக்கிரகம்; சுவாமிஜீயின் ஆசீர்வாதம்.

சுவாமிஜீ உபதேசிக்கும் மந்திரம், ''ஓம் சாயிராம்!'' இம் மந்திரம் அற்புதங்களைச் சாதிப்பது. ஷெனாய் நகரில் ஸ்ரீ ராமநவமி, விஜயதசமி உற்சவங்கள் மிக விமரிசையாக நடைபெறுகின்றன. இந்தக் காலங்களில் சுவாமிஜீயை தரிசித்து ஆசீர்வாதம் பெறுபவர்கள் கொடுத்து வைத்தவர்கள். சுவாமிஜி மூலமாக சாயிபாபா பக்தர்களுக்கு அருள் செய்கிறார் என்பது என் பரிபூரண நம்பிக்கை. சாயிபாபாவுக்கும் அவருடைய பக்தரான ஸ்ரீ கேசவய்யாஜீக்கும் இதோ என் நமஸ்காரங்கள்.

(ஸஞ்சய—1960 பிப்ரவரி 25.)

## ஸ்ரீ ராம ரக்ஷை : ஸ்ரீ பிடிக்கிடி வேங்கடேச்வர ராவ்

அது ஒரு நன்னாள். என் தம்பி சென்னையில் படித்துக்கொண்டிருந்தான். 1958ம் ஆண்டு மார்ச்மாதத்தில் 'பி.எஸ்ஸி' பரீட்சைக்குப் போனான். 1955ம் ஆண்டு அக்டோபரில் என் தகப்பனார் ஸ்ரீ ராமகோடி ஐயா காலம் சென்றது முதல் எங்களுக்கு கஷ்டங்கள் தொடர்ந்தன. பகவானுடைய அருளால் எப்படியோ காலந் தள்ளிக் கொண்டிருந்தோம். மன அமைதி பெறலாமென்று சோதிடர்கள் பலரைப் பார்த்தேன். நல்ல காலம் வரும் என்று சோதிடர்கள் சொல்லும்போதுமட்டும் சிறிது சந்தோஷமாக இருக்கும். இந்த நிலைமையில் என் தம்பியைப் பார்க்க சென்னைக்குச் சென்றேன். பேச்சுபோக்கில் என் தம்பி சுவாமிஜீயைப் பற்றி சொன்னான். கேட்டது முதல் எப்போது அவரைத் தரிசிப்போமென்ற ஆவல் ஏற்பட்டது.

அன்று புதன்கிழமை. என் தம்பியை அழைத்துக்கொண்டு காலையிலேயே சுவாமிஜீ வீட்டுக்குச் சென்றேன். முன்வாயிலில் சுவாமிஜீ நின்றுகொண்டிருந்தார். சாதாரண உடை தரித்துக் கொண்டிருந்தபடியால் அவர் சுவாமிஜி அல்ல என்று நினைத்தேன். அவரிடமே 'சுவாமி கேசவய்யாஜீ எங்கிருக்கிறார்'' என்று கேட்டேன். அவர் புன்னகை செய்து, ''என்ன வேண்டும்'' என்று கேட்டார். நான் தடுமாற்றத்துடன் ''அவரை தரிசிக்க வந்தோம்'' என்றேன். அவர்தாம் சுவாமிஜீ என்பது அப்போதுதான் புரிந்தது. அவருடைய தரிசன பாக்கியம் அன்றைக்குத்தான் எங்களுக்கு முதன்முதலாகக் கிடைத்தது. எங்கள் குறைகளைச் சொன்னோம். எங்கள் தகப்பனார் இறந்த துக்கத்தைக்கூட அப்போதைக்கு மறக்க முடிந்தது. சுவாமிஜி எங்களுக்குத் தைரியம் சொன்னார். ''சாயி பாபாவை நம்புங்கள்; ஆத்ம சுத்தியுடன் பாபாவை நினைத்துக் கொள்ளுங்கள்'' என்றார். எங்கள் நெற்றியில் விபூதியிட்டு ஆசீர்வதித்தார். சுவாமிஜீயின் அன்பையும், ஆதரவையும் எழுதி முடியாது. ''நாளை இரவு பூஜைக்கு வாருங்கள்'' என்றார்.

மறுநாள் இரவு எட்டரை மணிக்கு ஷெனாய் நகர் சென்றோம். அப்பொழுதே சுவாமிஜீயிடம் பிரசாதம் பெற்றுக்கொண்டு பல பக்தர்கள் போய்விட்டார்கள். சிலர் வெளியே வந்துகொண்டிருந்தார்கள். பலர் இருநூறு கெஜ நீளம் வரிசையில் நிசப்தமாக நின்றுகொண்டிருந்தார்கள் பக்தர்கள் ஒழுங்காக சுவாமிஜீயை தரிசித்து விபூதி பெற்றுக்கொண்டு வெளியே சென்றுகொண்டிருந்தார்கள். அவர்களைப் பார்க்கும்போது எங்களுக்கு மிகவும் தெம்பு உண்டா

ற்று. அவர்கள் முகத்தில் சந்தோஷமும் திருப்தியும் தெளிவாகத் தெரிந்தன. குறையாத பெரும் புதையலை பெற்ற ஏழைகள் பெறும் சந்தோஷம் பக்தர்களுடைய முகத்தில் ஒளி வீசியது. பக்தர்கள் இரவு பதினொரு மணி வரையிலும் வந்துகொண்டே இருந்தார்கள். ஐந்து வயது சிறுவர் சிறுமியர் முதல் தொண்ணூறு வயது கிழவர் வரை அந்தக் 'க்யூ'வில் இருந்தார்கள். எல்லா சாதியினரும், எல்லா மதத்தினரும், ஏழைகளும், பணக்காரர்களும் இருந்தார்கள்.

எங்கள் முறை வந்தது. பூஜை அறையில் நுழைந்தோம். உடல் புல்லரித்தது. சுவாமிஜீயை நமஸ்கரித்தோம். அவர், தம் அமுதக் கைகளால் முதுகைத் தட்டினார். தலையில் கை வைத்து ஆசிர்வாதம் செய்தார். "என்னப்பா! என்னவேண்டும்? சொல்லுங்கள்" என்றார். தம்பியின் பரீட்சையைப்பற்றிச் சொன்னேன். ஒரு விபூதி பொட்டலம் கொடுத்து ஜேபியில் பத்திரமாக வைத்துக்கொண்டு பரீட்சைக்குப் போகச் சொன்னார். பாபா காப்பாற்றுவார் என்று தைரியம் சொன்னார்.

நான் எங்கள் குடும்பக் கஷ்டங்களை சுவாமிஜீயிடம் சொன்னேன். அவர் என் தலையை மெதுவாகத் தட்டி விபூதியும், பிரசாதமும் கொடுத்து, "பாபாவை நம்பி ஆத்ம சுத்தியுடன் சாயியை நினைத்துக்கொள். நாளடைவில் ஐந்தாறு மாதங்களுக்குள் கஷ்டங்கள் குறைந்துவிடும். பாபாவை நம்பினவர்களை, பாபாவுக்கு ஆத்மார்ப்பணம் செய்துகொண்டவர்களை பாபா நிச்சயமாக காப்பார்" என்று சொன்னார். எனக்கு சிறிது தைரியம் ஏற்பட்டது. மனம் லேசாவதுபோல் தோன்றியது. திருப்தியோடு நான் வெளியே வந்தேன்.

இரண்டு மாதங்களுக்குப் பின் சுவாமிஜீயைத் தரிசித்தேன். என் தம்பி முதல் வகுப்பில் தேறி இருந்தான். எம்.ஐ.டி. கல்லூரியில் இடத்துக்கு விண்ணப்பம் செய்திருந்தான். இடம் கிடைக்குமோ கிடைக்காதோ என்ற கவலை. சுவாமிஜீயிடம் விஷயத்தைச் சொன்னேன். பாபாவின் அருளினால் முதல் வகுப்பில் தேறினான் என்று சொன்னதும் சுவாமிஜீ சந்தோஷப்பட்டார். எம்.ஐ.டி. விண்ணப்பத்தைப் பற்றிச் சொல்லவும் வேறொரு விபூதி பொட்டலத்தைக் கொடுத்து, "இண்டர்வ்யூவின்போது இதை உன்னிடமே வைத்துக்கொள்" என்றார். இடத்தைப்பற்றி பாபா கவனித்துக்கொள்வார் என்று உத்தரவு கொடுத்தார். அவர் சொன்னபடியே என் தம்பி போனதும் இடம் கிடைத்தது. சுவாமிஜீயின் கருணைக்குப் பாத்திரமானபின் நடக்காதது ஒன்று உளதோ!

அதுமுதல் சமயம் கிடைத்த போதெல்லாம் சுவாமிஜீயின வியாழக்கிழமை பூஜைக்குப் போய்க்கொண்டிருந்தேன். ஒருமுறை 'சீரடி போய்வா' என்று உத்தரவு கொடுத்தார். சுவாமிஜியின் தய வால் எதிர்பாராமல் குடும்பத்தோடு சீரடி போய், பாபாவின் சமா தியைப் பார்த்தோம். சாயிபாபா எங்களை ஆதரவோடு விசாரித்துக் காப்பாற்றுவேன் என்று அபயம் கொடுத்ததுபோல் எங்களுக்குத் தோன்றியது.

பிறகு சுவாமிஜியை அடிக்கடி தரிசித்து வந்தோம். இன்னும் கஷ்டகாலம் தீரவில்லையென்றும், மனம் முழு அமைதி பெறவில்லை யென்றும் சொன்னேன். அவசரப்படுவதால் பயனில்லை யென்றும் மனிதன் வினையை அனுபவித்தே தீர வேண்டும் என்றும் சொல்லி விபூதி கொடுத்தார்.

இப்படியே சிறிதுகாலம் சென்றது. 1958 — செப்டம்பரில் ஸ்ரீ மலையாள சுவாமிகள் ராஜமஹேந்திரவரத்தில் சாதுர்மாஸ்ய விரத தீக்ஷையில் இருந்தார். விஜயவாடாவில் எங்கள் வீட்டுக்கு அருகே ஸ்ரீ மலையாள சுவாமிகளின் சிஷ்யர் ஒருவர் இருந்தார். அவர் வெகு நாட்களாக என்னிடம் ஸ்ரீ மலையாள சுவாமிகளிடம் உபதேசம் பெற்றுக்கொள் என்று சொல்லி வந்தார். நல்ல நாள் பார்த்து இருவரும் ராஜமஹேந்திரவரம் சென்றோம். அவர் எங்களை ஆதரவுடன் வரவேற்றார். அவரிடம் என் கஷ்டங்களைச் சொல்லிக்கொண்டேன். எப்போது நல்ல காலம் வரும் என்று கேட்டேன். என் முறையீட்டை சாவதானமாகக் கேட்டுத் தாம் இப்பொழுது இதுபோன்ற விஷயங்களைப்பற்றிச் சொல்வதில்லை என்று சொன்னார். சம்பாஷணையின் நடுவில் சுவாமி கேசவய்யா ஜீயிடம் போய்வந்தீர்களா என்று கேட்டார். "ஆம், போனேன்" என்று சொன்னேன். அவரிடம் மந்த்ரோபதேசத்துக்காக வந்தேன் என்றும் சொன்னேன். அப்பொழுது சாப்பாட்டு நேரமாகிவிட்ட தால் அவரிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு தங்கியிருந்த இடத் திற்கு திரும்பிவிட்டோம்.

## சுவாமிஜீயுடன் அறிமுகம்

திரும்பவும் மத்தியானம் சென்று அவரை தரிசித்து உத்தரவு பெற்றுக்கொண்டோம். அப்பொழுது ஸ்ரீ மலையாள சுவாமிகள் என்னிடம் இப்படிச் சொன்னார். " நீங்கள் சொன்னதை யெல்லாம் ஆலோசித்தேன். விரைவிலேயே உங்களுக்கு நல்ல காலம் பிறக்கும். சத்திய நெறியிலேயே செல்லுங்கள். சத்தியம் தவறாதீர்கள். எவ் வளவு கஷ்டம் அடைந்தாலும் சத்திய நெறியை விடாதீர்கள்.

உங்கள் கஷ்டம் தீர்ந்துவிடும். மந்திரோபதேசத்துக்கு இது தக்க சமயம் அல்ல. ஸ்ரீ கேசவய்யாஜீ மாபெரும் பக்தர். அவரையே குருவாக மதித்து சொன்னபடி செய்யுங்கள். அவர் உங்களுக்கு வழி காட்டுவார். அந்த வழியிலேயே செல்லுங்கள். அவரையே முழுவதும் நம்புங்கள். உங்கள் கஷ்டம் தீர மூன்று ஆண்டுகள் செல்லும். ஸ்ரீ கேசவய்யாஜீயே உங்களுக்கு தைரியத்தை அளித்து நல்ல வழி காட்டுவார்'' என்றார்.

இது ஒரு விந்தையான நிகழ்ச்சியாக எனக்குப் பட்டது. நான்கு மாதங்களுக்குப்பின் சுவாமிஜீயிடம் நடந்ததையெல்லாம் சொல்லி இன்னும் மன அமைதி ஏற்படவில்லை யென்று சொல்லிக்கொண்டேன். அவர் என்னிடம் விபூதி பொட்டலம் ஒன்றைக் கொடுத்து எப்பொழுதும் கூடவே வைத்திருக்கும்படி சொன்னார். அன்றுமுதல் எனக்கு தைரியம் பிறந்துவிட்டது. அதே வருடம் நவம்பர் மாதம் 26ந் தேதியன்று கோர்ட்டு வேலை நிமித்தம் ஐதராபாத் சென்றேன். வழக்கு டிசம்பர் 1ம் தேதிக்கு தள்ளிப் போயிற்று. உடனே சீரடி போய்விட்டு, ஐதராபாத்துக்கு திரும்பி கோர்ட்டு வேலையை முடித்துக்கொண்டேன். வீட்டிற்கு வந்துபார்த்தால் சுவாமிஜீ கொடுத்த விபூதி பொட்டலத்தைக் காணோம். மனக் குழப்பம் அதிகரித்தது. டிசம்பர் 11ந் தேதி சுவாமிஜீயை தரிசித்து நடந்ததைச் சொன்னேன். திரும்பவும் ஒரு விபூதிப் பொட்டலமும் இரண்டு நயா பைசாக் காசும் கொடுத்து ''உயிர்போல் கையிலே வைத்துக் காப்பாற்று'' என்றார். சுவாமிஜீதான் எங்களுக்கு ஸ்ரீராம ரக்ஷை.

('ஸஞ்சய', 31, டிசம்பர் 1959)

## அபூர்வ அனுபவங்கள்

சுவாமி கேசவய்யாஜீயைத் தரிசித்த சாயி பக்தர்களுடைய அனுபவங்களை சேகரித்து குத்தி வக்கீலான பாபாவின் பக்தர் ஸ்ரீ எஸ். சுப்பாராவ் அவர்கள் 1941-ஆம் ஆண்டிலேயே 'ஸாயி ஸுதா' நவம்பர், டிசம்பர் இதழ்களில் வெளியிட்டார். அவற்றை முதலில் எழுதுவது பொருத்தமாக இருக்கும்.

## எஸ். வெங்கட்ட ரமண ராவ்

இவர் சேலத்தில் வக்கீல். நாலரை வருட காலமாகத் தீவிரமான குடல் நோயால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார். எதைச் சாப்பிட்டாலும் சில நிமிடங்களில் அதை வாந்தி எடுத்துவிடுவார். துங்கபத்திரைக்குச் சென்று ஒருமண்டலம் மந்திராலயத்தில் சேவை செய்தார். பல வகை மருந்துகளை சாப்பிட்டார். வைத்தியத்துக்கு

கணக்கே இல்லை. வியாதியின் கொடுமை குறையவில்லை. பெனு கொண்டாவில் வக்கீலாக இருக்கும் ஸ்ரீ பி. வி. வி. ராமன் மூலமாக ஸ்ரீ கேசவய்யாஜீயின் உதவியை நாடினார். பெனுகொண்டாவுக்குச் சென்று ஒரு வாரம் தங்கினார். ஸ்ரீ கேசவய்யாஜி பாபாவிடமிருந்து பதில் பெற்றார். "மூன்று மாதம் மூன்று நாட்களுக்குப்பின் இவர் நோய் தீர்ந்துவிடும். ஆனால் மூன்று மாதங்களுக்குப்பின், மூன்றாம் நாள் சேலத்திலுள்ள இவருடைய வீட்டிற்கு ஒரு கருப்பு நாய் வந்து இவர்கள் போடும் சாதத்தை சாப்பிட வேண்டியிருக்கும்" என்று ஸ்ரீ கேசவய்யாஜி சொன்னார். அவர் சொன்னபடியே நடந்தது. மூன்று மாதங்கள் கடந்தபின் மூன்றாம் நாள் அவர்கள் வீட்டிற்கு ஒரு கருப்பு நாய் வந்தது. ஸ்ரீ வெங்கட்டரமண ராவ் போட்ட உணவைத் தின்றுவிட்டு போனது. அவருடைய நோய் முழுவதும் நீங்கிவிட்டது. ஆனால் ஸ்ரீ கேசவய்யாஜி அதே நோயால் மூன்று நாட்கள் துன்புற்றார். நான்காம் நாள் பழையபடி அவர் உடல்நிலை சரியாகிவிட்டது.

## ஸ்ரீ எம். மல்லி ரெட்டி

இவர் அனந்தபுரத்தில் வக்கீல். இவருக்கு உடலில் இடது பக்கம் வீங்கி நோய் இருந்துகொண்டிருந்தது. இவர் ஜூலையில் பெனுகொண்டாவுக்கு வந்து ஸ்ரீ கேசவய்யாஜீயைப் பார்த்தார். பத்து நாட்களில் வீக்கம் குறைந்து நோய் பூராவும் போய்விடும் என்று பாபா சொன்னார். ஸ்ரீ கேசவய்யாஜி நோய் தாக்கிய பகுதியைக் கையால் தடவி விபூதியைக் கொடுத்து அதை உடலில் நோயுள்ள பகுதியில் தடவிக்கொண்டிருக்கும்படி சொன்னார். அது போலவே மல்லி ரெட்டியின் பாரிச நோய் பத்து நாட்களில் அறவே நீங்கிவிட்டது. ஸ்ரீ கேசவய்யாஜி ஒருநாள் பாரிச நோயால் வருந்தினார். இதுபோலவே பெனுகொண்டாவில் ராமப்பா எனும் தையல்காரருக்கு வந்த பாரிச நோயும் குணமாயிற்று. ஸ்ரீகேசவய்யாஜி சிறிது நேரம் பாரிச நோயால் துன்புற்றார்.

[இந்த வக்கீல் ஸ்ரீ எம். மல்லி ரெட்டிதான் 1939ம் ஆண்டு ஜூலை முதல் தேதியன்று ஸ்ரீகேசவய்யாஜீக்கு தர்மவரம் ரெயில்வே ஸ்டேஷனில் சாயிபாபாவைப் பற்றித் தெரிவித்தவர். இவர் 1934-ம் ஆண்டு முதல் பாபாவின் பக்தராக இருக்கிறார்.]

## ஸ்ரீமதி முத்யாலம்ம

பெனுகொண்டா தாலுக்கா மரவபல்லி கிராமத்தைச் சேர்ந்தவள். இந்த அம்மாளுடைய கணவருக்கு ஒரு வாரமாக வலக் கண்ணில் புழுச் சேர்ந்து பொறுக்க முடியாமல் தொல்லை கொடுத்துக்

கொண்டிருந்தது. அந்த அம்மாள் ஆகஸ்டு 10-ஆம் தேதியன்று ஸ்ரீகேசவய்யாஜியிடம் சென்றாள். சிகிச்சைக்காக பெங்களூருக்குப் போகும்படி டாக்டர்கள் சொல்லியிருந்தார்கள். கண்ணை மூட முடியாது. ஊசியால் குத்துகின்றது போல் கண்ணில் வலி. ஸ்ரீகேச வய்யாஜி பாபாவின் விபூதியை எடுத்துக் கண்ணின் மேல் தட வினார். உடனே கண்ணில் இருந்த புழு வெளியே விழுந்து விட்டது. அந்த அம்மாள் அன்றைக்கே பாபாவின் படத்தைப் பூஜிக்கத் தொடங்கினாள். சாமவாரபல்லியில் வசித்திருந்த ஸ்ரீ சிவராம ரெட்டி மூத்திர சம்பந்தப்பட்ட நோயால் கஷ்டப்பட்டு மூன்று வியாழக்கிழமை பாபாவின் பூஜையில் கலந்து கொண்டார். முதல் வாரத்திலேயே நோய் முற்றும் குணமாகிவிட்டது.

## ஸ்ரீ கே. கிருஷ்ண ஸ்வாமி

பெனுகொண்டா சப்-கலெக்டர் அலுவலகத்தில் வேலை. இவ ருக்கு இடது கை வலி பொறுக்க முடியாமல் இருந்தது. பக்ஷவாதம் வந்துவிடுமோ என்று அவர் பயந்துவிட்டார். சாயிபாபாவின் அற் புத சக்தியைக் கேள்விப்பட்ட அவர் ஸ்ரீ கேசவய்யாஜியிடம் வந் த . 'சிகிச்சைக்காக பெங்களூர் போக வேண்டுமா?' என்று கேசவய்யாஜியைக் கேட்டார். இரண்டு வியாழக்கிழமைகள் பூஜைக்கு வந்து பாபாவின் விபூதியைத் தடவி வந்தால் வலி முழு வதும் போய்விடும் என்று சுவாமிஜி சொன்னார். முதல் வாரம் பூஜையன்று சுவாமிஜி அவருக்கு விபூதி தடவினார். அப்போதே வலி சிறிது குறைந்தது. இரண்டாம் வியாழனன்று நோயே போய் விட்டது.

## பரீட்சையும், உத்தியோகமும்

பெனுகொண்டா தாலுகா ஆபீஸில் குமாஸ்தாவாக இருந்த ஸ்ரீ திருமலப்பா, தன் மகனுடைய சானிட்டரி இன்ஸ்பெக்டர் பரீட்சை என்ன ஆயிற்று என்று தெரிந்துகொள்வதற்காக பாபா விடம் வந்தார். "உன் மகன் பரீட்சை தேறுவான்" என்று சுவாமிஜி சொன்னார். அப்படியே அந்தப் பையன் தேறினான். ஸ்ரீ திருமலப்பா பாபாவின் பூஜைக்காக ஷேரடிக்கு இரண்டு ரூபாய் அனுப்பினார். இந்தத் திருமலப்பாவின் மகன் உடல்நிலை சரியில்லாதிருந்தபோதி லும் பாபாவின் விபூதியைத் தன்னிடமே வைத்துக்கொண்டு பரீட் சைக்குப் போனான். இவனைப் பரிகசித்த இளைஞன் மிகப் புத்திசாலி யாக யிருந்தும்கூட பரீட்சையில் தவறிவிட்டான்.

குருடி ராஜாராவ் என்பவர் பெனுகொண்டாவில் வக்கீல். அவ ருடைய மகனுக்குப் பதினைன்கு வயது. அவனை இரண்டாம் பாரத்

தில் சேர்க்க வேண்டுமென்று தந்தை முயன்ருர். இந்த முயற்சி பலிக்க வேண்டுமென்று அவர் பாபாவை வேண்டினுர். சுவாமிஜி ஒட்டிய கவரில் பலனை எழுதியனுப்பினுர். அவர் வெகுவாக சிரமப் பட்டப்பின் அவனை இரண்டாம் பாரத்தில் சேர்க்க முடிந்தது. செப்டம்பர் 10ம் தேதியன்று சுவாமிஜி அனுப்பிய கவரைத் திறந்து பார்த்தால் பலன் இப்படித்தான் இருந்தது.

ஸ்ரீகன்னையா என்பவர் பெனுகொண்டாவில் பொது மராமத்து இலாகாவில் வேலை செய்து வந்தார். அவருடைய வேலைக்கு ஆபத்து போன்ற சிக்கல்கள் ஏற்பட்டன. ஸ்ரீ கன்னையா பாபா பூஜைக்கு ஆஜரானுர். இவர் மீது வந்த குற்றச்சாட்டுகள் நீக்கப் பட்டன என்றும் 1951—மே எட்டாம் தேதியன்று மாற்றல்உத்தரவு வரும் என்றும் பாபா சுவாமிஜி வாயிலாகச் சொன்னுர்; சரியாக அப்படியே நடந்தது.

## நோய்கள்

யக்ஞ செட்டி பல்லியில் வசிக்கும் ஸ்ரீ சுப்பா ராவ் காலில் முள் தைத்தது காரணமாக இரண்டு வருட காலம் கஷ்டப்பட்டார். காலில் பெரிய புண்ணுகிவிட்டது. நாற்பது நாட்கள் பாபாவுக்கு பூஜை செய்வித்தபின் புண் முழுவதும் ஆறி, உடல்நிலையும் சரியாகி விட்டது. ஹிந்துபுரம் தாலுகா மானபல்லி கிராமத்திலிருந்து ஒருவர் ஐந்து வயதுச் சிறுவனை அழைத்துக்கொண்டு பெனுகொண்டாவிற்கு வந்தார். அந்தச் சிறுவனின் உடலில் எந்த அங்கமும் வேலை செய்யவில்லை. கிழித்த நார்போல் துவண்டு கிடப்பான். பேசவும் வராது. அவர்கள் நாற்பது நாட்கள் பாபாவின் பூஜைக்கு ஆஜரானுர்கள். குழந்தை படிப்படியாகத் தேறி நடைவண்டிப் பிடித்து நடக்கத் தொடங்கினுன்.

ஹொசாரிலிருந்து எஸ். ஜே. ஐயா, தன் மகனுடைய நோயைப் பற்றி சுவாமிஜிக்கு எழுதினுர். ''உங்கள் குலதெய்வத்தை நீங்கள் அலட்சியம் செய்துவிட்டீர்கள். சிறுவனுடைய நோய்க்கு அதுதான் காரணம்'' என்று சுவாமிஜி கடிதம் எழுதினுர். அக்டோபர் 15ம் தேதியன்று அவரிடமிருந்து கடிதம் வந்தது. சுவாமிஜி சொன்ன விஷயம் உண்மைதான் என்றும், குலதெய்வத்தை பூஜை செய்வதாகவும் அவர் எழுதியிருந்தார்.

யக்ஞ செட்டி பல்லி ஸ்தோத்ரியம்தார் நஞ்சப்பா என்பவர் வயிற்றுக் கடுப்பால் துன்புற்ருர். இடத்தைவிட்டு நகரும் ஸ்திதியில் இல்லை. ஆங்கிலம், ஆயுர்வேதம், ஹோமியோபதி, மூன்றுவகை

வைத்தியர்களும் பார்த்தாயிற்று. குணம் தெரியவில்லை. கடைசியில் சாயிபாபாவை நம்பி பெனுகொண்டாவிற்கு வந்தார். அவருக்கு ஸ்ரீ கேசவய்யாஜீ விபூதி கொடுத்தார். நோய் முற்றிலும் தீர்ந்துவிட்டது. இவருடைய மகனாகிய வெங்கட்ட நாயுடுவை பாம்பு கடித்தது. அதுவும் சாயிபாபாவின் விபூதியால் சரியாகி விட்டது.

சின்னமந்துரு ஆதின்ன என்பவருக்குத் தொண்டையில் துர்மாமிசம் வளர்ந்து, கழுத்து வீங்கிவிட்டது. தண்ணீர்கூட உள்ளே செல்ல முடியாத நிலையில் இருந்தார். ஒரு வியாழக்கிழமையன்று சுவாமிஜீயிடம் வந்தார். அவர் நெஞ்சுக்கு விபூதியைத் தடவியதும் உடனே சரியாகிவிட்டது.

## விவகாரச் சிக்கல்கள்

திரு D. ஸ்ரீ ராமுலு செட்டி பெனுகொண்டாவில் ஒரு வக்கீல் வீட்டு மனை விஷயமாக ஏதோ தகராறு நேர்ந்து சாயிபாபாவிடம் வந்து சாஷ்டாங்கமாக வணங்கி வழிகாட்ட வேண்டினர். விவகாரம் அனுகூலமாக முடிந்து மனை சொந்தமாகுமென்று சுவாமிஜீ சொன்னர். அதுபோலவே ஸ்ரீராமுலு செட்டிக்கு மனை கிடைத்தது. இவருடைய நான்கு வயதுப் பையன் தீவிரமான சீதபேதியால் மிக கஷ்டப்பட்டு இருபத்துநான்கு மணி நேரமும் அழுதுகொண்டிருந்தான். பூஜைவேளையில் அந்தச் சிறுவனை ஸ்ரீகேசவய்யாஜீயிடம் அழைத்து வந்தார்கள். சுவாமிஜீ சிறுவனுடைய நெற்றியைத் தொட்டு விபூதியிட்டார். உடனே சிறுவன் அழுகையை நிறுத்தி விட்டான். நோயும் குணமாயிற்று. ஒருமுறை என் பையனுக்கும் நோய் கண்டது. நான் சுவாமிஜீக்கு எழுதினேன். உடனே சரியாகிவிடும் என்று அவர் எழுதினர். அப்படியே என் பையனுக்கு உடம்பு குணமாகிவிட்டது.

## ஸ்வப்ன சாக்ஷாத்காரம்

தலமர்ல கிராமத்து வேதநாதன் நஞ்சி ரெட்டி என்பவருடைய மருமகள் ஜுரதாபத்தால் துன்புற்றள். அந்தப் பெண் பாபாவை வேண்டினள். அன்றிரவே பாபா அவளுடைய கனவில் ஸ்ரீ கேசவய்யாஜீயாகத் தோன்றி நெற்றியில் விபூதியிட்டார். மறுநாளே அவளுடைய ஜுரம் குறைந்தது. மறுநாளே அவளுடைய கணவன் பெனுகொண்டாவுக்கு வந்து மற்ற பக்தர்கள் முன்னிலையில் இந்த விஷயத்தைத் தெரிவித்தார்.

பெனுகொண்டா விற்பனைவரி அலுவலகத் தலைமை எழுத்தரான வி. கிருஷ்ணமூர்த்தி ராவின் மனைவிக்குக்கூட பாபா கனவில் தோன்றினார். முதல்முறை பாபா உட்கார்ந்திருப்பது போலும், இரண்டாம் முறை பாபாவின் பூஜை அறையில் ஸ்ரீகேசவய்யாஜீ ஆரத்தி எடுப்பது போலும் கண்டாள். இவளுக்கு நான்கு மாதக் குழந்தை ஒன்று இருந்தது. தாயாரும் பாட்டியும் சாயிபாபாவின் பூஜைக்குப் போய் விட்டார்கள். குழந்தை அழத் தொடங்கியது. தந்தை செய்வதறியாமல் குழந்தையை பாபாவின் படத்தருகில் எடுத்துச் சென்றார். குழந்தை உடனே அழுகையை நிறுத்தி விட்டது. இவருடைய குழந்தைகள் இருவருக்கு ஜுரம் வந்து அம்மை கண்டது. அவர்களை ஸ்ரீகேசவய்யாஜீயின் பூஜைக்கு அழைத்துக் கொண்டு போனார்கள். பாபாவின் விபூதியையும் தீர்த்தத்தையும் கொடுத்தவுடன் வேறு மருந்து அவசியம் இல்லாமல் அம்மை இறக்கம் கண்டது. இவருடைய தம்பியின் மனைவிக்குக் கழுத்து வீங்கி ஜுரம் கண்டிருந்தது. அவள் பாபா பூஜைக்கு சென்று விபூதி வாங்கிக் கொண்டதும் முழுதும் சரியாகி விட்டது.

## சர்வாந்தர்யாமி

ஸ்ரீகுருகு-ரங்காராவ் பெனுகொண்டாவில் ஒரு வக்கீல். அவர் இரண்டு வயதான தன் மருமகனுக்கு மிகவும் உடம்பு சரியில்லை யென்றும் நம்பிக்கையை இழந்து குழந்தையை வெளியே வைத்திருக்கிறார்கள் என்றும் ஸ்ரீகேசவய்யாஜீயிடம் சொன்னார். குழந்தையை பாபாவின் பொறுப்பில் விட்டு விட்டுத் தினந்தோறும் விபூதி கொடுத்துக் கொண்டிருந்தார்கள். ஸ்ரீகேசவய்யாஜீ சில நண்பர்களுடன் பெனுகொண்டா குளத்தங்கரையில் அமர்ந்திருந்த போது ஸ்ரீ ரங்காராவ், குழந்தையின் அபாயநிலையை அவரிடம் சொன்னார். ஸ்ரீகேசவய்யாஜீ அங்கேயே அப்போதே பாபாவைத் தியானித்தார். "குழந்தையை த்வாரகா மாயியில் பாபாவின் படத்தின் முன் வைத்திருக்கிறேன்" என்று ஸ்ரீரங்காராவிடம் சொன்னார். அதே சமயத்தில் குழந்தை கண்ணை விழித்தான். அது முதல் படிப்படியாக நோய் குறைந்து உடம்பு தேறியது.

(ஸாயிஸுதா. நவம்பர் - டிசம்பர்)

## சீரடியில் சுவாமிஜீயின் உதவி

(ஸ்ரீ D. கோவிந்தராஜுலு நாயுடு, பி.ஏ., பி.எல்.,)
பிரின்சிபல், சப்-ஜட்ஜ், குண்டூர்.

1945-ம் ஆண்டு நான் நந்தியாலாவில் ஜில்லா முன்சீப்பாக இருந்தேன். அப்பொழுதுதான் நான் சுவாமிஜீயை சீரடியில் பார்த்தேன். குடும்பத்துடன் சீரடிக்கு யாத்திரை போயிருந்தேன்.

அங்கே என் கடைசி குழந்தைக்கு முடி கொடுத்தேன். குழந்தைக்கு பாபாவின் பெயரைச் சூட்டினோம். அப்பொழுது குழந்தைக்கு இரண்டு மாதம். திடீரென்று அன்று மாலை குழந்தைக்கு கடுமையான ஜுரம் கண்டது. சீரடியில் வைத்திய வசதியே இல்லை. என் லீவும் தீர்ந்துவிட்டிருந்தது. பொழுது விடிந்ததும் சீரடியை விட்டுப் புறப்பட எல்லா ஏற்பாடுகளும் செய்துவிட்டோம். இந்த நிலையில் கைக்குழந்தைக்கு இப்படி கடுமையான ஜுரம் வந்ததும் எங்களுக்கு ஒன்றுமே தோன்றாமல் குழம்பினோம். எங்கள் தவிப்பைக் கண்ட பக்தர்களில் சிலர் அப்பொழுது அங்கேயே தங்கியிருந்த ஸ்ரீ கேசவய்யாஜியிடம் குழந்தையைக் காட்டச் சொன்னார்கள். சுவாமிஜியை சந்தித்துக் குழந்தையின் ஜுரத்தைப்பற்றிச் சொன்னோம். உடனே சுவாமிஜீ, "உங்கள் குல தெய்வம் வெங்கடேசுவரர் அல்லவா?" என்று கேட்டார். நான் "ஆம்" என்றேன். "உங்கள் கைக் குழந்தைக்கு இங்கே ஏன் முடி கொடுத்தீர்கள்" என்று கேட்டார். நான் "இங்கே முடி கொடுப்பதாக பிரார்த்தனை செய்து கொண்டோம் அதனால் இங்கே முடி கொடுத்தோம்" என்றேன். "போங்கள், வெங்கடேசுவர சுவாமியிடம் மன்னிப்புக் கேளுங்கள். சிறிது காலத்துக்குப்பின் அவருக்கு முடி கொடுப்பதாக வேண்டிக் கொள்ளுங்கள். சரியாக இரவு பன்னிரண்டு மணிக்கு ஜுரம் நின்று விடும்" என்று சுவாமிஜி சொன்னார். சுவாமிஜி சொன்னபடி செய்தோம். அபராதத்தை மன்னிக்க வேண்டும் என்றும் திருமலைக்கு வந்து முடி கொடுக்கிறோம் என்றும் வெங்கடேசப் பெருமாளை வேண்டிக்கொண்டோம். சுவாமிஜி சொன்னபடியே குழந்தையின் ஜுரம் இரவு பன்னிரண்டு மணிக்கு முற்றும் சரியாகி விட்டது. இந்த அற்புதத்தைக் கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். நாங்கள் திட்டமிட்டபடி மறுநாள் சீரடியிலிருந்து புறப்பட முடிந்தது. அதுமுதல் சுவாமிஜீயுடன் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொண்டிருக்கிறோம். அவசியமானபோதும், கஷ்டங்கள் வந்தபோதும் சுவாமிஜீயின் உதவியை நாடுகிறேன். அவர் பாபாவைப் பிரார்த்தித்து எங்களுக்கு யோசனை சொல்லி உதவி செய்கிறார்.

நான் ரேபல்லியில் இருக்கும்போது சாயிபாபா பக்தர்கள் அருகிலுள்ள இசைப் பள்ளியில் பாபாவின் கோயிலைக் கட்டினார்கள். இந்தக் கோயிலில் பாபாவைப் பிரதிஷ்டை செய்ய வேண்டுமென்று சுவாமிஜீயைக் கோரினேன். அதற்கு ஒப்புக்கொண்டு ரேபல்லிக்கு வந்து அந்தக் கோயிலில் சாயி பாபாவைப் பிரதிஷ்டை செய்தார். ஏலூரில் என் தம்பியின் ஷட்டகர் பாபாவுக்கு ஒரு கோயில் கட்டினார். அதிலும் சுவாமிஜீதான் பாபாவைப் பிரதிஷ்டை செய்தார். இந்தக் கோவில்கள் மிகவும் விருத்தியடைந்திருக்கின்றன. ஆயிரக்

கணக்கான பக்தர்கள் வந்து பாபாவை ஆராதித்து செல்கிறார்கள். சுவாமிஜி எங்கிருந்தாலும் சாயி பக்தியைப் பிரசாரம் செய்து பக்தர்களை ஆபத்துக் காலங்களில் காப்பாற்றியும், பாபாவின் தயைக்கும் அநுக்கிரகத்திற்கும் ஆளாக்கியும், மனிதக் குலத்திற்கு மிகவும் உதவியும் செய்கிறார். உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்றபின் அவர் முற்றும் பாபாவின் சேவைக்கும், பக்தர்களுக்கு உதவி புரிவதற்கும் தம்மை அர்ப்பணித்துக் கொண்டிருக்கிறார்.

சுவாமிஜியிடம் ஒரு தனிச் சிறப்பு இருக்கிறது. பாபா. தமக்கு அருளிய சக்திகளைத் தம்முடைய லாபத்துக்காவது, சுய அபிவிருத்திக்காவது உபயோகித்துக் கொள்ள மாட்டார். தம்முடைய பக்தர்கள் அனுபவிக்காத கஷ்டங்களை எல்லாம் அனுபவித்திருக்கிறார். அந்த அனுபவத்திலேதான் அவர்களுள் பக்தி மூண்டு எழுகிறது. மக்களின் முன்னேற்றத்திற்கும், பாபா பக்தர்களின் நன்மைக்கும் சுவாமிஜியின் தன்னலமற்ற சேவை துணை செய்கிறது. உலக க்ஷேமமே அவருடைய லட்சியம்.

(30—3—1968)

## உடனிருக்கும் நிழல்

ஸ்ரீ பி. காமேச்வரராவ், உதவி கமிஷனர்
வருமானவரித் துறை, கள்ளிக்கோட்டை

1947ல் நான் அனந்தபுரத்தில் இருந்தேன். அப்போதே நான் கெசடெட் ஆபீசர். ஆயினும் சம்பளப் பட்டுவாடா விவகாரம் சரியில்லை. புதிய சம்பள விகிதத்தைவிட ஏற்கனவேயிருந்த சம்பள முறையே சௌகரியமாக இருந்தது. புதிய விகிதப்படி கிடைத்த சம்பளமும் பழைய அளவுதான். எதனாலோ மேலதிகாரிகள் எனக்குப் புதிய சம்பளம் நிர்ணயித்தார்கள். இதை ஆட்சேபித்து நான் மனு செய்து பதிலை எதிர்பார்த்திருந்தேன். உத்தியோக முறையில் நான் பெனுகொண்டா சென்று முஸாபரி பங்களாவில் தங்கினேன். வியாழக்கிழமையன்று இரவு அனந்தபுரம் ஜில்லா ஜட்ஜும் குடும்பத்தோடு பெனுகொண்டாவில் வந்திறங்கினார். "இங்கே சப் ரிஜிஸ்திரார் ஸ்ரீ எஸ். பி. கேசவய்யா ஒவ்வொரு வியாழக்கிழமை அன்றும் சாயிபாபாவைப் பூஜித்து பக்தர்களுக்கு பாபாவின் விபூதி கொடுப்பார்; அதற்காக வந்தோம்" என்றார். அவர் கேசவய்யாஜி வீட்டிற்குப் போனபோது நானும் போனேன். பூஜை இரவு பத்து மணிக்கு முடிந்தது. அங்கே கூடியிருந்த எல்லோரையும் விபூதி பெற்றுக்கொள்ள அழைத்தார்கள். ஒருவர்பின் ஒருவராக விபூதி பெற்றுக்கொண்டிருந்தார்கள். என்முறை வந்தது; நானும் சென்

றேன். சுவாமிஜி விபூதியை முதலில் என் வாயில் போட்டார். பிறகு என் நெற்றியில் விபூதியை இட்டுவிட்டு, வலக்கை கட்டை விரலால் சற்று நேரம் அழுத்தினர். விரலை எடுத்துவிட்டு, "கேட்க வேண்டிய விஷயம் ஏதாவது இருக்கிறதா?" என்றார். என் சம்பள மாறுதலைக் குறித்தும், மறுத்து நான் மனு எழுதி இருப்பதைப் பற்றியும் சொன்னேன். அப்பொழுதே என் உத்தியோக எல்லையை நான் எட்டிவிட்டதால் அதற்கு மேலான பதவி கிடைக்க வாய்ப்பு இல்லை என்று நான் கருதினேன். ஸ்ரீ கேசவய்யாஜி என்னிடம் இப்படிச் சொன்னார். " நீங்கள் கவலையே படவேண்டாம். உங்களை விடத் தகுதியுள்ளவர்களையும், உங்களைவிட அதிக காலம் வேலையில் இருப்பவர்களையும் மீறி உங்களுக்கு மேல் பதவி வந்தே தீரும். சம்பள விஷயத்தைப் பற்றியும் நீங்கள் கவலைப்படாதீர்". அப்படியே 1950ல் எனக்கு மேல் பதவி கிடைத்தது. ஆனால் இந்தப் பதவி கிடைப்பதற்கு 1947லேயே விதை விழுந்துவிட்டது. அது வரையிலும் கிடைக்கவேண்டிய சம்பளமும் கிடைத்தது.

1956ல் நான் சென்னையில் இருந்தேன். எங்கள் பக்கத்து வீட்டில் பரோடா பாங்கியில் வேலை செய்யும் என் நண்பர் ஒருவர் இருந்தார். அவருடைய மனைவிக்கு பிரசவக் காலத்தில் சித்தப்பிரமை ஏற்பட்டு பைத்தியம்போல் இருந்தாள். சாப்பிட்ட மருந்தெல்லாம் பயனற்றுப் போயின. அதையெல்லாம் பார்த்ததும் 'பாபாதான் இந்த நோயை குணப்படுத்தக் கூடும்' என்று தோன்றியது. சுவாமிஜீயின் மூலமாக நான் பாபாவின் உதவியை நாடினேன். சுவாமிஜீ அந்த பாங்கு உத்தியோகஸ்தர் வீட்டிற்கு வந்தார். ஒரு விபூதிப் பொட்டலத்தைக் கொடுத்து, இந்த அம்மாள் தூங்கும் போது தலைமாட்டில் வைக்கச் சொன்னார். வாயில் விபூதி போட்டார். தினந்தோறும் இப்படியே செய்யச் சொன்னார். அதுமுதல் அந்த அம்மாளுக்கு நோய் குறைந்தது. சில நாட்களில் அந்த அம்மாள் பூரண ஆரோக்கியம் பெற்றார். நான் கள்ளிக்கோட்டையில் இருக்கும்போதே நானும் என் தாயாரும் உடுப்பிக்கும், தர்மஸ்தலத்திற்கும் போக ஆசைப்பட்டோம். ஓர் இரவு இரண்டு மணிக்கு கண் விழித்தோம். என் மகள் கர்ப்பிணி. ஆனால் பேறு காலமல்ல. லேடி டாக்டர்கள் பார்த்து "சமீபத்தில் பிரசவம் ஆகாது" என்றார்கள். அந்தத் தைரியத்தில் நாங்கள் புறப்படத் தயாரானோம். ஆனால் அதே சமயத்தில் என் மகளுக்குப் பிரசவ நோய் எடுத்தது. உடனே லேடி டாக்டருக்கு செய்தி அனுப்பினேன். டாக்டர் வந்து 'பிரசவ நோய்தானென்றும் ஐந்தாறு மணி நேரத்திற்குள் குழந்தை பிறந்துவிடும்' என்றும் கூறினார்கள். நாங்கள் புறப்படும் நேரத்தில் நோவு வந்ததால் எங்கள் பயணத்தை நிறுத்திக்கொண்டோம்.

இல்லாவிட்டால் லேடி டாக்டரின் பேச்சை நம்பிப் புறப்பட்டு போயிருப்போம். என் மகள் எவ்வளவு கஷ்டத்திற்கு உள்ளாகி இருப்பாள். சாயிபாபா எங்களோடு இருந்ததால்தான் இப்படி நடந்தது.

சாயிபாபாவிடம் நம்பிக்கையுள்ள பலருள் நானும் ஒருவன். பாபா எனக்குக் குரு. ஒவ்வொரு நாளும் எழுந்திருக்கும்போதே பாபாவை நினைத்துக் கொள்வேன். வியாழனன்று விசேஷ பூஜை செய்கிறேன். பாபா எப்பொழுதும் என்னுடன் இருக்கிறார் என்பது எனது நம்பிக்கை. இதுவரையிலும் என்னைக் கைவிடாமல் அமைதியையும், சுகத்தையும் அருளியிருக்கிறார்.

## விபூதி (ஊதி) எல்லா நோய்களுக்கும் மருந்து

ஸ்ரீ வி. எஸ். கிருஷ்ணமூர்த்தி, சென்னைக் கார்ப்பொரேஷன் ஜெனரல் டிப்பார்ட்மெண்ட் மேற்பார்வையாளர் (ரிட்) இப்படி எழுதுகிறார்.

பல ஆண்டுகளாக சீரடி சாயிபாபாவைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். நான் மயிலாப்பூரில் இருக்கும்போது பல பக்தர்கள், அவருடைய படத்தை ஊர்வலமாக எடுத்துச் செல்வதைப் பார்த்திருக்கிறேன். இருந்தாலும் ஷெணாய் நகருக்கு நான் வீடு மாற்றும் வரை சாயிபாபாவைப்பற்றி அதிகமாகக் கேள்விப்பட்டதில்லை.

1949ம் ஆண்டு அக்டோபர் மாதம் மிக விசித்திரமான சூழ்நிலையில் நான் ஸ்ரீ கேசவய்யாஜீயை சந்தித்தேன். எனது தமக்கையின் மகள் வெகு காலமாக நோய்வாய்ப்பட்டு படுத்த படுக்கையாகிவிட்டாள். நோய் இன்னதென்று டாக்டர்களால் தீர்மானிக்க முடியவில்லை. பித்த பாண்டுவென சிலரும், மகோதரமென்று சிலரும் கூறினார்கள். பட்டணத்தில் பெயர்பெற்ற டாக்டர்களிடமெல்லாம் காட்டினோம். எல்லோரும் பெண் பிழைக்கமாட்டாள் என்றுதான் கூறினார்கள். இந்தத் துக்ககரமான நிலையில் என் சிநேகிதர் காலஞ்சென்ற வக்கில் திரு நரசையாவின் யோசனைப்படி நான் சுவாமிஜீயை சந்தித்தேன். ஒரு வியாழனன்று எனது தமக்கையின் மகளை அழைத்துச் சென்றேன். அப்பொழுதெல்லாம் பத்துப் பதினைந்து பேர்தான் வருவார்கள். ஷெணாய் நகரில் சுவாமிஜி பூஜை செய்வதைப்பற்றிப் பலபேருக்குத் தெரியாது.

ஒரு சின்ன அறையில் பாபாவின் படத்தை சுவாமிஜி வைத்தி ருந்தார். அதைப் பூமாலைகளால் அழகாக அலங்கரித்திருந்தார். ஊதுவத்தியின் மணம் அறை முழுவதும் நிறைந்திருந்தது. பூஜை அறையின் அமைதியையும் புனிதத் தன்மையையும் அங்கிருந்து வரும் மணத்தையும் கண்டவுடன் என் உடம்பு ஒரேயடியாக புளகித்து விட்டது. அந்தச் சூழ்நிலையில் என் துன்பம், குழப்பம் எல்லாம் ஒரு கணம் மறைந்து விட்டன. சுவாமியை வணங்கினேன். பூஜைத் திரவியங்களைச் சமர்ப்பித்தேன். என் மருமகளின் நிலையைச் சொன்னேன். சுவாமிஜீ அமைதியாகவும் நிதானமாகவும் என் குறை களைக் கேட்டார். ஒரு நிமிடம் பாபாவின் படத்தைப் பார்த்தார். என் பக்கம் திரும்பி, "பயப்படாதீர்கள். நோய் தீர்ந்துவிடும். ஆனால் சிறிது காலம் ஆகும்" என்றார். சுவாமிஜீயின் பேச்சைக் கேட்டதும் எனக்கு பாரம் குறைந்து விட்டது போல் தோன்றியது. மனம் லேசாயிற்று. பாபாவின் விபூதி கொடுத்து நோயாளிக்கு எப்படிக் கொடுக்க வேண்டும் என்பதைச் சொன்னார். சுவாமிஜீ சொன்னபடியே செய்தோம். நோய் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து கொண்டே வந்தது. வியாழக்கிழமை பூஜைக்குப் பின்பு அவளை வரத் தொடங்கினாள். பக்தர்களிடம் பாபா காட்டும் அருளைச் சொல்லால் விளக்க முடியாது.

நான் அது முதல் சுவாமிஜீயின் பூஜைக்கு ஆஜராகி வந்தேன். ஸ்ரீகேசவய்யாஜீ உடல் நலம் பாதிக்கப் பட்ட வயதான என் தாய்க் கும் விபூதி கொடுத்துக் கொண்டிருந்தார். என் தாய் நாலைந்து நாட் களில் காலமாகப் போகிறாள் என்பதையும், எல்லாம் பாபாவின் கிருபைப்படி நடக்கும் என்பதையும் அவர் ஒருவிதமாக எனக்கு உணர்த்தினார்.

1952-ஆம் ஆண்டு முதல் ஒவ்வொரு வியாழனன்றும் பூஜைக்கு ஆஜராகி வந்தேன். ஸ்ரீகேசவய்யாஜி விபூதியை எடுத்து நெற்றியில் இடும்போதே கஷ்டங்கள் எல்லாம் மாயமாய்ப் பறந்து போய்விடும். நாம் அவரை சாஷ்டாங்கமாக வணங்கும்போது அவர் முதுகைத் தட்டினால் மிகுந்த தைரியமும் உற்சாகமும் வந்துவிடும். வியாழக் கிழமை பூஜை வேளையில் சுவாமிஜியைப் பார்த்தால் பாபாவே நம்மிடையே வந்து விட்டதாகத் தோன்றும். எனக்குத் தோன்றிய கருத்து இது.

கடந்த காலத்தை அறிவதிலும் வருங்காலத்தை அறிந்து சொல்வதிலும் சுவாமிஜியின் சக்தி அற்புதமானது. அவர் அந்த சக்தியால் என்னையும் என் குடும்பத்தினரையும் பல ஆபத்து களிலிருந்து காப்பாற்றியிருக்கிறார். என் தாய் தந்தையரை இழந்த பின் பாபாதான் எனக்கு எல்லாம். பாபாதான் எங்கள் வீட்டு

வைத்தியர். சுவாமிஜீ கொடுக்கும் விபூதி எங்களுக்கு ஸ்ரீராமரக்ஷை. எங்களுக்குக் கஷ்டம் வந்தபோது பாபாவின் உதவியைத்தான் நாடுவோம். நாம் நினைத்துப் பார்க்கக்கூட முடியாத வழிகளில் அவர் உதவி செய்வார். எனக்கு உத்தியோகத்தில் வரப் போகும் பிரமோஷனைப் பற்றி சுவாமிஜீ வெகுநாட்களுக்கு முன்பே சொல்லி விடுவார்.

[ 30 - 3 - 1958 ]

ஸ்ரீ என். ஏ. சிதம்பரம், ரிடையர்ட் சப்ரிஜிஸ்திரார் இப்படி எழுதுகிறார்:—

1955-ஆம் ஆண்டு செப்டம்பர் 25-ஆம் தேதி எழும்பூர் ரெயில்வே காலனி புனிதமடைந்தது. சுவாமி ஸ்ரீகேசவய்யாஜீ அன்று இந்தக் காலனியில் சாயிபாபாவைப் பூஜித்தார். சுமார் 130 பேர் பூசைக்கு ஆஜரானார்கள். பூசை முடிந்த பின்னர் அத்தனை பேருக்கும் ஸ்ரீகேசவய்யாஜீ விபூதிப் பிரசாதம் கொடுத்தார். சிலர் சுவாமிஜீயின் யோசனைகளைப் பெற விரும்பித் தனியாக அவரைச் சந்தித்தார்கள். ஸ்ரீகேசவய்யாஜீ இவர்களுடைய பிரச்னைகளைப் புரிந்துகொண்டு ஒவ்வொருவருக்கும் துன்பத்திலிருந்து விடுபட வழி சொல்லுவார். பக்தர்கள் எதைக் கேட்டாலும் பாபாவின் படத்தினைப் பார்த்துவிட்டுத் தமக்குப் புரிந்த செய்தியினைச் சொல்லி விடுவார். பிறகு அந்த விஷயம் பக்தர்கள் அனுபவத்திற்கு வரும்.

ஸ்ரீ கேசவய்யாஜி பெரிய சாதகர். பாபாவிடம் அவருக்குள்ள நம்பிக்கையும், ஆழ்ந்த பக்தியும், சாயிபாபா தியானமும் அபூர்வமானவை. இதனால் அவர் ஆத்மிக உயர்வைப் பெற்றார். அவருக்குப் பல சக்திகள் கிடைத்தன. அவர் பாபாவின் அநுக்கிரகத்தைப் பெற்று, பக்தர்களுக்கு அந்த அநுக்கிரகத்தை அடையும்படி செய்கிறார். இதுதான் ஸ்ரீ கேசவய்யாஜீயின் சிறப்பு. பக்தர்களுக்கு இவரிடம் அசையாத நம்பிக்கை இருக்கிறது. மக்கள் இவரை அணுகி உதவி பெறுகிறார்கள். செப்டம்பர் மாதம் 25ம் தேதியன்று நான் நேரில் பார்த்த விஷயங்களை மற்ற பக்தர்கள் பயனடையட்டும் என்று எழுதுகிறேன்.

என் மனைவி வெகு காலமாக பித்த பாண்டுவினால் கஷ்டப் பட்டுக்கொண்டிருந்தாள். உடலில் ரத்தம் இல்லை. கால்கள் வீங்கி இருந்தது. அவள் சுவாமிஜீயிடம் தனது நோயைப்பற்றிக் கூறினாள். அவர் பாபாவின் விபூதியைக் கொடுத்து அதைத் தண்ணீரில் கலந்து அறுபது நாட்கள் உட்கொள்ளச் சொன்னார். என் மனைவி அப்படியே செய்தாள். வேறு மருந்துகள் சாப்பிடாமலேயே படிப் படி

யாக கால் வீக்கம் குறைந்து நன்ருக குணமாகிவிட்டது. பாபா வுடைய அருளால் தற்சமயம் முழு ஆரோக்கியத்துடன் இருக்கிருள்.

என் பேத்தி பட்டப் படிப்பில் தேர்ச்சிப் பெற்ருள். வேலைக்காக ஆறேழு மாதமாக அலைந்தாள். தேலைத் தேடித்தரும் நிலையம் மூல மாக பல விண்ணப்பங்களை அனுப்பினுள். சுவாமிஜியை தரிசித்து நிலையைத் தெரிவித்தாள். சுவாமிஜி அவளை ஆசிர்வதித்து, ''விரை விலேயே பாபா வேலை கிடைக்கச் செய்வார்'' என்ருர். பிறகு இரண்டு மாதத்திற்குள் வேலை கிடைத்துவிட்டது. நல்ல சம்பளத் தில் வருமானவரி அலுவலகத்தில் வேலை ஆயிற்று.

எனது மைத்துனன் பல கஷ்டங்களில் சிக்கித் தவித்துக்கொண் டிருந்தான். அவன் வேலையும் அவ்வளவு திருப்திகரமாக இல்லை. சுவாமிஜீயை சந்தித்து விஷயத்தைக் கூறினுன். "நீங்கள் உங்கள் குலதெய்வத்தை வெகு காலமாக அலட்சியம் செய்துவிட்டீர்கள். உங்கள் வேண்டுதல்களை யெல்லாம் ஒழுங்காக நிறைவேற்றினுல் கஷ்டங்கள் எல்லாம் நீங்கிவிடும்'' என்ருர் அவர். அப்படியே எனது மைத்துனன் பிரார்த்தனைகளை நிறைவேற்றினுன். ஒரு மாதத்தில் அவனுக்கு வேலையில் பதவி உயர்வு கிடைத்தது.

எங்கள் வீட்டுக்கு அருகிலேயே இருக்கும் ஒரு பெண், தனது புருஷனுடன் தொடர்பே இல்லாமல் இருந்தாள். இருவருக்கும் கடிதப் போக்குவரத்துக்கூட இல்லை. அந்தப் பெண் சுவாமிஜீயைப் பார்த்து "எனது கணவர் மறுபடியும் என்னுடன் வந்து சேரும்படி பாபா அநுக்கிரகிக்க வேண்டும்'' என்று கேட்டுக்கொண்டாள்.

"செய்யவேண்டியதை பாபா சீக்கிரத்திலேயே செய்வார்'' என்று சுவாமிஜி கூறினுர். பிறகு பத்தே நாட்களில் அந்தப் பெண் ணுக்கு அவள் புருஷனிடமிருந்து கடிதம் வந்தது. சீக்கிரமாக வந்து தான் வேலை செய்யும் ஊருக்கு அவளை அழைத்துப் போவதாக எழுதியிருந்தான். பிறகு தானே வந்து அழைத்துப் போகாவிட் டாலும் அவளை உடனே காக்கிநாடாவுக்குப் புறப்பட்டு வரும்படி எழுதியிருந்தான். பாபாவின் அருளால் தம்பதிகள் மறுபடியும் ஒன்றுபட்டுக் குடும்பம் நடத்துகிருர்கள்.

அவளுடைய தம்பி ரெயில் பெட்டித் தொழிற்சாலையில் வேலைக் காக முயன்றுகொண்டிருந்தான். தம்பிக்கு வேலை கிடைக்கும்படி ஆசீர்வதிக்க வேண்டுமென்று சுவாமிஜீயிடம் கூறினுள். ''சாயிபாபா தவருமல் உதவி செய்வார்'' என்ருர் சுவாமிஜி. பிறகு நேரில் தேர்வு பெற அழைப்பு வந்தது. அழைப்பை ஏற்று போன அவனை அதி காரிகள் வேலைக்கு தேர்ந்தெடுத்தார்கள்.

1955—ஜனவரியில் திடீரென்று எனது நண்பர் இறந்துவிட்டார். அவருக்கு இரண்டு மனைவி, சொத்து விஷயமாக எதுவும் எழுதி வைக்கவில்லை. யாருக்கு எவ்வளவு பங்கு? எந்தச் சொத்து யாரைச் சேர்ந்தது என்று சொல்லவில்லை; உயிலும் இல்லை. ஆனால் அவர் உயிரோடிருந்தபோதே மூத்த மனைவிக்கும் அவளுடைய மகனுக்கும் பாகம் பிரித்துக் கொடுத்துவிட்டார். அவர்கள் தனியாகவே இருந்தார்கள். இறக்கும் நேரத்தில் அவர் இளையாளிடம் இருந்தார். இளையாளுக்குக் குழந்தைகள் இல்லை. வேறு ஆதரவும் இல்லை. தகப்பனுருக்கு வாரிசு தானே என்றும் சொத்து முழுவதும் தன்னையே சேரவேண்டுமென்றும் மூத்தவள் மகன் வழக்குத் தொடர்ந்திருந்தான். வழக்கு விசாரணை நடந்துகொண்டிருந்தது. இடையில் இரண்டாம் மனைவியிடமிருக்கும் சொத்துக்கு 'ரிஸீவரைப்' போடவேண்டுமென்று அவன் கோர்ட்டில் விண்ணப்பம் போட்டான். இளையாள் இந்த நிலைமையை சுவாமிஜீயிடம் கூறினுள். ''பாபாவுக்கு எல்லா விஷயமும் தெரியும். பாபா நியாயத்தைச் செய்வார். நீங்கள் கவலைப்படாதீர்கள்'' என்று சுவாமிஜி கூறினர்' ஒரு வாரத்திலேயே இளையாளுக்கு கோர்ட்டிலிருந்து கடிதம் வந்தது. ரிஸீவரைப் போட மூத்தவள் மகன் கொடுத்த மனுவை கோர்ட் நிராகரித்துவிட்டது.

## ஆபத்தில் கைகொடுப்பவர்

ஸ்ரீ மூலா நாராயணசாமி, தாதிபத்திரி சொல்கிருர்.

தாங்க முடியாத இருமலால் எனக்கு இரவில் தூக்கமே இல்லாமல் போய்விட்டது. நிறைய மருந்துகள் சாப்பிட்டேன். நாட்டிலுள்ள எல்லா வகையான வைத்தியமும் பார்த்தாகிவிட்டது. எனது உடல் நிலையில் மாற்றமில்லை. பெனுகொண்டா சாயிபாபா பூஜையைப்பற்றி 1941—அக்டோபர் 5ம் தேதி 'சண்டே டைம்ஸ்' வாரப் பத்திரிகையில் ஒரு கட்டுரையை படித்தேன். பிறகு சுவாமிஜீயை சந்தித்தேன். ''நீங்கள் இன்னும் ஒன்பது மாத காலம் இப்படித்தான் வருந்தவேண்டியிருக்கும். ஆனுல் மூன்று மாதத்திற்குப் பிறகு உங்கள் உடல்நிலை ஓரளவு சுமாராகும்'' என்று சுவாமிஜி கூறினர். நான்கு வாரங்கள் சுவாமிஜி செய்யும் வியாழக்கிழமை பூஜைக்கு ஆஜரானேன். எனது உடல்நிலை எவ்வளவோ தேறியது. அந்த வருடம் டிசம்பரில் சீரடிக்குச் சென்று மூன்று நாட்கள் தங்கினேன். எனது இருமல் முழுவதும் சரியாகிவிட்டது. அடிக்கடி எனக்கு பண நெருக்கடி ஏற்படும். பாபாவுடைய அருளினுல் அதுவும் சரியாகிவிட்டது.

## நாஸ்திகனுக்கு உதவி !

ஸ்ரீ ஜி. வெங்கட ரெட்டி, அட்வகேட், அனந்தபுரம் எழுதுவது.

ஐந்தாறு வருடங்களாக எனக்கு ஸ்ரீ எஸ். பி. கேசவய்யா ஜியைத் தெரியும். எனக்கு யாருடைய அசாதாரண சக்திகளிலும் நம்பிக்கை இல்லை. இயற்கையே எல்லாவற்றையும் செய்யும் என்பது எனது நம்பிக்கை. இருந்தாலும் பெனுகொண்டாவில் சப்ரிஜிஸ் திராராக இருக்கும் ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாஜி செய்யும் சாயிபாபா பூஜைக்கு ஒரு வியாழக்கிழமை போனேன். ஸ்ரீ கேசவய்யாஜி பாபா வுடன் முற்றும் ஐக்கியமாகிப் போவதை நான் கண்ணாரப் பார்த் தேன். எனது மனைவிக்கு மாதவிடாய் சம்பந்தமான நோயால் உடல் நலம் கெட்டுவிட்டது. 1941—நவம்பரில் சில நண்பர்களுடன் சுவாமிஜியிடம் போனேன். மூன்று வியாழக்கிழமைகளில் பாபா வுடைய பூஜைக்கு வரச்சொல்லி சுவாமிஜி கூறினார். அதன்படி மூன்றுமுறை பூஜைக்குச் சென்றேன். எனது மனைவியின் உடல்நிலை நன்றாக குணமாகிவிட்டது. இந்த ஒரே அனுபவத்தில் நான் பாபா வுடைய பக்தனானேன். 1941—டிசம்பரில் சீரடிக்குக்கூடப் போய் வந்தேன்.

—மார்ச் 1942 சாயி ஸுதா

## நடக்கப்போகும் சம்பவங்கள்

ஸ்ரீ எம். சத்திய நாராயண செட்டி, பெல்லாரி

சாயி பக்த ஸ்ரீ கேசவய்யாஜீயின் அற்புத சக்திகளைப்பற்றி எனது உறவினர் ஒருவர், தம் அனுபவத்தை இப்படிச் சொன்னார்.

'மூன்று நான்கு வருஷ காலமாக எனது மகன் க்ஷய நோயால் மிகவும் கஷ்டப்பட்டான். தற்கால டாக்டர்களை வைத்து பெல்லாரி யிலும், சென்னையிலும் சிகிச்சை செய்தேன். புண் போகவில்லை. எவ்வளவு மருந்து போட்டாலும் அந்தப் புண் சிறிதுகூடக் காய வில்லை. 'இந்த நோய் குணமாகாது' என்று விட்டுவிட்டேன். மிக வும் ஏமாற்றத்துடன் பெனுகொண்டாவுக்குப் போனேன். வியாழக் கிழமை பூஜையன்று ஸ்ரீ கேசவய்யாஜீயின் பூஜை அறைக்குள் என் மகனை அழைத்துச் சென்றேன். சுவாமிஜி நெற்றியில் விபூதியிட்டு சிறிது நேரம் மௌனமாக இருந்தார். பிறகு கொஞ்சம் விபூதியைக் கொடுத்து தேங்காய் எண்ணெயில் கலந்து புண்ணின்மேல் தடவும் படிச் சொன்னார். ஏழு வாரங்கள் பூஜைக்கு வரும்படி கூறினார். அதன்படியே போனோம்; புண் நன்றாக காய்ந்துபோயிற்று. நோய்

முற்றிலும் நீங்கியது. எல்லோரையும்போல் எழுந்து நடமாடத் தொடங்கினன். இப்பேது அவனுக்கு கல்யாணமும் ஆகிவிட்டது. மனைவியுடன் சுகமாக குடித்தனம் நடத்திக்கொண்டிருக்கிறன்.

எனது உறவினர் இந்த நிகழ்ச்சியைப்பற்றிச் சொல்லும்போது எனக்குச் சில கஷ்டங்கள் இருந்தன. எனது வேலைத் தொடர்புள்ள பரீட்சைகளை பலமுறை எழுதியும் தேறவில்லை. சாயி பக்த ஸ்ரீ கேசவய்யாஜீயின் மகிமையை நேரில் பார்த்ததால் ஒரு வியாழக் கிழமையன்று பெனுகொண்டாவுக்குப் போய் சுவாமிஜீயை தரிசித் தேன். அவர் என்னைப் பார்த்தபோதே 'நீ இந்தப் பரீட்சையில் பாசாகிவிடுவாய்' என்றார். எனக்கு ஆச்சரியமாக இருந்தது. அவர் சொன்னபடியே அந்தமுறை நான் பாசானேன். எனக்கு நாற்பது வயது நடக்கிறது. பதவி உயர்வு கிடைக்க வேண்டியவர்களுடைய ஜாபிதா தயாராகிக் கொண்டிருந்தது. வயது மீறுவதற்குமுன் எனது பெயர் இந்த ஜாபிதாவில் சேருமோ சேராதோ என்று எனக்குக் கவலை. நான் ஒரு வியாழனன்று சுவாமிஜீயிடம் போய் இந்தச் செய்தியைச் சொன்னேன். 'உனது பெயர் ஜாபிதாவில் இருக்கும்; பயப்படாதே' என்றார். பிறகு சில நாட்களில் வெளி யான பட்டியலில் எனது பெயர் இருந்தது.

எனது நெருங்கிய பந்து ஒருத்தி நெடுநாட்களாக ஆருத கட்டி யால் கஷ்டப்பட்டாள். அவளை ஒரு பெரிய டாக்டரிடம் அழைத் துப் போனபோது அவர் ஆபரேஷன் செய்யவேண்டுமென்றார். அதிர்ஷ்டவசமாக அன்று வியாழக்கிழமையாக இருந்ததால் அவ ளுடைய கணவனிடம் சொல்லிவிட்டு சுவாமிஜீயிடம் அழைத்துச் சென்றேம். 'ஆபரேஷன் செய்யவேண்டுமா' என்று கேட்டோம். அதற்கு அவர் 'அவசியமில்லை; கட்டி நாளைக் காலை பத்து மணிக்கு உடைந்துவிடுமென்றார். சரியாக அவர் கூறியதுபோலவே மறுநாள் காலை பத்துமணிக்கு கட்டி உடைந்து நோய் முற்றும் குணமாகி விட்டது.

அப்பொழுது சுவாமிஜீ சென்னையில் க்ஷய நோய்க்காகச் சிகிச் சைப் பெற்றுவந்த காலம். ஒரு நாள் அவரிடம் ஓய்வுபெற்ற உத்தி யோகஸ்தர் ஒருவர் வந்தார். 'நான் மறுபடியும் வேலைக்கு முயற்சி செய்கிறேன்; நான் தேடும் வேலை எனக்குக் கிடைக்குமா' என்று அவர் சுவாமிஜீயைக் கேட்டார். அவர் 'நிச்சயமாகக் கிடைக்கும்' என்றார். அதுபோலவே அவருக்கு வேலை கிடைத்தது.

(7—3—48)

## இணையற்ற உதவி

ஸ்ரீ டி. எம். சாமி, சென்னை.

நான் பணத்துக்கு மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தேன். ஒருநாள் காலை எனது சிநேகிதரிடம் சிறு உதவி கேட்கப்போனேன். அங்கே எனது சிநேகிதருடைய தந்தையைச் சந்தித்தேன். அவர் சாயிபாபாவுடைய பக்தர். எனது வாழ்க்கையின் போக்கையே மாற்றக்கூடிய ஒரு யோசனையைச் சொன்னார். 'நீங்கள் ஷெனாய் நகர் சென்று சாயி பக்த கேசவய்யாஜீயை தரிசியுங்கள்' என்றார். அன்று வியாழக்கிழமையாகவும் இருந்தது. அவர் சொல்லிய யோசனைப்படியே மாலை ஷெனாய் நகர் சென்று சுவாமிஜீயை தரிசித்தேன். எனது கஷ்டங்களை எல்லாம் கூறினேன். அவர் மிகவும் இரக்கப்பட்டார். விபூதிக் கொடுத்து அடுத்த வியாழக்கிழமை வரும்படிக் கூறினார். அப்படியே இரண்டாம் வியாழக்கிழமை போனேன். பாபாவுடைய விபூதியைக் கொடுத்தார். அதுமுதல் ஒவ்வொரு வியாழக்கிழமையும் போய் சுவாமிஜீயினுடைய ஆசீர்வாதம் பெற்றுவருகிறேன். எனது நிலைமை உயர்ந்தது. இன்று நானிருக்கும் நிலைக்கு சாயிபாபாவுடைய அருளும் சுவாமிஜியின் ஆசீர்வாதமும்தான் காரணம். நான் ஏதோ தாற்காலிக உதவிபெற எனது சிநேகிதரிடம் போனபோது அங்கே எனது கஷ்டங்களைத் தாண்டும் உதவி கிடைத்தது.

(27—1—'54)

## தாயுமானார்

ஸ்ரீ பி. லக்ஷ்மையா, திருவொற்றியூர்.

எனது பெரிய மகள் கர்ப்பமாக இருந்தாள். அவள் மிகவும் பலயீனமாக இருந்தாள். பிரசவத்தை வீட்டில் பார்க்க வேண்டாமென்றும் ஆஸ்பத்திரியில் சேர்ப்பதே நல்லதென்றும் டாக்டர்கள் கூறினார்கள். எனது உறவினர்களும் எனக்கு இதே யோசனையைக் கூறினார்கள். நான் மட்டும் பாபாவிடம் நம்பிக்கை வைத்து மகளுக்கு சுகப் பிரசவம் ஆகும்படி வேண்டினேன். பக்தராகிய நாநா சாகேப்பின் மகள் பிரசவ வேதனைப் பட்டபோது, அறுபது எழுபது மைல் தூரத்தில் இருந்துங்கூட பாபா, ஒரு சாது மூலமாக விபூதி கொடுத்தனுப்பியதால் நானாவினுடைய மகளுக்கு சுகப் பிரசவம்

எனக்கு அந்த தைரியம். நான் 1954—ஜூன் 10ம் தேதியன்று சுவாமிஜியை தரிசித்தேன். எனது மகளின் நிலையைக் கூறினேன். அவர் பாபாவின் விபூதியைக் கொடுத்து இடுப்பு நோய் எடுத்த

வுடன் உபயோகிக்கச் சொன்னார். ஜூலை 6ம் தேதி செவ்வாய்க் கிழமை இரவு நோய் எடுத்தது. ஒன்பது மணிக்கு நோயின் கெடு பிடி அதிகமாயிற்று. அப்போது நான் சுவாமிஜி கொடுத்த விபூதி யைத் தண்ணீரில் கலந்து எனது மகளுக்குக் குடிக்கக் கொடுத்தேன். சிறிது விபூதியை வயிற்றிலும் தடவச் சொன்னேன். நோய் சிறிது குறைந்து இரவு ஒரு மணிக்கு சுகப் பிரசவம் ஆயிற்று. ஆண் குழந்தை பிறந்தது. தாயும் குழந்தையும் சுகமாக இருந்தார்கள்.

## ஒருகணமும் கைவிடாத ரக்ஷகர்

*டாக்டர் குமாரி வி. சாவித்திரி*

நான் 1958லிருந்து சாயிபாபாவின் பக்தை. சிறு வயதிலேயே பாபாவைப்பற்றி நிறைய கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் அப் பொழுது எனக்கு அவ்வளவு நம்பிக்கை பிறக்கவில்லை. நான் படிக் கும் காலத்தில் பலவகையில் கஷ்டப்பட்டேன். பல தொல்லைகளை அனுபவித்தேன். 1947ல் ஜி. ஸி. ஐ. எம். படிப்புக்குச் சேர்ந்தேன். எங்கள் குடும்பம் மிகச் சாதாரணமானது. வரும்படி குறைவு; செலவு அதிகம். ஆடம்பரப் பொருள்கள் எதுவுமில்லை. அமைதி யாக இருந்து படிப்போமென்றால் மனத்துக்கு அமைதி இருக்காது. அப்படி உட்கார எங்கள் வீட்டில் இடமில்லாதது மட்டுமல்ல மனத் தில் எப்பொழுதும் ஏதாவது கலவரம் இருந்துகொண்டே இருக் கும். படிப்பில் நாட்டம் செல்லாது பரீட்சையில் பெயிலாகிக் கொண்டிருந்தேன். பூவும் பழமும் வாங்கிவந்து மனத் திருப்திக் காக 'சாயிபாபாவை பூஜை செய்' என்று அப்பா சொல்லுவார். பாபா பூஜையைக்கூட ஏதோ அரைகுறையாகச் செய்வேன். அதற்குக்கூட மனத்தில் அமைதி இருக்காது.

எங்கள் அதிர்ஷ்டம் காரணமாக அந்த ஆண்டு சுவாமிஜியை தரிசித்தோம். அவரைப் பார்த்த மறு விநாடியே எங்கள் வாழ்க்கை முற்றும் மாறிவிட்டது. சுவாமிஜியின் உதவியால் எங்கள் கஷ்டங் கள் எல்லாம் நீங்கிவிட்டன. பாபாவிடம் எங்களுக்கு பக்தியும் நம்பிக்கையும் பிறந்தன. ஒவ்வொரு வியாழக்கிழமையன்றும் எங்கள் வீட்டில் பாபா விரதம் செய்கிறோம். சுவாமிஜியை தரிசித்த சில நாட்களுக்குள்ளேயே அரசாங்கம் எங்கள் காலேஜுக்கு அருகிலேயே எங்கள் தந்தைக்கு ஒரு வீடு கொடுத்தது. என் படிப்புக்கு மிகவும் சௌகரியமாக இருந்தது. மூன்றாம் ஆண்டு பரீட்சைக்குச் சென் றேன். ஏழு பாடங்களில் பரீட்சை. ஆனாலும் பாபாவின் அருளா லும் சுவாமிஜீயின் ஆசியாலும் அந்தப் பரீட்சையில் சுலபமாகத் தேறிவிட்டேன். அதுபோல ஐந்தாம் ஆண்டு பரீட்சையிலும் ரண சிகிச்சைப் பகுதியில் சுலபமாகத் தேறிவிட்டேன்.

படிப்பு முடிந்தவுடன் மிக விசித்திரமான நிலைமையில் கோயம்புத்தூர் தொழிலாளர் நல ஸ்தாபனத்தில் லேடி டாக்டராக சேர்ந்தேன். மாதத்திற்கு 125 ரூபாய் சம்பளம். சிறிதுகாலம் இந்த வேலையில் இருந்தபிறகு வேலூர் அரசாங்க ஆஸ்பத்திரியில் 'ஹவுஸ் சர்ஜனாக' நியமித்தார்கள். வேலூர் சென்று அங்கே அந்த வேலையில் சேருவதற்கு வேண்டிய பணம் என்னிடமில்லை. இருந்தாலும் பாபாவை நம்பி வேலூர் போய் வேலையில் சேர்ந்தேன். சுவாமிஜி தைரியம் கூறினார். 'பாபா உதவி செய்வார்; பயப்படாமல் தைரியமாக இரு' என்றார். முதலில் அங்கே இருந்த மாவட்ட வைத்திய அதிகாரிக்கு எனது வேலை அவ்வளவாக பிடிக்கவில்லை. பாபாவுடைய தயவால் அவருக்குப் படிப்படியாக என்னிடம் அபிமானம் ஏற்படத் தொடங்கியது. ஒரு கஷ்டமும் இல்லாமல் அந்த வருடம் கழிந்தது. 'எந்தத் தொல்லையும் இல்லாமல் இந்த வருடம் கடந்துவிட்டால் சீரடிக்கு வருகிறேன்' என்று பிரார்த்தித்துக்கொண்டு இருந்தேன். வருடம் கழிந்துவிட்டது. வேண்டுதல்படி சீரடி போகவும் பாபாதான் உதவி செய்தார்.

வேலூரிலிருந்து சென்னைக்குத் திரும்பியதும் உடனே திருச்செங்கோட்டில் எனக்கு வேலை கிடைத்தது. இந்த வேலையில் சேருவதற்குமுன் பம்பாய்க்குப் போய் ஆறு வாரங்கள் பயிற்சி பெற வேண்டி இருந்தது. எனது வேண்டுதலை செலுத்துவதற்கு பாபா இந்த விதத்தில் உதவினார்.

1955ஆம் ஆண்டு ஏப்ரல் பத்தாம் தேதியன்று 'தாய்மார் சங்கத்தாரின்' குடும்பக்கட்டுப்பாடு ஸ்தாபனத்தில் டாக்டராகசேர்ந்தேன். சம்பளம் குறைவானதால் குடும்பச் செலவுக்கு போதவில்லை. செய்வதறியாமல் பாபாவை நினைத்துக்கொண்டிருந்தேன். இந்த சந்தர்ப்பத்தில் அரசாங்கத்தார் சம்பளம் ரூபாய் 350 என நிர்ணயித்தார்கள். பணத்தொல்லை ஒரு விதமாக நீங்கினாலும் மன அமைதியில்லை. சென்னை சென்று சுவாமிஜீயிடம் கூறினேன். 'எல்லாம் சரியாகிவிடும்' என்றார் அவர்.

ஒரு வியாழக்கிழமை சுவாமிஜீயை தரிசிக்க ஷெணாய் நகருக்குப் போய் அவர் வீட்டில் 'க்யூவில்' நின்றேன். எனது பக்கத்திலிருந்த ஒருவர் பெரிய படிப்புக்காக ஜெனீவா போவதாக யாரிடமோ சொல்லிக் கொண்டிருந்தார். அந்தக் கணத்திலே எனக்கு அதே யோசனைத் தட்டியது. மேற்படிப்பிற்காக வெளி நாடுகளுக்குப் போவது எனக்கு சாத்தியமில்லை என்றும், அந்த சந்தர்ப்பம் எனக்கு கிடைக்காதென்று தெரிந்தும் ஏனோ அந்த யோசனைத் தட்டியது. பாபாவுடைய அருளிருந்தால் முடியாதது எதுவும் இல்லையென்பது பிறகு தெரிய வந்தது.

மக்களுடைய ஆரோக்கியம், சமூக நலன், குடும்பக் கட்டுப்பாடு இவற்றில் உயர்ந்தப் படிப்பில் பயிற்சி பெறுவதற்கு உபகாரச் சம்பளம் கொடுப்பதாக ஸ்வீடன் நாட்டு அரசாங்கம் அறிக்கை வெளியிட்டது. இந்த உபகார சம்பளத்திற்காக மனுச் செய்யும்படி தாயுமார் சங்கத்தின் தலைவர் எனக்கு யோசனை கூறினார். நான் பாபாவின் கருத்தை அறியாமல் எதையும் செய்வதில்லையாதலால் உடனே சுவாமிஜியிடம் கேட்டேன். "உன்னை நிச்சயம் தேர்ந்தெடுப்பார்கள். மனு செய்துவிட்டு வேண்டிய ஏற்பாடுகள் செய்து கொண்டிரு" என்று சுவாமிஜி கூறினார். நான் அப்படியே செய்தேன். சுவாமிஜி சொன்னதுபோல் என்னை தேர்ந்தெடுத்தார்கள்.

பாபாவின் அருளாலும், சுவாமிஜியின் ஆசியாலும் ஸ்வீடனில் படிப்பை முடித்துக்கொண்டு அங்கே எல்லாருடைய மதிப்பையும் பெற்று திரும்பினேன். பல இடங்களிலிருந்து வேலை அழைப்பு எனக்கு வந்தது. எந்த வேலையில் சேருவதென்பதை என்னால் நிச்சயித்துக்கொள்ள முடியாமல் சுவாமிஜீயிடம் கேட்டேன். அவர் 'கும்பகோணத்தில் வேலைக்கு சேர்' என்று சொன்னார். பாபாவின் படத்தின்முன் திருவுளச் சீட்டுப் போட்டுப் பார்த்தேன். அப்படியே தான் வந்தது. நான் கும்பகோணத்திலேயே வேலைக்கு சேர்ந்தேன். எனது தொழிலிலும் பாபா பலமுறை உதவியிருக்கிறார். சுவாமிஜி கொடுத்த விபூதியை தண்ணீரில் கலந்து கொடுத்ததில் விஷநோய்கள் குணமாயின. சுவாமிஜீயின் தயை: பாபாவின் அருள்.

## ஸ்ரீ கேசவ பாபா கொடுத்த மாங்கல்யப் பிச்சை

ஸ்ரீமதி தாடேபல்லி சாந்த சாஸ்திரி, சென்னை.

சலனமற்ற மனத்துடனும், பரிபூரண நம்பிக்கையுடனும் நம்முடையவை எல்லாவற்றையும் பாபாவுக்கு அர்ப்பணம் செய்தால் பாபா, நமக்காக பல அற்புதங்கள் செய்வார். நான் பதினைந்து வருட காலமாக கொடிய 'எக்ஸிமா' நோயால் பொறுக்க முடியாது கஷ்டப்பட்டேன். அடிக்கடி ஜுரமும் வந்தது. வலி பொறுக்க முடியாது. டாக்டர் வெங்கப்பா என்பவர் எங்களுக்கு மிக வேண்டியவர். நான் படும் கஷ்டத்தைப் பார்த்து அவர், 'ஷெனாய் நகரில் சுவாமி கேசவய்யாஜீயை தரிசனம் செய்' என்று யோசனைக் கூறினார். ஏற்கனவே எல்லா வைத்தியமும் செய்தாகிவிட்டது. போடாத மருந்துகள் இல்லை. (ஸ்ரீமதி சாந்தா சாஸ்திரியின் கணவர் பிரசித்திப் பெற்ற ஆங்கில வைத்தியர். அரசாங்க இலாகாவில் பெரிய உத்தியோகம் செய்து ஓய்வுபெற்றவர்.) ஸ்ரீ வெங்கப்பாவின் யோசனைப்படி ஷெனாய் நகருக்குப் போய்

சுவாமிஜீயை தரிசிக்கத் தீர்மானித்தேன். 1957-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் சுவாமிஜீயை தரிசித்தேன். எக்ஸிமாவினால் நான் படும் பாட்டைச் சொன்னேன். சுவாமிஜீ விபூதி எடுத்துத் தாமே 'எக்ஸிமா' இருக்குமிடம் முற்றும் தடவினார். என்னிடம் கொஞ்சம் விபூதி கொடுத்து தினந்தோறும் தேங்காய் எண்ணெயில் கலந்து மேலுக்கு தடவும்படியும் தண்ணீரில் கலந்து உட்கொள்ளும்படியும் கூறினார். சாயி பாபாவிடம் நம்பிக்கை வைத்து என் துன்பத்தை பாபாவிடம் முறையிட்டுக்கொண்டு சுவாமிஜீ கூறியபடி செய்தேன். நாலு மாதங்களுக்குள் எனக்கு .இருந்த எக்ஸிமா இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது. காலை பார்த்தால் எக்ஸிமா இருந்த இடமே தெரியவில்லை. இந்த அற்புதத்தைப் பார்த்து என்னை நானே நம்பமுடியாத நிலையில் இருந்தேன்.

சென்ற ஜூன் மாதம் எனது கணவரான கர்னல் சங்கர சாஸ்திரிக்கு உடல்நிலை மிகவும் அபாயகரமாக இருந்தது. டாக்டர்கள் பரிசோதித்துவிட்டு கையை விரித்துவிட்டார்கள். நான் அவரை சுவாமிஜீயிடம் அழைத்துக்கொண்டுபோய் சில வாரங்கள் பாபாவின் விபூதியையும் தீர்த்தத்தையும் வாங்கிக் கொடுத்தேன். பாபாவின் அருளால் அவர் படிப்படியாக அநுகூலம் பெற்றார். (கர்னல் சாஸ்திரியை முதலில் அவருடைய பிள்ளைகள் இருவரும் பிடித்து காரிலிருந்து இறக்கி பூஜை அறைக்கு அழைத்து வருவார்கள். காரிலிருந்து இறங்குவதே அவருக்கு சங்கடமாக இருக்கும். சில நாட்களுக்குப் பிறகு அவரே மெதுவாகக் காரிலிருந்து இறங்கிப் பிறருடைய துணை இல்லாமல் தாமே பூஜை அறைக்குப் போய் தீர்த்தப் பிரசாதங்களைப் பெற்றுகெபண்டுவருவார். இதை நானே நேரில் பார்த்தேன்.)

சமீப காலத்தில் பாபா எனது புதல்வர்கள் மூவரையும் கொடிய கார் விபத்திலிருந்து காப்பாற்றினார். சாயிபாபா கண்கண்ட தெய்வம் என்பது எனது முழு நம்பிக்கை. நாம் பாபாவுக்கு எவ்வளவு தூரம் எப்படி சமர்ப்பணம் ஆகிறோமோ பலனும் அதற்குத் தக்கபடி தான் இருக்கும். நாம் எதிர்பாராத விதத்தில், நமக்குத் தெரியாமலேயே பாபா அற்புதங்களை நிகழ்த்துவார். அவர் நம்மை நிழல் போல் தொடர்ந்துவந்து ஆபத்துகளிலிருந்து காப்பாற்றுவார். துன்புற்ற மக்களுக்கு சுவாமிஜீயின் சுயநலமற்ற சேவையும், பலனை எதிர்பாராத உழைப்பும் மிக்க பயன் கொடுப்பவை ஆகும். சாயி நிலையத்தில் நுழைந்தால் மனம் அமைதி பெறும். பூஜை அறைக்குள் சுவாமிஜீயை தரிசித்தால் துனபங்கள் எல்லாம் நீங்கி சுமையை இறக்கியதுபோல் உணவுவோம்.

—(1959)

## விஷநோய்க்கு முறிவு

சிந்தல பூடி சத்திய நாராயண குப்தா

நான் சுவாமிஜீயைப் பத்து வருடங்களாக அறிவேன். சாய் நாதனுடைய அருளால் அவர் பல கொடிய நோய்களைக் குணப் படுத்தி இருக்கிறார். நான்கு மாதங்களுக்கு முன்பாக எனது மகனுக்குத் திடீரென்று 'டைபாய்டு' ஜுரம் கண்டது. சீராலாவில் இருந்த பெரிய டாக்டர்கள் எல்லோரும் மருந்து கொடுத்தார்கள். ஜுரம் குறையவில்லை. அவர்கள் அவனைச் சென்னைக்கு அழைத்துக் கொண்டு போகும்படி யோசனை சொன்னார்கள். அபபடியே நான் அவனை சென்னைக்குக் கூட்டிப்போய் பிரசித்தி பெற்ற நர்சிங்ஹோம் ஒன்றில் சேர்த்தேன். பெரிய பெரிய டாக்டர்கள் எல்லோரும் பரி சோதித்து மருந்து கொடுத்தார்கள். குணம் தெரியவில்லை. அவர்கள் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போகும்படி சொல்லி விட்டார்கள். எனக்குத் திக்குத்திசை புரியவில்லை. கவலையோடு யோசித்தபோது, சுவாமி கேசவய்யாஜீயின் நினைவு வந்தது. உடனே பையனை ஷேனாய் நகருக்கு அழைத்துக்கொண்டு போனேன். அன்று வியாழக் கிழமையாகவும் இருந்தது. சுவாமிஜீயிடம் எனது பையனைப் பற்றிக் கூறினேன். அவர் பாபாவின் பக்கம் திரும்பிப் பார்த்து விட்டு, "பையனுக்குப் பயம் ஒன்றும் இல்லை. நாளைக்கு நான் வந்து பார்க்கிறேன்" எனக் கூறி விபூதி கொடுத்தார்.

சுவாமிஜீ தாம் கூறியபடி மறுநாள் வந்தார். சிறுவனு டைய நெற்றியில் விபூதியிட்டுச் சில வேலைகளைச் செய்யும்படி என் னிடம் கூறினார். அவர் தொடர்ந்து ஐந்து நாட்கள் வந்தார். ஒவ்வொரு நாளும் பையனுக்கு விபூதி கொடுத்துவிட்டுப் போவார். ஆறும் நாளிலிருந்து ஜுரம் குறையத் தொடங்கியது. ஒரு மாதத் தில் நோய் முற்றும் குணமாயிற்று. (23 - 5 - '55)

## பாபா தேர்ந்தெடுத்த சுவாமிஜீ

ஸ்ரீ ஆர். சுந்தரேச்வர ராவ், பி.ஏ.,பி.டி., சென்னை.

எனது சகோதரி வெகுகாலமாக நோய்வாய்ப் பட்டிருந்தாள். எந்த வைத்தியத்தினாலும் நோய் குறையவில்லை. பாபா மேல் பாரத் தைப் போட்டுவிட்டுப் பேசாமல் இருந்தேன். 1956 - டிசம்பர் 8 ஆம் தேதியன்று பாபா ஒரு கிழவர் வடிவில் எனது சகோதரிமுன் தோன்றி, 'இங்கிருந்து ஆறு மைல் தூரத்தில் ஒருவர் இருக்கிறார். அவர் உனக்கு வேண்டிய உதவி செய்வார். அவரிடம் அழைத்துக் கொண்டுபோகும்படி உன் சகோதரனிடம் சொல்'' எனக் கூறினார்.

டறுநாள என் சகோதரி என்னிடம் இந்தச் செய்தியைச் கூறினாள். எனக்கு ஒன்றும் புரியவில்லை. சைதாப்பேட்டைக்கு ஆறு மைல் தூரத்தில் யார் இருக்கிறார்கள்? என்ன யோசித்தும் எனக்கு ஒன்றும் புரியவில்லை. அந்த மனிதர் யார் என்று என்னால் ஊகிக்க முடிய வில்லை.

மறுநாள் இரவில் அதே கிழவர் என் சகோதரியினுடைய கனவில் தோன்றி, "நேற்றிரவு உன்னிடம் யாரைச் சொன்னேனோ அவர் மாந்த்ரீகர் அல்ல. உன் சகோதரன் அவரிடம் போய்க் கொண்டுதான் இருக்கிறான். அவரிடமே அழைத்துக் கொண்டு போகும்படிக் கேள்' என்று சொல்லி மறைந்து விட்டார்.

மறுநாள் காலையில் எனது சகோதரி என்னிடம் இந்தச் செய்தியைச் சொல்லும்போது சுவாமிஜியின் உருவம் என் முன் தோன்றியது. சுவாமிஜியின் வாயிலாக பாபா பக்தர்களுக்கு எப்படி உதவி செய்கிறார் என்பது இதனால் தெளிவாகிவிட்டது. நான் சுவாமி கேசவய்யாஜீயிடம் போய்க் கொண்டுதான் இருந்தேன். எனது சகோதரியை அவரிடம் அழைத்துக் கொண்டு போகவேண்டுமென்று தோன்றாமல் இருந்தது எனக்கே ஆச்சரியமாகத்தான் இருந்தது.

(6—1—'57)

## நியாயத்தின் காவலர்

ஸ்ரீ ஆர். வி. சேஷாத்திரி, எழும்பூர், சென்னை.

ஸ்ரீ நடராஜன் ரெயில்வேயில் ஒரு குமாஸ்தா. யாத்ரீகர்களுக்கு ஸ்பெஷல் ரெயில் ஏற்பாடு செய்யும் கிளையில் இவருக்கு வேலை. இவர் லஞ்சம் வாங்கியதாகக் குற்றம் சாட்டப் பட்டு வழக்கு போட்டார்கள். செங்கற்பட்டு சப் ஜட்ஜ் வழக்கை விசாரித்து நடராஜன் குற்றவாளிதான் எனத் தீர்ப்பளித்து ரூ. 100 அபராதம் விதித்தார். இந்தத் தீர்ப்பின் பயனாக அவருடைய வேலையும் போயிற்று. பழியும் வந்து சேர்ந்தது. சப் ஜட்ஜ் தீர்ப்பின் மேல் ஹைகோர்ட்டுக்கு அப்பீல் செய்ய ஸ்ரீ நடராஜன் நினைத்தார். சென்னையில் உள்ள பெரிய வக்கீல்களைக் கலந்தாலோசித்தார். வழக்கு மிகத் தீவிரமானது. அப்பீல் செய்து பயனில்லை என அவர்கள் சொன்னார்கள். அனைத்துக்கு ஆண்டவனே துணை என்ற நிலையில் இருந்தார் ஸ்ரீ நடராஜன். அப்போது நான் நடராஜனை ஷெணாய் நகர் சென்று சுவாமிஜியின் உதவியை நாடும்படிக் கூறினேன். பாபாவை முழுவதும் நம்பிப் பக்தி செலுத்தினால் கஷ்டங்கள் எல்லாம் நீங்கிவிடும் எனக் கூறினேன். நடராஜன் ஷெணாய் ந

போய் சுவாமிஜியிடம் தம் நிலைமையைக் கூறினார். 'வக்கீல்கள் எது வேண்டுமானாலும் சொல்லட்டும்; நீ கோர்ட்டில் அப்பீல் தாக்கல் செய்' என சுவாமிஜி கூறினார். அவர் அப்படியே அப்பீல் தாக்கல் செய்தார்.

ஹைகோர்ட்டில் விசாரணை தொடங்கியது. நீதிபதி கீழ்க் கோர்ட்டின் தீர்ப்பை ஊர்ஜிதப்படுத்தித் தண்டனையை எதற்காக அதிகப்படுத்தக்கூடாது என நடராஜனுக்கு நோட்டீஸ் கொடுத்தார். அப்பீல் குந்தகமாக முடிந்ததற்கு நடராஜன் அதைரியப்படவில்லை. அவருக்கு பாபாவிடம் பக்தி குறையவில்லை, சுவாமிஜியிடம் நம்பிக்கை போகவில்லை. நீதிபதியின் தீர்ப்பின் மேல் பெஞ்சுக்கு அப்பீல் தாக்கல் செய்தார். விசாரணை நடக்கும் வரையிலும் அவர் கோர்ட்டிலேயே இருந்து சாயி நாமஸ்மரணை செய்தார். விசாரணை முடிந்தது. நீதிபதிகள் எல்லோரும் நடராஜன் குற்றவாளி அல்ல எனத் தீர்ப்புக்கொடுத்தனர். பாபா உதவிசெய்தார்; நடராஜனுக்கு நியாயத்தை அருளினார். அவருடைய ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை.

சுவாமிஜீயின் உதவியால் நடராஜன் பாபாவின் பக்தரானார். இன்றும் ஒவ்வொரு வியாழக்கிழமையும் பூஜைக்கு ஆஜராகி அங்கே வரும் பக்தர்களுக்கு முடிந்த அளவு சேவை செய்கிறார். நடராஜனுடைய அனுபவத்தைத் தெரிந்துகொண்ட வேறுபலர் பாபாவின் பக்தர்கள் ஆனார்கள். சுவாமிஜீயின் ஆசியோடு விரும்பியவற்றைச் சாதித்துக் கொண்டு பாபாவின் பக்தரானவர்கள் லட்சக்கணக்கில் இருக்கிறார்கள்.

## பலவகை அனுபவங்கள்

சுவாமிஜீயிடம் வந்து பக்தர்கள் பெற்ற அனுபவங்களும் அவர்களுக்கு ஏற்பட்ட லாபங்களும் பலவகையாக உள்ளன. பக்தர்கள் சிலர் மட்டுமே தம் அனுபவங்களைப் பத்திரிகையில் வெளியிட்டார்கள். அவை சென்னை ஆங்கில வாரப்பத்திரிகையான "சண்டே டைம்ஸில்" நிறைய வெளியாகியிருக்கின்றன. ஆங்கில "ஸாயி ஸுதா" சீராலாவிலிருந்து வந்துகொண்டிருந்த தெலுங்கு "ஸாயி லீலா" ஏலூரிலிருந்து வெளியான "ஸாயி ஸுதா" ஆகிய மாதப் பத்திரிகைகளிலும் வெளியாயின. சிலர் தம் அனுபவங்களை ஸ்தூலமாகத் தெளிவு இல்லாமல் வெளியிட்டார்கள். சிலர் தங்களுக்குத் தோன்றியபடி தெரிந்தமுறையில் எடுத்துக் கூறினார்கள். சிலர் மறைவில் இருந்து தம் அனுபவங்களை மட்டும் விவரமாக வெளியிட்டார்கள். பக்தர்கள் யாராக இருந்தாலும் சரி; அவர்களுடைய அனுபவங்களே முக்கியமாகையால் கிடைத்தமட்டும்

எல்லா அனுபவங்களையும் மனிதர்களுக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் விஷயத்தை முக்கியமாக எடுத்துக் கொண்டு வெளியிட்டு வந்தார்கள்.

1958-ஆம் ஆண்டு மார்ச் 16-ஆம் தேதி, ஜூன் 8-ஆம் தேதி "சண்டே டைம்ஸ்" இதழ்களில் வெளியான பக்தர்களுடைய அனுபவங்களை இங்கே தருகிறேன்.

## தரிசனத்தின் பெருமை

ஒருவர் இப்படி எழுதுகிறார்: எனக்கு ஒரே மகன். ஆறு வருடங்களுக்கு முன் ஐந்தாம் பாரம் பரீட்சையில் குறைவாக மார்க்குகள் வாங்கியதால் பயந்து வீட்டிலிருந்து ஓடிவிட்டான். எல்லா இடமும் பலரைக்கொண்டு தேடினேன். அவன் உயிரோடிருந்து திரும்பி வருவான் என்ற ஆசையே எங்களுக்கு அற்றுப்போனது. எனது மனைவி தூக்கமும் சாப்பாடும் இல்லாமல் ஏங்கி இளைத்துப் போனாள். அவள் உடல்நிலை சீர்கெட்டு கடைசியில் வலிப்பு வரத் தொடங்கியது. என்னால் ஆபீசுக்குப் போய் வேலை பார்க்க முடியாமல் போய்விட்டது.

எனது பிழைப்பு நாலுபேர் சிரிக்க இடமாயிற்று. செய்வதறியாமல் மனத்தைத் தேற்றிக்கொண்டு காலத்தை தள்ளினேன். கடவுள்மேல் முழுநம்பிக்கை வைத்து பிரார்த்தனை செய்துகொண்டிருந்தேன். நிலைமையில் எந்த மாறுதலும் இல்லை.

ஒருநாள் எனது நண்பரிடம் எனது நிலைமையை விளக்கிச் சொன்னேன். எனது குடும்பம் எவ்வளவு சங்கடத்திற்கு இலக்காயிற்று என்பதை விவரித்தேன். இரங்கத்தக்க எனது கதையைக் கேட்ட ஒருவர், "நீங்கள் ஸ்ரீகேசவய்யாஜியை தரிசித்து அவருடைய உதவியை நாடுங்கள்" என்று யோசனை கூறினார். அவர், சுவாமிஜி செய்யும் பூஜையைப் பற்றியும், அவர் சாயிபாபாவின் பக்தர்களுள் நலை சிறந்தவர் என்பதையும் கூறினார். எனக்கு அப்பொழுதே பாபாவைப்பற்றி சிறிது தெரியும். எங்கள் வீட்டில் பாபாவின் படம் இருந்தது. ஆனால் பாபாமீது அவ்வளவு நம்பிக்கை ஏற்படவில்லை. ஆனால் சுவாமிஜியைப்பற்றி அவர் சொன்னதைக் கேட்டவுடன் எனக்கு நம்பிக்கை ஏற்பட்டது.

1957-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் நான் சுவாமிஜியை சந்தித்து, என்னுடைய கஷ்டங்களை எல்லாம் சொல்லிக்கொண்டேன். அவர் எனது வாயில் விபூதியைப் போட்டு கட்டை விரலால் நெற்றி

யில் விபூதியை இட்டு, 'உனது பிள்ளை சுகமாக இருக்கிறான். நாற் பத்துமூன்று நாட்களில் திரும்பி வருவான்' என்றார். சுவாமிஜியை தரிசித்தபோதே எனக்குள் ஏதோ மாறுதல் ஏற்பட்டது. எனது பிள்ளை உயிருடன் இருக்கிறான் என்ற ஆசை தலை தூக்கியது. சுவாமிஜியின் தரிசனத்தால் எனக்கு அமுதம் சாப்பிட்டது போல் ஆயிற்று. ஆறு ஆண்டுகளுக்கு முன் காணமற்போன எனது பிள்ளை உயிருடனிருக்கிறான் என்று சுவாமிஜி கூறியவுடன் எனக்குப பரமானந்தம் ஏற்பட்டது. அவரை தரிசித்த இரண்டு வாரத்தில் எனது பிள்ளையிடமிருந்து முதல் கடிதம் வந்தது. தான் சுகமாக இருப்பதாகவும், மே மாதக் கடைசியில் வருவதாகவும் எழுதியிருந்தான். சுவாமிஜீயை முதன் முதலாகப் பார்த்தபிறகு முப்பத்தைந்து நாட்களில் எனது பிள்ளை ஆறு வருடத்திற்குப் பிறகு திரும்பி வீட்டிக்கு வந்தான்.

## நோயைக் கண்டுபிடித்தல்

ரவர் இப்படி எழுதியிருக்கிறார். 1955—செப்டம்பர் மாதம் என் மனைவி நோய்வாய்ப்பட்டாள். எங்கள் குடும்ப வைத் தியர் தம்மாலியன்ற மட்டும் பாடுபட்டார். நோய் இன்னதென்று கூட கண்டுபிடிக்கமுடியவில்லை. அந்தச் சந்தர்ப்பத்தில் நான் சுவாமி ஜீயை தரிசித்து விபூதி பெற்றுக்கொள்வதை வழக்கமாகக் கொண் டிருந்தேன். சில நாட்களுக்குப் பிறகு எனது மனைவியின் நோய் இன்னதென்று தெரிந்தது. சிகிச்சைநடந்தது. மனைவியின் நோய் சரி யாகிவிட்டது. அதுமுதல் ஒவ்வொரு வியாழனன்றும் விபூதிப் பிரசாதம் பெற்று வருகிறேன்.

## ஸ்ரீ கேசவய்யாஜீ மகராஜின் விபூதிப் பிரபாவம்

மற்றொருவர் இப்படி எழுதுகிறார். மகராஜ் ஸ்ரீ கேசவய்யாஜி ஒவ்வொரு வியாழக்கிழமையும் பூஜை செய்து பக்தர்களுக்குக் கொடுக்கும் விபூதியின் மகிமை அளவிட முடியாதது. இதனால் பலர் பல அனுபவம் பெற்றிருக்கிறார்கள். என் அனுபவங்கள் சிலவற்றை சொல்லுகிறேன். எனது வீட்டைப்பற்றி ரிஜிஸ்திரார் ஆபீசில் ஒரு வேலை இருந்தது. மூன்று மணிக்கு ஆபீஸ் வேலையை முடித்துவிடு வார்கள். அப்பொழுதே பிற்பகல் மணி 2-55 ஆகிவிட்டது. ஐந்து நிமிடங்களில் ரிஜிஸ்திரார் ஆபீசுக்குப் போய் பத்திரங்களை தாக்கல் செய்வது முடியாத காரியம். பத்திரங்கள் அன்றே ரிஜிஸ்தர் ஆக வேண்டும். எனக்கு ஏதும் புரியவில்லை. சுவாமிஜி கொடுத்த

விபூதியில் சிறிது எடுத்து நெற்றியில் இட்டுக்கொண்டு "சாயி ராம்" என்று நினைத்துக்கொண்டு சப்ரிஜிஸ்திரார் ஆபீசுக்குப் போனேன். அதிகாரி ஏதும்சொல்லாமல் பத்திரங்களை வாங்கி ரிஜிஸ்தர் செய்தார்.

என்னை ஒருநாள் கருந்தேள் கொட்டிவிட்டது. நெறி ஏறி அதிக வலி ஏற்பட்டது. உடனே சுவாமிஜி கொடுத்த விபூதியை எடுத்துக் கடிவாயில் பூசினேன். சிறிது வலி குறைந்தது. இரவும் பூசினேன்; வலி நீங்கி தூங்கிவிட்டேன். காலையில் வலி முற்றும் போய்விட்டது. சுவாமிஜி கொடுக்கும் பாபாவின் விபூதி மிகப் பயனுள்ளதாகும்.

ஸ்ரீ எஸ். ரத்தினவேலு என்பவர், 'நீங்கள் சொல்லியபடியே தினந்தோறும் மூன்று வேளை வீதம் மூன்று நாட்கள் பாபாவின் விபூதியை தண்ணீரில் கலந்து குடித்தேன். எனக்கு உடல்நிலை சரியாகிவிட்டது' என 1959—பிப்ரவரி 17ம் தேதியன்று சுவாமிஜிக்கு எழுதினர்.

## வினையிலிருந்து விடுதலை

ஸ்ரீமதி ஆர். சகுந்தலா 1955—ஜூலை 13ம் தேதியன்று சுவாமிஜிக்கு இப்படி எழுதினர். 'நேற்றுக் காலையில் ருத்திராக்ஷ மாலை தரித்த ஒரு தாடி வாலா வந்தார். வழக்கம்போல் பிச்சை போட்டேன். 'பசியாக இருக்கிறது; சாதம் போடு' எனக் கேட்டார். பத்து மணிக்கு வரச்சொல்லி அதற்குள் நானே சமைத்து, பத்து மணிக்கு வந்ததும் சாதம் போட்டு, இரண்டணு தக்ஷிணையும் தந்தேன். ஒரு வேட்டி கேட்டார்; அதையும் கொடுத்தேன். இந்த சந்தர்ப்பத்தை ஏற்படுத்தியதற்கு நான் மிகவும் சந்தோஷம் அடைகிறேன். சரியாக நீங்கள் சென்னபடியே இந்த சம்பவம் நடந்தது.

## புனிதக்கை; அமுத வாக்கு:

*ஸ்ரீ எஸ். ராமசுவாமி, உதவி பெர்சனல் ஆபீசர், தக்ஷிண ரயில்வே*

எனக்குக் குழந்தைகள் இல்லாதபோதும், பணத்திற்கு கஷ்டப்பட்டபோதும் நான் ஒரு வாரப் பத்திரிகையில் ஸ்ரீ கேசவய்யாஜி சென்னையில் குடியேறி வியாழக்கிழமை பூஜையை நடத்துவதாகப் படித்தேன். நான் சுவாமிஜீயை முதலில் சந்தித்த சந்தர்ப்பம் மிகச் சாதாரணமானது. அதில் விசேஷம் ஏதுமில்லை. ஆனுல் அந்த முதல் தரிசனம் எனக்கு ஊக்கத்தையும், அமைதியையும் அளித்தது. ஒரு முறை பார்த்ததும் மறுபடியும் பார்க்கவேண்டும்போல் ஆசை பிறந்தது. நான் சுவாமிஜீயை தரிசித்ததும் ஏற்பட்ட லாபங்கள் ஒன்றன்பின் ஒன்ருக வரவில்லை. ஒரே சமயத்தில் இரண்டு மூன்று

வேலைகள் கிடைத்தன. எந்த வேலையில் சேருவதென்பது பிரச்சினை ஆகிவிட்டது சுவாஜியிடம் கேட்டேன்; அருள் செய்தார்; சரியான வேலை கிடைத்தது. அவருடைய அமுத வாக்கு நமது பிரச்சினைகளை தீர்த்திடும் சக்தியுள்ளது. அவருடைய புனிதக்கை நமக்கு சரியான வழியைக் காட்டும்.

எனக்குக் குழந்தைகளில்லை. என் மனைவிக்கு ஆபரேஷன் செய்ய வேண்டுமென டாக்டர்கள் கூறினார்கள். நான் சுவாமிஜியைக் கேட்டேன். 'அப்படி எதுவும் செய்ய வேண்டாமென்றும் சிறிது காலம் பொறுத்தால் தானே குழந்தை பிறக்கு'மென்றும் சுவாமிஜி மூலமாக பாபா சொன்னார். சரியாக அப்படியே ஆயிற்று. சுவாமிஜி வைத்த கெடு தாண்டியவுடன் எனது மனைவி கருவுற்றாள். சுகப் பிரசவம் ஆயிற்று.

குழந்தை நான்கு மாதத்தில் நோய்வாய்ப்பட்டது. குடலில் சத்திர சிகிச்சை செய்யவேண்டுமென டாக்டர்கள் கூறினார்கள். சிறு குழந்தைக்கு எப்படி ஆபரேஷன் செய்வதென்று பயந்து, சுவாமிஜியைக் கேட்டேன். அவர், 'அவசியமில்லை' யென்றார். முடிவில் ஆபரேஷன் இல்லாமலேயே குழந்தைக்கு உடம்பு குணம் ஆயிற்று.

## ஸ்ரீ ஜி. சீனிவாசன், புது டெல்லி

1959—பிப்ரவரி 11-ஆம் தேதியன்று இப்படி எழுதியிருக்கிறார். பாபாவின் அருளாலும், தங்கள் ஆசியாலும் எனது மனைவிக்கு சுகப் பிரசவம் ஆயிற்று. ஆண் குழந்தை பிறந்திருக்கிறது. தாயும் சேயும் சுகம். பிரசவ சமயத்தில் சாயி நாம ஸ்மரணம் செய்துகொண்டே இருந்தேன்.

## ஸ்ரீ எஸ். சுந்தரமூர்த்தி, சிலகலபூடி

1955—டிசம்பர் 2ம் தேதி இப்படி எழுதினார். தாங்கள் மிகவும் தயவுடன் அனுப்பிய விபூதியால் எனது இரண்டாவது மகள் சௌபாக்கியவதி ராதாபாய்க்கு சுகப் பிரசவம் ஆயிற்று. ஆண் குழந்தை; இருவரும் சுகமாக இருக்கிறார்கள்.

## ஸ்ரீ எம். எல். மல்லிகார்ஜுனன், பெங்களூர்

நீங்கள் சொல்லியபடி பாபா தயவால் நான் பி.எல். பரீட்சையில் தேர்ச்சிப் பெற்றேன்.

## ஸ்ரீ பி. எஸ். நிஷ்பத், தார்வார்

1955—ஜனவரி 27-ஆம் தேதியன்று இப்படி எழுதியிருக்கிறார்: உங்கள் உதவிக்கும், அருளுக்கும் எப்பொழுதும் நன்றியுள்ளவனாக இருப்பேன். நீங்கள் கூறியபடி நான் சார்டர்டு அக்கௌண்டன்ட் பரீட்சையில் இரண்டாம் வகுப்பில் தேறினேன்.

## ஸ்ரீ பி. வெங்கட்ராமன், மெர்க்காரா

1955—ஆகஸ்டு 18-ஆம் தேதி இப்படி எழுதியிருக்கிறார்:

"தங்கள் தயவால் நான் பரீட்சையில் தேறினேன். மெர்க்காராவிலேயே மறுபடியும் வேலை கிடைத்துவிட்டது."

## ஸ்ரீ ராகவேந்திர ராவ்

எனக்கு சமீபத்தில் ஏற்பட்ட அற்புதமான ஓர் அனுபவத்தை வெளியிட மிக ஆசையுள்ளவனாக இருக்கிறேன். நான் ஒரு சிறு கட்டுரை எழுதி, பிரசுரிக்க கல்கத்தாவிலுள்ள ஒரு பத்திரிகைக்கு அனுப்பினேன். இந்தக் கட்டுரையை ஆகாயத் தபால்மூலம் அனுப்பினேன். கடிதம் சென்ற விமானம் சிங்கப்பூரில் விழுந்துவிட்டது. இந்தச் செய்தியைக் கேட்டு, கட்டுரை என்ன கதி ஆயிற்றோ எனக் குழம்பினேன். இங்கிலாந்துக்குப் போகவிருந்த தபால்களெல்லாம் எரிந்து சாம்பலாயின. பிரயாணிகள் பலர் இறந்துபோனார்கள். இப்படிப்பட்ட கோரத்தில் சிக்கிய எனது கட்டுரை, உரிய இடத்திற்கு சேர்ந்திருக்காதெனை உறுதி செய்தேன்.

சில நாட்களுக்குப் பிறகு கல்கத்தா பத்திரிகையின் ஆசிரியரிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. என் தலைமை ஆசிரியராக இருந்த அவர், எனது கட்டுரை, அத்துடன் இருந்த புகைப்படங்கள், பத்திரிகைக்கு சந்தாவாக வைத்த செக் எல்லாம் கிடைத்ததாக அதில் எழுதியிருந்தார். புகைப் படங்களின் ஓரமும், செக்கின் நுனியும் மட்டும் சிறிது கருகி இருந்ததாம். ஆனால் ஏதும் வீணாகாமல் பயன்பட்டதாக எழுதியிருந்ததைக் கண்டதும் எனது மகிழ்ச்சி எல்லையைக் கடந்துவிட்டது.

இந்த அற்புதம் எப்படி நிகழ்ந்தது? நான் எனது கட்டுரையை அனுப்பும்போது சுவாமிஜீ கொடுத்திருந்த விபூதியைக் காகிதங்களின்மேல் தூவி, பாபாவை நினைத்தபடியே உறையிலிட்டு தபாலில்

போட்டேன். சுவாமிஜீ கொடுத்தருளிய விபூதி இந்த அரிய செயலை செய்தது.

(ஸ்ரீ ராகவேந்திர ராவ் உயர்தரக் கல்வி கற்றுக்கொண்டு அயல் நாட்டில் இருக்கும்பொழுது நடந்த சம்பவம் இது. இவர் சுவாமிஜீயின் ஆலோசனையையும், உதவியையும் வேண்டி அநுக்கிரகம் பெற்று மிக உயர்ந்த நிலைக்கு வந்திருக்கிறார்.)

## ஸ்ரீ எஸ். காமேசுவர ராவ், பெங்களூர்

இவர் பாபா பக்தர். அடிக்கடி சுவாமிஜீயை தரிசித்து, விபூதி பெற்றுக்கொள்வார். இவருக்கு பண நெருக்கடி இல்லையென்றாலும் குடும்பத்தில் சிக்கல் இருந்தது. இவருடைய மகள் வயதுவந்த பிறகும் புஷ்பவதியாகாமல் இருந்தாள். பல வருடங்களாக பல டாக்டர்களை கலந்து ஆலோசித்தும், பல சோதிடர்களைக் கேட்டும் திருப்திகரமான பதில் கிடைக்காமல் போயிற்று. கடைசியில் சுவாமிஜீயிடம் செய்தியை சொல்ல, அவர் ஒரு விபூதி பொட்டலத்தைக் கொடுத்து, அவளுடைய இடது காலில் கட்டச் சொன்னார். இப்படி ஐந்து மாத காலம் கட்டி வைக்கும்படி உத்தரவு. ஸ்ரீ காமேசுவர ராவ் அப்படியே செய்தார். ஐந்தாம் மாதம் முடிவதற்கு முன்பே அப்பெண் பெரியவளானாள்.

## ஸ்ரீ சுவாமிநாத ஐயர், ஷெணாய் நகர்

இவர் ஒவ்வொரு வியாழக்கிழமையும் சுவாமிஜீயின் பூஜைக்கு ஆஜராகி விபூதியும் பிரசாதமும் பெற்றுச் செல்வார். இவருடைய பெண்ணுக்கு நோய்வந்தது. வழக்கம்போல் டாக்டர்களிடம் வைத்தியம் பார்த்தார்கள். குணமாகவில்லை. அவர் சுவாமிஜீயிடம் சொன்னார். சுவாமிஜி விபூதி கொடுத்து உபயோகித்து வரும்படி சொன்னார். மூன்று நாட்கள் சென்றபிறகு ஸ்ரீ சுவாமிநாத ஐயர் சுவாமிஜீயிடம் வந்து இன்னும் சிறிது விபூதி வேண்டுமென்று கெஞ்சினார். சுவாமிஜி கொடுக்கவில்லை. சில நாட்கள் சென்றபிறகு வரச் சொன்னார். அந்தக் கெடுவுக்குள் அந்தப் பெண் இறந்து போய்விட்டாள். முதலில் விபூதி கொடுக்கும்போதே சுவாமிஜி, முடிவைத் தெரிந்துகொண்டு கொஞ்சமாக விபூதி கொடுத்தனுப்பினார். விஷயத்தை வெட்ட வெளிச்சமாக சுவாமிநாத ஐயரிடம் சொல்லவில்லை. அந்தப் பெண்ணினுடைய வினை இப்படி இருந்திருக்கிறது.

## செகந்தராபாத்தில் சுவாமிஜீ

1946—ஜூன் மாதத்தில் சுவாமிஜீ செகந்தராபாத் சென்றிருந்தபோது இதுபோல் மற்றொரு சம்பவம் நடந்தது. அன்று வியாழக்கிழமை. சுவாமிஜீ பூஜை செய்தார். பக்தர்களுக்கு விபூதி பிரசாதம் கொடுத்துக்கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் சிறுவன் ஒருவன் வந்து தனது தாயின் உடல் நிலையைப்பற்றி சுவாமிஜீயைக் கேட்டான். ''எனக்கு ஒன்றும் நம்பிக்கைத் தோன்றவில்லை'' என்றார் சுவாமிஜீ. மறுநாளே அச்சிறுவனின் தாய் இறந்துவிட்டாள். அவளுடைய நிலைமை மிக மோசமாயிருந்தது சுவாமிஜீக்கு தெரியவே தெரியாது.

செகந்தராபாத்தில் புகழ்பெற்ற வைத்தியர் ஒருவர் இருந்தார். அவருடைய மகளுக்கு மணம் முடிந்து பதினொரு வருடங்கள் ஆகிவிட்டன. அவளுக்குக் குழந்தைப் பிறக்கவில்லை. சோதிடர்கள் பலரைக் கலந்து ஆலோசித்தார்கள். அவர்களால் நிச்சயமாக ஏதும் சொல்ல முடியவில்லை. சுவாமிஜீ செகந்தராபாத் வந்த சமயத்தில் அவள் சுவாமிஜீயை தரிசித்துத் தனது நிலைமையைக் கூறினாள். சுவாமிஜி அவள் வாயில் விபூதி போட்டு, நெற்றியில் கட்டை விரலை வைத்து அழுத்தி அவளைப் பார்த்து, ''நீங்கள் திருப்பதிக்குப் போய் ஸ்ரீ வெங்கடேசுவரப் பெருமாளுக்கு பிரார்த்தனை செலுத்தும் வரையில் குழந்தை பிறக்காது'' என்றார்.

அவள் கல்யாணம் ஆன புதிதில் குடும்பத்துடன் திருப்பதி செல்வதாகப் பிரார்த்தனை செய்து கொண்டாளாம். அன்றைக்கு சுவாமிஜி சொல்லும்வரையில் அந்தப் பிரார்த்தனையின் நினைவே அவளுக்கு இல்லையாம். சுவாமிஜீ கூறியபிறகு, அந்தப் பெண் குடும்பத்துடன் திருப்பதிக்குப் போய் வேண்டுதலைச் செலுத்தி வந்தாள். பிறகு அவளுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்து சுகமாக இருக்கிறது.

சுவாமிஜி வியாழக்கிழமை பூஜைக்கு செங்கல்பட்டிலிருந்து தம்பதிகள் இருவர் வந்துகொண்டிருந்தார்கள். அவர்களுக்கு ஒரு பெண் இருந்தாள். ஆண் சந்ததியில்லை. பூஜைக்கு வந்துகொண்டிருந்த சமயம் ஒருநாள் 'அவர்கள் சுவாமிஜீயிடம் இந்தச் செய்தியைச் சொன்னார்கள். ''உங்கள் பெண்ணுக்கு ஒன்பதாவது வயதிலோ, பதினோராம் வயதிலோ ஆண் குழந்தைப் பிறக்கலாம். அப்படிப் பிறக்காவிட்டால் உங்களுக்கு ஆண் சந்ததி ஏற்படாது'' என்று சுவாமிஜி கூறினார். அதுபோலவே அவர்களுடைய மகளுக்கு பதினோராம் வயதானபோது ஆண் குழந்தை பிறந்தது.

சென்னை அரசாங்கத்தில் உதவிகாரியதரிசியாக இருந்து ஓய்வு பெற்ற ஒருவர் ரத்த அழுத்தத்தாலும், தூக்கம் இல்லாததாலும் அவதிப்பட்டு வந்தார். சிறந்த டாக்டர்களிடம் காட்டி அவர்கள் சொல்லிய மருந்துகளை வாங்கி உட்கொண்டார். ஒன்றும் பயனில்லை, தாற்காலிக விடுதலைதான் கிடைத்தது. இனி நோய் தீராதென்று ஏக்கத்துடனும், வெறுப்புடனும் நாட்களைக் கடத்தி வந்தார். அவருடைய நண்பர் ஒருவர், "சுவாமிஜீயை ஒருமுறை பாருங்கள்" என்று யோசனை கூறினார். அவர் உடனே சுவாமிஜீயிடம் சென்று தம் உடல்நிலையைப் பற்றியும், தம் குடும்ப விவகாரங்களைப் பற்றியும் அவரிடம் கூறினார். சுவாமிஜி அவருக்கு விபூதி கொடுத்துத் தினந்தோறும் தண்ணீரில் கலந்து உட்கொள்ளும்படி கூறினார். ஐந்து வியாழக்கிழமைகள் பாபாவுடைய பூஜைக்கு வரும்படிக் கூறினார்.

சுவாமிஜீ கூறியபடியே அவர் ஐந்து வாரங்கள் பாபாபூஜைக்கு வந்து விபூதியும் தீர்த்தமும் பெற்றுக்கொண்டார். ஐந்தாம் வாரம் முடியும் தறுவாயில் அவருக்கு நோய் முற்றும் குணமாகிவிட்டது. வெகு காலமாகக் கல்யாணம் ஆகாமலிருந்த அவருடைய மகளுக்குக் கல்யாணமும் நடந்தது.

## குழந்தைப் பேறு

ஸ்டேட் பாங்கு அதிகாரி ஒருவருக்கு கல்யாணமாகி பதினெட்டு வருடங்கள் ஆனபிறகும் குழந்தை பிறக்கவில்லை. அவருடைய மனைவி சுவாமிஜீயிடம் வந்து தனது குறையைச் சொல்லிக்கொண்டாள். சுவாமிஜி, முதல் வியாழக்கிழமையன்று விபூதி கொடுத்து தொடர்ந்து ஏழு வியாழக்கிழமைகள் வரச் சொன்னார். அந்த அம்மாள் அப்படியே ஆஜரானாள். ஏழாம் வியாழக்கிழமை சுவாமிஜி அவளுக்கு ஒரு விபூதி பொட்டலம் கொடுத்து ஜாக்கிரதையாக கூடவே வைத்திருக்கும்படி சொன்னார். பாபாவின் அருளால் 13 மாதங்களுக்குப் பிறகு ஆண் குழந்தை பிறப்பான் என்றும் கூறினார். அப்படியே அவளுக்கு கல்யாணம் ஆன இருபது வருடங்களுக்குப் பிறகு குழந்தை பிறந்தது.

## துஷ்டர்களை தண்டித்து சிஷ்டர்களைக் காத்தல்

ஒருசமயம் ஒரு கம்பெனி மானேஜர், பாபாவுடைய கைங்கரியத்துக்கென்று சுவாமிஜி அவர்களுக்கு நூறு ரூபாய் செக் அனுப்பினார். அதைக் கையில் வாங்கியவுடன் சுவாமிஜீக்கு ஏதோ சந்தேகம் தட்டியது. அவர் செக்கை பாபாவின் பாதங்களில்

வைத்து உத்தரவு தரும்படி வேண்டினார். ஏற்றுக்கொள்ள வேண்டாமென்ற சூசகம் கிடைத்தது. அவர், உடனே செக்கை கம்பெனி மானேஜருக்குத் திருப்பி அனுப்பிவிட்டார். செக்கை ஏன் திருப்பி விட்டீர்கள் என்று மானேஜர் கேட்டார். "பாபா ஏற்றுக்கொள்ள வேண்டாமென்றார்" எனக் கூறினார் சுவாமிஜி. அதோடு, "நீங்களே பாபாமுன் திருவுளச் சீட்டுப் போட்டுப் பாருங்கள்" என்றும் கூறினார். மானேஜர் பாபாவுடைய படத்தின் முன் சீட்டுப் போட்டுத் தம் மனைவியை எடுக்கச் சொன்னார். 'வேண்டாம்' என்ற சீட்டு தான் வந்தது.

அந்த மனிதர் பயந்து நடுநடுங்கி சுவாமிஜியிடம் வந்து, "நான் வேலையில் மேல் பதவி பெற முயன்று கொண்டிருக்கிறேன். பாபாவின் அநுக்கிரகத்தை விரும்பிப் பூஜைச் செலவுக்காக இந்த நூறு ரூபாயை அனுப்பினேன். பாபா ஏன் மறுத்து விட்டாரோ தெரியவில்லையே!" என்று விண்ணப்பித்துக் கொண்டார். உடனே சுவாமிஜி "அந்தப் பதவிக்கு வர முயலுகிறவர்களுள் உன்னைவிடத் தகுதி உள்ள யாரேனும் இருக்கிறார்களா?" என்று கேட்டார். தம்மைவிட அதிக சர்வீஸ்உள்ள ஒருவர் இருக்கிறதாக அவர் ஒப்புக் கொண்டார். "நியாயமாக மேல் பதவிக்கு உன்னைவிடத் தகுதியுள்ளவரைத் தள்ளிவிட்டு, அந்தப் பதவியை எனக்குக் கொடுக்க வேண்டும் என்று கேட்டு, பாபாவுக்கு நூறு ரூபாய் லஞ்சம் தர நினைத்தாய் அல்லவா?" என்று கண்டித்தார் சுவாமிஜி.

அந்த மானேஜர் தன் தவற்றை உணர்ந்து சுவாமிஜி முன்பாக சாஷ்டாங்கமாக வணங்கினார். தம்மை மன்னிக்கும்படிக் கோரினார். "நியாயம், தருமம், சத்தியம் இவற்றுக்கு விரோதமான செயலுக்கு பாபா என்றும் ஊக்கம் கொடுக்க மாட்டார். அது போன்ற முயற்சிகளுக்கு உதவ மாட்டார்." என்றார் சுவாமிஜி. அந்த மானேஜர் வெட்கம் அடைந்து திரும்பிச் சென்றார்.

## உத்தியோகஸ்தர்களுக்கு உபகாரம்

பாதுகாப்புப் படை சார்ஜன்ட் ஒருவருக்கு வேலை போய் விட்டது. அவர்மேல் சில குற்றச் சாட்டுகளும் ஏற்பட்டன, குற்ற விசாரணை மூன்றாண்டுகள் நீடித்தது. அந்த சார்ஜண்டு விசாரணை தொடங்கியவுடனே சுவாமி கேசவய்யாஜியைத் தரிசித்து நடந்தவற்றையெல்லாம் சொன்னார். "உனக்குப் பயமேதுமில்லை உன்மேல் சுமத்திய குற்றங்கள் ருஜுவாகாததால் உனக்குத் தண்டனை எதுவும் கொடுக்காமல் விடுதலை செய்து விடுவார்கள்; பார்" என்று சுவாமிஜி சொன்னார். கடைசியில் அப்படியே நடந்தது.

ஒரு பக்தர் வேலைக்கு மனுச் செய்திருந்த தம் மகனை சுவாமிஜி யிடம் அழைத்துக் கொண்டு வந்தார். "வேலை கிடைக்கும்படி ஆசீர்வதிக்கவேண்டும்" என்றார். சுவாமிஜி அவர்களுக்கு விபூதி கொடுத்துத் தந்தை விரும்பியபடியே மகனை ஆசீர்வதித்தார். அந்த இளைஞனுக்கு வேலை கிடைத்ததோடு பயிற்சிக்காக ரஷ்யாவுக்கு அனுப்பவும் அரசாங்கம் அவனைத் தேர்ந்தெடுத்தது.

நடுத்தரக் குடும்பத்தினர் ஒருவர் வருமானம் போதாததால் பட்டணத்தில் வாழமுடியாமல் துன்புற்று சுவாமி கேசவய்யாஜீ யிடம் போனார். "பாபா நிச்சயமாக உனக்கு அருள் செய்வார்; நீ கவலைப்பட வேண்டாம்; பயப்படாதே" என்று சுவாமிஜீ அவருக் குத் தைரியம் சொன்னார். அவருக்குப் படிப்படியாக வருவாய் உயர்ந்து குடும்பமும் வசதி பெற்றது. அமைதியும் சுகமும் அவரை வந்தடைந்தன.

## கோர்ட் விவகாரங்களில் நியாயம் வழங்குதல்

குண்டூர் மாவட்டத்தின் கிராமப் பஞ்சாயத்து அங்கத்தினர் ஒருவர் ஸ்ரீ கேசவய்யாஜீயிடம் வந்து, 'தலைவர் பதவிக்காக நடக்கும் தேர்தலில் வெற்றி பெற இடமுண்டா?' என்று கேட்டார். "நீ நிச்சயம் ஜெயிப்பாய்; உனக்கு வெற்றி உண்டாகும்" என்று ஆசீர் வதித்து சுவாமிஜீ அவருக்கு விபூதி கொடுத்தார். அவர் தேர்தலில் வெற்றியடைந்தார். ஆனால் அந்தத் தேர்தலைப்பற்றிக் கோர்ட்டில் வழக்கு நடந்தது. அப்படியும் வழக்கு இவருடைய வெற்றியை ஊர்ஜிதம் செய்தது.

பெனுகொண்டா சப்ரிஜிஸ்திரார் அலுவலக குமாஸ்தாவான ஸ்ரீ வி. கிருஷ்ண ராவ் இப்படி எழுதுகிறார். ஸ்ரீ எஸ். பி. கேசவய்யா 1941-ஆம் ஆண்டு ஏப்ரல் 7-ஆந் தேதியன்று இங்கே வந்தார். அன்றைக்கே அவர் எங்கள் வீட்டில் சாயிபாபா பூஜை செய்தார். எனது மகனுக்கு விபூதி கொடுத்தார். அவன் பன்னிரண்டு ஆண்டு களாக ஆஸ்துமா நோயால் கஷ்டப்பட்டான். ஸ்ரீ கேசவய்யா எங்கள் வீட்டில் பூஜை செய்து விபூதி கொடுத்தபிறகு அவனது உடல் நன்றாகத் தேறிவிட்டது. இப்பொழுது மூன்று வேளை சாப்பிட முடிகிறது. உடலில் ரத்தம் ஊறி பலமாகவும் இருக்கிறான். அவ னும் தினந்தோறும் பாபா பூஜை செய்கிறான். நானும் இப்பொழுது தாள் தவறாமல் பூஜை செய்து வருகிறேன்.

("ஸாயி ஸுதா" 1941, ஜுலை)

## "எனக்கு நீதான் புகல்"

ஸ்ரீவேதாந்தம் நஞ்சுண்ட ரெட்டி (துலமர்லாவிலிருந்து) இப்படி எழுதியிருக்கிறார். "சமீபத்தில் நான் பொறுக்கமுடியாத பல் வலிக்கு ஆளானேன். பல வைத்தியங்கள் செய்தும் பயனில்லாததால் கடைசியில் பல்லைப் பிடுங்கிக் கொண்டேன். அந்தப் பல் உடைந்து எயிற்றில் ஒரு பகுதி தங்கிவிட்டது. இதனால் கீழ்த் தாடை மிகவும் இம்சைச் கொடுத்தது. அப்பொழுது நான் பெனுகொண்டாவுக்குப் போயிருந்தேன். அங்கே நண்பர்கள் சிலர், சாயி பாபா நோயைத் தீர்த்துவிடுவார் என்றும் சுவாமிஜியைப் பார்க்கும்படியும் யோசனை கூறினார்கள். அப்படியே நான் சுவாமிஜியை தரிசித்தேன். அவர் என்னிடம் இப்படிச்சொன்னார்: "மூன்று வாரங்களுக்குள் உங்கள் நோய் குணமாகுமென்றும், மூன்று வியாழக்கிழமைகள் பூஜைக்கு ஆஜராகவேண்டி யிருக்குமென்றும் பாபா சொன்னார்." நான் அவர் சொற்படி மூன்று வியாழக்கிழமைகள் பூஜைக்கு ஆஜரானேன். எனக்கு நோய் நீங்கி நிம்மதி கிடைத்தது. சுவாமிஜி எனக்கு விபூதி கொடுத்து, பாபாவின் அருளை என்னிடம் பரவும்படி செய்தார். சில நாட்களில் உடைந்த பல் எயிற்றிலிருந்து வெளியே வந்துவிட்டது. டாக்டர்கள்கூட ஆச்சரியப்பட்டார்கள். படிப்படியாகத் தாடை வீக்கமும் குறைந்துவிட்டது.

—ஸாயி ஸுதா 1941 ஆகஸ்ட்.

## பலருக்குப் பல லாபங்கள்

1942—ஜனவரி ஸாயி ஸுதாவில் சாயி பக்த கேசவய்யாஜி காரணமாக பாபாவின் அருளுக்குப் பாத்திரமான பக்தர்களுடைய அனுபவங்கள் சில பிரசுரமாயின. அவற்றை குத்தி வக்கீலும், பாபாவின் பக்தருமான ஸ்ரீ எஸ். சுப்பாராவ் சேகரித்தார்.

## D. V. சலபதிராவ்

இவர் கிராம முன்சீப். இவர் கிராமத்து வெட்டியானுடன் சேர்ந்து ஓர் எருமைக் கன்றுகுட்டியைத் திருடியதாக இவர் மீது சப்மாஜிஸ்திரேட் கோர்ட்டில் வழக்குப் போட்டார்கள். வழக்கு விசாரணை நடந்து கொண்டிருந்தபோது அவர் பெனுகொண்டாவுக்கு வந்து சுவாமிஜி செய்யும் பூஜைக்கு ஆஜரானார். தன்மேல் நடக்கும் வழக்கு என்ன ஆகுமென்று சுவாமிஜீயைக் கேட்டார். 1941—அக்டோபர் வாக்கில் தீர்ப்புக்காக வழக்கு வாய்தா போட்டால் நீ குற்றமற்றவன் என தீர்ப்புக் கிடைக்கும்' என்று சுவாமிஜி கூறினார், ஸ்ரீ சலபதிராவின் அதிர்ஷ்டம் காரணமாக தீர்ப்புக்காக

வாய்தா அக்டோபரிலேயே விழுந்தது. சுவாமிஜீ சொன்னபடியே ஸ்ரீ சலபதிராவ் குற்றமற்றவர் என கோர்ட்டில் தீர்ப்பு வழங்கினார்கள்.

மெர்க்காரா தாலுகாவைச் சேர்ந்த எர்ர பொம்மனஹள்ளி கிராமத்தினராகிய ஸ்ரீ அனுமந்த ரெட்டி ஸ்ரீ கேசவய்யாஜீயின் பூஜைக்கு வந்து பெனுகொண்டா ஜில்லா முன்சிப் கோர்ட்டில் நடந்துகொண்டிருக்கும் தம் வழக்கின் முடிவு என்னவாகுமென்று கேட்டார். ஸ்ரீ அனுமந்த ரெட்டி பூஜையறையில் பாபாவுக்கு சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து எழுந்திருந்தபோது, "வழக்கு உனக்கு சாதகமாகவே முடியும்" என்று சுவாமிஜீ சொன்னார். பிறகு அவ்வாறே நடந்தது.

இந்துப்பூர் தாலுகாவைச்சேர்ந்த ஸ்ரீ டி. அனுமந்தராவ் ஓரிடத்தில் வேலை செய்துகொண்டிருந்தார். அவருக்கு வேலை போய்விட்டது. அவர் ஒரு வியாழனன்று சுவாமிஜீயின் பூஜைக்கு ஆஜராகி தமக்கு வேலை போன சங்கதியைச் சொன்னார். அவர் அவருக்குச் சொன்ன பதில், "நீங்கள் தொடர்ச்சியாக மூன்று வியாழக்கிழமை பூஜைக்கு வாருங்கள். இருபத்தொரு நாட்கள் வரையில் ஒரு நாய்க்கு சாதம் போடுங்கள். 17ஆம் நாள் ஒரு கருப்பு நாய் சாப்பிட வந்தால் உங்களுக்குப் போன வேலையாவது கிடைக்கும். அல்லது மூன்று மாதத்திற்குப் பிறகு புது வேலையாவது கிடைக்கும்". ஸ்ரீ அனுமந்தராவ் ஸ்ரீ கேசவய்யாஜீ சொன்னபடியே செய்தார். அப்படியே அவருக்குத் திரும்பவும் வேலை கிடைத்தது.

## ஸ்ரீ ஆர். சீனிவாசன், சென்னை

இவர் இரண்டு வருடங்களாக வேலைக்காக முயன்று வந்தார் சுவாமிஜீக்கு 1941—அக்டோபர் மாதத்தில் ஒரு கடிதம் எழுதினார். 'உனக்கு சீக்கிரத்திலேயே வேலை கிடைக்கும்' என்று சுவாமிஜீ எழுதிய கடிதமும், உத்தியோக நியமன உத்தரவும் ஒரே சமயத்தில் கிடைத்தன.

ஸ்ரீ அல்லா பக்ஸ் அதோணியில் ஒரு வியாபாரி. இவருடைய மகன் 1941—செப்டம்பரில் இண்டர்மீடியட் பரீட்சை எழுதினான். தம் மகன் பரீட்சையில் தேறுவானா? என்று ஸ்ரீ கேசவய்யாஜீக்கு எழுதினார். "தேறுவான்" என்று சுவாமிஜீ பதில் எழுதினார். அப்படியே அந்தச் சிறுவன் பரீட்சையில் தேறிவிட்டான்.

தாத்பத்திரியைச் சேர்ந்த ஸ்ரீ வை. வெங்கட சுப்பையாவின் மனைவி கர்ப்பமாக இருந்தாள். ஏழாம் மாதம் தன் பிறந்தகமாகிய

நூந்துபூருக்கு அவளை அழைத்துக்கொண்டு போகும்போது அவள் தாய் அவளை பெனுகொண்டாவுக்கு அழைத்து வந்தாள். தாயும் மகளும் வியாழக்கிழமை பூஜைக்கு ஆஜரானார்கள். சுவாமிஜி வரிசையாக எல்லோருக்கும் தீர்த்தம் கொடுத்து வந்தார். அந்தப் பெண்ணுக்குத் தீர்த்தம் கொடுக்கும்போது, 'பிரசவ காலத்தில் நீ அதிகமாகக் கஷ்டப்பட வேண்டியிருக்கும் அப்பொழுது பாபாவை நினைத்துக்கொள்; சுகப் பிரசவம் ஆகும், ஆண் குழந்தை பிறக்கும்' என்று சொன்னார். அப்படியே பிரசவ சமயத்தில் நோய் அதிகமாக இருந்தபோது பாபாவைத் தியானித்து சுகமாக ஆண் குழந்தையைப் பெற்றாள்.

பெனுகொண்டா பாடசாலையில் உபாத்தியாயராக இருந்தார் ஸ்ரீ ஆர். சுவாமிநாதன். சேலத்தில் இவருடைய மதனிக்கு மிகவும் ஆபத்தென்று செய்தி வந்தது. அங்கே போகுமுன் பாபாவின் தீர்த்தமும் விபூதியும் பெற்றுக்கொண்டு போக அவர் ஸ்ரீ கேசவய்யாஜீயிடம் 1941—நவம்பர் 15-ஆம் தேதியன்று காலை 9 மணிக்குப் போனார். "தீர்த்தம் பிரசாதம் இவற்றால் உபயோகம் இருக்காது" என்று சுவாமிஜீ சொன்னார். அவர் சொன்னபடியே சுவாமிநாதன் சேலத்தை அடைந்தபோது அவர் மதனி இறந்துவிட்டாள். (இப்படியே சுவாமிஜீ சூசகமாக வரப்போகும் துக்க நிகழ்ச்சிகளைக் கோடிகாட்டிய சந்தர்பபங்கள் பல உள்ளன.)

## பேய் பிசாசுகள் விலகுதல்

"ஸாயி ஸுதா" செப்டம்பர் இதழில், கத்தியவார் ஜில்லா ஜெய்ப்பூர் வாசியான ஸ்ரீ லாலூ சந்த் ஜலாப் சந்த் என்பவர் தம் அனுபவத்தை விளக்கியிருக்கிறார். "சென்ற பத்தொன்பது ஆண்டுகளாக எனது தாயை ஏதோ காற்று பற்றிக்கொண்டது. அடிக்கடி வலிப்பு மாதிரி வரும். டாக்டர்கள் அதை 'ஹிஸ்டீரியா' என்றார்கள், சிலர் ஏதோ கிரகக் கோளாறு என்றார்கள். அவளுடைய நோயின் காற்று வீட்டிலுள்ள குழந்தைகள் மேலும் வீசத் தொடங்கியது. நான் பலரைக் கேட்டேன். 1941-ல் நான் கல்கத்தாவுக்குப் போனபோது அங்கே மீனாட்சி விலாஸ் ஓட்டலில் ஸ்ரீ சாயி பாபாவின் படத்தைப் பார்த்தேன். பாபாவைப் பற்றி விசாரித்தேன். வீட்டில் பாபாவின் படத்தை வைத்துக் கொள்ளும்படியும், பாபா 'லாக்கெட்டை' அணியும்படியும் சிலர் யோசனை சொன்னார்கள். அப்படியே செய்தேன். எனது தாயாருக்கும் ஒரு பாபா லாக்கெட்டைக் கட்டினேன். அதுமுதல் எனது தாயின் நோய்—அவளைப் பிடித்திருந்த தீரா நோய்—படிப்படியாகக் குறைந்து வந்தது. பிறகு பெனுகொண்டாவில் சப்ரிஜிஸ்திராராகவிருந்த ஸ்ரீகேசவய்யாஜீயை

ஆலோசனை கேட்டேன். அவர் என் தாயை வியாழக்கிழமையன்று உபவாசம் இருந்து இரவில் பாபாவுக்குப் பூஜை செய்து, நிவேதனத்தைச் சாப்பிடும்படி யோசனை சொன்னார். சில ஏழைகளுக்கும் வியாழனன்று இரவு உணவு போடும்படி கூறினார்.

சென்னை மந்தைவெளியிலிருந்து ஸ்ரீ எச். வி. சுப்பையா 1942—அக்டோபர் 28-ஆம் தேதியன்று "ஸாயி ஸுதாவில்" இப்படி எழுதியிருக்கிறார். "கிட்டத்தட்ட ஒன்றரை வருட காலமாக என் மனைவி மாதவிடாய் சம்பந்தமான நோயால் அவதிப்பட்டுக்கொண்டிருந்தாள். நாங்கள் சாயி பக்த ஸ்ரீ கேசவய்யாஜீயைப் பார்த்து நோயைப்பற்றித் தெரிவித்தோம். அவர் வியாழக்கிழமை உபவாசமிருந்து சாயி பாபாவைப் பூஜிக்கும்படி சொன்னார். தினந்தோறும் மற்றப் பூஜைகளுடன் சாயிபாபா பூஜையும் செய்கிறோம். இரண்டு மாதங்களில் எனது மனைவியின் நோய் முழுவதும் குணமாகி மாதவிலக்கு சரியாக ஏற்பட்டுச் சௌக்கியமாக இருக்கிறாள்.

## நியாயத்தின் காவலர்

அனந்தபுரத்து வக்கீல் ஸ்ரீ பி.எல். கிருஷ்ணராவ், 1942—நவம்பர் "ஸாயி ஸுதாவில்" இப்படி எழுதியிருக்கிறார். சமீபத்தில் என் மேல் கிரிமினல் சம்பந்தமான வழக்கு ஒன்று நடந்தது. அதற்காக மிக விரைவில் சிறிது பணம் சேர்க்க வேண்டியிருந்தது. அது என்னால் முடியாத காரியம். பிறகு சாட்சிகளைக்கொண்டு நடந்தது நடந்தபடி எனது சார்பில் சொல்லவைக்கும்படி நேர்ந்தது. தேவையான பணத்தில் நாலில் ஒரு பங்குகூட என்னால் சேர்க்க முடியவில்லை. உறவினரும் நண்பர்களும் தலைமறைவானார்கள். எனது ஆப்த நண்பர்களும் எனக்குப் பின்னால் விரோதமாக வேலை செய்து வந்தார்கள் எனது கட்சிக்காரர்களை மிரட்டினார்கள். முதலில் வாக்குமூலத்துக்கு விரோதமாக என்ன சொன்னாலும் அவர்கள்மேல் :வழக்கு வரும் என்று அவர்களை எச்சரித்தார்கள்.

இந்த வழக்கினால் நான் ஒழிந்துவிடுவேன் என்று எல்லோரும் எண்ணினார்கள். நானும் அப்படித்தான் நினைத்தேன். ஆதரவற்ற இந்தநிலையில் வக்கீல் நண்பர்கள் இருவர் சாயிபாபாவின் உதவியை வேண்டும்படி யோசனை சொன்னார்கள். உடனே பெனுகொண்டாவுக்குப் போய் ஸ்ரீ சாயிபக்த கேசவய்யாஜீயைத் தரிசிக்கச் சொன்னார்கள். நான் பெனுகொண்டாவுக்குப் போய்க் குரு கேசவய்யாஜீயைத் தரிசித்தேன். அவர் எனக்கு மிகச் சாதாரணமான வழியைக் காண்பித்துப் புனிதமாக அந்த வழியில் நடந்து கொள்ளும்படிக் கூறினார். பாபாவிடம் முழு நம்பிக்கையும் வைத்துக் குருஜீ சொன்ன

படி செய்து வந்தேன். நான் பாபாவைப் பூஜிக்கத் தொடங்கிய மூன்று மாதங்களில் நிலைமை எனக்குச் சாதகமாகிவிட்டது. என் கட்சிக் காரர்கள் கோர்ட்டில் சாட்சியம் சொன்னபோது எதிர் பாராத வகையாக என் வாதத்தை ஒப்புக்கொண்டார்கள். என் மேல்வந்த வழக்கை கோர்ட் தள்ளிவிட்டது. நான் கௌரவமாகத் தப்பினேன். எல்லாம் சாயிபாபாவின் அநுக்கிரகம்தான். (இவர் சாயிவிலாசம் எனும் பத்திய காவியத்தை இயற்றி சுவாமி கேசவய் யாஜீக்குச் சமர்ப்பணம் செய்திருக்கிறார்.)

## சாயி அவதாரம்

ஒரு பக்தை 1942—டிசம்பர் "சாயி ஸுதாவில்" தன் அனுப வத்தை இப்படி எழுதுகிறார். 'நான் பணவசதியுள்ள நல்ல வமி சத்தில் பிறந்து எங்களுக்குச் சமமான இடத்திலேயே வாழ்க்கைப் பட்டு சுகமாகக் குடித்தனம் செய்து கொண்டிருந்தேன். அப்போது சிறிது சிறிதாக வறுமையும் நோயும் எங்களை வருத்தத் துவங்கின. நான் ஏறக்குறைய பன்னிரண்டு வருடங்கள் க்ஷயரோகத்தோடு போராடிக் கொண்டு பெரும்பாடு பட்டேன். 1941-டிசம்பர் மாதத் தில் சாகும் நிலையில் இருந்தேன். அப்போது ஒரு மகான் எங்கள் வீட்டுக்கு வந்து பாபாவின் படத்தை வைத்துப் பூஜிக்கும்படியும் என் நோய் விரைவில் போய்விடும் என்றும் சொன்னார். எனக்கு அப்பொழுது முதல் பாபாவிடம் பக்தி ஏற்பட்டது. என் கணவர் பாபா படம் வாங்கி வந்தார். படம் வந்த தினத்திலிருந்து எனக்கு ஒருவகையான தைரியம் உண்டாயிற்று. நோயால் நான் படும் துன்பம் குறைந்து வந்தது. என் கணவர் சீரடி சாயி சமாஜத்துக்கு எழுதி பாபாவின் விபூதி தருவித்தார்.

இதற்கிடையில் ஸ்ரீபாபாவின் தலைசிறந்த பக்தராகிய ஸ்ரீ.பி.வி. நரசிம்மசாமி என்னைப் பார்க்க வந்தார். அவர் எனக்கு பாபாவின் விபூதி கொடுத்து ஒரு சுலோகமும் உபதேசித்தார். அந்தச் சுலோகத் தைப் பாராயணம் செய்து விபூதி தரித்து வருகிற நோயாளிகளுக் கும் அந்தச் சுலோகத்தை ஜபித்து விபூதி கொடுத்தால் மற்றவர்கள் நோய்களெல்லாம் தீர்ந்துவிடும் என்றும் கூறினார். அவர் ஒரு பழம் கொண்டு வந்திருந்தார். அதைத் தின்னும்படி சொன்னார். நான் ஒரு சொட்டுத் தண்ணீர் கூட விழுங்கமுடியாத நிலையில் இருப்ப தாகச் சொன்னேன். "பாபாவின் ஆணை அம்மா, தின்று பார். இது தான் உனக்கு மருந்து" என்றார். அவ்வளவு பலவீனமான நிலை யிலும் நான் மெதுவாக அதைத் தின்றேன். சில நாட்களுக்கெல் லாம் சிறிது பால் குடிக்கவும் சிறிது நேரம் எழுந்து உட்காரவும் நகரவும் என்னால் முடிந்தது.

இந்த சமயத்தில் ஸ்ரீபாபாவின் பிரிய பக்தராகிய ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாஜீ இவ்வூருக்கு வந்தார். அவரைத் தரிசித்து பாபாவின் பிரசாதம் பெற்றுக் கொள்ள ஆசைப் பட்டேன். எங்கள் வீட்டில் எல்லோரும் படுக்கையிலேயே இருந்து கொண்டு தினந்தோறும் யமனேடு போராடிக் கொண்டிருக்கும் நான் அவரைப் பார்க்கும் நிலையில் இல்லை என்றும் அவர்களே பிரசாதம் வாங்கி வந்து தருவதாகவும் சொன்னார்கள். "பாபா, இவ்வளவுதானா உனது தயவு? உன் தரிசனம் பெறவும் உன் பக்தன் பூஜை செய்வதைப் பார்க்கவும் எனக்கு அதிர்ஷ்டமில்லை" என்று கண்ணீர்விட்டு முறையிட்டேன். உடனே எங்கள் வீட்டார் என்னை அழைத்துச் செல்ல உடன் பட்டார்கள். ஸ்ரீகேசவய்யாஜீயின் வீட்டுக்கு ரிக்ஷாவில் சென்று வாயிலில் ரிக்ஷாவை நிறுத்தி, என்னைக் கேசவய்யாஜீ பூஜை செய்யும் இடத்துக்கு எடுத்துக் கொண்டு சென்றார்கள். பாபாவின் எதிரில் உட்கார வைத்தார்கள். ரிக்ஷா மெதுவாகவே சென்றதென்றாலும் எனக்கு அந்த அதிர்ச்சியே படபடப்பைக் கொடுத்து மயக்கம் வரும்போல் இருந்தது. பாபாவின் எதிரில் உட்கார்ந்ததுமே இம்சையெல்லாம் தீர்ந்து விட்டதுபோல் தோன்றியது. ஸ்ரீகேசவய்யாஜீ எனக்கு விபூதி கொடுத்து மூன்று நாட்கள் பூஜைக்கு வரும்படி சொன்னார். அவ்வாறே சென்றேன். இரண்டாம் நாள் என்னை பாபாவின் முன் எழுந்திருந்து நிற்கும்படிச் சொன்னார். ஜன்னலைப் பிடித்துக் கொண்டு நின்றேன். மூன்றாம் நாள் வாயிலிலிருந்து பூஜை அறைக்கு நானே நடந்து போனேன். என்ன ஆச்சரியம்! ஸ்ரீபாபாவின் அருளால் சிறிது சிறிதாக நோய் மறைந்தது. எனது முகத்தில் பழைய களை வந்தது. அதுமுதல் காலையில் எழுந்ததும் பல் தேய்த்தவுடன் பாபாவின் விபூதியை உட்கொண்டபின்பே வேறு உணவை உண்கிறேன்.

ஸ்ரீபாபாவின் விபூதியால் பல நோய்கள் குணமாயின. என் கணவர் கொடிய இருமலால் அவதிப்பட்டார். பாபா மந்திரத்தை ஜபித்து விபூதி கொடுத்தேன். உடனே இருமல் நின்று விட்டது. எனது தகப்பனார் காய்ச்சல் மிகுதியால் களைத்து வருந்தினார். அவருக்கும் அப்படியே பாபா விபூதியைக் கொடுத்தேன். காய்ச்சல் நின்று விட்டது.

## தம்பியின் அநுபவங்கள்

அனந்தப்பூர் ஜில்லா, பாமிடியிலிருந்து ஸ்ரீ S. B. சம்பத் குமார் தம் சொந்த அனுபவங்களை 1943—ஜனவரி ஸாயி ஸுதா இதழில் எழுதியிருக்கிறார். ஸ்ரீ சம்பத் குமார் சுவாமிஜியின் தம்பி. தற்சமயம் ஜில்லா பரிஷத் உயர்நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியராக இருக்கிறார்.

"நம் முன்வினைப் பயன் ஒன்றைத் தவிர வேறு எதிலும் எனக்கு நம்பிக்கை இல்லை. கர்மாவை அனுபவித்தே தீர வேண்டும். அதற்குப் பரிகாரம் இல்லை என்பது எனது கருத்து. ஆனால் சமீபத்தில் அனந்தப்பூர் வக்கீலான ஸ்ரீ. பி. ஆர். கிருஷ்ணராவ் இயற்றிய சாயிவிலாசத்தைப் [ஸ்ரீ கிருஷ்ணராவின் அனுபவங்களை ஏற்கனவே வாசகர்கள் படித்திருக்கிறார்கள்] படித்தபின், எனக்கு சாயிபாபாவிடம் நம்பிக்கை வந்து விட்டது. நான் அந்த நூலை மிக்க அக்கறையுடன் படித்தேன். இப்போது நான் மிக நல்ல நிலையில் இருக்கிறேன்.

"இரண்டு மாதங்களுக்கு முன் ஸ்ரீ B. S. ராமலிங்கையா என்னும் எனது நண்பருக்கு காலரா கண்டது. அவர் மிக ஆபத்தான நிலைமையில் இருந்தார். டாக்டர்கள் கையை விரித்து விட்டார்கள். நான் பாபாவின் புகைப்படம், லாக்கெட், விபூதி எல்லாவற்றையும் கொண்டு போனேன். விபூதியைக் கொடுத்து லாக்கெட்டை அவர் கழுத்தில் கட்டிப் படத்தை எதிரே வைத்தேன். முடிந்த போதெல்லாம் பாபாவின் படத்தைப் பார்க்கச் சொன்னேன். மூன்றும் நாளிலிருந்து சிறுநீர் இறங்கியது. மெள்ள மெள்ள நோயின் தீவிரம் குறைந்தது. இப்பொழுது அவர் உடல் நிலை நன்றாகக் குணமாகி விட்டது. ஒவ்வொரு வியாழக்கிழமையன்றும் அவர் பாபாவுக்கு பூஜை செய்கிறார்.

ஸ்ரீராமலிங்கையாவுக்குக் குணமான பதினைந்து நாட்களுக்குப் பின் என் அண்ணாவின் பெண் சரஸ்வதிக்கு இந்த நோய் தொற்றிக் கொண்டது. அவள் ஏழு வயதுக் குழந்தை. ஒருநாள் இரவு அவளுடைய நிலைமை மிகவும் மோசமாக இருந்தது. அவளுக்கு பாபாவின் விபூதியைக் கொடுத்து பாபாவின் லாக்கெட்டைக் கட்டினேன். காலையில் நோய் குறைந்தது.

"என்னிடம் அதிருப்திக்கொண்ட எனது கீழ் உத்தியோகஸ்தர்கள் மேலிடத்துக்கு என்மீது புகார் செய்து பிராது அனுப்பியிருந்தார்கள். எனக்கு அந்த விஷயமே தெரியாது. எனது மேலதிகாரி மட்டும் அந்தக் குற்றச்சாட்டுக்களை விசாரிக்க வேண்டுமென்று நினைத்தாராம். அவர் அனந்தப்பூருக்குத் திரும்பிப் போகும் பொழுது வழியில் பாமிடியில் இறங்கி ரகசியமாக விசாரணை நடத்தி முடிந்தப்பின், எனது வேலையையும் நாணயத்தையும் எனது விரோதிகளின் எதிரிலேயே புகழ்ந்தார். இதெல்லாம் பாபாவின் தயவுதான்.

"எனது மைத்துனிக்கு மலேரியா வந்தது. மூன்று நாட்களுக்கு முன் உடல்நிலை மோசமாகிவிட்டது. பாதி ராத்திரியில் வீட்டில்

இருந்த குழந்தைகள், பெரியவர்கள் எல்லோரும் பெருங் குரல் கொடுத்து அழத் தொடங்கினார்கள். நான் பக்கத்தறையில் படுத்துக் கொண்டிருந்தேன். சட்டென்று எழுந்துவந்தேன் அவளைப் பார்த்தால், 'இனிப் பிழைக்கமாட்டாள்' என்றே தோன்றியது. உடனே நான் பூஜையறைக்குச் சென்று சாயி பக்த ஸ்ரீ கேசவய்யாஜீயிடமிருந்து வாங்கிவந்திருந்த விபூதியைக்கொடுத்து, பாபாவின் லாக்கெட்டைக் கழுத்தில் கட்டினேன். அவளுக்கு ஆரோக்கியத்தை அருளுமாறு பிரார்த்தித்துக்கொண்டு பாபா சஹஸ்ர நாமமும் படித்தேன். ஒரு மணி நேரத்திற்குப் பிறகு அவள் உடலில் அசைவுக் கண்டது. சுய நினைவு வந்தது. அவளுடைய நிலைமை இன்னும் மோசமாக இருந்தாலும் நோய் இறங்குமுகம் கண்டது.

' இந்த அனுபவங்களையெல்லாம் பெற்ற பிறகு சாயி பாபா பகவானுடைய அவதாரமே என்றும் தம் உண்மையான பக்தர்களைக் காப்பாற்றுகிறார் என்றும் எனக்கு முழு நம்பிக்கை ஏற்பட்டது.

மைசூர் ராஜ்ஜியத்திலிருந்து சாயி பக்த ஸ்ரீ கேசவய்யாஜீ பூஜைக்குப் பலர் வந்துகொண்டிருந்தார்கள். அவர்கள் எல்லோரும் சாயி பாபாவின் பக்தர்கள் ஆகிவிட்டார்கள். ஸ்ரீ கேசவய்யாஜீ பெனுகொண்டாவில் ஏழு ஆண்டுகள் இருந்ததினால் ஒருபுறம் ஆந்திர ஜில்லாக்களிலும் சிறப்பாக பாபா பக்தியைப் பரவச் செய்தார். ஸ்ரீ பி வீ. நரசிம்மசுவாமி, சாயிபாபாவின் இலக்கியத்தின் மீதே அதிக நோக்கம் செலுத்தி பல பகுதிகளில் உள்ளவர்களும் பாபாவை அறியும்படி செய்தார். சாயி பக்த ஸ்ரீ கேசவய்யாஜீ, பாபாவுடைய மகிமையை மக்களுக்கு எட்டச் செய்து அவர்கள் எல்லோரையும் பக்தர்களாகத் தயார் செய்தார். ஸ்ரீ நரசிம்ம சுவாமியின் மூலமாக பாபாவைப்பற்றி அறிந்துகொண்ட மக்கள், ஸ்ரீ கேசவய்யாஜீ வாயிலாக பாபாவை அனுபவித்தார்கள்; புரிந்து கொண்டார்கள்.

## ஆபத்துக்களில் அன்பும் ஆதரவும்

மைசூரைச் சேர்ந்த தொட்ட கூரு கோடிலிருந்து நிலச்சுவான்தாராகிய ஸ்ரீ டி. அசுவத்த நாராயண ராவ் 1945—மே மாதம் ஸாயி ஸுதாவில் இப்படி எழுதியிருக்கிறார்: "நானும் எனது மனைவியும் சிறிது காலமாகப் பல வகையிலும் கஷ்டப்படுகிறோம். எனது மாமனார் அரசாங்க உத்தியோகஸ்தர். அவர் ஒருநாள் எங்கள் வீட்டுக்கு வந்தார். நாங்கள் கஷ்டப்படுவதைப் பார்த்துவிட்டு சாயிபாபாவின் மகிமையைப்பற்றிச் சொன்னார். பெனுகொண்டா போய் சாயி பக்த ஸ்ரீ கேசவய்யாஜீயை தரிசித்து பாபாவுடைய

அருளைப் பெறுங்களென்று யோசனை சொன்னார். அதன்படியே நாங்கள் ஒரு வியாழக்கிழமை பெனுகொண்டாவுக்குப் போய் சுவாமிஜீயை தரிசித்தோம். நாங்கள் மிகவும் அதிர்ஷ்டசாலிகள், எங்கெங்கிருந்தோ நூற்றுக்கணக்கான மக்கள் சாயிபாபாவுடைய பூஜையைப் பார்த்து சுவாமிஜீயின் மூலமாக பாபாவின் அருளைப் பெற வந்துகொண்டிருந்தார்கள். நாங்கள் ஐந்து வருடங்களாகக் குடும்பம் நடத்தி வருகிறோம்; குழந்தைகள் பிறக்கவில்லை. எனது மனைவியின் உடல்நிலையும் அவ்வளவு சீராக இல்லை. நாங்கள் பூஜை யறைக்குப் போனவுடன் சுவாமிஜீ எனது மனைவிக்கு விபூதியளித்து ஐந்து மாதங்களுக்கு அதைக் கூடவே வைத்திருக்கும்படி சொன்னார். ஐந்து மாதங்களுக்கு முன்பே எனது மனைவியின் உடல் நன்றாகத் தேறிவிட்டது. அவள் கருவுற்றாள்; சுவாமிஜீ சொன்னபடியே ஆண் குழந்தை பிறந்தது.

"எனது மதனிக்குக் கீழே விழுந்ததால் கருச் சிதைந்து படுத்தப் படுக்கையானாள். நிலைமை மிகவும் ஆபத்தாக இருந்தது. ஒரு வியாழனன்று அவளை ஸ்ரீ கேசவய்யாஜியிடம் அழைத்துக்கொண்டு போனோம். அவர் விபூதிக்கொடுத்துப் 'பதினைந்து நாட்களில் எல் லாம் சரியாகிவிடும்' என்றார். அப்படியே அவள் இரண்டு வாரங் களில் முழு ஆரோக்கியமும் பெற்றாள்.

"எனது மனைவி சில நாட்களுக்குமுன் குழந்தை பெற்றாள்: குழந்தைக்கு உயிரில்லை. எனது மாமியார் அழுதுகொண்டே சாயி பக்த ஸ்ரீ கேசவய்யாஜி கொடுத்த விபூதியைக் கொண்டுவந்து குழந்தையின்மேல் தடவினாள். என்ன ஆச்சரியம்! ஐந்து நிமிடங் களில் குழந்தையின் கறுப்பு நிறம் முழுவதும் மாறி குழந்தை அழத் தொடங்கியது.

"என் மைத்துனர் ஜில்லா போர்டு மேஸ்திரியாக இருந்தார். மேல்பதவி கிடைக்கும்படி ஆசீர்வதிக்க வேண்டுமென்று சுவாமி ஜீயை வேண்டினார். 'ஐந்து மாதங்கள் பொறுத்துக்கொள்' என்று அவர் சொன்னார். ஐந்தாம் மாதம் முடியும் முன்பே அவரைத் தாற்காலிக ஓவர்ஸியராக மாற்றினார்கள்.

"எனது சகோதரி இரண்டு வருட காலமாகப் பொறுக்க முடி யாத வயிற்று வலியால் கஷ்டப்பட்டாள். அவளும் அவளுடைய கணவருமாக ஸ்ரீ கேசவய்யாஜீயைத் தரிசித்தார்கள். சுவாமிஜீ அவருக்கு விபூதி கொடுத்து மூன்று மாதங்கள் கூடவே வைத்திருக் கச் சொன்னார். தினந்தோறும் 1008 முறை சாயி பாபா நாம ஸ்மரணை செய்யச் சொன்னார். வீட்டிலிருக்கும் கடவுளுக்குத் தினந்

தோறும் ஏதாவது நைவேத்தியம் செய்துகொண்டிருக்க வேண்டுமென்ருர். அவள் அப்படியே செய்தாள். மூன்று மாத கெடுவுக்குள்ளேயே அவளுடைய நோய் முற்றிலும் போய்விட்டது. இப்போது நல்ல ஆரோக்கியத்துடன் இருக்கிருள்.

"எனது நண்பர் ஒருவர் பஞ்சாயத்து ஆபீஸில் குமாஸ்தாவாக இருக்கிருர். அவர் இலாகா பரீட்சைகளில் தேறவில்லையென்று அவருக்குப் பதவி உயர்வு கிடைக்கவில்லை. இந்தப் பரீட்சையில் தேறுவதற்கு அவருக்கு ஒரே ஒரு சந்தர்ப்பம்தான் இருந்தது. பெனுகொண்டாவுக்குப் போய் சுவாமிஜீயை தரிசிக்கச் சொல்லி நான் யோசனை சொன்னேன். ஒரு வியாழக்கிழமை அவர் சுவாமிஜீயை தரிசித்துத் தனது நிலைமையைச் சொல்லிக்கொண்டார். சுவாமிஜி அவருக்கு விபூதி கொடுத்துப் பரீட்சைக்குப் போகும் சமயத்தில் அதைக் கூடவே வைத்துக்கொள்ளச் சொன்ஞர். 'நீ பரீட்சையில் தேறுவாய்; மேல் பதவியும் கிடைக்கும்' என்ருர். எனது நண்பர் அவர் சொன்னபடியே செய்தார். பரீட்சையில் தேறிஞர்; மேல் பதவியும் கிடைத்தது."

—ஸாயி ஸுதா—1946 பிப்ரவரி

## உயிரைக் கொடுப்பவர்

தொட்டபெள்ளா புரத்திலிருந்து பலர் வந்து பாபாவுடைய அநுக்கிரகத்துக்குப் பாத்திரர்கள் ஆஞர்கள். 1947—நவம்பர் சாயி ஸுதாவில் தம் அனுபவங்களை வெளியிட்டிருக்கிருர்கள்.

முனிசிபாலிடி சங்க அங்கத்தினராகிய ஸ்ரீபெக்ளே சௌடப்பா: எனக்கு 20 வயதுள்ள மகன் இருக்கிருன். அவனுக்குத் திடீரென்று 'ப்யூபானிக் பிளேக்' ] வந்தது. டாக்டர்கள் அவன் பிழைக்கமாட்டானென்று சொன்ஞர்கள். நான் பாபாமேல் பாரத்தைப் போட்டு சாயி பக்த ஸ்ரீ கேசவய்யாஜீக்கு எழுதினேன். அவர் 'நோய் சரியாகிவிடும் என்றும் ஜாக்கிரதையாகக் கவனித்துக்கொள்ளும்படியும் சொல்லி விபூதியும் தீர்த்தமும் அனுப்பிஞர். விபூதியைத் தடவி தீர்த்தமும் கொடுத்தேன். கட்டிகள் ஆச்சரியமாக மறைந்துவிட்டன. அவன் குணமடைந்துவிட்டான்.

"எங்கள் முனிசிபாலிட்டி சங்கத் தேர்வில் சுவாமிஜீயை யோசனைக் கேட்டேன். அவர் சொன்னபடியே நடந்தது."

"ஸ்ரீ கே. சீத்தாராமப்பாவின் பேரன் 16 வயதில் வலிப்பால் கஷ்டப்பட்டான். அவனுடைய மூளைக்கூட சிறிது பழுதாகிவிட்டது.

சுவாமிஜீ இங்கே வந்தபோது அந்தச் சிறுவனைக் காண்பித்தார்கள். அவனை பெனுகொண்டாவுக்கு அழைத்து வரும்படி சொன்னார். சிறுவனை பெனுகொண்டாவுக்கு அழைத்துப் போனார்கள். சுவாமிஜி விபூதியும் தீர்த்தமும் கொடுத்தார். அவனுக்கு வலிப்பு வருவது நின்றுவிட்டது; உடல்நிலை நன்றாகிவிட்டது.''

''தொட்டபெள்ளா புரத்திலிருந்து ஸ்ரீ என். வெங்கடேச ஐயர் எழுதுகிறார்: சில வருடங்களாக எனக்கு ஒன்றுவிட்டு மறுநாள் காய்ச்சல் வரும். எத்தனை மருந்து சாப்பிட்டும் பிரயோஜனமில்லை. இனிமேல் சரியாகாதென்ற ஏமாற்றம் தோன்றியபோது பெனுகொண்டாவுக்குப் போய் ஒருநாள் வியாழக்கிழமை பூஜைக்குப்பிறகு சுவாமிஜீயை தரிசித்தேன். அதுமுதல் இரண்டு மாதத்தில் காய்ச்சல் முழுவதும் போய்விடுமென்றார் சுவாமிஜி. சரியாக அப்படியே என் நோய் முற்றும் நீங்கியது. பிறகு எனது இடதுகால் வீங்கி பொறுக்க முடியாத கஷ்டம் கொடுத்தது, பாபாவுடைய தயவால் அதுவும் சரியாகிவிட்டது. ஸ்ரீ கேசவய்யாஜீயின் அருளும், பாபாவின் அநுக்கிரகமும் அவ்வளவு மகிமைப் பெற்றவை.

## எல்லாப் பிரச்னைகளுக்கும் பரிகாரம்

ஸ்ரீமதி குங்கி கௌடம்மா (தொட்ட பெள்ளாபுரம்) ''எனக்கு கால்களில் முதலில் பொறுக்க முடியாத வலியும் பிறகு எரிச்சலும் வந்துகொண்டிருந்தன. வெகு காலமாக டாக்டர்கள் ஒன்றும் செய்ய முடியாதபடியால் நான் பெனுகொண்டாவுக்குப் போனேன். பிரசித்திப் பெற்ற சாயி பக்தரான ஸ்ரீ கேசவய்யாஜீ விபூதி கொடுத்தார். தினந்தோறும் பாபாவை பூஜிக்கச் சொன்னார். அப்படியே செய்து வருகிறேன். கால்வலியும் எரிச்சலும் கொஞ்சம்கூட இல்லாமல் போய்விட்டன. எனது மகன் சுப்பண்ணா, மைசூர் சட்ட சபைத் தேர்தலுக்குப் போட்டியிட்டான். எங்களுக்கே வெற்றி கிடைக்குமென்ற நம்பிக்கை தோன்றவில்லை. சுவாமிஜிமட்டும் ''அதிக மெஜாரிட்டியோடு வெற்றிபெறுவாய்'' என்றார். அப்படியே பெற்றான். இப்பொழுது கார்ப்பொரேஷன் மேயராக

''எனது கடைசி மகன் ராமண்ணாவுக்குக் குறிப்பிட்ட ஓரிடத்தில் சம்பந்தம் செய்யவேண்டுமென்று மிகவும் ஆசையாக இருந்தது. எங்கள் வீட்டில் எல்லோரும் அதற்கு எதிர்ப்பாக இருந்தனர். நான் சுவாமிஜீயின் உதவியை நாடினேன். 'யார் என்ன செய்தாலும் இந்தச் சம்பந்தமே நடக்குமென்றும், இரண்டு வருடங்களுக்குப்பின் எனது ஆசை நிறைவேறும்' என்றும் கூறினார். மூன்று மாதங்களுக்கு முன்புதான் இந்தக் கல்யாணம் நடந்தது.''

## ஸ்ரீ டி. எஸ். நடேசன்

*மராமத்து இலாகா, தொட்டபெள்ளாபுரம்*

'நான் பாபாவைப்பற்றி 1930லும் ஸ்ரீ கேசவய்யாஜீயைப் பற்றி 1943லும் கேள்விப்பட்டேன். எனது மைத்துனி மூத்திர கோச சம்பந்தமான நோயால் படுத்த படுக்கையானாள். எந்த சிகிச்சை செய்தும் பயனில்லை. அவளை பெனுகொண்டாவுக்கு அழைத்துப் போனேன். சுவாமிஜி, புண்ணிருந்த இடத்தில் விபூதி தடவினார். அன்று முதல் முப்பது நாட்களில் நோய் முற்றும் குணமாகிவிடும் என்றார். சரியாக முப்பதாம் நாள் புண் முழுவதும் ஆறிவிட்டது. அந்தப் பெண் சுகமாக ஆரோக்கியத்துடன் இருக்கிறாள். அதுமுதல் எனக்கு எந்தக் கஷ்டம் வந்தாலும் சிறிதும் யோசனை செய்யாமல் சுவாமிஜீயின் உபதேசப்படி நடந்துகொள்கிறேன்.

## வரப்போகும் லாபங்கள்

*ஸ்ரீ நடிம்பல்லி தசரதராமையா, பாரிஸ்டர், குண்டூர்.*

"1944—ஆம் ஆண்டு மே மாதம் சுவாமி கேசவய்யாஜி எங்கள் ஊருக்கு வந்து பப்ளிக் பிராசிகியூட்டர் ஸ்ரீதாசரி ஸ்ரீமந்நாராயண சௌத்ரியின் வீட்டில் பூஜை செய்தார். அந்த பூஜைக்கு ஜில்லா அதிகாரி ஒருவர் வந்தார். ஸ்ரீகேசவய்யாஜி அவரைப் பார்த்து "பதின்மூன்று மாதங்களில் உங்கள் வேலையில் மாறுதல் ஏற்படும்" என்றார். என்ன ஆச்சரியம்! 1945—ஜூலையில் அவர் ஒரு முக்கியமான டிரிப்யூனலுக்குச் சேர்மனாக நியமனம் பெற்றார். அந்தச் சமயத்தில் சுவாமிஜீ திரும்பவும் குண்டூருக்கு வந்தார். கோர்ட் உத்தியோகஸ்தர் ஒருவர் வீட்டில் பூஜை செய்து, "நீங்கள் அக்டோபர் மாதத்துக்குள் தென்னாட்டுக்கு மாற்றலாகிப் போவீர்கள்" என்று சொன்னார். அப்படியே நடந்தது. 1944—மே மாதத்தில் ஸ்ரீகேசவய்யாஜீ எங்கள் வீட்டில் பூஜை செய்தார். பூஜைக்கு வந்த ஒரு பெண்மணி தனக்குக் குழந்தை இல்லை என்று சொல்லிக் கொண்டாள். சுவாமிஜி அவளுக்கு விபூதியும் தீர்த்தமும் கொடுத்து 'நான் மறுபடியும் குண்டூர் வரும்போது உனக்குக் குழந்தை பிறந்திருக்கும்' என்றார். அப்படியே 1945—ஆம் ஆண்டு அவர் வந்தபோது அவளுக்குக் குழந்தை பிறந்திருந்தது.

"மூன்று வருடங்களுக்கு முன்பு சுவாமிஜீ எங்கள் வீட்டில் பூஜை செய்தார். தீர்த்தப் பிரசாதங்கள் கொடுத்தபின் என் நண்பனாகிய ஸ்ரீ எம். ராமாராவ் சுவாமிஜீயை வணக்கத்துடன் நெருங்கி "பத்து வருடங்களாக நான் ஆஸ்துமாவினால் கஷ்டப்படுகிறேன். இனிமேல் கஷ்டப்பட முடியாது" என்று சொன்னான். சாயி பூஜை

செய்து வேறு சில நியமங்களையும் கடைப்பிடிக்கும்படிச் சொன்னார். ஸ்ரீகேசவய்யாஜீ ஆறுமாதங்களுக்குப் பிறகு வியாதி அதிகமாகும் என்றும் பிறகு நோய் போய்விடும் என்றும் சொன்னார். இரண்டு வருட காலமாக நோய் வருவதில்லை. அவனே சமீப காலத்தில் என்னிடம் சொன்னான்.'' —1945—டிசம்பர் ஸாயி ஸுதா.

## நம்பின அளவுக்குப் பயன்

ஸ்ரீ எம். ஸ்ரீநிவாஸகோபாலன் M.A., B.L., மயிலாப்பூர், சென்னை-4

நான் முதலில் சுவாமி கேசவய்யாஜீயைச் சந்தித்தபோது எனக்கு முக்கியமாக அவரிடம் வேலை எதுவும் இருக்கவில்லை. என் சகோதரன் பாபாவின் பக்தன். அவன் வியாழக்கிழமைதோறும் ஷெனாய் நகருக்குப் போவான். அன்று அவன் என்னையும் உடன்வரும்படி அழைத்ததால் நானும் சென்றேன். பூஜை அறையில் நுழையும் போதே என்னுள் ஏதோ சிறிது மாறுதல் ஏற்பட்டது. சுவாமிஜீ விபூதி கொடுத்தார். என் உள்ளத்தில் சொல்ல இயலாத அமைதி ஏற்பட்டது. இதுவரையில் எப்போதும் நான் இந்த மாதிரியான அனுபவம் பெற்றதில்லை. ஆகையால் அதுமுதல் வியாழனன்று பூஜைக்கு நாள்தவறாமல் செல்லத் தொடங்கினேன். இந்த ஒன்றரை ஆண்டு காலத்தில் எனக்கு அற்புதமான சில அனுபவங்கள் ஏற்பட்டுள்ளன.

"என் பெரிய பெண்ணுக்குப் பன்னிரண்டு வயதாகிறது. குழந்தைப் பருவத்திலிருந்தே அடிக்கடி ஜுரமும் வயிற்றுவலியும் வருவது வழக்கம். அந்த சமயத்தில் பசியே இருக்காது. அதனால் உடல்நிலை கெட்டுவிட்டது. ஆறு மாதங்களுக்குமுன் ஸ்ரீகேசவய்யாஜீ அவளுக்குத் தாயத்து ஒன்று கட்டி விபூதியும் கொடுத்தார். பிறகு அவளுக்கு எந்த நோயும் வருவதில்லை.

''என் தம்பியின் பெண்ணுக்கு இரண்டரை மாதங்களுக்கு முன்னால் பெரிய ஆபத்து ஒன்று நேரவிருந்தது. குழந்தைக்கு ஒன்பது மாதங்கள்தான். பிறந்தது முதல் நுரையீரல் நோயால் கஷ்டப்பட்டு வந்தது. திடீரென்று ஒருநாள் இரவு நிலைமை மோசமாகி விட்டது. கபம் உறைந்து மூச்சே விட முடியவில்லை. மருந்துகளால் ஒன்றும் பயன் ஏற்படவில்லை. நம்பிக்கை இழந்தபின் என் தம்பி ஸ்ரீகேசவய்யாஜி கொடுத்த விபூதியைத் தடவினான். சிறிது நேரத்தில் குழந்தை தேறிவிட்டாள். கண்டம் தாண்டிவிட்டது. விபூதியின் மகிமையைக் கண்டு நாங்களெல்லோரும் ஆச்சரியம் அடைந்தோம்.

'எனக்கு வக்கீல் நண்பன் ஒருவன் இருக்கிறான். அவனுக்குக் 'கேசுகளும் வருவதில்லை; வரும்படியும் இல்லை. பெற்றோர் வைத்த ஆஸ்தியும் இல்லை. நான் அவனுக்குக் கேசவய்யாஜியைப் பார்க்கும்படி யோசனை சொன்னேன் அவன் ஷெணாய் நகருக்கு வியாழக்கிழமைதோறும் பூஜைக்குச் செல்கிறான் அங்கே போகத் தொடங்கியது முதல் தன் நிலைமை நன்றாகயிருக்கிறதென்றும் பணக் கஷ்டம் இல்லை என்றும் அவன் சொன்னான்.

—1955 ஜூலை, ஸாயி ஸுதா

டாக்டர் ஸ்ரீ ஜி. வி. ரெட்டி:— 1942 ஆம் ஆண்டில் என் ஒரே மகன் பதின்மூன்று வயதில் திடீரென்று இறந்துவிட்டான். அந்தத் துக்க சம்பவத்தால் என் வாழ்க்கை துன்பமயமாயிற்று. என் மனைவியின் உடல் நிலையும் கெட்டுவிட்டது எல்லா வகையிலும் வாழ்க்கை வீணாகி விட்டது. சில நண்பர்கள் சொன்ன யோசனைப்படி நான் பெனுகொண்டாவுக்குப் போனேன் ஸ்ரீ சாயிபாபவை உறுதியாக நம்பிக்கொண்டிரு' என்று ஸ்ரீகேசவய்யாஜி சொன்னார். அதுமுதல் சாயியைத் தவிர வேறு யாரையும் நினைப்பதில்லை. 1943இல் பாபாவின் அருளால் எனக்கு ஒரு பிள்ளை பிறந்திருக்கிறான். சுகமாகவும் ஆரோக்கியமாகவும் இருக்கிறான்.

—1943—ஜூன், ஸாயி ஸுதா.

## ஸம்ஸயாத்மா விருச்யதி

ஸ்ரீ வி. கே. சென்னை:— 'இருக்கிற தெய்வங்களும் தேவாதிகளும் போதாமல் இந்த சாயி தெய்வத்தை எங்கிருந்து கொண்டு வந்தார்கள்?'' என்று வருந்தியவர்களில் நானும் ஒருவன் தெய்வங்களுக்கு வணங்குவதே பைத்தியக்காரத்தனம் என்று நான் நினைப்பவன். அப்படிப்பட்ட கருத்துள்ள என்னைப் பாபா அநுக்கிரகித்து என்னைப் பக்த கோடிகளில் ஒருவனாகச் சேர்த்துக்கொண்டார்

ஸ்ரீ சாயி பக்த கேசவய்யாஜி பாபாவின் அருமைச் சீடர் என்றும் நிபுணர்களான டாக்டர்கள் கூட நிராசையோடு கைவிட்ட நோய்கள், பாபாவின் அநுக்கிரகத்தால் சுவாமிஜி ஆசீர்வதித்துக் கொடுத்த விபூதியால் குணமாகின்றன என்றும் கேள்விப் பட்டேன். சுவாமிஜீ பத்திரிகைகளில் எழுதிய விஷயங்களைப் படித்தேன். இவற்றைப் பரீட்சிக்க வேண்டுமென்று ஷெணாய் நகருக்குச் சென்றேன் அன்று வியாழக்கிழமை. அப்பொழுதே பலபேர் வரிசையாக நின்றிருந்தார்கள். 'இங்கேயும் 'க்யூதான்' போலிருக்கிறது' என்று

தோன்றியது. எல்லோரையும் பார்த்துக்கொண்டே இருந்தேன். உயர் கல்வி கற்றவர்கள், உத்தியோகஸ்தர்கள், மற்றும் பலர் அலுத்துக்கொள்ளாமல், பணிவுடன் எல்லோருடனும் கலந்துகொண்டு அங்கங்கே நின்றுகொண்டிருந்தார்கள். ஒருவர்பின் ஒருவராகப் போனார்களே தவிர உத்தியோகஸ்தர் என்றோ பணக்காரர் என்றோ வித்தியாசம் காணப்படவில்லை கிட்டத்தட்ட ஒருமணி நேரத்திற்குப் பிறகுதான் நான் கேசவய்யாஜியிடம் போக முடிந்தது. அவர் ஆடம்பரமின்றி பாபாவின் படத்தின்முன் நின்று வந்தவர்களை அன்புடன் 'என்ன விஷயம்?' என்று விசாரித்து ஆதரவாகப் பேசி ஆசீர்வதித்து விபூதி கொடுத்து அனுப்பிக் கொண்டிருந்தார். காரணம் என்னவோ தெரியாது, அவர்முன் எனக்கு எந்தவிதமான சந்தேகமும் எழவில்லை. ஏதோ ஒரு தெய்வத்தின் அருகில் இருப்பதாகவே தோன்றியது 'என்ன சங்கதி' என்று ஆதரவுடன் கேட்டார். எனது குடும்பத்திலுள்ள இரண்டு கஷ்டங்களைத் தயங்காமல், ஒளிக்காமல் சொன்னேன். அவர் தந்தைபோல் அரவணைத்து விபூதி கொடுத்து 'பாபாவை நினைத்து விபூதியை உட்கொண்டால் நிச்சயம் நன்மை உண்டாகும்' என்று சொன்னார்.

"நான் சொன்ன இரண்டு விஷயங்களும் தீராத நோய்களைப் பற்றியவை. பின்வாங்காமல் அவர் சொன்னபடியே விபூதியைக் கொடுத்தேன் கைதேர்ந்த டாக்டர்களுக்கு அதுவரைக்கும் அடங்காத அந்த நோய் தீர்ந்தது வெகு அதிசயம்! திரும்பவும் வியாழக்கிழமையன்று சுவாமிஜீயை தரிசித்து தீர்த்தப் பிரசாதங்கள் வாங்கி வந்தேன். நோயின் சுவடே தெரியாமல் போய்விட்டது. வீணான இந்தப் படிப்பினால் அஞ்ஞானத்தில் செலுத்தும் சந்தேகமும் அகம்பாவமும் ஏற்பட்டதே தவிர ஞானம் வரவில்லை என்று தெரிந்து கொண்டேன். பாபாவின் பக்தியிலுள்ள மகிமையை உணர்ந்து அன்றுமுதல் ஸ்ரீ சாயி தெய்வமேதான் என்று நம்பி வணங்கி வருகிறேன். பக்தி என்பது அழிந்துபோகாமல் நம்பிக்கையை உண்டாக்கவே பாபா, தம் பக்தர்களிடம் இப்படிப்பட்ட சக்திகளைக் காண்பிக்கிறார் என்று புரிந்துகொண்டேன்.'

—ஜூன் 1952 சாயி லீலா

## சாயி லீலா

ஸ்ரீ லிங்கம் லக்ஷ்மி நாராயணா—வில்லிவாக்கம், சென்னை.

"சாயி பக்தர்களுள் சிறந்தவரான ஸ்ரீ கேசவய்யாஜீ என் குரு. அவரால் நான் பல நன்மைகளை அடைந்திருக்கிறேன். அதில் ஓர் அனுபவத்தை எழுதுகிறேன் 19·0—ஜூன் 10-ஆம் தேதி என் மனைவிக்குக் கருப்பை சம்பந்தமான வயிற்று வலி வந்தது. அரசினர்

பெண்கள் ஆஸ்பத்திரியில் சேர்த்தேன். பெரிய ஆபரேஷன் நடந்தது. மூன்று நாட்கள்வரை என் மனைவிக்கு நினைவு வரவில்லை. டாக்டர்கூட என்னைப் பார்த்து, 'என்னவோ, இனிமேல் பிரயோஜனம் இல்லை என்று தோன்றுகிறது. உன் அதிர்ஷ்டம்'' என்றார். நான் அல்லும் பகலும் பாபாவை தியானித்து அவர் மீதே பாரத்தைப் போட்டுவிட்டேன். அதுவரையிலும் 105 டிகிரி ஜுரம் இருந்தது குறைந்து நான்காம்நாள் நன்றாக நினைவு வந்துவிட்டது. ஒரு வாரத்தில் உடம்பு முற்றும் குணமாகி வீட்டுக்குத் திரும்பி வந்தாள்.

## பக்தர்களுக்காக யாத்திரை

ஸ்ரீ முக்காமல மாதவராவ், பி.எ., பி இடி.,
கொல்லிவரம் போர்டு ஹைஸ்கூல்.

''சாயி பக்த கேசவய்யாஜீயின் அறிமுக பாக்கியம் 1943, ஜனவரியில் கிடைத்தது. நான் சிராலா உயர்நிலைப் பள்ளியில் வேலை செய்து கொண்டிருந்தேன். திடீரென்று என் ஒரே பையன் இறந்துவிட்டான். அதற்கு முன்பு வளர்ந்த குழந்தைகள் மூவர் இறந்துவிட்டார்கள். நானும் என் மனைவியும் துக்கக் கடலில் மூழ்கிவிட்டோம். பேராலாவில் சாயி பாபா கோவிலில் உத்ஸவங்கள் நடந்துகொண்டிருந்தன. அதற்காகச் சென்னையிலிருந்து ஸ்ரீ கேசவய்யாஜீ வந்தார். எங்கள் வீட்டுக்கார அம்மாள் அவரைப் போய் தரிசித்துவிட்டு வரும்படி யோசனை சொன்னார். கோவிலில் சுவாமிஜி பாபாவைப் பற்றி பேசிக்கொண்டிருந்தார். உபந்நியாசம் முடிந்தவுடன் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து என் குறையைச் சொல்லிக் கொண்டேன். என்னையும் என் மனைவியையும் மறுநாள் காலையில் வரச் சொன்னார். அப்படியே மறுநாள் பூஜைமுடிந்தவுடன் போய் பார்த்தோம். "உங்களுக்கு இன்னும் பதினொரு மாதம் கஷ்ட காலம் இருக்கிறது. முதல் மூன்று மாதத்தில் இந்த ஊரைவிட்டு மாற்றலாகும். பதினொரு மாதங்களுக்குப் பிறகு என்னை வந்து பாருங்கள்'' என்று உத்தரவு கொடுத்தார். விபூதியும் பாபாவின் படமும் கொடுத்தருளினார். அவர் சொன்னபடியே மூன்று மாதங்களுக்குப் பிறகு சீராளாவில் இருந்து என்னை மாற்றிவிட்டார்கள். அந்த ஆண்டு கோடைக் காலத்தில் திருப்பதி சென்று வீட்டுக்குத் திரும்பும்போது இரட்டை மாட்டுவண்டி குடைசாய்ந்து என் தம்பியின் கை உடைந்தது. அந்தப் பதினொரு மாதங்களும் இதுபோன்ற கஷ்டங்கள் பலவற்றை நாங்கள் அனுபவித்தோம். கடைசியில் பெல்லாம் கொண்டாவில் ஸ்ரீ ராமானந்த சரஸ்வதிசுவாமிகளால் புனர்ப் பிரதிஷ்டை செய்துவிட்டு ஊருக்குத் திரும்பினோம். வழியில் சுவாமிஜியின் தரிசனம் கிடைத்தது. அவர் ரயிலில் ரேபல்லிக்குப் போய்க்கொண்டிருந்தார்.

அப்பொழுதுதான் அவரைப் பார்த்துப் பதினொரு மாதங்கள் முடிந்திருந்தன. அவரை தரிசிக்க பெல்லாரி போகலாமென்று நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் அவர் வைத்த கெடு முடியும் சமயத்தில் அவரே எங்களுக்குத் தரிசனம் கொடுத்தார். இது தானாகவே நடந்துவிட்டது. இந்த அதிர்ஷ்டத்தைக் கண்டு செயலற்றுப்போய் அவர் முன் கைகூப்பி நின்றோம். ''உங்கள் கஷ்டங்கள் தீர்ந்து விட்டன. இன்னும் மூன்று மாதங்களில் மிகவும் சந்தோஷம் உண்டாகும். பாபா நன்மை செய்வார். அப்போது எனக்குக் கடிதம் எழுதுங்கள்; பதில் எழுதுகிறேன்' என்று சுவாமிஜி உத்தரவு கொடுத்தார்.

''அவர் சொன்னபடியே மூன்று மாதங்களில் என் மனைவி கருவுற்றாள். பாபாவின் அநுக்கிரகத்தாலும், சுவாமிஜீயின் ஆசியாலும் எனக்கு இப்பொழுது இரண்டு பெண்களும் ஒரு பையனும் சௌக்கியமாக இருக்கிறார்கள். இன்றைக்கு கஷ்டங்களை மறந்து மகிழ்ச்சியாக காலம் தள்ளிக்கொண்டு கவலையில்லாமல் வேளைக்குச் சாப்பிட்டுக்கொண்டு இருக்கிறோம். எல்லாம் பாபாவின் அருள்; சுவாமிஜியின் ஆசி. ''நான் எழுதியிருக்கும் இந்தச் செய்தியில் அணுவளவும் மிகையில்லை என்று விண்ணப்பித்துக் கொள்கிறேன். பாபா அருளாளர். பக்தர்களுக்கு கல்பக விருட்சம்''

—ஸாயி லீலா, 1952

## அற்புத சக்தியும், அமோக மகிமையும்

''தற்சமயம் மேற்குக் கோதாவரி ஜில்லாவில் கொவ்வூரில் தலைமை ஜில்லா முன்சீப்பாக வேலை செய்யும் ஸ்ரீ அத்தலூரி லக்ஷ்மி நரசிம்மராவ், எம்.ஏ., எம்.எல்.பி., 1942-ஆம் ஆண்டில் சாயி பாபாவின் பக்தரானார். அவரே என்னையும் பாபாவின் பக்தராக்கினார். அட்வகேட் ஸ்ரீ அத்தலூரி பாப்பராஜு, சாயி லீலா முதல் தொகுதி ஐந்தாம் இதழில் எழுதும்போது தம் அனுபவத்தை இப்படி எழுதுகிறார்: ஸ்ரீ சாயி பாபாவின் பக்தகோடிகளில் ஸ்ரீ கேசவய்யாஜீ முதலிடத்தைப் பெற்றுவிட்டார். அவர் பாபாவுக்கு நிரம்ப வேண்டிய பக்தர். அவர் குண்டூருக்கு வந்திருந்தபோது அவரை நாங்கள் பலமுறை தரிசித்திருக்கிறோம். அவருடைய பூஜைக்கு ஆஜராகி பாபாவின் விபூதி, பிரசாதம். சுவாமிஜீயின் ஆசி எல்லாவற்றையும் பெற்றிருக்கிறோம். சகோதரர்களாகிய நாங்கள் அவருக்கு எப்பொழுதும் கடமைப்பட்டிருக்கிறோம். அந்த நாட்களில் குண்டூரில் வருமானவரி ஆபீசராக இருந்த ஸ்ரீ வெணிகண்ட்ல பிச்சைய சௌதரியின் வீட்டில் ஸ்ரீ கேசவய்யாஜி பூஜை செய்தார்.

ஸ்ரீ பிச்சைய சௌதரி பூஜைக்கு என்னையும் அழைத்தார். நான், என் தம்பி, ஸ்ரீ நரசிம்மராவ் ஆகியோர் போனோம். அப்பொழுது எங்கள் வீட்டுக்கார அம்மாள் மூன்று மாத காலமாக சுரத்தால் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தாள். அவளுக்கு வயது எழுபத்தைந்து. மிகக் கஷ்டப்பட்டு அந்த அம்மாளை ஒரு வண்டியில் ஏற்றி சுவாமிஜீ யின் பூசை அறைக்கு அழைத்துப்போனோம். நான் தீர்த்தமும் பிரசாதமும் பெற்றுக்கொண்டு அந்த அம்மாள் சங்கதியைச் சொன்னேன். அவளும் விபூதி தீர்த்தம் பெற்றுக்கொண்டாள். அப்பொழுது பாதி இரவு தாண்டிவிட்டது. அவளைத் திரும்ப அழைத்துப்போக வண்டி கிடைக்கவில்லை. சுமார் ஒரு மைல் தூரம் நடக்க வேண்டும். அந்த அம்மாள் எனது பின்னாலேயே பேசிக்கொண்டு நடந்து வந்தாள். வழி முழுவதும் அவள் பாபாவைப் புகழ்ந்து கொண்டே வந்தாள். வீட்டுக்கு வந்து சேர்ந்துவிட்டோம். மறு நாளிலிருந்து அவளுக்கு ஜுரமே வரவில்லை.

எனது தம்பியான ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்ம ராவுக்கு ஜில்லா முன்சீப் உத்தியோகம் கிடைக்குமோ, கிடைக்காதோ என்று கவலையாக இருந்தது. பூசைக்குப் பிறகு நாங்கள் சுவாமிஜீயிடம் இதைப்பற்றிக் கேட்டோம். 'பாபாவின் தயவால் நிச்சயமாக உத்தியோகம் கிடைக்கும்' என்று அவர் சொன்னார். ஒருநாள் இரவு எனது தம்பி யின் கனவில் ஸ்ரீ பாபா தோன்றி 'இதோ இந்த கவரை வாங்கிக் கொள். உனக்கு முன்சீப் வேலை கிடைத்துவிட்டது' என்று கூறினார். மறுநாள் காலை ஏழு மணிக்கு எனது தம்பி என்னிடம் இந்த விஷயத்தைச் சொன்னான். அன்று மத்தியானம் பன்னிரண்டு மணிக்கு கனவு நினைவாயிற்று. எனது தம்பி குண்டூர் தலைமை முன்சீப் கோர்ட்டில் இருக்கும்போது தபால் சேவகன் அரசாங்க முத்திரை யிட்ட கவர் ஒன்றைக் கொடுத்தான். எனது தம்பியை முன்சீப் வேலைக்குத் தேர்ந்தெடுத்திருப்பதாகவும் வைத்தியப் பரிசோதனைக் குப் போகும்படியும் அதில் உத்தரவு இருந்தது. எனது தம்பி எனக் குச் செய்தி சொல்லி அனுப்பியவுடன் நான் போனேன். அந்த உத்தரவை என்னிடம் காண்பித்தான். எல்லாம் பாபாவின் அருள்; அவருடைய பக்தரான கேசவய்யாஜீயின் ஆசி.''

## பக்தர்களுக்கு வசப்பட்டவன்

1946-ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் சீராலா—பேராலா சாயி சமாஜத்தின் தலைமையில் பாபாவின் உத்சவம் நடந்தது. சுவாமிஜீ சீராலாவில் ஒரு வாரம் தங்கினார். அவர் தினந்தோறும் பூஜை செய்து பக்தர்களுக்குத் தீர்த்தப் பிரசாதங்கள் கொடுத்து பாபா வைப் பற்றிப் பிரசங்கம் செய்வது வழக்கம். அன்று ஜனவரி 16ஆம்

தேதி. பகல் ஒரு மணியாயிற்று. மிக விசித்திரமான சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. குக்கிலம் ராகவலு என்ற வைசியப் பிரமுகர் திடீர் என்று கீழே விழுந்துவிட்டார். உயிர் துடித்துக்கொண்டிருந்தது. பத்து நிமிடங்களில் அவருக்கு நினைவு அடியோடு தவறிவிட்டது. அது பட்சவாதம் என்று தெரிந்துவிட்டது. அவருக்கு வயது ஐம்பது இருக்கும். மறுபடியும் ஆரோக்கியம் பெறுவார் என்று யாருக்கும் நம்பிக்கை இல்லை. சாயி பக்தர் ஸ்ரீ கேசவய்யாஜி இந்த நிகழ்ச்சியைக் கண்டார். பாபாவை தியானித்து அவருடைய அருளைப் பெற்று பிணம்போலிருந்த மனிதருடைய நெற்றியைத் தொட்டுத் தலைமேல் விபூதி போட்டு உடலிலும் சிறிது தடவினார். மின்சாரம் பாய்ந்ததுபோல் ஸ்ரீ ராகவலுவின் உடல் அசைய ஆரம்பித்தது. சிறிது நேரத்தில் உடலில் ஜீவன் முழுவதும் வந்துவிட்டது. பதினைந்து நிமிடங்களில் பட்சவாதச் சின்னங்கள்கூட மறைந்துபோய் விட்டன. பூஜைக்கு வந்த நூற்றுக் கணக்கான பக்தர்கள் இந்த அற்புத நிகழ்ச்சியைக் கண்டு ஆச்சரியமடைந்தார்கள். பாபாவின் மகிமையைக் கண்ணாரக் கண்டார்கள். அது மட்டுமா? சாயி பாபா சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜி மூலமாக பக்தர்களைக் காப்பாற்றுவதையும் தெரிந்துகொண்டார்கள். சிலர் கோயம்புத்தூர் நாக சாயி நிகழ்ச்சியை இதற்கு ஒப்பாகப் பேசிக்கொண்டார்கள்.''

## சாயி நிலயத்தில் நாகப்பாம்பு

கோயம்புத்தூர் நாகசாயி கோயிலில் நடந்த நிகழ்ச்சி போலவே 1960 பிப்ரவரி 4-ஆம் தேதியன்று சென்னை சாயி நிலயத்திலும் நடந்தது. அதன் விவரங்களை பிப்ரவரி 25 'சஞ்சய'விலிருந்து எடுத்து எழுதுகிறேன். ''ஷேணாய் நகரில் சுவாமிஜி வெகு காலமாக பாபாவை பூஜித்து வருகிறார். இம்மாதம் 4-ஆம் தேதி அவர் பூஜை முடிந்தபின் பக்தர்களுக்கு பிரசாதம் கொடுத்துக்கொண்டிருந்த போது சாயி நிலயக் காம்பவுண்டில் ஒரு நாகப்பாம்பு வந்தது. பக்தர்களுள் குழப்பம் ஏற்பட்டது. பக்தர் ஜனார்த்தனன் சுவாமி ஜீயிடம் இவ்விஷயத்தைச் சொன்னார். அவர் பிரார்த்தனை செய்து விபூதி கொடுத்து நாகேந்திரன்மேல் தெளிக்கச் சொன்னார். 'உனக்குக் காலம் ஆகவில்லை; எங்கிருந்து வந்தாயோ அங்கேயே போ' என்று சொல்லச் சொன்னார். அப்படிச் செய்த சற்று நேரத்துக்கெல்லாம் பாம்பு திரும்பிப்போய் மறைந்துவிட்டது.

## கல்விமிக்கவர்களின் விசேஷ அனுபவங்கள்

ஷேணாய் நகரில் சுவாமி கேசவய்யாஜி நடத்தும் ஸ்ரீ ராமநவமி, பாபா மகா சமாதி உத்சவக் காலங்களில் சில பிரமுகர்கள் தத்தம்

அனுபவங்களை வெளியிட்டார்கள். 1956-ஆம் ஆண்டில் ஸ்ரீ ராம நவமி உத்சவ சபைக்குத் தலைமை வகித்த, சென்னை, ஹைகோர்ட் நீதிபதி பதவியிலிருந்து ஓய்வு பெற்ற ஸ்ரீ W.S. கிருஷ்ணசாமி நாயுடு அன்றைக்கு நான்கு நாட்களுக்கு முன் நடந்த சம்பவத்தை விவரித்தார். "சாயி பாபா மிகப் பெரிய மகான்; பகவானுடைய அவதாரம். சுவாமிஜீ பாபாவின் அருளை பக்தர்களுக்கு கிடைக்கச் செய்யும் புனிதமான கருவி. மூன்று நான்கு நாட்களுக்கு முன்பாக சுவாமிஜி எங்கள் வீட்டுக்கு வந்தார். இந்தச் சபைக்கு என்னை தலைமை வகிக்கத் தீர்மானித்துவிட்டதாகச் சொல்லி அதற்கு ஒப்புக்கொள்ளும்படி என்னைக் கேட்க வந்தார். சாதாரண நிலையில் மிகச் சந்தோஷத்துடன் ஒப்புக்கொள்ள வேண்டிய அழைப்பு அது. ஆனால் என் மகன் காயலாவாகப் படுத்திருந்தான். ஜுரம் சிறிதும் குறையாமலேயே இருந்தது. ஸ்ரீகேசவய்யாஜீயிடம் இந்தநிலையைச் சொன்னேன். அவர் உடனே பாபாவின் விபூதியை எடுத்து ஒரு சிட்டிகை பையனின் வாயில் போட்டார். வலது கைக் கட்டை விரலால் நெற்றியிலும் இட்டார். இன்னும் கொஞ்சம் எடுத்துப் பொட்டலம் கட்டித் தலைமாட்டில் வைத்தார். இரண்டு நாட்களில் ஜுரம் குறைந்துவிடும் எனத் தைரியம் சொன்னார். அவர் சொன்னபடியே நடந்தது என்பதை நான் சொல்லவேண்டிய அவசியமில்லை. இன்று இந்தச் சபைக்குத் தலைமை வகிப்பதிலிருந்தே இந்த விஷயம் எல்லோருக்கும் தெரிந்திருக்கும்.

1959ம் ஆண்டு ஸ்ரீ ராம நவமி உத்சவத்தின்போது, ஸ்ரீ எஸ்.பி. ராதா கிருஷ்ண நாயுடு, ஐ.ஏ.எஸ்., (ரிடையர்டு) தம் அனுபவங்கள் சிலவற்றைச் சொன்னார். சுவாமிஜீயைப்பற்றி இவர் சொன்ன விஷயங்களை வாசகர்கள் இதற்கு முன்பே பார்த்திருக்க வேண்டும். ஸ்ரீ ராதா கிருஷ்ண நாயுடு சொன்னதாவது: 1945ஆம் ஆண்டில் வேலையில் இருந்தேன். மேல் பதவிக்காக முயன்றுகொண்டிருந்தேன். கிடைக்கும் என்ற நம்பிக்கை இருந்தது. சுவாமிஜீயைக் கேட்டேன். அவர் 'உடனே பதவி உயர்வு கிடைக்காதென்றும் ஒன்பது மாதங்களுக்குப் பிறகே கிடைக்கும்' என்றும் சொன்னார். எனக்கு இச்சொல் ஏமாற்றத்தைத் தந்தது. "இதென்ன அபசகுணப் பேச்சு!" என்று நினைத்தேன். கடைசியில் சுவாமிஜி சொல்லியபடி தான் நடந்தது. ஒரு புது வேலையை அரசாங்கம் ஏற்படுத்தியது எதிர்பாராமல் அந்த வேலைக்கு என்னை நியமித்தர்கள்.

"எனது நண்பர் ஒருவர் கொடிய நோயால் கஷ்டப்பட்டார். டாக்டர்கள் பரீட்சித்துவிட்டு சஸ்திர சிகிச்சை செய்யவேண்டி இருக்கும் என்றார்கள். சுவாமிஜீயைக் கேட்டோம். அவர், சஸ்திர சிகிச்சை தேவையில்லை என்றும் நோய் சாதாரணமாகவே சரியாகி

விடும் என்றும் சொன்னார். டாக்டர்கள் திரும்பவும் மிகக் கவனத்துடன் பரீட்சித்துவிட்டு சஸ்திர சிகிச்சை அவசியமில்லை என்று முடிவுக்கு வந்தார்கள். அந்த நண்பர் இன்றும் ஆரோக்கியமாகவும் சௌக்கியமாகவும் இருக்கிறார். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு அவர் சாயி பாபாவின் பக்தராகிவிட்டார். பாபா ஸ்ரீ கேசவய்யா ஜீயின் வாயிலாகப் பேசுகிறார்.

1957-ம் ஆண்டில் சாயி நிலையத்தில் நடந்த பாபா மகா சமாதி உற்சவத்தின்போது, சுவாமிஜீயின் பக்தர்களுள் ஒருவரான ஸ்ரீ டி. புருஷோத்தம் (எம்.எல்.ஸி.) தாம் பெற்ற அனுபவங்களுள் விசித்திரமான ஒன்றை சொன்னார். "எனக்கு கஷ்டம் வந்தபோதெல்லாம் நான் மௌனமாக சாயி பாபாவிடமும், ஸ்ரீ கேசவய்யாஜீயிடமும் மனத்தைச் செலுத்தித் தியானம் செய்வேன். உடனே மன அமைதி கிடைத்துவிடும். கஷ்டங்கள் விலகிவிடும். சமீபத்தில் அதாவது பதினைந்து நாட்களுக்கு முன் நடந்த அற்புதமான ஒரு சம்பவத்தை முதல் தடவையாக இங்கே சொல்லுகிறேன். சாதாரணமாக யாரும் நம்பமாட்டார்கள். ஆனாலும் எனது அனுபவத்தை உள்ளது உள்ளபடி சொல்லுகிறேன்.

இரண்டு வாரங்களுக்குமுன் சாயி நிலையத்தில் சுவாமிஜீயை தரிசித்துவிட்டு அவசர வேலையின் நிமித்தம் டெல்லிக்குச் சென்றேன். அங்கே வேலை முடிந்தபிறகு ஒரு நண்பருடன் சேர்ந்து தாஜ் மகாலைப் பார்க்கப் புறப்பட்டேன். ஆக்ராவைப் பார்த்துவிட்டு காரில் திரும்பி டெல்லிக்கு வந்துகொண்டிருந்தோம். வழியில் எங்கள் கார் ஓர் ஆட்டிடையன்மேல் மோதிவிட்டது. அவன் அங்கேயே நினைவிழந்து விழுந்துவிட்டான். அப்படியே அவனைக் காரில் போட்டுக்கொண்டு வட மதுரை ஆஸ்பத்திரிக்குச் சென்றோம். டாக்டர்கள் பரீட்சித்தார்கள். அவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. அவன் அப்பொழுது நினைவில்லாமல் கிடந்தான். எனது கவலை அதிகரித்தது. அவனுக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்துவிட்டால் வழக்கு வந்து அது முடியும்வரையில் நாங்கள் டெல்லியிலேயே இருந்து தீரவேண்டும். டாக்டர்கள் ஆட்டிடையனைப் பரிட்சித்துக் கொண்டிருந்தபோது, நான் மறுபக்கம் திரும்பி சாயி பாபாவைத் தியானித்தேன். சில நிமிடங்களில் அவன் கண்களைத் திறந்து பார்த்தான். அவனுக்கு எந்தவிதமான துன்பமும் இல்லை. உடலின் மேல் கார் உராய்ந்த சுவடுகூட இல்லை. அவன் சந்தோஷமாகவும் சுகமாகவும் இருந்தான். வழக்கமாக தூங்கி எழுந்தவன்போல் காணப்பட்டான்.

## சாயிபாபாவின் வாரிசு

ஸ்ரீ வட்ல மன்னுட்டி தாமோதர ராவ் அட்வகேட் சாயி லீலா இதழில் தம் அனுபவங்களை இப்படி எழுதியிருக்கிறார். நான் குடும்பத்துடன் சுவாமிஜீயை தரிசிப்பதற்காக, 116-F ஷெனுய் நகருக்குப் போனேன். அவரைப் பார்த்தபோது அவரிடம் தெய்வத் தன்மை இருக்குமா என்று தோன்றியது. அவர் அப்பொழுதுதான் பூஜை செய்து பாபா தியானத்தை முடித்துவிட்டு முன்பக்கம் வந்தார். நான் அவரை வணங்கினேன் அவர் ஆதரவுடன் எங்களை உட்காருமாறு பணித்தார். நாங்கள் ஒன்றுமே சொல்லவில்லை. அவராகவே "அம்மா! உங்கள் இரண்டாவது பிள்ளை பி.ஏ. பரீட்சை எடுதியிருக்கிறான். இரண்டு பாடங்கள் சரியாக எழுதவில்லை. ஆனாலும் பயம் இல்லை. பாபாவின் பிரசாதத்தைக் கொண்டுபோய் பையனுக்குத் கொடுங்கள். நாள் தவறாமல் பாபாவை நினைத்துக்கொள்ளச் சொல்லுங்கள். கிளாஸ் வரும்; நிச்சயமாகத் தேறுவான்" என்று சொல்லி விபூதி கொடுத்தார்.

"உங்கள் மூத்தப் பிள்ளைக்குக் கல்யாணம் நிச்சயம் செய்து கொண்டிருக்கிறீர்கள். ஆனால், இப்பொழுது நீங்கள் தீர்மானித்தப் பெண்ணை அவன் செய்து கொள்ளமாட்டான். வேறொரு சம்பந்தம் முடிவாகும்" என்றும் அவர் சொன்னார். பாபாவை வணங்கி, அவரின் பிரசாதம் பெற்றுக்கொண்டு சுவாமிஜீயிடம் விடைபெற்று வீட்டிற்கு வந்தோம். அவர் முன்னிலையில் இருந்தவரையிலும் ஏதோ ஒரு புனிதமான இடத்தில் இருப்பதுபோல் சொல்லொண்ணா மகிழ்ச்சியடைந்தோம். எங்கள் இரண்டாவது பிள்ளையைக் கேட்டதற்கு சுவாமிஜி சொன்னதுபோலவே 'இரண்டு பாடங்களில் அவ்வளவு திருப்திகரமாக எழுதவில்லை' என்று ஒப்புக்கொண்டதோடு பரபரப்புடன் அந்த விபூதியை நெற்றியில் இட்டுக்கொண்டு பாபா பஜனையே செய்துவிட்டான். உரிய காலத்தில் பரீட்சை முடிவுகள் வந்தன. எங்கள் பையனுக்கு சுவாமிஜீயின் ஆசீர்வாத பலத்தால் 'கிளாஸ்'கூட வந்துவிட்டது. எங்கள் பெரிய பிள்ளை விஷயத்திலும் அவர் சொன்னபடியே தீர்மானித்து சம்பந்தம் நின்றுபோய் வேறொரு சம்பந்தம் ஏற்பட்டுக் கல்யாணம் நடந்தது.

"அதுமுதல் நான் அடிக்கடி சுவாமிஜீ அவர்களை தரிசித்து வந்தேன். சிறப்பாக வியாழனன்று பலர் அந்த பாபா பக்தரை தரிசிக்க வருகிறார்கள். சுவாமிஜி அலுப்பு சலிப்பு இல்லாமல் ஆதரவுடன் எல்லோரிடமும் பேசி அவர்கள் சொல்வதைக் கேட்டு ஆசீர்வதித்து அனுப்புகிறார். இதில் ஓர் அதிசயம் இருக்கிறது. வருகிறவர்கள் தங்கள் கதையை சொல்லும் முன்பே சுவாமிஜி அவர்

களுடைய கஷ்டங்களைப் பற்றித் தாமே சொல்லி பாபாவின் அருளால் நன்மை உண்டாகுமென்று ஆசீர்வதிக்கிறார். பாபா இந்த பக்தரின் மூலமாக மற்ற பக்தர்களுக்கு நன்மை செய்ய வருகிறார். பாபா மகா சமாதி ஆவதற்குமுன் தம்மை அண்டிய பக்தர்களுக்கு எப்படி அருள் செய்து ஆசீர்வதித்தாரோ அதுபோலவே இப்பொழுது சுவாமிஜீ மூலம் ஆசியையும் அருளையும் பக்தர்களுக்குக் கிடைக்கச் செய்கிறார். சுவாமிஜீயின் பேச்சுக்கள் அவர் ஒரு மகா ஞானி, தத்துவம் அறிந்தவர் என்பதைக் காட்டுகின்றன. பகவானுடைய லீலைகளை அவர் உதாரணங்களுடன் கதைகளாக சொல்லும்போது குழந்தைகள் கூட புரிந்துகொள்ளும்படி சொல்லுவார்.

''வைசிய இளைஞன் ஒருவன் வெகு காலமாக சித்த பிரமைப் பிடித்துப் பைத்தியக்காரனைப் போல் கஷ்டப் பட்டுக் கொண்டிருந்தான். சிலர் அவனை ஒரு வியாழனன்று ஸ்ரீ கேசவய்யாஜீயிடம் அழைத்துக்கொண்டு வந்தார்கள். 'பாபாவின் அருளால் நோய் குணமாகிவிடும்; பயமில்லை' என்று அவர் சொன்னார். நெற்றியில் விபூதி இட்டுக் கையில் கொஞ்சம் கொடுத்தனுப்பினார். ஏழு வாரங்கள் அவனை அழைத்துவரச் சொன்னார். அவர் சொன்னபடியே ஏழு வாரங்கள் வந்து தீர்த்தப் பிரசாதங்கள் வாங்கிக்கொண்டான். அவ்வளவுதான். சுவாமிஜீயின் அருளால் அந்த இளைஞனுக்குப் சித்த பிரமை நீங்கி குணமாகிவிட்டது. இப்பொழுது அவன் சுயமாக வியாபாரம் செய்து பணம் சம்பாதிக்கிறான்.

''மற்றொரு சமயம் நீதி இலாகாவைச் சேர்ந்த உத்தியோகஸ்தர் ஒருவர் தம் பெண்ணை அழைத்துக்கொண்டு வந்தார். அவள் கர்ப்பிணி. பெரிய டாக்டர்கள் அவளுக்கு கருச் சிதைவு ஏற்பட்டு விடுமென்று அபிப்பிராயப்பட்டார்கள். அதனால் அவளது தந்தை அவளை சுவாமிஜீயிடம் அழைத்து வந்தார். சுவாமிஜி, 'பயமில்லை; பாபாவினருளால் சுகப் பிரசவம் ஆகும்' எனச் சொல்லி விபூதி கொடுத்தனுப்பினார். அவள் ஒன்பது மாதம் சுமந்து சுகமாக குழந்தையைப் பெற்றாள்.

''மற்றொரு சமயம் சென்னையில் இருக்கும் உதவி என்ஜினீயர் ஒருவர், தம் மனைவியுடன் சுவாமிஜீயை தரிசிக்க வந்தார். அவர்களுக்குக் குழந்தைகள் இல்லாததால் சாட்சாத் பாபாவே எனத் தகும் சுவாமிஜீயின் ஆசீர்வாதத்தைப் பெற விரும்பி வந்தார்கள். 'பாபாவின் அருளால் சந்ததி ஏற்படும்' என்று சொல்லி விபூதி கொடுத்தனுப்பினார். அவள் இப்போது கர்ப்பிணியாக இருக்கிறாள்.''

'கோபாலபுரத்திலிருந்து ஒருவர் தம் மகனுடன் ஸ்ரீகேசவய்யா ஜீயைப் பார்க்க வந்தார். அந்தச் சிறுவன் ஐந்தாம் பாரம் பரீக்ஷை எழுதியிருந்தான். அவனைப் பார்த்தவுடனேயே சுவாமிஜீ, "இந்தப் பையன் பரீட்சையில் தேறவில்லை" என்றார். மறுநாள் அவன் வீட்டுக்குப் போனபோது இந்தச் செய்தி தெரிந்தது.

'உத்தியோகத்தில் இருக்கும் ஸ்ரீகேசவய்யாஜீக்கு ஓய்வு இல்லா விட்டாலும், உடல்நிலை அவ்வளவு சரியாக இல்லாது இருந்த போதிலும் அவர்மிக்க பொறுமையுடன் தம்மிடம் வரும் பக்தர் களுக்கு உதவுகிறார். நூற்றுக்கணக்கில் தம் வீட்டுக்கு வரும் பக்தர் களைத் தவிர ஏதாவதொரு விஷயத்தைப் பற்றிச் சொல்லும்படிக் கேட்டுப் பலர் கடிதம் எழுதுகிறார்கள். எல்லோருக்கும் பாபாவின் அருளால் ஏற்படப் போகும் நற்பயன்களை சுவாமிஜீ தெரிவித்துக் கொண்டிருப்பார். எனக்குத் தெரிந்தவரையில் சில விஷயங்களைப் பார்த்ததில் ஸ்ரீகேசவய்யாஜி பக்தர்களுக்குச் செய்யும் சேவையை மாதவனுடைய சேவையாக நினைத்துச் செய்கிறார். சுவாமி ஸ்ரீகேசவய்யாஜீக்கு ஸ்ரீசாயி தீர்க்காயுளும் ஆரோக்கியமும் அருள வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

## குருநாதர்

ஸ்ரீராஜா கிருஷ்ணமூர்த்தி பி.காம்; பி.எல்., தம் அனுபவங் களைச் சொல்லும்போது மெய்மறந்துவிடுவார். "ஸ்ரீ கேசவய்யாஜீ எனக்கு சாயிபாபா; அவர் எனக்குச் சிறந்த சத்குரு. என் இதயத் தைக் குவியச் செய்து உள்ளத்தைப் புரிந்து கொண்டவர்" என்று ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி சுவாமிஜீயைத் துதிப்பார். தாம் சென்னையில் சட்டம் படிக்கும் காலத்தில் சுவாமிஜீயின் தரிசனம் கிடைத்ததென் றும் அவருடைய தயவாலேயே சட்டப் பரீட்சையில் தேறி தற் போதைய வேலையில் சேர்ந்ததாகவும் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி சொன் னார். சுவாமிஜீயின் வேலை என்றால் தெய்வீகமான வேலையாக மதித்து நிறைவேற்றுவார்.

"வாழ்க்கையில் பூஜை பக்தி என்றால் என்ன என்பதை எனக்குத் தெரியச் செய்தார் குருநாதரான ஸ்ரீசுவாமிகேசவய்யாஜீ. அவரைத் தரிசிப்பதற்கு முன்பாக காலையில் எழுந்திருந்து ஸ்நானம் செய்து கடவுளை நினைப்பதை நானறியேன். நான் அப்படிச் செய்யவேண்டு மென்று அவர் என்னிடம் சொல்லவில்லை. அவர் இந்த எண்ணத்தை எனது மனத்தில் உண்டாக்கினார். 1954—ஜூன் மாதத்தில் எனது சிற்றப்பா என்னை சுவாமிஜீயிடம் அழைத்துச் சென்றார். அப் பொழுதுதான் அவரை நான் முதன் முதலாகப் பார்த்தேன்."

ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி தொடர்ந்து இப்படிச் சொன்னார். ''இந்த ஜன்மத்தில் எனக்கு மன அமைதியில்லை. வீட்டிற்குச் சென்றால் தகராறு இருக்கும்'' என்று அவரிடம் சொன்னேன். என்னை ஐந்து வாரம் பூஜைக்கு வரும்படி கூறினார். இரண்டாம் வாரமே நான் போகவில்லை. மூன்றாம் வாரம் சென்று, ஐந்து வியாழக்கிழமைகள் வரட்டுமா?' என்று கேட்டேன். 'வா' என்றார். அப்படியே சென் றேன். அதற்குப் பிறகு ஒவ்வொரு வியாழக்கிழமையும் போகத் தொடங்கினேன். எனக்குத் தனியாக இதுதான் வேண்டும் என்ற ஆசை ஒன்றுமில்லை. வேடிக்கையாக சில எண்ணங்கள் தோன்றும் அதாவது, 'இன்றைக்குக் கொண்டுபோகும் பழம் எல்லாவற்றை யும் அவர் திருப்பிக் கொடுத்துவிட வேண்டு'மென்று ஒரு நாளைக் குத் தோன்றும். 'இன்று சுவாமிஜீ சிலவற்றை எடுத்துக்கொண்டு சிலவற்றைத் திருப்பித் தர வேண்டு'மென்று தோன்றும். 'இன்று எல்லாப் பழங்களையும் சுவாமிஜியே எடுத்துக்கொள்ள வேண்டும்' என்று ஒருநாள் மனத்தில் நினைத்துக்கொண்டே போவேன். ஒவ் வொரு நாளும் நான் நினைத்தபடியே சுவாமிஜி செய்துவந்தார். இது எனக்கு மிக ஆச்சரியமாகத் தோன்றியது.

''1955-இல் ஆந்திராவில் இடைக்காலத்தில் தேர்தல் நடை பெற்றுக்கொண்டிருந்தது. ஒரு வியாழக்கிழமை சுவாமிஜீயை தரி சிக்கப் போனேன். கடைக்குப் போய் தினசரி பத்திரிகை ஒன்று வாங்கி வரச் சொன்னார். நான் வாங்கிவந்தேன். அதை ஏறஇறங்கப் பார்த்துவிட்டு, 'இந்தத் தேர்தலில் கம்யூனிஸ்டுகள் தோற்றுவிடு வார்கள்' என்று சொன்னார். மூன்று நாட்களுக்குப் பிறகு கம் யூனிஸ்டுகள் தோற்றுவிட்டதாகச் செய்தி வந்தது ஆச்சரியமாக

''என்னுடன் சில நண்பர்களையும் சுவாமிஜீயை தரிசிக்க அழைத் துப் போவேன். நண்பர்களுள் ஒருவர் 'நான் பரீட்சையில் தேறு வேனா?' என சுவாமிஜீயைக் கேட்டார். 'அப்பா, அம்மாவும் அப்பா வும் எதையோ தின்று எப்படியோ சம்பாதித்து உனக்குப் பணம் அனுப்புகிறார்கள். நீயோ பணத்தை செலவு செய்துவிட்டுப் பகல் முழுவதும் சென்னையைச் சுற்றிவந்தால் நன்றாக 'பாஸ்' செய்துவிடு வாய்!' என சுவாமிஜீ சொன்னார். அவர் அப்படித்தான் செய்து கொண்டிருந்தார். இருந்தாலும் சுவாமிஜி அவர் கரை ஏறும் வழி யைச் சொன்னார். 'ஒவ்வொரு வியாழக்கிழமையும் இங்கே வா 'பாஸ்' செய்துவிடுவாய்' என்று குருநாதர் அந்த நண்பரிடம் கூறி னார். அவரும் அப்படியே செய்து பரீட்சையில் தேறிவிட்டார்.

''நானும் சுவாமிஜீயிடம் அடிக்கடி 'பரீட்சையில் தேறுவேனா?' என்று கேட்பது வழக்கம். 'நிச்சயமாகத் தேறிவிடுவாய்' என்று

அவர் சொல்லுவார். இருந்தாலும் எனக்கு நம்பிக்கை யில்லை. ஆனால் அவருடைய பேச்சில்மட்டும் நம்பிக்கை உண்டு. சரியாக படிக்கக்கூட என்னால் முடிவதில்லை. மனத்தை ஒருமுகப்படுத்திப் படிக்க முடியாது இதை அவரிடம் சொன்னேன். அவர் ஒரு விபூதி பொட்டலம் கொடுத்துப் 'படிக்கும்போது இதை எதிரில் வைத்துக் கொள்' என்றார். அப்படியே செய்தேன். கூடியமட்டும் சிரத்தை யாகப் படித்தேன். நான் நினைத்திராதபடி ஒரு பரீட்சையை மட்டும் நன்றாக எழுதினேன். பிறகு உடல்நிலை சரியாக இருக்கவில்லை.

'ஹிந்து சட்டம்' பரீட்சை நன்றாக எழுதவில்லை. முகமதியர் சட்டப் பரீட்சையைக்கூட மோசமாகத்தான் எழுதினேன். அந்த சமயத்தில் பாபாவின் பக்தரான ஸ்ரீ கேசவராவ் எனது அறையில் விருந்தாளியாக இருந்தார். பரீட்சைக்குப் போவதற்குமுன் 'பாபாவை நினைத்துக்கொண்டு புத்தகத்தைத் திறந்து வந்த பக்கத்தில் என்ன இருக்கிறதோ அதைப் படித்துக்கொண்டு போ' என்று எனக்கு யோசனை சொன்னார். அப்படியே ஒன்பது தடவை செய்யச் சொன்னார். அப்படியே செய்து படித்துக்கொண்டு போனேன். என்ன ஆச்சரியம்! நான் படித்துக்கொண்டு போன விஷயங்களே பரீட்சையில் வந்தன.

''எனக்கு உடல்நிலை சரியாக இல்லாதிருந்தும் வியாழனன்று சாயி நிலையத்துக்குப் போகப் புறப்பட்டேன். ஸ்ரீ கேசவராவ், ரிஜிஸ்திரார் ஜெனரலுக்கு அந்தரங்க உதவியாளராக இருக்கிறார். அவர் அபீஸிலிருந்து நேராக சுவாமிஜீயிடம் போனார். எனக்கு உடம்பு சரியில்லாததாகச் சொல்லி விபூதி கேட்டிருக்கிறார். 'அந்தப் பையன் இப்பொழுது வந்துகொண்டிருக்கிறான். இருந்தாலும் நீங்கள் கேட்டதால் வாங்கிப் போங்கள்' என்று அவர் விபூதி கொடுத்தாராம். நான் பஸ்ஸிலிருந்து இறங்கும்போது ஸ்ரீ கேசவராவைப் பார்த்தேன் ஆனால் அவர் ஒன்றும் சொல்லவில்லை நான் சுவாமிஜீயிடம் போனேன் 'உனக்கு ஜுரம் எப்படி இருக்கிறது? இரண்டு பேப்பரைப் பாழாக்கிவிட்டாய்; நீ நன்றாக எழுதிய பேப்பருக்குரிய மார்க்குகளை அவற்றோடு சேர்த்துக் கொள்வார்கள்; போகட்டும் போ'' என்றார். 'எனக்குத் தெரியாது' என்று சொன்னேன். 'நாளைக்கு 'அரசியல் சட்டம்' பேப்பர் இருக்கிறது' என்றேன். அவர், 'அதனால் ஒன்றும் பரவாயில்லை, வழக்கம்போல் போ' என்றார். முதல் இரண்டு நாட்களைப்போலவே பாபாவை நினைத்துக்கொண்டு புஸ்தகத்தைத் திறந்து, வந்த விஷயத்தைப் படித்துக்கொண்டு போனேன் பரீட்சை நன்றாக எழுதிவிட்டு வந்தேன். நான் பரீட்சையில் தேறமாட்டேன் என்று எல்லோரும் நினைத்தாலும் நான் பாபாவின் தயவால் தேறிவிட்டேன்.

''விடுமுறையில் ஊருக்குப் போவதற்குமுன் சுவாமிஜீயிடம் போனேன் அவர், 'எனது பரீட்சை எண் என்னவென்று' கேட்டார். சொன்னேன். அவர் விரலால் சுவரில் எழுதிக்கொண்டார். 'மேலே நான் என்ன செய்யட்டும்?' என்றேன். அதற்கவர் 'பரீட்சை முடிவுகள் வரட்டும்' என்றார்.

''முடிவுகள் வந்துவிட்டன. நான் தேர்வு பெற்றேன். கர்நூலில் 'அப்பிரண்டிஸ்'ஸாக இருந்துகொண்டு பட்டமளிப்பு விழாவிற்காக சென்னை சென்றேன். சுவாமிஜீயை தரிசித்து ஒரு பெண்ணுடைய ஜாதகத்தைக் கொடுத்தேன். சுவாமிஜி 'இரண்டு மாதம் பொறு, என்றார். 'அந்தப் பெண் நன்றாக இல்லை என்றார். நான் 'அப்பிரண்டிஸ்'ஸாக இருக்கும்போது ஒருவர் எனக்கு கர்நூலில் வேலை கொடுப்பதாகச் சொன்னார். சுவாமிஜீக்கு எழுதினேன். 'அப்பிரண்டிஸ்' காலம் பூர்த்தியாகட்டும்' என்றார் அவர். எங்கள் வீட்டில் எனது தகப்பனாருக்கும் சிற்றப்பாவுக்கும் தகராறு வந்தது. அதை சுவாமிஜீக்கு எழுதினேன். 'மத்தியஸ்தர் ஒருவரால் அது சரியாகிவிடும்' என்று அவர் பதில் எழுதினார். அப்படியே அவர் எழுதியதுபோல் நடந்தது.

''கர்நூலில் நான் அப்பிரண்டிஸ்ஸாக இருந்தபோது பாபாவின் அருளால் யாரோ ஒருவர் வந்து வேலைத் தேடித்தரும் ஸ்தாபனத்தில் சி. இ. இன்ஸ்பெக்டர் உத்தியோக 'இண்டர்வியூ' நடக்கப் போகிறதென்று சொன்னார். எதிர்பாராக்காமல் எனக்கு 'இண்டர்வியூ' அழைப்பு வந்தது. வந்திருந்த பதினொரு பேர்களுள் நான்கு பேரைத் தேர்ந்தெடுத்து ஐதராபாத்துக்கு அனுப்பினார்கள். அதில் நானும் ஒருவன். ஐதராபாத்தில் இருநூறுபேரை 'இண்டர்வியூ' செய்து முப்பத்திமூன்றுபேரைத் தேர்ந்தெடுத்தார்கள். அதில் என்பெயரும் இருந்தது. பாபாவின் அருள். சுவாமிஜிக்கு எழுதினேன். குருநாதர், 'நீ புது வேலைக்குப் போய்ச்சேர்' என்று பதில் எழுதினார். நான் வேலையில் சேர்ந்தேன். ஒவ்வொரு கட்டத்திலும் அவருடைய அருள் எனக்குக் கிடைத்தது. ஒவ்வொரு முறையும் அவர் எனது நிலையில் மாற்றங்கள் செய்தார். எனது சுகத்திற்கு பாபாவுடைய அருள்தான் காரணம். நான் எது செய்ய வேண்டியிருந்தாலும் மனத்தாலோ, கடிதம் எழுதியோ குருதேவரிடம் சொல்லிக்கொள்வேன்''.

''நான் பாபா பூஜை செய்துகொண்டே, பக்தி மார்க்கத்தை விட்டு வேதாந்த மார்க்கத்தில் இறங்கினேன். வேதாந்தக் கூட்டங்களுக்குப் போனேன், எனது தம்பி டி. ராதாகிருஷ்ண ஒரு வியாழனன்று சுவாமிஜியிடம் போனபோது அவர், 'கிருஷ்ண மூர்த்தி, ஒன்றை நம்பி வேறொன்றை செய்து கொண்டிருக்கிறான்.

அப்படிச் செய்ய வேண்டாமென்று எழுது' என்று அவனிடம் கூறினாராம். அவன் எனக்கு எழுதினான். நான் புரிந்துகொண்டேன். வேதாந்தத்திலிருந்த ஈடுபாட்டை விட்டுவிட்டு பாபாவைப் பூஜிப்பதோடு நிறுத்திக்கொண்டேன். இதை சுவாமிஜியிடம் சொல்லும்படி எனது தம்பிக்கு எழுதினேன். அவன் அந்தக் கடிதத்தை எடுத்துக்கொண்டு, சுவாமிஜியிடம் போனதும் 'இப்பொழுது சரியாகத்தான் இருக்கிறான் தவற்றைத் திருத்திக்கொண்டு விட்டான்' என்று கடிதத்தைப் பார்க்காமலேயே குருதேவர் சொல்லிவிட்டாராம்.

ஒரு தடவை, பூஜையை முடித்துவிட்டு, ஒரு விஷயத்தைப்பற்றி 'இதைச் செய்யலாமா, கூடாதா?' என்று பாபாவின்முன் சீட்டுப் போட்டுப் பார்த்தேன். பாபா 'வேண்டாம்' என்று சொல்லியும் அந்த வேலையைச் செய்தேன். ஆனால் 'பாபா கூறியபடியே செய்கிறேன்' என்று சுவாமிஜீக்கு எழுதினேன். பிறகு எனது தகப்பனார் சுவாமிஜியிடம் போனபோது அவர் 'கிருஷ்ணமூர்த்தி எனக்கு ஒரே புளுகு மயமாகக் கடிதம் எழுதுகிறான்' என்றாராம். 'இந்தச் சின்னஞ் சிறிய விஷயம் அவருக்கு எப்படித் தெரிந்தது? என்று அதிசயித்தேன். பாபாவைப் போலவே இவரும் தம் சீடர்கள் எங்கே இருந்தாலும் அவர்களைப்பற்றிய செய்திகளை எல்லாம் தெரிந்துகொள்கிறார் என யூகித்தறிந்தேன். இப்படியே அவர் என்னை அடிக்கடி சரியான வழியில் திருப்பி நடத்துகிறார்.

1961—செப்டம்பரில் நானும் எனது மனைவியும் சுவவாமிஜியிடம் போனோம். எனது மனைவிக்கு இடுப்பில் வலி இருந்துகொண்டே இருக்கும். அவள் அப்பொழுது கர்ப்பமாக இருந்தாள். சுவாமிஜீயிடம் கூறினாள். "ஒன்றும் பயமில்லை, கர்ப்பிணிகள் நடுப்பகல் வேளையிலும் இரவிலும் வெளியே அலையக்கூடாது, பிறகு ஒன்பதாம் மாதம் வந்தால் போதும்" என்றார். அப்படியே ஒன்பதாம் மாதத்தில் போனோம். விபூதி கொடுத்து கூடவே வைத்திருக்கும்படியும் பிரசவ சமயத்தில் வயிற்றில் தடவிக்கொண்டு சிறிது விபூதியை தண்ணீரில் போட்டுக் குடிக்கும்படியும் கூறினார். அவள் அப்படியே செய்தாள். சுகப் பிரசவம் ஆயிற்று. குழந்தை பிறந்த ஐந்தாம் மாதம் கர்நூலில் டாக்டரிடம் காட்டியபோது, 'மிகக் கஷ்டப் பிரசவமாக இருந்திருக்குமே' என்றார்கள். சுவாமிஜி அவளை ஒன்பதாம் மாதம் வரச்சொல்லியதற்கும் பிரசவத்தைப்பற்றி நாங்கள் கேட்காவிட்டாலும் அவ்வளவு சிரத்தையாக யோசனை சொல்லியதற்கும் காரணம் அப்பொழுதுதான் புரிந்தது. பிறகு இடுப்பு வலிக்காக 'ஆபரேஷன்' செய்யவேண்டி வந்தபோது, 'பரவாயில்லை, செய்யலாம்' என சுவாமிஜி கூறினார்.

சமீபத்தில் நிகழ்ந்த செய்தி. எனது மனைவி ஆறு மாத கர்ப்பிணி. திடீரென்று அவளுக்குக் கருச் சிதைவின் அறிகுறிகள் தெரிந்தன. ஆனால் அப்படியொன்றும் நேரவில்லை. போகட்டும் என்று மருந்து கொடுக்கக்கூடிய மாதமல்ல. கர்ப்பச் சிதைவைத் தடுக்க மருந்து கொடுத்தார்கள். பிறகு எனது மனைவி தொல்லை யின்றி இருந்தாள். நான் சுவாமிஜீக்கு எழுதினேன். "அவளை தாடிபத்திரியிலேயே விட்டுவை. பதினொரு நாட்கள்வரை இந்த விபூதியைக் கூடவே வைத்துக் கொள்ளச் சொல்" என அவர் பதில் எழுதினார். அந்தக் கடிதத்தைப் படித்த சிறிது நேரத்திலேயே ஒரு கஷ்டமும் இல்லாமல் எனது மனைவிக்குக் குறைப் பிரசவம் ஆகி விட்டது. அது அந்தக் குழந்தையினுடைய தலையெழுத்து. அவ ருடைய கடிதத்தைப் பார்க்குமுன் நாங்கள் செகந்தராபாத்துக்குப் பிரயாணப்பட்டுக் கொண்டிருந்தோம். அவளைத் தாடிபத்திரி யிலேயே விட்டு விட்டு என்னை மட்டும் போகச் சொல்லி சுவாமிஜீ ஏன் எழுதினார் என்பது அப்பொழுதுதான் புரிந்தது. சுவாமிஜியின் கடிதத்தைப் பார்த்துவிட்டுப் பிரயாணத்தை நிறுத்தி விட்டோம்.

இப்படி மதிப்பிற்குரிய எனது குருதேவர் குலதெய்வமாகி ஒவ்வொரு கணமும் எங்களைக் காத்து வருகிறார். எங்களுக்கு அவரே சாயிபாபா.

## சுவாமிஜீ மூலம் சாயிலீலை

வாசகர்கள் இதுவரையில் பாபாவைப் பற்றியும் சுவாமி கேசவய்யாஜீயைப் பற்றியும் பக்தர்களுடைய அனுபவங்களைப் பற்றியும் ஓரளவு தெரிந்து கொண்டிருப்பார்கள். சுவாமிஜீயால் பாபாவினது அருளைப் பெற்றுப் பக்தர்கள் ஆனவர்களைக் கணக் கிட்டுச் சொல்லமுடியாது. பக்தர்களுடைய அனுபவங்களைக் கிடைத்த அளவில் கொடுத்திருக்கிறோம். சுவாமிஜியிடம் வந்த பக்தர்களுடைய அனுபவங்களை அக்கறையுடன் கவனித்தால் பாபா உயிரோடு இருந்தபோது அவரால் பக்தர்கள் பெற்ற அனுபவங்கள் நினைவுக்கு வந்தே தீரும். 1941-ஆம் ஆண்டு முதல் பாபா சுவாமிஜீ யின் வாயிலாகப் பக்தர்களைக் காப்பாற்றுகிறார் எனச் சந்தேகமின்றி நிருபணம் ஆகிவிட்டது. சிலருடைய கனவில் பாபா தோன்றி சுவாமி கேசவய்யாஜியிடம் அவர்களை அழைத்துச் சென்றிருக்கிறார். தாமே சுவாமிஜியின் வாயிலாகச் செயலாற்றுவதாகவும் சொல்லி யிருக்கிறார் சாயிலீலையை சுவாமி கேசவய்யாஜீ மறுபடியும் காண் பிக்கிறார். அதில் சந்தேகம் இல்லை. பாபா தம் பக்தர்களுக்குச் சொல் லும் யோசனைகளுக்கும் சுவாமிஜி இப்போது சொல்லும் யோசனை களுக்கும் கடுகளவும் வித்தியாசமில்லாமல் இருக்கின்றன. ஆனால்

சுவாமிஜீ தெரிந்து அப்படிச் சொல்லுவதில்லை. குத்தி வக்கீலான ஸ்ரீ எஸ். சுப்டாராவ் கூறியதுபோல் பூஜை அறையினுள் சுவாமிஜீ சொல்லும் ஒவ்வொரு சொல்லும் பாபாவினுடைய சொல்தான். சுவாமிஜீயினிடம் பாபா ஆவேசித்திருக்கிறார்.

## சொன்ன சொல் காப்பவர்

ஸ்ரீ வி. நாராயணராவ், செகந்தராபாத் (ரிடையர்டு ஜில்லா ரிஜிஸ்திரார்) இவர் தம் அனுபவங்களை இப்படி விவரித்திருக்கிறார். சுமார் 20 வருடங்களுக்குமுன் குண்டூரில் ஒரு நண்பருடைய வீட்டில் முதல் தடவையாக ஸ்ரீசாயிபாபாவின் புகைப் படத்தைப் பார்த்தேன். அந்தப் படம் சீரடி சாயிபாபாவுடையது என எனக்குத் தெரியாது. அவ்வளவு அமைதியான கம்பீர முகத்துடன் "அந்தரங்கத்தின் வெகு ஆழத்தையும் பார்க்கக் கூடிய இரண்டு கண்களையும் கொண்டு, பார்த்தவுடன் உள்ளத்தைக் கவரும் அந்த மகான் யார்" என யோசித்தேன். என் நண்பர் 'அந்த மகான் சீரடி சாயிபாபா' எனச் சொன்னார். மகான்கள் பலருடைய வாக்குகளைத்தான் படித்திருப்பதாகவும் சீரடி சாயிபாபா மட்டும் தனக்குப் பிடித்தவர் எனவும் அவர் கூறினார். அந்தப் படத்தைப் பார்த்தவுடனே எனக்கு ஓர் மனவெழுச்சி உண்டாயிற்று. அது என்னை முழுவதும் கவர்ந்து விட்டது. அந்த மகானைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் உண்டாயிற்று.

"சில நாட்களுக்குப் பிறகு எனக்கு நண்பர் ஒருவர் கடிதம் எழுதினார். நான் அப்பொழுது பொன்னூரில் வசித்து வந்தேன். சாயி பக்த ஸ்ரீகேசவய்யாஜீ தெனாலிக்கு வருகிறார் எனவும் அங்கே அவர் செய்யும் சாயி பூஜைகளுக்கு நான் வர வேண்டுமெனவும் அவர் அழைப்பு விடுத்திருந்தார். கடிதம் கண்ட அன்று சாயங்காலமே நான் தெனாலிக்குப் போனேன். முதலில் அன்று சாயிபக்த கேசவய்யாஜீயைத் தரிசனம் செய்தேன். அப்பொழுதே ரொம்பவும் நேரமாகிவிட்டதால் அங்கே அவரோடு பேசமுடியவில்லை. அவரோடு விஜயவாடாவுக்குப் போனேன். விஜயவாடாவில் பூஜை முடிந்த பிறகு அவரைச் சந்தித்து அவருடைய ஆசியைப் பெற்றேன். அவருடைய எளிமையும் அன்பும் என்னை மிகவும் கவர்ந்துவிட்டன. அவர் முதல்தரமான சாயிபக்தர் என்பது உடனே தோன்றியது. அடுத்த வருடம் 1945—இல் குண்டூரில் ஸ்ரீகேசவய்யாஜீயை இரண்டாம் முறை தரிசித்தேன். அவரிடமிருந்து சாயியின் ஆசியைப்பெற அக்கம்பக்கத்துக் கிராமங்களிலிருந்து கூடக் கூட்டமாகப் பலபேர் குண்டூருக்கு வந்தார்கள். சுவாமிஜீ மூலமாக ஸ்ரீசாயியினுடைய

ஆகிச் செய்தி மூலை முடுக்குகளில் உள்ள கிராமங்களுக்கெல்லாம் எப்படிச் சேர்ந்ததோ என்று ஆச்சரியப்பட்டேன்.

"ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு 1952—ஆம் வருடம் மூன்றாம் முறையாக சுவாமிஜீயைத் தரிசித்தேன். எனக்குச் சென்னையில் உள்ள ரிஜிஸ்திரேஷன் இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஆபீசுக்கு மாற்றல் ஆயிற்று. மூன்றாண்டுகள் அவரோடு சேர்ந்திருக்கும் பாக்கியம் கிடைத்தது. அவர் காரியாலயத்தில் வேலை செய்யும் முறையைக் கவனித்துப் பார்த்ததில் அவர் கலப்பற்ற கர்மயோகி என்பது தெளிவாயிற்று. அலுவலகம் எப்போது தொடங்குமோ அதே நேரத்துக்கு அவர் கணக்காக வந்துவிடுவார். ஒரு நிமிடம்கூட வீணாக்க மாட்டார். வேலையிலேயே மூழ்கிவிடுவார். ஆனாலும் வேலைகளைக் கொஞ்சம் கூடப் பலனை எதிர்பாராமல் செய்து கொண்டு பற்றற்றவராக இருப்பார். வேலை இல்லாதபோது அசையாமல் உட்கார்ந்து தியானம் செய்வார் வேறு யோசனையோ ஆசையோ இல்லாமல் ஒருமுகமாகப்பிடிவாதத்துடன் வேலைகளைச் செய்வார்.

"சுவாமிஜீயை முதலில் தரிசித்ததிலிருந்து நான் சாயிபக்தன் ஆகிவிட்டேன் என தனிப்படச் சொல்லவேண்டிய அவசியம் இல்லை. அடிக்கடி அவருடைய யோசனையை பெற்றுக் கொள்வேன். என் பக்தி மிகவும் ஆழ்ந்ததெனவோ அசையாததெனவோ நான் கூறிக் கொள்ளவில்லை. ஆனாலும் கருணையே உருவான ஸ்ரீபாபா பல சமயங்களில் பேராபத்துகளிலிருந்து காப்பாற்றியிருக்கிறார். என்னை மட்டுமின்றி எனது குடும்பத்தாரையும் கூடப் பிராண அபாயத்திலிருந்து காப்பாற்றியிருக்கிறார். விஷ நோயால் எனக்கு ஒன்பது முறை ஆபத்து நேர்ந்தது. பாபா எனக்கு உயிர்ப்பிச்சை கொடுத்தார். கடந்த இருபது ஆண்டுகளில் எனது வாழ்க்கையை ஒருமுறை திரும்பிப் பார்த்தால் ஸ்ரீபாபா என்னை இரக்ஷித்தும் எனக்கு யோசனை சொல்லியும் காப்பாற்றிவருகிறார் எனும் நம்பிக்கை உறுதியாகிறது. பக்தர்களுடைய விண்ணப்பங்களைக் கேட்டுக் காப்பாற்றும் தெய்வசொரூபன் பாபா என்பதை எனது வாழ்க்கையே நிரூபிக்கிறது. 'என்னை அண்டியவனையும் என்னிடம் அடைக்கலம் புகுந்தவர்களையும் காப்பதே எனது கடமை'' என்று பாபா சொன்ன சொற்கள் எவ்வளவு உண்மை!"

## அது ஜோஸ்யம் அன்று

ஆதோனியில் முக்கியமான பெரிய வியாபாரி ஸ்ரீ ஹெச். வி. மாணிக்க ரெட்டியார் 1963—ஜனவரி முதல் தேதியன்று இப்படி எழுதியிருக்கிறார்:

கௌரவத்துக்குரிய சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜீயுடன் எனக்கு 1942-ஆம் ஆண்டில் அறிமுகம் ஏற்பட்டது. அவர் அப்பொழுது பெனுகொண்டாவில் இருந்தார் அங்கேதான் அவரைச் சந்தித்தேன். நான் அடிக்கடி பெனுகொண்டாவுக்குப் போவேன், என்னைக் கவர்ந்தது சுவாமிஜிதான். இரும்புத் துண்டை காந்தம் கவர்வதுபோல அவர் என்னைக் கவர்ந்தார். அவர் எங்கள் ஊருக்கு வந்து எங்கள் முன்னேற்றத்துக்காக எங்கள் வீட்டில் பலமுறை பூஜை செய்திருக்கிறார். 194‾-இல் அவருடன் சேர்ந்து சீரடிக்குச் செல்லும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. அப்பொழுதுதான் அவர் என்னிடம் "தாங்கள் ஆதோனியில் ஒரு சினிமா கொட்டகை கட்டுவீர்" எனக் கூறினார். சினிமாவிற்கும் எனது வியாபாரத்திற்கும் ஒரு தொடர்பும் இல்லை. அப்போது அந்த யோசனையும் எனக்கு இருக்கவில்லை. பத்து வருடங்களுக்குப் பிறகு 1957-இல் உண்மையாகவே நாங்கள் ஒரு சினிமா கொட்டகைக் கட்டினோம். பத்து வருடங்களுக்குப் பிறகு நடக்கப்போகும் ஒரு செய்தியை சுவாமிஜி எப்படி முன்பே கூறினார் என்று எனக்கு ஆச்சரியமாக இருந்தது. அந்தச் சினிமா கொட்டகைக்குத் துவாரகா மாயியின் ஞாபகார்த்தமாக 'துவாரகா டாக்கீஸ்' எனப் பெயரிட்டோம்.

இப்படியே எனது கல்யான விஷயத்தைப்பற்றியும் கூறினார். கல்யாணப் பெண் யார், எந்த ஊர், என்றைக்குக் கல்யாணம் நடக்கும் எனும் விவரங்கள் எல்லாவற்றையும் கூறினார். பல சம்பந்தங்கள் வந்து போனபிறகு சுவாமிஜி கூறிய இடத்துப் பெண்தான் எனது வாழ்க்கைத் துணைவியானாள்.

ஆதோனியில் உள்ள எங்கள் வீடு புண்ணிய ஸ்தலம்போல் ஆகிவிடும் எனக் கூறினார் சுவாமிஜி அப்படியே பல மகான்கள் எங்கள் வீட்டிற்கு வந்துகொண்டிருக்கிறார்கள். எனக்கு அறிமுகம் இல்லாவிட்டாலும் ஊருக்கு வரும் பெரியோர்கள் எல்லோரும் எங்கள் வீட்டுக்கு வந்து போவார்கள்.

இவையெல்லாம் அந்த சாயிபாபாவின் கிருபை. சுவாமிஜீயின்

## அன்புருவம் — அருட்கடல்

ஆதோனியிலிருந்து 1963—டிசம்பர் 15ஆம் தேதி **கனரா** இண்டஸ்ட்ரியல் அண்டு பாங்கிங் ஸிண்டிகேட் லிமிடெட் மானேஜர் ஸ்ரீ கே. பி. ஷெனாய் அவர்கள் சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜீயைப்பற்றி இப்படி எழுதினார்.

1942 முதல் 1956 வரையில் நான் சென்னையில் இருந்தபோதி லும் 1959இல் தான் எனக்கு சுவாமிஜியைப்பற்றித் தெரிந்தது. அப் பொழுதுதான் எனக்கு நல்ல காலம் பிறந்திருக்க வேண்டும். அப் படிப்பட்ட மகானைக் கண்டு ஆசீர்வாதம் பெறுவதற்குப் பூர்வ புண் ணியம் இருந்தால்தான் கிடைக்கும். ஸ்ரீ சாயிபாபா, சுவாமி கேச வய்யாஜி ஆகியோரின் பக்தரான ஹெச். வி. மாணிக்க ரெட்டி யாரின் வாயிலாக எனக்கு சுவாமிஜீயின் அறிமுகப் பாக்கியம் கிடைத்தது.

திரு. மாணிக்க ரெட்டி எனக்கு ஆப்த நண்பர். 1958-இல் எனக்குச் சென்னை செல்லும் அவசியம் ஏற்பட்டது. இச் செய்தியை அவரிடம் கூறினேன். விடுமுறையில் நான் அங்கேயே இருக்கப் போவதாகக் கூறியவுடன் "அப்படியானால் நீங்கள் நிச்சயமாக சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜீயை தரிசியுங்கள்" என்று அவர் யோசனைக் கூறி, சுவாமிஜீயைப்பற்றி விவரமாகக் கூறினார். சென்னைக்குப் போனதும் சுவாமிஜீயை தரிசிக்க வேண்டுமென்று அங்கேயே தீர் மானித்தேன். போய் சேர்ந்த அன்றே சுவாமிஜீயைக் காண ஷெனாய் நகருக்குப் போனேன்.

எனது அதிர்ஷ்டம்! சாயி நிலையம் காம்பவுண்டுக்குள் நுழையும் போதே சுவாமிஜியுடைய தரிசனம் கிடைத்தது. அவர் வெகு ஆதர வுடனும் அன்புடனும் வரவேற்று உள்ளே அழைத்துக்கொண்டு போனார். நான் யார் என்பது அவருக்குத் தெரியாது. சகஜமாக உட்காரச் சொல்லி எனது க்ஷேம லாபங்களை விசாரித்தார் அந்த அனுபவத்தை எனது வாழ்நாளில் மறக்க முடியாது. அவர் அன்பின் உருவம்; அருள் மயமானவர்; வியாழக்கிழமை பூஜைக்குக் குடும் பத்தாருடன் வருமாறு உத்தரவு கொடுத்தார். அதன்படியே எனது மனைவியுடனும் பெண்களுடனும் வியாழக்கிழமை பூஜைக்கு போனேன்.

பூஜை அறையில் நுழைந்தவுடனே, "இரண்டு மாதங்களில் உங்களுக்கு வேலை உயர்வு கிடைக்கும்" என அவர் என்னிடம் கூறி னார். அவர் சொன்னபடியே நடந்தது. எனது குழந்தைகளைப்பற்றி விசாரித்தார். "எனக்குப் பெண்கள் இருவர்தாம்" என்று கூறி னேன். எனக்கும் எனது மனைவிக்கும் விபூதி, தீர்த்தம், பிரசாதம் எல்லாம் கொடுத்து ஆண் குழந்தை பிறக்கும் என்றும் ஆசீர்வதித் தார். சுவாமிஜியின் ஆசியாலும் சாயி பாபாவின் அருளாலும் இப்பொழுது ஒரு மகன்

## சஸ்திர சிகிச்சை

*கர்நூல் ஜில்லா, கூடூரிலிருந்து சப்ரிஜிஸ்திரார் ஸ்ரீ வை. சத்திய நாராயணராவ் பெற்ற பல அனுபவங்களுள் அவர் முக்கியமாகக் கருதிய அனுபவம் ஒன்றை எழுதுகிறார்.*

1957-ஆம் ஆண்டில் விஷநோய் என்னைப் பற்றிக்கொண்டது. விஜயவாடாவில் பிரசித்திப்பெற்ற டாக்டர்களைக்கொண்டு சிகிச்சைப் பெற்றேன்; பயனில்லை. நோய் மேலும் தீவிரமாயிற்று. எனக்கு மருந்திலும் வைத்தியத்திலும் நம்பிக்கைப் போய்விட்டது. சுவாமிஜி ஒருவரே இந்த நிலையில் காப்பாற்றக் கூடியவர் என்று தீர்மானித்து அவருக்கு விஷயத்தை எழுதினேன். அவர் 1, 2 என இலக்கமிட்டு இரண்டு விபூதிப் பொட்டலங்களை அனுப்பினார். 1 என இலக்கமிட்ட பொட்டலத்து விபூதியை எனக்கு வலிக்கும் பகுதியில் தடவச் சொல்லியும் 2ஆம் பொட்டலத்து விபூதியை பதின்மூன்று மாதங்கள் என்கூடவே வைத்திருக்கும்படியும் அதில் எழுதியிருந்தார். நான் அவர் சொன்னபடியே செய்தேன். படுக்கையிலிருக்கும் காலத்திலும் பாபா என்னுடன் இருப்பதாக உணர்ந்து தைரியம் பெற்றேன். அவர் என்னை வெகு அக்கறையுடன் கவனிக்கிறார் என்ற திருப்தியும் ஏற்பட்டது. எனது நோய் இங்கே தீராதென்பது பாபாவுக்குத் தெரியும். எனது செல்வ நிலை மோசமாக இருந்த போதிலும் அவர் என்னை வேலூருக்கு அனுப்பினார். அங்கே சஸ்திர சிகிச்சை நடந்தது. ஒரு நுரையீரலை எடுத்துவிட்டார்கள். இந்த ஆபரேஷன் நடக்கும்போது, பாபா எனது பக்கத்திலேயே இருந்து நடப்பவற்றை எல்லாம் மேற்பார்வையிடுவதுபோல் எனக்குத் தெரிந்தது. இந்த சஸ்திர சிகிச்சை செய்த அமெரிக்க நிபுணர் டாக்டர் பெட்ஸுக்கு நான் பிழைப்பேனென்ற நம்பிக்கையில்லை. சிகிச்சை சமயத்தில் ரத்த நஷ்டம் அதிகமாகிவிட்டது. பிறகுகூட பல நஷ்டங்கள் ஏற்பட்டன. ஆனால் பாபாவுடைய தயவாலும், சுவாமி கேகவய்யாஜி கூறியதுபோல் நடந்துகொண்டதாலும் நான் பரிபூரண ஆரோக்கியம் பெற்றேன். சுவாமிஜி சொல்லியபடியே எனக்கு பதின்மூன்று மாதங்களில் உடல்நிலை தேறியது.

இரண்டாம்முறை நான் வேலூருக்குப் போக நேர்ந்தபோது சுவாமிஜி நேரிடையாக என்னை ஆசீர்வதித்து அனுப்பினார். பார்வையை என்து மேலேயே நிறுத்தி ஒருகணம் உற்றுப் பார்த்து நெற்றியில் விபூதியிட்டார். "உனது நோய் அடியோடு நீங்கிவிடும்; போய்வா" என்றார். இந்த முறை சஸ்திர சிகிச்சைக்கு நான் அஞ்ச

வில்லை. மிகவும் தைரியமாக இருந்தேன். நானும் எனது குடும்பத்தினரும் சுவாமிஜீக்கு மிகமிகக் கடமைப்பட்டிருக்கிறோம். எப்போதும் நன்றியுடனிருப்போம்.

(14—4—64)

## சாயிபக்திப் பிரசாரம்

நாட்டில் சாயிபாபாவுடைய பக்தர்கள் பலர் இருக்கிறார்கள். ஆகையால் 'நான் இந்த எண்சாண் உடம்பை விட்டுவிட்டாலும் எனது சமாதி உங்களுக்குப் பதில் சொல்லும்' என்று சாயிபாபா பக்தர்களிடம் சொல்லியிருக்கிறார். இப்பொழுதும் அப்படியே நடந்துகொண்டிருக்கிறது. பாபாவின் பக்தர்கள் கணக்கில்லாமல் இருக்கும்போதும் அவருடைய சமாதியே என அடைக்கலம் புகுந்தவர்களுக்கு அபயம் கொடுக்கும்போதும் பாபா, தம் அநுக்கிரகத்தை பக்தர்களுக்கு எட்டசெய்வதற்கு சுவாமிஜி ஏன் கருவியாக எடுத்துக்கொண்டார்' என்று வாசகர்கள் கேட்பது சகஜம். 1939-ஆம் வருடம் ஜூலை முதல் தேதி வரையிலும் சுவாமிஜி சாயிபாபாவைப் பற்றிக் கேள்விப்பட்டதே இல்லை. அப்பொழுது பாபா மகா சமாதி அடைந்து இருபத்தொரு வருடங்கள் ஆகியிருந்தன. இத்தனை வருடங்கள் வரையிலும் பாபாவுக்குத் தம் அநுக்கிரகத்தை மக்களுக்கு எட்டவிட ஒரு கருவி வேண்டுமெனத் தோன்றவில்லையா? 1918-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 15ம் தேதியிலிருந்து 1939-ஆம் ஆண்டு ஜூலை மாதம் முதல் தேதிவரையில் தேவையில்லாதிருந்த கருவி அதற்குப் பிறகு ஏன் தேவைப்பட்டது? பரிபூரணமான நம்பிக்கை இல்லாதவர்களுக்கும், விஞ்ஞானத்தைப் பற்றிக்கொண்டு ஞானத்தைப் பெறாதவர்களுக்கும் இதுபோன்ற சந்தேகங்கள் வருவது சகஜம். அதோடு 1939 வரையிலும் சுவாமிஜீயின் நடையுடை பாவனைகளும், எண்ணங்களும் எப்படி இருந்தன என்பதைத் தெரிந்துகொண்டார்கள். சுவாமிஜீ ஒரே நாளில் பாபாவுடைய தயவுக்கு ஆளாகிவிட்டார்கள் என்றால் நம்பமாட்டார்கள். 'பாபா அருளாலேயே நான் சித்தனானேன்' என்று சுவாமிஜி தெளிவாக சொல்லியிருக்கிறார். பாபாவுடைய அருளுக்குப் பாத்திரரான பிறகு சுவாமிஜி தம் வாழ்க்கை லக்ஷியத்தை விவரிக்கும்போது 1942-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 15ம் தேதியன்று சிக்பல்லா புரத்திலிருந்து சீரடி சாயி சமஸ்தானத்தாருக்கு இப்படி எழுதினார்;

"நீங்கள் அன்புடன் எழுதிய கார்டு கிடைத்தது. நீங்கள் அழகிய மொழியில் எழுதியிருக்கிறீர்கள். நான் அதற்கு தகுதியுள்ளவனல்ல. எனது வாழ்க்கையின் குறிக்கோள் ஒன்றே. எந்தப் பயனையும் விரும்பாமல் கஷ்டப்படும் மக்களுக்கு என்னாலியன்ற அளவு

சேவை செய்வதுதான் எனது லட்சியம். இந்தக் கடமையை நிர்வகிப்பதில் சாயிபாபா எனக்கு வழி காண்பித்துக் கொண்டிருக்கிறார். எல்லோரும் பெரிய மனிதர்களாகவே இருக்கட்டும். நாம் அர்ப்பமானவர்களாகவே இருப்போம்.'

சாயி பக்த ஸ்ரீ கேசவய்யாஜி கடந்த இருபத்துநான்கு வருட காலத்தில் இந்த லட்சியத்திலிருந்து எள்ளளவும் விலகவில்லை. இது போலவே சுவாமிஜி சாயி சமஸ்தானத்தாருக்கு மற்றும் இரண்டு கடிதங்கள் எழுதினார்: 1943ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 24ம் தேதி பெனுகொண்டாவிலிருந்து எழுதியகடிதத்தில் தம் செயல்முறையை இப்படி விவரித்தார். 'பாபாவின் நல்லுரைகளை நாம் செயலில் கொண்டுவருவோம். ஏனென்றால் முடிந்தவரையில் சொல்லாலும் செயலாலும் ஸ்ரீ சாயியினுடைய அறிவுரைகள் அநுசரிக்க வேண்டியதே எனது விருப்பம்' மற்றொரு கடிதத்தில், 'ஸ்ரீ சாயி பாபாவுடைய அருளால் நான் மக்கள் கோடிகளிடம் அன்பும், பணிவும் காட்டும் சாமான்ய வேலைக்காரன் ஆகிவிட்டேன் என்பது உங்களுக்குத் தெரியும். அந்தப் பிரதேசங்களில்கூட என்னால் முடிந்த சேவை செய்யவேண்டுமென்று விரும்புகிறேன். எனக்கு பாபாவின் அருள் கிடைத்ததுகூட உத்தேசிக்கப்பட்ட இந்தக் காரியத்துக்காகதான். என்னுடைய எளிய முறையில் நான் பாபாவுடைய சேவையைச் செய்துகொண்டிருக்கிறேன்' என்று எழுதியிருக்கிறார்.

சாயி பாபா சுவாமி கேசவய்யாஜீயை தம்முடைய அருளைப் பரப்பும் கருவியாக ஏன் தேர்ந்தெடுத்தார் என்று கேட்க ஒவ்வொருவருக்கும் உரிமையுண்டு. அந்தக் கேள்விக்குப் பதில் சொல்லும் தகுதி பாபா ஒருவருக்குத்தான் உண்டு. சந்தேகப் பிரகிருதிகளுக்கு பாபாவே சந்தேக நிவர்த்திச் செய்வார். 1939--ஆம் ஆண்டில் சாயியினுடைய திருவடியில் கலந்த மாதவராவ் தேஷ்பாண்டேயுடன் பாபாவிற்கு இருந்த தொடர்பை ஆராய்ந்தால் இந்தச் சந்தேகங்கள் வெகுதூரம் போய்விடும். 'சாயி—சாமா' தொடர்பை அதற்காகவே ஒரு தனி அத்தியாயத்தில் விவரித்திருக்கிறோம். சாயி ஸத் சரிதத்திலிருந்து இந்த விவரங்கள் சேகரிக்கப்பட்டன.

பக்தர்களுடைய அனுபவங்களை வாசகர்கள் படித்த பிறகு அந்த அனுபவங்களைப் புரிந்துகொள்வதற்கு சுவாமிஜி பற்பல விஷயங்களைப்பற்றி வெளியிட்ட கருத்துக்களை அறிந்துகொள்வது அவசியம். சுவாமிஜி ஸ்ரீ ராம நவமி சந்தர்ப்பத்திலும், மகா சமாதி உத்சவ சந்தர்ப்பத்திலும் ஒவ்வொரு வருடமும் பாபாவின் பக்தர்களுக்கு விசேஷ உபதேசங்களை அனுப்புவார். அதைத் தவிர அடிக்

சபு ஆத்மீகப் பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள்கூட எழுதிக்கொண்டிருப்பார். அந்த உபதேசங்களையும் கட்டுரைகளையும் பாகுபாடு செய்து எழுதப் போகிறேன்.

சுவாமிஜி தமது பூஜை, கட்டுரை இவற்றின் மூலமாக தொண்டு செய்வது தவிர சுற்றுப் பிரயாணத்தின் மூலமாகவும் தென்னாட்டில் சாயிபாபாவின் பக்தியைப் பிரசாரம் செய்திருக்கிறார். பல பட்டணங்களில் பாபாவுக்கு கோயில் கட்டுவித்திருக்கிறார். 1948-இல் பெனுகொண்டாவிலும் 1947-இல் ஏலூரிலும், ரேபல்லிக்கு அருகில் உள்ள இசகபல்லியிலும் ஸ்ரீ சாயி கோயில்களுக்கு சுவாமி கேசவய்யாஜி தாமே தொடக்க விழா நடத்தினார். இந்த உத்சவங்களின் விவரங்களை வாசகர்கள் தெரிந்துகொள்வது அவசியம்; பயன் அளிப்பவை.

## இசகபல்லியில் சாயி கோயில்

ரேபல்லிக்கு அரை மைல் தூரத்தில் உள்ள கிராமம் இசகபல்லி. இங்கே சாயி கோயிலை கட்ட முனைந்தவர்கள், அன்றாடம் உழைத்துக் கூலிபெறும் வண்ணார், குயவர் போன்றவர்கள். இவர்களுக்குப் பணம் கொடுத்து உதவுபவர்கள் யாரும் இல்லை. இவர்களாகவே மிகக் கஷ்டப்பட்டு சாயி கோயிலைக் கட்டினார்கள். இவர்களுடைய திட பக்தியும், திட நம்பிக்கையுமே இவர்களுடைய எண்ணத்திற்கு உருக் கொடுத்தன.

சாயி பக்தர்களின் தலைவரான ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாஜீ இந்த கோயில் துவக்க விழாவை நடத்த பாபா உத்தரவிட்டதுபோல் அங்கீகரித்தார். 1947-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 5-ஆம் தேதி அன்று கோயில் துவக்க விழாவிற்குத் தீர்மானம் ஆயிற்று. அன்று காலையில் ஸ்ரீ கேசவய்யாஜி ரேபல்லிக்கு வந்தார். காலைச் சேவை நடத்தினார். ஸ்ரீ சாயி நாதனுடைய விக்கிரகத்தைப் பக்தர்கள் கிராமத் தெருக்களில் மேள தாளத்துடனும், பஜனையுடனும் ஊர் வலமாக எடுத்துச் சென்றார்கள். குறித்த முகூர்த்தத்தில் சுவாமிஜி பாபாவுடைய பாதுகைகளைப் பிரதிஷ்டை செய்து பூஜை செய்தார். கோயில் நிருவுவதற்காகப் பாடுபட்ட அந்தப் பாமர மக்களைப் பாராட்டினார். பாபா அருள் நிறைந்தவர் என்றும் அங்கே பக்தர்கள் எல்லோரும் பாபாவுடைய அருளுக்குப் பாத்திரர்களாகிவிட்டதாலேயே கோயில் கட்டுதல் அவ்வளவு சுலபமாக நிறைவேறும்படி பாபா அருளினார் என்றும் கூறினார். மற்ற நகரங்களில் இயலாத

ஒரு செயல் (கோயில் கட்டுதல்) இங்கே எளிதில் நடந்துவிட்டதால் பாபா கிராமங்களில் இருப்பதையே மிக விரும்புகிறார் எனத் தெரிகிறது' என்றார். 'பாபாவுடைய பக்தியை மறக்காமல் பாபாவுடைய பெயரைத் தியானிப்பதால் பக்தர்கள் எல்லோரும் கரையேறுவார்களாக' என ஸ்ரீ கேசவய்யாஜி ஆசீர்வதித்தார்.

அன்றிரவு ஸ்ரீ பி. சந்திரசேகர ராவ், ஸ்ரீ சாயி சரிதையை ஹரி கதை செய்தார். இரண்டாயிரம் மக்கள் கூடினார்கள்.

ஆறும் தேதி மாலையில் ஜில்லா கோர்ட் முன்சீப், ஸ்ரீ தாடி கோவிந்த ராஜுலு நாயுடுவின் தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. பக்தர்கள் 1,500 பேருக்குமேல் வந்தார்கள், ஸ்ரீ கேசவய்யாஜி பாபாவின் லீலைகளைப் பற்றிச் சொன்னார்.

''ஸ்ரீ சாயி லீலைகள் முடிவற்றவை; அற்புதமானவை. ஸ்ரீ சாயி மகாவிஷ்ணு சொரூபம். சாயிநாதனுடைய பிறப்பையோ வயதையோ நாம் அறியோம். நான்கு யுகங்களிலும் ஸ்ரீ சாயி சஞ்சரித்தார். சர்வ வல்லமையுள்ள ஸ்ரீ சாயி தாம் விரும்பிய உருவத்தை எடுத்துக்கொண்டிருந்தார். சாயி லீலையைப் பற்றிச் சொல்லவேண்டுமென்றால் அது பாகவதம், ராமாயணம்போல் ஒரு பெரிய நூலாகும். ஸ்ரீ சாயி அன்பே உருவானவர். சாந்த மூர்த்தி. சாயியை நீங்கள் வணங்குங்கள் சுகம் பெறுவீர்கள். அபகாரம் செய்தவர்கள் மேலும் சாயி கோபம் கொள்ளமாட்டார். 'அல்லா அச்சா கரேகா' என்று வாழ்த்துவார். இந்தக் கால நிலையை ஒட்டிப் பார்த்தால் நமக்கு பாபாவைவிட எளிதில் சந்தோஷப்படும் தெய்வம் வேறில்லை. நம்பிக்கையுடன் ஒருமுறை பாபாவை நினைத்தால் போதும்; ஸ்ரீசாயி அருகிலிருந்து உங்களைக் காப்பார். இதனால் மற்ற தெய்வங்களை விட்டுவிட வேண்டுமென்பது எனது கருத்து அல்ல. பாபாகூட எப்பொழுதும் அப்படி சொன்னது இல்லை. எந்த பக்தனுக்கு எந்த பகவானுடைய ரூபத்தை நினைக்க ஆசையாக இருக்கிறதோ அந்த ரூபத்தையே நம்பி ஆராதியுங்கள். 'எல்லா உருவங்களும் தானே ஆனதால் பேதம் இருக்காது' என்று உபதேசித்தார். ராமர், கிருஷ்ணர், மாருதி முதலிய ரூபங்களில் பக்தர்களுக்கு பாபா தரிசனம் கொடுத்திருக்கிறார். உலகத்தில் எல்லா அணுக்களிலிருந்தும் விவகரிக்கும் பகவானை நீங்கள் எந்தப் பெயரிட்டு சேவித்தாலும் குற்றமில்லை. ''ஸர்வ தேவ நமஸ்கார ஸ்ரீ கேசவம் பிரதிகச்சதி''.

ஸ்ரீசாயி நாதனைப்பற்றித் தனிப்பட்ட ஒருவிஷயத்தைச்சொல்ல வேண்டி இருக்கிறது. துஷ்டர்களைக்கூட தண்டிப்பதற்குப் பதிலாக

கருணையே உருவான சாயி நல்ல வழியிலும், நல்ல நடத்தையிலும் புகுத்தி அவர்களைக் கைத்தூக்கிவிடுவார். பக்தியால் பரிசுத்தமான மனத்துடன் சந்தர்ப்பம் கிடைத்தபோது பகவத் நாமத்தைச் சொல்லுங்கள். 'கலே நாம சங்கீர்த்தன': கலியுகத்தில் உபதேசங் களோ ஜெபதபங்களோ அளவிற்கு மீறிய நியமனங்களோ தேவை இல்லை. செய்ய முடிந்தவர்கள் அப்படிச் செய்துகொண்டிருக்கட்டும். ஆனால் இந்தக் காலத்தில் பகவானுடைய கருணையைப் பெறுவதற்கு செய்யும் வேலை முதலியவற்றை விட்டுவிட்டு பகவத் நாமஸ்மரணை செய்ய முடியவில்லையே என்று தவிக்க வேண்டாம். இல்லற தர் மத்தை ஒழுங்காக நடத்திக்கொண்டு சந்தர்ப்பம் கிடைத்தபோது பாபாவை தியானம் செய்துகொண்டிருந்தால் போதும். நினைத்த மாத்திரத்தில் பக்தர்களுக்குத் தரிசனம் கொடுப்பதென்று பாபா கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறார். நம்பிக்கை இல்லாமல் கண்ட படி கதை கட்டுகிறவர்களுக்கு எத்தனை ஜென்மமானாலும் பகவா னுடைய கருணை கிடைக்காது. நம்பிக்கையுடன் சேவித்தால் ஸ்ரீ சாயி அடியார்க்கு அடியவர்; பக்தர்களுக்கு வசப்பட்டவர்; பக்த பராதீனர்.

''பகவானுக்கு ஜாதி மத வேற்றுமைகள் இல்லை. ராம், ரஹீம் இருவரும் ஒன்றுதான். நாம் 'நீள்ளு' என்பதைத் தமிழர்கள் தண் ணீர் என்றும் முஸ்லீம்கள் பாணி என்றும் சொல்கிறார்கள். ஆங்கிலத் தில் 'வாட்டர்' என்கிறார்கள். லத்தீன் மொழியில் அக்வா என்பார் கள். அதாவது ஒரே பொருளைப் பல பெயர்களால் நமக்கு பொருள் விளங்கும்படி வழங்குகிறோம். பகவான் ஒருவனே; மயக்கம்தான் நம்மை வேறுபடுத்துகிறது.

''மத பேதங்களும் விரோதங்களும் கூடாதென்று பாபா போதித்திருக்கிறார். அவர் துவாரகாமாயியில் இருந்துகொண்டு ஒருபுறம் இந்து மத சாஸ்திரப்படி ஹோமங்கள் முதலியவற்றை நடத்திக்கொண்டு மற்றொரு பக்கம் மசூதியைப்போல் அமைத்து நமாஸ் செய்துகொண்டிருந்தார். இப்பொழுதுகூட இந்துக்களும் முஸ்லீம்களும் அருகருகே நின்றுகொண்டு பாபாவைதரிசிக்கிறார்கள். உலக மக்களிடம் அன்பும் சகோதர பாவமும் அவர் அறிவுரைகளின் சாரமாகும். அவைகளை மறந்ததால்தான் புண்ணிய பூமியாகிய நமது பாரத பூமியில் மதச் சண்டைகள் தலை தூக்கின. அவரது போதனைகளை நினைவு கூர்ந்து ஜாதி பேதங்கள் இல்லாமல் மக்கள் எல்லோரும் சகோதர பாவத்துடன் விளங்கிச் சுகம் பெறுவார் களாக,

"ஸ்ரீ சாயி கருணை நிறைந்த உள்ளத்துடன் இந்தக் கோயிலில் எழுந்தருளியிருக்கிறார். பக்தியும் உத்சாகமும் பெருக்கெடுக்க நீங்கள் எல்லோரும் சகல சுகங்களையும் பெறவேண்டுமென்று ஸ்ரீ சாயி நாதனை தியானம் செய்கிறேன்."

சபைத் தலைவர் ஸ்ரீ தாடி கோவிந்தராஜுலு நாயுடுகாரு பேசுகையில் "பக்தியும் பிடிவாதமும் உள்ள இடத்தில் வறுமையைப் பற்றியோ பணத்தைப்பற்றியோ பேச்சே எழாது. பகவான் பிரசன்னமானவர். பணக்காரர்களும், கல்வியறிவு மிக்கவர்களும் நிறைந்த பட்டணத்து மக்களால் கூட சாயி கோயில் கட்ட முடியவில்லை. உடல் உழைப்பையே ஆதாரமாகக் கொண்டு வாழும் ஏழை பாமர மக்களால் கோயில் கட்ட முடிந்ததே இதற்கு நிதர்சனம் ஆகும். பாபாவின் கருணைக்குப் பாத்திரராய் பக்தர்களுள் மேம்பட்டவர் எனத்தகும் ஸ்ரீ கேசவய்யாஜி, கோயில் தொடக்க விழாவை நடத்தியது இசகபல்லி செய்த பாக்கியமாகும். அவர் தொடங்கிய இந்தக் கோயில் எப்பொழுதும் பக்தர்களுக்கு ஆதரவாய் விளங்கும். இங்கே இருந்துகொண்டு பாபா தம் லீலைகளைக் காண்பித்து பக்தர்களைக் காப்பாற்றுவார் என்பதில் கடுகளவும் சந்தேகமில்லை. இந்தப் பகுதியில் உள்ளவர்கள் பக்தியுடன் பாபாவிற்கு தொண்டு செய்துகொண்டு சுகமாக இருப்பார்களாக" என்றார் அவர்.

ஏழாம் தேதி காலை முதல் பகல் இரண்டு மணிவரையில் பக்தர்கள் ஸ்ரீ கேசவய்யாஜீயை தரிசித்தார்கள். அன்றிரவு ஏழைகளுக்கு சாப்பாடு போட்டார்கள். முதல் நாள் இரவு, ஸ்ரீ ஆஸால கிருஷ்ண ரெட்டி குழுவினர் ஸ்ரீ சாயி லீலையை வில்லுப்பாட்டுப்போல் கதை செய்தார்கள்.

## ஸ்ரீ சாயி துணை வருகிறார்

இந்தக் கோயில் தொடக்க விழா சமயத்தில் பாபா தமது லீலையைக் காண்பித்துவிட்டார். ஸ்ரீ கேசவய்யாஜீயை, பாபாவே இவ் விழாவிற்கு வரவழைத்தது போலவே இருக்கிறது. இந்தச் செய்தியை உள்ளது உள்ளபடி சொல்கிறோம்.

கோயில் ஆரம்பவிழா நிகழ்ச்சிகளை நடத்த ஸ்ரீ கேசவய்யாஜீ 5ம் தேதியன்று காலை தெனாலிக்கு வந்து அங்கிருந்து ரேபல்லி வர வேண்டியிருந்தது. 5ம் தேதி காலையில் தெனாலிக்கு வருவதாக அவர் தந்தி கொடுத்திருந்தார். ஸ்ரீ கேசவய்யாஜீயை தெனாலியில் சந்தித்து ரேபல்லிக்கு அழைத்து வருவதற்காக 4ம் தேதி மாலை

ரேபல்லியிலிருந்து சேவகனை தெனுலிக்கு அனுப்பினர். அவனுக்கு அன்றிரவு ரெயில் தவறிவிட்டது. ரேபல்லியிலிருந்து தெனுலிக்கு அதுதான் கடைசி ரெயில். அச்சேவகனுக்கு ஒன்றும் புரியவில்லை. ஸ்ரீ கேசவய்யாஜீயை அன்று விடிய ஜாமத்தில் தெனுலியில் சந்திக்க வேண்டுமென்பதே அவனுடைய லட்சியம். தண்டவாளத்தின் ஓரமாகவே நடக்கத் துவங்கினல் 21 மைல் கடக்க வேண்டும்! அவனும் பக்தனுனபடியால் வேறு நினைவில்லாமல் மனத்தை பாபா மீதும் பார்வையை தெனுலியில் இறங்கும் ஸ்ரீ கேசவய்யாஜீமீதும் இருத்தி நடக்கத் துவங்கினன். தயக்கமில்லாமல் நடந்தாலும் நள்ளிரவில் ஜம்பனி ஸ்டேஷனுக்குத்தான் போக முடிந்தது. இன்னும் ஏழு மைல் நடந்தால்தான் தெனுலியை அடைய முடியும். ஒரே உறுதியுடன் பாபாவின்மேல் நம்பிக்கை வைத்து நடந்து கொண்டிருந்தான். நேரே ஒரு மைல் சென்றுன்; ரயில்வே லைனுக்கு இருபுறமும் அடர்ந்த பனைமரங்கள் கும்மிருட்டாக இருந்தது. அவனுக்கு தைரியம் குறைந்து பயம் ஏற்பட்டது. 'பாபா! பாபா!' என்று கூக்குரலிடத் துவங்கினன். அவன் அதிர்ஷ்டவான்; கூப்பிட்ட அடுத்தக் கணத்தில் பாபா வந்தார்! வராமல்தான் இருப்பாரா? பாபா அறுபது நாழிகையும் எந்த நிலையிலும் பக்தர்களைக் காப்பாற்றிக்கொண்டே இருக்கிருர் அல்லவா?

'பாபா, பாபா!' என்று கூப்பிட்டவுடனே ஒரு கிழவர் வந்தார். குடியானவனைப்போல் முழங்காலுக்குமேல் கட்டிய பழைய கிழிச்சல் வேட்டியுடனும் மேலே பல துணிகளால் தைத்த ஒரு போர்வையுடனும் கையில் கோலுடனும் பிரத்தியட்சமானர். "யாரையா நீ! இந்த பாதி ராத்திரி வேளையில் இப்படி எங்கே போகிருய்? இந்த வேளையில் வழி நடக்கக் கூடாது. இரண்டு மணி ஆனபிறகு எழுந்து போகலாம். அருகிலேயே ஊர்ச் சாவடி இருக்கிறது. அங்கேபோய் படுத்துக்கொள். இப்பொழுதுபோனல் ஆபத்து நேரும்" என்று சொல்லி சேவகனை ரயில் பாதையிலிருந்து இறக்கி அருகிலிருந்த சாவடிக்கு அழைத்துக்கொண்டு போனர். அவனை அங்கே படுக்க வைத்துவிட்டு, "நான் வயலுக்குப் போகிறேன். நான் இங்கே வந்து படுத்திருந்து நீ போகவேண்டிய நேரத்திற்கு எழுப்புகிறேன்" என்று சொல்லிவிட்டு போய்விட்டார். நடந்து நடந்து அலுத்துவிட்ட சேவகன் தலையை கீழே சாய்த்தவுடன் நன்ருகத் தூங்கிவிட்டான். சரியாக இரண்டு மணிக்கு அந்தக் கிழவர் திரும்பி வந்து "இனி எழுந்திரப்பா. இப்பொழுது புறப்பட்டால் ரயில் வரும் நேரத்திற்குத் தெனுலி போய்விடலாம்; பயமில்லை" என்று சொல்லி அச்சேவகனேடு பத்தடி தூரம் நடந்து வழியனுப்பிவிட்டு, "நான் களத்திற்கு போகிறேன்" என்று சொல்லி மேட்டிலிருந்து இறங்கிப் போய்விட்டார். கல்வியறிவற்ற அச்சேவகனுக்கு தன் வேலையை

விட்டு முன்பின் யோசிக்கும் திறமை இல்லை. பரபரவென்று நடந்து போனான். ரயில் வரும் நேரத்தில் தெனாலிபோய்ச் சேர்ந்துவிட்டான். அங்கே ஸ்ரீ கேசவய்யாஜீயை சந்தித்து நடந்த கதையைச் சொன்னான்.

"அப்பா, நீ பாக்கியசாலி. பாபா உன்னுடனிருந்து உன்னைத் தூங்கச் செய்து உன் பின்னால் நடந்து உன்னை அனுப்பி இருக்கிறார். உனது புண்ணியம் அளவற்றது" என்று ஸ்ரீ கேசவய்யாஜி சொன்னவுடன் சேவகனுக்குக் கண்ணீர் ஆறாகப் பெருகியது. "நான் எவ்வளவு முட்டாள். இதைத் தெரிந்துகொள்ளாமல் போய்விட்டேனே" என்று துக்கித்தான். ஸ்ரீ கேசவய்யாஜி திரும்பிவந்தபோது அப்பிரதேசத்தை ஆராய்ந்து பார்த்தார். சுற்றுப் புறங்களில் கண்ணுக்கு எட்டியமட்டும் களம் எதுவும் இல்லை. மனம் கேட்காமல் மறுபடியும் காலை வண்டியில் போய் ஐம்பனியில் இறங்கி ஆராய்ந்தார். அப்பகுதியில் ஜனங்களோ கொட்டாய்களோ காணப்படவில்லை.

—ஸாயி ஸுதா, ஏலூரு

சாயிநாதரிடம் நம்பிக்கை உள்ளவர்களுக்கு இந்த நிகழ்ச்சி எவ்வளவோ விஷயங்களை விளக்கும். பாபா ஏழைகளைக் காப்பதையே விரதமாகக் கொண்டவர் என்பதையும் தம் பக்தரான ஸ்ரீ கேசவய்யாஜி திண்டாடக் கூடாதென்று அச்சேவகனை தெனாலிக்கு ரயில் நேரத்திற்கு சேர்ப்பித்தார் என்பதையும் உணரலாம். ஸ்ரீ சாயி லீலையைப் பக்தி சிரத்தையுடன் ஆராய்ந்தால் இதுபோன்ற பல நிகழ்ச்சிகளைக் காணலாம்.

## சாயி லீலை

கண்டேஷ் ஜில்லாவில் ஜாம் நகரில் இருந்த நாநாசாகேப் சந்தோர்க்கரின் பெண் பிரசவ வேதனைப் பட்டபோது பாபா ராம்கிர் புவாவின் மூலம் விபூதி அனுப்பிய கதையை வாசகர்கள் நினைவு படுத்திக்கொண்டால் இந்த நிகழ்ச்சியின் விசேஷம் எளிதில் புரியும். வாசகர்களின் வசதிக்காக அச்செய்தியைச் சுருக்கமாக இங்கே எழுதுகிறேன். சீரடியில் ராம்கிர் புவா எனும் பக்தர் ஒருவர் இருந்தார். பாபா அவரை 'பாபுகிர்புவா' என்றுதான் கூப்பிடுவார். அவர் கண்டேஷ் ஜில்லாவிலுள்ள கிராமத்திற்குப் புறப்பட்டார். அதே சமயத்தில் நாநாசாகேப் சந்தோர்கரின் மகளான தாய் என்பவள் பிரசவிக்க முடியாமல் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தாள். நாநா செயலற்றவராய்ப் பாபாவின் உதவியை வேண்டினார். பாபா அவருக்கு விபூதியும் மாதவ ஆதகர் இயற்றிய ஆரதீப் பாட்டையும்

அனுப்ப நினைத்தார். அது ராம்கிர் புவா மூலமாகவே சேரவேண்டும். அவரிடம் பாபா 'விபூதியையும் ஆரதிப் பாட்டையும் நாநாவுக்குக் கொடுக்க வேண்டும்' என்றார். ''என்னிடம் இரண்டு ரூபாய்களே இருக்கின்றன. ஜலகான் வரையிலும் போக ரயில் சார்ஜுக்கே போதும் போதாதுமாக இருக்கிறது. அங்கிருந்து ஜாம் நகருக்கு முப்பது மைல் போகவேண்டுமே எப்படி?'' என்று ராம்கிர் புவா பாபாவைக் கேட்டார். பாபா அவருக்குப் பணம் கொடுக்கவில்லை. ''உனக்கு எந்தத் தொந்தரவும் இருக்காது; எல்லாம் ஏற்படும்'' என்றுமட்டுமே பாபா சொன்னார். ராம்கிர்புவா, பாபாவின் பேச்சில் நம்பிக்கை வைத்து சீரடியிலிருந்து புறப்பட்டு இரவு இரண்டு மணிக்கு ஜலகான் சேர்ந்தார். ரயிலிலிருந்து இறங்கும் போது இரண்டே அணுக்கள்தான் இருந்தன. என்ன செய்வதென்று தெரியாமல் தவித்தபோது 'சீரடியிலிருந்துவந்த பாபுகிர்புவா யார்' என்று யாரோ கூப்பிட்டது காதில் விழுந்தது. 'அம்மாடி' என்றவண்ணம் ராம்கிர்புவா அந்த ஆளிடம் சென்று ''நான்தான்'' என்றார். தன்னை நாநாசாகேப் அனுப்பியதாக ஒரு சேவகன் சொல்லி அழகான ரெட்டை குதிரை டாங்காவில் அவரை ஏற்றிக் கொண்டான். டாங்கா வெகு வேகமாக ஓடியது. விடியும்போது அவர்கள் ஓர் ஓடைக்கருகே சென்றார்கள். டாங்காவாலா குதிரைகளுக்குத் தண்ணீர் காட்டினான். அவன், 'பலகாரம் சாப்பிடுவோம்' என்று ராம்கீர்புவாவை அழைத்தான். அவனது தாடி மீசையைக் கண்ட ராம்கிர்புவா அவன் முஸ்லீமாக இருக்கலாம் என்று சந்தேகித்தார். ''நான் ஹிந்துவேதான். க்ஷத்திரியன். எங்கள் ஊர் கர்ஹவால் நாநாசாகேப் இந்தப் பலகாரங்களை அனுப்பினார். நீங்கள் யோசிக்கவேண்டாம்'' என்று அவன் சொன்னான். பலகாரம் முடிந்தபின் டாங்காப் பிரயாணம் தொடங்கியது. சூரியோதயம் வேளையில் அவர்கள் ஜாம் நகருக்கு வந்துவிட்டார்கள். ராம்கிர்புவா சிறுநீர் கழிக்க டாங்காவிலிருந்து இறங்கினார். திரும்பி வந்தபோது டாங்காவைக் காணோம். அந்த ஆளையும் காணோம். அவர் ஆச்சரியம் அடைந்தார். அருகில் இருந்த கச்சேரிக்குச் சென்று நானா சாகேப்புடைய இருப்பிடத்தை அறிந்துகொண்டார். நானாசாகேப்பைச் சந்தித்து சீரடியிலிருந்து வருவதாகச் சொல்லி பாபா கொடுத்த விபூதியையும் ஆரதிப் பாட்டையும் நானாவிடம் கொடுத்தார். நானாவின் மகளுடைய நிலைமை அப்பொழுது மிக ஆபத்தில் இருந்தது. நானா தம் மனைவியை அழைத்து அவளிடம் விபூதியைக் கொடுத்து ஆரதிப் பாட்டைப் பாடச் சொன்னார். அவள் தண்ணீரில் விபூதியைக் கலந்து மகளுக்குக் கொடுத்து ஆரதிப்பாட்டையும் பாடினாள். நானாவின் மகள் சில நிமிடங்களுக்குள் சுகமாகப் பிரசவித்தாள். ராம்கிர் புவா நானாவிடம் விடை பெற்றுக் கொள்ளும்போது, தனக்காக அவர் டாங்காவையும் ஆளையும் அனுப்பியதற்காக நன்றி

கூறினார். சீரடியிலிருந்து ஆள் வருவதே தமக்குத் தெரியாதென்றும் வண்டி, ஆள், உணவு எதையுமே தாம் அனுப்பவில்லையென்றும் நாநா சொன்னார். பக்தர்கள் இருவரும் ''பாபாவின் லீலை'' என்று சாயியைத் துதித்தார்கள்.

இதுதான் கதை. இந்த இரண்டு கதைகளுக்கும் உள்ள ஒற்றுமையை வாசகர்கள் யூகித்துக்கொள்ளலாம். இதனால் நூறு மைல் தொலைவிலுள்ள பக்தர்களுடைய துயரத்தை உணர்ந்து வேண்டியவுடன் தேவையான உதவியைச் செய்து, பாபா நமக்கு கஜேந்திர மோட்சக் கதையை நினைவூட்டுகிறார்.

## ஏலூரில் கோயில்

இசகபல்லியில் சாயி கோயில் விழாவை நடத்திய நான்கு மாதத்திலேயே ஸ்ரீ கேசவய்யாஜீ ஏலூரில் சாயி கோயில் துவக்கவிழாவை நடத்தினார். விழாவின் நிகழ்ச்சிகளைப்பற்றி சாயி ஸுதா (ஏலூர்) 11, 12ம் சஞ்சிகைகளில் வெளியிட்டிருக்கிறார்கள்.

ஸ்ரீ ஆத்மகூரி மார்க்கண்டேயுலு பிறருடைய உதவியை எதிர்பாராமல் பக்தி மிகுதியால் தம் சொந்த நிலத்தில் பாபா தயவால் கோயில் கட்டினார். துவக்க விழாவிற்கு 1947—ஜூன் முதல்தேதி காலை 8-10 மணிக்கு முகூர்த்தம் நிச்சயிக்கப்பட்டது. துவக்க விழாவை நடத்த ஒப்புக்கொண்ட பாபா பக்தர் தலைவர் சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜி முதல்நாளே ஏலூருக்கு வந்தார்.

ஜூன் 1ம் தேதி காலை, ஸ்ரீ சாயி பாபாவின் விக்ரகத்தை ஸ்ரீ கேசவய்யாஜீயும் மற்ற பக்தர்களும் மேள தாளத்துடன் ஊர் வலமாக செய்வித்தார்கள். சரியாக 8–10 மணிக்கு ஸ்ரீகேசவய்யாஜி பாபாவை பிரதிஷ்டை செய்தார். பிறகு அங்கே கூடியிருந்த ஆயிரக் கணக்கான பாபா பக்தர்கள் பாபாவைத் தரிசித்தார்கள். மாலை ஆறு மணிக்கு ஸ்ரீ தாடி கோவிந்தராஜுலு நாயுடுவின் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

ஸ்ரீ கேசவய்யாஜி இப்படி பிரசங்கம் செய்தார்: ''பாபா சாட்சாத் விஷ்ணு சொரூபம். பாபா என்றாலும் கிருஷ்ணன் என்றாலும் ஒன்றுதான். வித்தியாசம் இல்லை. எல்லாம் வல்லவரும் எங்கும் நிறைந்தவரும் ஆன பகவான் ஒருவரே. அவரை நமக்குத் தோன்றிய முறையிலும், பிடித்த வழியிலும் நம்பிப் பலவகையான பெயர்களால் குறிப்பிடுகிறோம். நாம் வெவ்வேறு பெயர்களிட்டு வணங்குவதால் வேறு வேறு தெய்வங்கள் உண்டென்று கருதுவது மயக்கம். ஒவ்வொரு மதமும் கடவுள் ஒருவரே என்றுதான் சொல்லுகிறது.

அப்படி இருக்கையில் வெவ்வேறு மதத்தினர் சண்டையிட்டுக்கொள்வதில் அர்த்தம் இல்லை. பொருளற்ற வித்தியாசங்களைக் கற்பனை செய்து கொண்டு, தங்களுக்குள்ளேயே சண்டையிட்டு வீணுகத் துன்புறுகிருர்கள். உலகத்தில் பெய்யும் மழையின் ஓவ்வொரு துளியும் எத்தனை வழியில் பிரிந்து சென்ருலும் கடைசியில் கடலில்தான் கலக்கிறது. அதுபோல எந்த மதத்தினராளுலும் எந்தப் பெயரில் கடவுளைத் தொழுதாலும் எல்லோரும் அந்தப் பரமாத்மாவையே சேருவார்கள்.

விக்கிரக ஆராதனையையும் சகுணேபாசனையையும் குறை கூறுவது எல்லையற்ற குற்றமாகும். நமக்குத் தாகம் எடுக்கும்போது நீர், தண்ணீர், பாணி, வாட்டர் என்ற எந்தப் பெயரிளுலும் தண்ணீரைக் குடித்தால் தாகம் தீருகிறது. அப்படியே கடவுளை எந்தப் பெயரால் வேண்டினுலும் சரி மனமுவந்து காப்பார். 'ஏகமேவ அத்விதீயோ ப்ரம்ம' கடவுள் ஒருவரே; உலகங்கள் பலவற்றிலும் தாளுய் விளங்குபவர் அவர். அந்த பரமாத்மாவை நாம் நம் அற்ப புத்தியால் பிரித்துப் பார்ப்பது பெருந் தவறு. நாம் எந்த மதத்தைச் சார்ந்தவராய் இருந்தாலும் எந்தப் பெயரால் கடவுளை வணங்கிளுலும் பரவாயில்லை. அசையாத பக்தியுடனும் முழு நம்பிக்கையுடனும் பகவானை ராமா என்ருே அல்லா என்ருே ஏசு என்ருே வேறு பெயர்களை நினைத்தோ வணங்கினுல் போதும். இதைத்தான் பாபா நமக்குச் சொல்லியிருக்கிருர். பாபா நினைவில் ஆழ்ந்து சுகம் பெறுவோமாக. மதச் சண்டைகள் இல்லாமல் வாழ பாபா நமக்கு ஞானத்தைக் கொடுத்துக் காப்பாராக.''

ஸ்ரீ கோவிந்த ராஜுலு நாயுடு தம் தலைமைப் பிரசங்கத்தில் இப்படிச் சொன்ஞர். ''பரமாத்மாவான ஸ்ரீ பாபா, இந்த உலகில் மக்கள் கடவுள் பணியை மறந்து மத மாத்சரியங்களுக்கு உள்ளாகி சிற்றின்பத்தில் ஈடுபட்டு, இம்மைச் சுகங்களே எல்லாம் என்று நம்பி மூடர்களைப்போல் நடமாடி வந்ததால், அவர்களைக் கரையேற்றி ஞாேதயம் செய்விக்க அவதரித்த ஸ்ரீ மகா விஷ்ணு சொரூபம். பாபாவிற்கு பக்தன் ஆளுல் துச்சமான ஆசைகள் எல்லாம் கை கூடும் என்று சிலர் சொல்லுகிருர்கள். அது மிகத் தவறு. பாபா, லீலா மானுஷ ரூபமான அவதார புருஷர். அவர் கரடி வித்தை செய்யவில்லை. மற்ற எல்லா அவதாரங்களையும்போல் இந்த அவதாரத்திலும் கடவுளிடம் நம்பிக்கையை உண்டாக்க சில லீலைகள் புரிந்தார். பாபாவின் போதனைகளை மறந்துவிட்டு நாம் துன்புறுகிருேம். பாபாவின் உபதேசங்களை அறிந்து, உலக மக்கள் எல்லோரையுமே நேசித்து, சகோதர பாவத்தை மறக்காமல் எப்போதும்

சாது சேவை, சாதுக்களைப்பற்றிய நினைவு, நல்லோர் சேர்க்கை, தெய்வ பக்தி ஆகியவற்றைப் பெற்று பாபாவின் நினைவில் மூழ்கு வோம்.''

மறுநாள் காலையில் ஸ்ரீ கேசவய்யாஜீ ஸ்ரீமார்க்கண்டேயுலுவின் வீட்டில் பாபா பூஜை செய்தார். அங்கே கூடிய ஆயிரம் பக்தர் களுக்கு தீர்த்தப் பிரசாதங்கள் கொடுத்தார். பக்தர்கள் பலர் அவரவர் கஷ்டங்களையும் சந்தேகங்களையும் ஸ்ரீ கேசவய்யாஜீயிடம் சொல்லிக்கொண்டார்கள். பாபாவின் அருளால் அந்த பக்த சிகா மணி தக்க முறையில் சாயியின் உத்தரவுப்படி பக்தர்களை ஆசீர் வதித்தார்.

இந்த உத்சவத்தைக் காண வேற்றூர்களிலிருந்து வந்தவர்கள் ஸ்ரீ கேசவய்யாஜீயை அவரவர்கள் ஊர்களுக்கு அழைத்தனர். உடல்நிலை சரியில்லாததால் அவர் இந்த அழைப்புக்களை ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

## தென் சீரடி

பிறகு சுமார் ஒரு வருடத்தில் ஸ்ரீ கேசவய்யாஜி பெனுகொண் டாவில் சாயி கோயிலைக் கட்ட ஏற்பாடு செய்தார். 1948ம் ஆண்டு மே மாதம் 23ம் தேதியன்று சென்னை அரசாங்கக் கைத்தொழில் மந்திரியாக இருந்த ஸ்ரீ எச். சீதாராம ரெட்டி துவக்க விழாவை நடத்தினர். இந்த உற்சவ சமயத்தில் மே 21, 22, 23 தேதிகளில் பஜனைகள், பூஜைகள் முதலியன விமரிசையாக நடந்தன. இந்த உத்சவத்தின் சிறப்புக்களை பெங்களூர் 'டெய்லி நியூஸ்' பத்திரிகை யும், சென்னை 'ஸண்டே டைம்ஸ்' வார பத்திரிகையும் வெளியிட் டன. உத்சவத்தின்போது சுவாமி சிவானந்தா அனுப்பிய செய் தியை வாசகர்கள் ஏற்கனவே படித்திருப்பார்கள். கோயில் துவக்க விழாவைப்பற்றிய விவரங்களையும், கோயிலைப்பற்றி பக்தர்கள் சிலர் அறிவித்த அபிப்பிராயங்களையும் முற்பிறவித் தொடர்பால் ஸ்ரீ பாபா ஆஞ்சநேயர் வடிவில் பெனுகொண்டாவிற்கு வந்து ஸ்ரீ கேசவய்யாஜீயிடமிருந்து பிரசாதம் வாங்கிக்கொண்டதையும் பற்றி இங்கே எழுதுகிறேன்.

'பெனுகொண்டாவில் மே 21 முதல் 23 வரையில் சாயி பாபா வின் விழா நடந்தது. அம்மூன்று நாட்களும் ஊர் கலகலவென்று இருந்தது. மக்கள் ஆனந்த பரவசமடைந்து தமது கஷ்டங்களை மறந்து பாபாவின் உத்சவத்தில் கலந்துகொண்டார்கள். இந்தப் புது விழாவைக் காண பல்வேறு இடங்களிலிருந்து பாபாவின் பக்தர்

கள் வந்தார்கள். சாயிநாதனுடைய ஆணைப்படி பக்தர்கள் இந்தக் கோயிலை கட்டியதாகத் தெரிகிறது. சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜீ அங்கிருந்து சென்னைக்கு போகவேண்டி இருந்ததால் சுவாமிஜி இல்லாத குறையை நீக்க பாபாவே பெனுகொண்டாவிற்கு வந்திருக்கிறார். அந்தக் கோயில் துவக்க விழா சுவாமிஜி பெனுகொண்டாவை விட்டுப் புறப்படுவதற்கு ஒரு மாதத்திற்கு முன்புதான் நடந்தது. சுவாமிஜி 1941—ஏப்ரல் 7ம் தேதியன்று பெனுகொண்டாவிற்கு வந்தார். 1947ம் ஆண்டில் குண்டூர் ஜில்லாவில் எங்கோ ஒரு மூலையில் இருக்கும் கிராமத்தில் சாயி கோயிலுக்குத் துவக்க விழா நடத்தினார். பெனுகொண்டா பக்தர்கள் மனம் வைத்திருந்தால், ஆசைப்பட்டிருந்தால் வெகு காலத்திற்கு முன்பே இக்கோயில் ஏற்பட்டிருக்கும். சுவாமிஜி இருக்கும்போது தாமும் அங்கே இருக்க வேண்டிய அவசியம் இல்லை என்று பாபா 1948—மே வரையிலும் பெனுகொண்டாவிற்கு வரவில்லை. சுவாமிஜி புறப்பட்டுப் போய் விட்டதால் ஏற்பட்ட சூன்யத்தை பாபா தாமே வந்து நிரப்பினார்.

பாபாவின் உத்சவம் மே 21ம் தேதி காலையில் பூஜை, நாமஜபம், பஜனை, ஹரிகதை இவற்றுடன் துவங்கியது. 22ம் தேதியும் இப்படியே பஜனை, ஹரிகதை, காலட்சேபங்களோடு நடைபெற்றது. 23ம் தேதியன்று கோயிலில் பாபாவின் பாதுகை பிரதிஷ்டை, படத் திறப்புவிழா முதலிய நிகழ்ச்சிகள் வெகு விமரிசையாக நடைபெற்றது.

ஸ்ரீ கேசவய்யாஜி பாபாவின் பாதுகைகளை எடுத்துக் கொண்டிருந்தார். பஜனைகளுடனும், கர்நாடக சங்கீத கீர்த்தனைகளுடனும் நகரத் தெருக்களை வலமாக வந்து கோயிலை அடைந்தார்கள். பாதுகா பட்டாபிஷேகம்போல் இருந்தது அந்தக் காட்சி. சுவாமிஜீ வேதோக்தமாக பாதுகைகளைக் கோயிலில் பிரதிஷ்டை செய்தார். மந்திரி ஸ்ரீ சீதாராம ரெட்டி இந்த உத்சவத்திற்கு வந்திருந்தார். ஆயிரக்கணக்கான பக்தர்கள் பாதுகை பிரதிஷ்டை உத்சவத்தை பக்தியுடனும் சரணாகதி மனப்பான்மையுடனும் தரிசித்தார்கள். ஸ்ரீகேசவய்யாஜீ மந்திரியவர்களுக்கு பூமாலை அணிவித்து வரவேற்பு கூறினார். பாதுகை பிரதிஷ்டை முடிந்ததும் ஸ்ரீ கேசவய்யாஜி மந்திரிக்கும் மற்ற பக்தர்களுக்கும் தீர்த்தப் பிரசாதங்கள் கொடுத்த பின் காலை நிகழ்ச்சிகள் பூர்த்தியடைந்தன.

கோயிலில் பாபாவின் படத் திறப்பு விழா நிகழ்ச்சி மாலை நேர பிரார்த்தனையுடன் தொடங்கியது. மந்திரியவர்களுக்குப் பல ஸ்தாபனங்களில் உள்ளவர்கள் வரவேற்புப் பத்திரம் சமர்ப்பித்தார்கள். பெனுகொண்டா பஞ்சாயத்தார் சுவாமிஜீயின் சுயநலமற்ற

சேவையைப் புகழ்ந்து சன்மானப் பத்திரம் சமர்ப்பித்தார்கள். இக்கோயில் கட்ட முக்கிய காரணமாக இருந்த சுவாமிஜீக்கும், கட்டுவதற்கு அதிகமாக உதவிய ஸ்ரீ மூலா நாராயண சுவாமிக்கும் பெனுகொண்டா மக்கள் மிகவும் கடமைப்பட்டிருக்கிறார்கள் என்று அந்த சன்மானப் பத்திரத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது.

கோயில் கட்ட இருபதாயிரம் ரூபாய் செலவாயிற்று. கோயிலை அழகாகக் கட்டி பாபாவின் படத்தையும், பாதுகைகளையும் பிர திஷ்டை செய்ததோடு சுவாமி கேசவய்யாஜி திருப்தியடையவில்லை. பாபாவுக்குத் தினந்தோறும் பூஜை, ஆரத்தி, நைவேத்தியம் எல்லாம் குறையில்லாமல் முறையாக நடத்த ஒரு நிதி ஏற்பாடு செய்யவேண்டுமென்று சுவாமிஜி முயன்றுகொண்டிருந்தார். அது வும் பயனுள்ளதாயிற்று.

ஸ்ரீகேசவய்யாஜீ மாலை நேரப் பூஜையைச் செய்தபின்பு மந்திரியான ஸ்ரீ சீதாராம ரெட்டி கோயில் புகுவிழா நடத்தி பாபாவின் படத்தை திறந்து வைத்தார். பாபாவின் படத்தைப் பூமாலைகளாலும் பல்வேறு வர்ணங்கள் கொண்ட மின்விளக்குகளாலும் வெகு மனோகரமாக அலங்கரித்திருந்தார்கள். பாபாவின் படத்திறப்புக்குப் பின் நடந்த பொதுக்கூட்டத்தில் பல பிரமுகர்களும் பாபாவின் பக்தர்களும் பிரசங்கம் செய்தார்கள். மந்திரி ஸ்ரீ சீதாராம ரெட்டி இப்படிப் பேசினார்; "இந்தக் கோவில் தொடக்க விழாவை நடத்தி பாபாவின் ஆசீர்வாதங்களைப் பெறக் கிடைத்தது என் அதிர்ஷ்டம். எனக்கு இன்று கிடைத்த இந்தப் புனித சந்தர்ப்பத்தைப் பெரும் பாக்கியமாகக் கருதுகிறேன். மக்கள் பாபாவின் நல்லுரைகளைச் செயலில் கொண்டுவர முயல வேண்டுமென்று கூறுகிறேன். ஸ்ரீசாயி பணிகளில் ஸ்ரீகேசவய்யாஜீ காட்டிவரும் சிரத்தையும் ஆசையும் புகழத் தக்கவை"

ஸ்ரீ தாசரி ஸ்ரீமந் நாராயண சௌதரி குண்டூர் வக்கீல். தான் ஸ்ரீகேசவய்யாஜீயை சந்தித்தபின் பெற்ற அனுபவங்களைப் பற்றிக் கூறினார். ஸ்ரீகேசவய்யாஜீ சர்க்கார் ஜில்லாக்களில் அடிக்கடிச் சுற்றுப் பிரயாணம் செய்வதால் ஸ்ரீபாபாவின் பக்தர்கள் அதிகரித் திருக்கிறார்கள் என்றார்.

ஸ்ரீகேசவய்யாஜீ இசகபல்லி சாயி கோவில் துவக்க விழாவுக்குத் தாம் சென்றிருந்தபோது மக்கள் பெற்ற மகிழ்ச்சியை வர்ணித்தார்.

ஏலூர் ஜில்லா ஜட்ஜ் ஸ்ரீ எம். ராமச்சந்திர ராவ் நாயுடு சென்ற ஐந்து வருடங்களாகக் கேசவய்யாஜீயிடம் தமக்கிருந்த பழக்கத்தை யும் அனுபவங்களையும் பற்றி விவரித்தார்.

சுவாமிஜி ஏழை மக்களைக் கைதூக்கி விடுவதிலும் துன்புற்ற மக்களைக் காப்பதிலும் சுயநலமின்றிச் செய்துவரும் சேவையைப் புகழ்ந்தார். சாயிபக்தப் பிரசாரத்துக்கு அவர் செய்துவரும் சேவை பயனுள்ளதாகட்டும் என்று வாழ்த்தினர்.

சென்னை சட்டசபை அங்கத்தினரும் காங்கிரஸ் தலைவருமான கல்லூரி-சுப்பாராவ் இப்படிச் சொன்னர்: மத ஒருமைப்பாடுதான் மகாத்மா காந்தியடிகளின் உபதேசம். தற்சமயம் உள்ள சங்கட நிலையில் மக்கள் ஸ்ரீபாபாவின் நல்லுரைகளைச் செயலாக்கி ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்குப் பாடுபட வேண்டும். இங்கே ஸ்ரீசாயி கோவிலை எழுப்பியதற்கு ஸ்ரீகேசவய்யாஜீயைப் பாராட்டுகிறேன். அவர் நாட்டின் பல பகுதிகளுக்குச் சென்று ஸ்ரீசாயி பக்தியைப் பரவச் செய்ததற்கு அவருக்கு நன்றி செலுத்துகிறேன். அவர் ஸ்ரீசாயிநாதனுடைய கைக்கருவியாக மிகப் பணிவுடன் செய்யும் சேவையை நாட்டுமக்கள் வெகுவாக மெச்சுகிறார்கள். பாபாவை எப்பொழுதும் நினைத்து வணங்கி பெனுகொண்டாவை யாத்திரை ஸ்தலமாக உயர்த்த வேண்டுமென்று உள்ளூர்மக்களை நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இந்த உத்சவத்தின் வெற்றியை விரும்பி மைசூர் முதல் மந்திரியான ஸ்ரீ கே சி. ரெட்டி, சூரத் ஜில்லா நீதிபதியான ஸ்ரீ வி. பி. ராஜு, அகில பாரத சாயி சமாஜ் தலைவரான ஸ்ரீ பி. வி. நரசிம்ம ஸ்வாமி, ரிஷிகேசத்திலிருந்து சுவாமி சிவானந்தா, ஸ்ரீஓபுளம்பல்லி புல்லாரெட்டி, (ஐ.சி.எஸ்.) ஸ்ரீ பி. ராமகிருஷ்ண ஐயர், (ஐ.சி.எஸ்.) முதலியோர் வாழ்த்துச் செய்தி அனுப்பினர்கள்.

ஜில்லா கலெக்டர் ராவ்பகதூர் ஜோசப் ரெட்டி, மற்ற ஜில்லா அதிகாரிகள் ராயலசீமா பாங்கி டைரெக்டர்களான ஸ்ரீ எச். லிங்கா ரெட்டி, ஸ்ரீ ஜி. வெங்கட ரெட்டி (எம். எல். சி.), ஸ்ரீ நீலம் சஞ்சீவ ரெட்டி (எம். எல். ஏ.) ஆகியோர் வந்திருந்தார்கள்.

பொதுக்கூட்டத்திற்குப் பிறகு நகரத் தெருக்களில், வந்திருந்த பெரிய மனிதர்களை ஊர்வலமாக அழைத்துச் சென்றார்கள். இரவில் சாயிபக்த ஸ்ரீ கே. வி. ஸ்ரீநிவாஸ ரெட்டி (அட்வகேட்) எல்லோருக்கும் விருந்து கொடுத்தார்.

இது பெனுகொண்டா சாயி கோயில் தொடக்க விழாச் செய்திகள். பெனுகொண்டாவில் சுவாமிஜீயைப் பற்றி ஸ்ரீ பி. என். தாத்தார், ஸ்ரீ போலவரபு - ராமப்பிரம்மம் முதலியோருடைய

கட்டுரைகளை ஏற்கெனவே வாசகர்கள் படித்திருக்கிறார்கள். ஸ்ரீ எஸ். சுப்பாராவ் சுவாமிஜி நடத்திய நிகழ்ச்சிகளைப் பற்றி விரிவாக வருணித்தார்.

## பெனுகொண்டாவின் பெருமை

இந்தச் சந்தர்ப்பத்திலேயே 1943-ஆம் ஆண்டில் (ஸாயிஸுதா மே) சென்னையிலிருந்து ஸ்ரீ வி. சலபதி, பி. ஏ., எல். டி எழுதிய கட்டுரையை வாசகர்கள் ஆராய்வது பயனுள்ளதாகும்.

"அனந்தபுரம் ஜில்லாவில் பெனுகொண்டா வரலாற்றுப் புகழ் பெற்ற நகரம். அழகிய மலைக் கோட்டைகளின் நடுவில் இது அழகாக அமைந்திருக்கிறது. முற்காலத்தில் விஜயநகரம் பீஜப்பூர் அரசர்களுக்கு அசைக்கமுடியாத கோட்டையாக இருந்தது. இப்பொழுது அந்த நகரம் ஆத்மீக உலகத்துக்குத் தலைநகராக விளங்குகிறது. நகரத்தில் பிரசித்திப் பெற்ற முஸ்லீம் மத சாதகரான பாபா ஃபக்ருதீனுடைய சமாதி இருக்கிறது. இவர் பல அற்புதங்களை நிகழ்த்தினார் என்பது பிரசித்தி. ஆண்டில் 365 நாட்களும் ஹிந்து முஸ்லீம் பக்தர்கள் இந்த தர்காவை தரிசிப்பார்கள். இங்கே மந்திராலயத்தில் உள்ள ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகளின் பிருந்தாவனம் மற்றொரு ஆத்மீகக் கவர்ச்சியாகும். வாராவாரம் இங்கே நூற்றுக் கணக்கான பக்தர்கள் பூஜையும், பஜனையும் நடத்துகிறார்கள். இவைதவிர நகரின் பல்வேறு இடங்களில் பல கோயில்களும் தர்காக்களும் இருக்கின்றன. இந்த பவித்ரமான ஆத்மிக சூழ்நிலையில் இந்த யுகத்தின் அவதார புருஷராகிய சீரடி சாயிபாபா பக்தி பரவுவதற்காக இந்த ஊரை ஒரு கேந்திரமாகத் தேர்ந்தெடுத்திருக்கிறார்.

ஏசுகிறிஸ்து தமது சாந்தி, சமரசம், சேவை, தியாகம் ஆகிய உபதேசங்களை மக்களுக்குப் பரவச்செய்வதற்குப் பன்னிரண்டு பக்தர்களைத் தேர்ந்தெடுத்தார். நமது ஞாபக சக்தி மிகச் சொற்பம்; மறதி அதிகம். புண்ணிய புருஷர்களுடைய புனித உபதேசங்களை நாம் மறந்துவிட்டோம். அப்போதைக்கப்போது நமக்கு நினைவூட்டுபவர்கள் வேண்டும். ஸ்ரீ சாயி பாபா உலக ரீதியாகப் பஞ்சபூதங்களில் கலந்துபோய்விட்டாலும் ஆத்மிக ரீதியில் உயிரோடு இருப்பதாகவே நான் நம்புகிறேன். அவர், தம் உபதேசங்களை நம்பிக்கை, பொறுமை, தர்மம் ஆகியவைகளை மக்களுக்கு தெரிவிப்பதற்காக பக்தர் இருவரை தேர்ந்தெடுத்திருப்பதாகத் தோன்றுகிறது. இந்த இரட்டைப் பக்தர்கள் ஸ்ரீ பி. வி. நரசிம்ம சுவாமியும் : ஸ்ரீ சுவாமி பாலகேசவய்யாஜீயுமாகும். இவ்விருவரும் சுயநலமற்றவர்களாக

பாபாவுக்கு சேவை செய்கின்றனர். இவ்விருவரும் தனிப்பட்டமுறை யில் அவரவர் வெவ்வேறு விதமாக ஒப்பற்ற சேவை செய்கிறார்கள். ஸ்ரீ பி. வி. நரசிம்ம சுவாமி நாட்டின் நாலு திசைகளிலும் பாபாவின் உபதேசங்களைப் பரவச் செய்தார். பாபாவின் நல்லுரைகளைப் பிரசாரம் செய்தார். ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாஜி சாயி பக்தி பரவிய இடமெல்லாம் அந்த பக்தியை நிலைநாட்டிக் கொண்டிருக்கிறார் ஆயிரக் கணக்கான பக்தர்களுடைய உடல் நோய்களையும், மன நோய்களையும் நீக்கித் துன்பங்களைப் போக்கி சாயி பாபாவின் கருணை, ஆசி, சக்தி எல்லாம் பெருக்கெடுத்து ஓடுவதற்கு ஸ்ரீ கேச வய்யாஜி ஆத்மிக வாய்க்கால்போல் வேலை செய்கிறார்.

சீரடி வட நாட்டில் சாயி பக்திப் பிரசாரத்திற்கு எவ்வளவு கேந்திரமாக இருக்கிறதோ அவ்வளவு தெற்கே பெனுகொண்டா அனுகூலமாக இருக்கிறது. ஒவ்வொரு வியாழக்கிழமையும் பெனு கொண்டாவில் பண்டிகை நாளாகும். சுவாமிஜி அரசாங்க உத்தி யோகஸ்தர். ஆபீஸ் வேலை முடிந்ததும் அவர் பாபாவின் வேலையில் இறங்கிவிடுவார். சொந்த சுகம், சம்சார விவகாரங்கள், வேறு விஷ யங்கள் எல்லாம் பிறகுதான் யோசனைக்கு வரும். வியாழக்கிழமை அன்று தென்னாட்டிலுள்ள பல்வேறு பகுதிகளிலிருந்தும் பாபாவின் பக்தர்கள் பெனுகொண்டாவிற்கு வருவார்கள். மாலை ஐந்து மணி முதல் இரவு பத்து மணிவரை சுவாமிஜி தனது வீட்டில் பாபாவுக்கு பூஜை செய்வார். அதற்குப்பின் அங்கே வந்திருக்கும் நூற்றுக் கணக்கான பக்தர்களுக்குத் தீர்த்தமும் பிரசாதமும் கொடுப்பார். விடியற்காலை இரண்டு அல்லது மூன்று மணிக்குத்தான் ஓய்வெடுத் துக்கொள்வார். தீர்த்தப் பிரசாதங்கள் கொடுக்கும்போதே பக்தர் களுடைய கஷ்டங்களுக்குப் பரிகாரங்களையும் சொல்வார். கரை ஏற வழி காண்பிப்பார். இந்த நூற்றுக்கணக்கான பக்தர்களுள் எல்லா வகையினரும் உண்டு. ஆண்கள், பெண்கள், குழந்தைகள், பெரியவர்கள், பணக்காரர்கள், ஏழைகள், சாதாரண குமாஸ்தாக் கள், பெரிய உத்தியோகஸ்தர்கள் எல்லோரும் பணிவாக வருவார் கள். உள்ளபடியே பெனுகொண்டா தக்ஷிண சீரடியாகும். துன் புற்ற மக்கள் இங்கே வந்து பாபாவை ஆராதித்து அமைதியும் சுக மும் பெறுகிறார்கள்.

## சென்னைக்கு ஜாகை மாற்றம்

சுவாமிஜி 1948—ஜூன் மாதத்திலேயே நோயுற்று பெனு கொண்டாவைவிட்டு சென்னைக்கு வந்த சங்கதி வாசகர்களுக்குத் தெரிந்ததுதான். அவர் சுமார் ஒன்றரை வருட காலம் க்ஷய

நோயால் துன்புற்றார். சென்னையில் பிரசித்தி பெற்ற டாக்டர்களான ஜி. கோவிந்தரெட்டி, என். வீரபத்ரா ரெட்டி, ரத்னவேலு சுப்ரமண்யம், எச். டி. வீரா ரெட்டி, ஆகியோர் சிகிச்சை செய்தார்கள். கடைசியில் பாபாவின் அருள் காரணமாக ஆரோக்கியம் பெற்று அவர் சென்னையிலேயே தங்கிவிட்டார். 1941ம் ஆண்டில் ஏப்ரல், மே மாதங்களில் பெனுகொண்டாவில் தம் வீட்டில் பாபாவைப் பூஜிக்கத் தொடங்கியது போலவே சென்னையிலும் 116-F ஷெனாய் நகரில் தம் வீட்டில் பாபாவின் பூஜையைத் தொடங்கினார். இப்பொழுது பக்தர்கள் தீர்த்தப் பிரசாதங்கள் பெற்றுக்கொள்ளும் சாயி நிலயத்தின் பூஜை அறையில் பாபாவின் படத்தை 1956—ஆகஸ்டு 12ம் தேதியன்று வைத்தார். அந்த நிகழ்ச்சியின் விவரங்கள் சுருக்கமாக—1956—செப்டம்பர் சாயி ஸுதாவில் வெளியாயின.

'அன்று ஞாயிற்றுக்கிழமை 116-F, ஷெனாய் நகர் சாயி நிலயத்தில் ஸ்ரீ சாயி பாபாவின் படம் காலை 11 மணிக்கு ஸ்தாபிக்கப்பட்டது. பாபா பீடத்தை வைக்கத் தனியாக ஓர் இடம் அமைக்கப் பெற்றது. அதன் மேல் பாபாவின் படத்தை வைத்தார்கள் அதற்குமுன் வேதோக்தமாக ஹோமமும் சாயி பூஜையும் நடந்தன. நகரத்திலுள்ள சாயி பக்தர்கள் பலர் இந்த உத்சவத்தைப் பார்க்க வந்தார்கள். ஏழைகளுக்கு அன்னதானம் செய்தார்கள். மாலையில் சாயி நிலயக் காம்பவுண்டில் தனியாகப் போடப்பட்ட பந்தலில் பொதுக்கூட்டம் நடந்தது. ரிடையர்டு ஜில்லா நீதிபதி ஸ்ரீ கே. எஸ். ராமசுவாமி சாஸ்திரி பக்தியின் முக்கியத்துவத்தைப்பற்றி பிரசங்கம் செய்தார். தன்னலத்தை அடியோடு மறந்து பகவானை தியானிக்க வேண்டும் என்றார். தன்னலமின்றி பகவானை ஆராதித்தவர்களுடைய தேவைகளைப் பகவானே பூர்த்தி செய்வார் என்று கூறினார். ஒவ்வொரு வியாழனன்றும் சுவாமிஜீ நடத்தும் பாபா பூஜையின் முக்கியத்துவத்தையும், மக்கள் அந்தப் பூஜையால் பெறும் நன்மைகளையும் விவரித்து. சுவாமிஜீயின் தன்னலமற்ற சேவையைப் பாராட்டினார். கூட்டத்து நிகழ்ச்சிகளை முடிக்கும்போது சுவாமி கேசவய்யாஜி வியாழக்கிழமை பூஜைக்கு வருபவர்கள் எல்லோரும் உண்மையான பக்திமார்க்கத்தை அனுசரிக்க வேண்டுமென்று உபதேசம் செய்தார். வந்திருந்த பக்தர்களுக்கெல்லாம் பிரசாதம் கொடுத்தார்.

இந்த சாயி நிலயத்துக்கு 1956-ம் ஆண்டு முதல் பல ஆயிரம் பக்தர்கள் வந்து பாபாவின் அருளைப் பெற்று சுவாமிஜி கைப்பட விபூதிப் பிரசாதங்களையும் ஆசிகளையும் பெற்றிருக்கிறார்கள். பத்துப் பேர் கூடிய இடத்தில் பகவான் இருப்பார் என்று பெரியவர்கள் சொல்லி இருக்கிறார்கள். ஒவ்வொரு வியாழனன்றும் ஆயிரக்கணக்

கான பக்தர்கள் செல்லும் சாயி நிலையம் எவ்வளவு புனிதமானது! இந்த சாயி நிலையத்துக்கு எதிரிலேயே உள்ள காலி மனையில் சாயி கோயில் நிறுவவேண்டுமென்று சுவாமிஜீயின் ஆசீர்வாதங்களுடன் ஸ்ரீ சாயி சமாஜத்தார் முயன்றுகொண்டிருக்கிறார்கள். இந்த சாயி கோயில் எப்பொழுது கட்டி முடியுமோ அதற்கு பிறகு என்ன என்ன அற்புதங்கள் நடக்கப் போகிறதென்றே நம்மால் யூகிக்க முடியாது.

இந்த அத்தியாயத்தை முடிப்பதற்கு முன் சாயி நிலையப் பூஜையைப்பற்றி பிரமுகர்கள் இருவர் வெளியிட்ட அபிப்பிராயத்தைச் சொல்லுவது இந்த இடத்திற்குப் பொருத்தமாக இருக்கும்.

டாக்டர் ஜி. கிருஷ்ணன், M.A., M.Sc., Ph.D. (மான்செஸ்டர்) சென்னை சர்வகலாசாலை உயிர் நூல் ரீடர் இப்படி எழுதியிருக்கிறார். ஸ்ரீ சாயிபாபா தம் உடலை நீத்து முப்பது ஆண்டுகளுக்கு மேலானாலும் அவர் தம் பக்தர்களுக்கு அற்புதமான அனுபவங்களைக் கொடுத்துக்கொண்டுதான் இருக்கிறார். முக்கியமாக தென்னாட்டில் உள்ள பக்தர்களுக்கு தம் அன்புக்குரிய சிறந்த பக்தரான சுவாமி கேசவய்யா ஜீயின் வாயிலாக அமோகமான அனுபவங்களைக் கொடுக்கிறார். ஸ்ரீ கேசவய்யா ஜீயின் இருப்பிடமான சாயி நிலையத்தில் ஒவ்வொரு வியாழனன்றும் பூஜைக்கு சென்றவர்களுடைய உள்ளத்தில் அவ்விடத்தில் நிலவும் அமைதி, புனிதம் ஆத்மிகச் சிறப்பு ஆகியவை பதிந்துவிடும். தம் கஷ்டங்களைப் போக்கிக்கொள்ளவும், சாயிபாபாவின் அருளைப் பெறவும் வாரந்தோறும் நூற்றுக் கணக்கான ஆண்களும் பெண்களும் வருகிறார்கள். ஏழைகளும் பணக்காரர்களும் எல்லா ஜாதியினரும் வருகிறார்கள். அப்பொழுது ஸ்ரீ கேசவய்யாஜீயின் வாயிலிருந்து வரும் சொற்கள் விதியின் தீர்ப்பைப்போல் இருக்கும். ஸ்ரீ சாயி பாபா கண்ணுக்குப் புலனாகாமல் அங்கே யிருக்கிறார் என்றே தோன்றும். தினந்தோறும் பக்தர்களின் தொகை ஏறிக்கொண்டே போவதிலிருந்தே சாயி நிலையத்தால் மக்கள் சுகத்தையும் அமைதியையும் பெறுகிறார்கள் என்பது உறுதிப்படுகிறது. வருங்காலத்தில் இவ்வளவு பக்தர்களுக்கு தக்க வசதி செய்வதே பெரிய பிரச்னையாகிவிடும்.

ஸ்ரீ ராதாகிருஷ்ண சர்மா 1955—டிசம்பர் 26ம் தேதி ஆந்திரா பத்திரிகையில் தம் அனுபவத்தை இப்படி எழுதுகிறார். 'அன்று வியாழக்கிழமை; மிக புனிதமான நன்னாள். காலை எட்டு மணி ஆயிற்று. நான் ஏதோ ஒரு புஸ்தகத்தைப் படித்துக்கொண்டிருந்தேன். அப்பொழுது எங்கள் ஊரிலிருந்து உறவினர் ஒருவர் வந்தார். வழக்கப்படி க்ஷேம லாபங்களை விசாரித்தப்பின் அவர், இவ்வூருக்கு வந்து எவ்வளவு வருடங்கள் ஆகின்றன?'' என்று கே

டார். "நான்கு வருடங்கள் ஆகின்றன" என்று நான் சொன்னேன் "அப்படியானால் உனக்குக் கேசவய்யாஜீயைத் தெரியுமா?" என்று கேட்டார். "எனக்குத் தெரியாது; நான் பார்த்ததே இல்லை" என்றேன். "சுத்தப் பைத்தியக்காரனாக இருக்கிறாயே, சாயி பக்த கேசவய்யாஜீயின் பெயர் தெரியாமல் இருக்கிறதாவது! பாபாவை தரிசித்து, ஸ்ரீ கேசவய்யாஜீயிடம் பேசவேண்டுமென்று நான் இங்கே வந்தேன். இன்று சாயந்திரம் நாம் அவரைக் கட்டாயம் பார்க்க வேண்டும்" என்றார் அவர். நான் "சரி" என்று ஒப்புக்கொண்டேன்.

நாங்கள் இருவரும் அன்று மாலை பஸ்ஸில் ஏறி ஷெனாய் நகருக்குப் போனோம். அப்பப்பா! என்ன கூட்டம் அங்கே! எல்லோரும் 'கியு'வில் நின்றிருந்தார்கள். மக்கள் வரிசை ஒரு பர்லாங்கு தூரம் இருந்தது. ஏழெட்டு கார்களும் இருந்தன. இரண்டு ஜட்காக்களும் இருந்தன. பக்கத்தில் பூவும் பழங்களும் விற்பவர்கள் உட்கார்ந்திருந்தார்கள். இவற்றையெல்லாம் பார்த்து நான் ஆச்சரியம் கொண்டேன். "இதென்ன இப்படியொரு கூட்டம்! இவர்கள் எல்லோரும் எதற்காக வந்திருக்கிறார்கள்?" என்ற யோசனையில் மூழ்கிவிட்டேன். நாங்கள் இருவரும் சென்று வரிசையில் நின்றோம். திருவிழாவுக்கு வருவதுபோல் மக்கள் மேன்மேலும் வந்துகொண்டிருந்தார்கள். அநுமார் வால்போல் வளர்ந்து கொண்டிருந்தது. ஆண்கள், பெண்கள், இளைஞர்கள், குமரிகள், கல்லூரி மாணவர்கள், மிகப்படித்தவர்கள், எழுத்தறிவற்றவர்கள், நாகரீகமே உருவானவர்கள், பழைய காலத்து மனிதர்கள், ஸூட்டு போட்டப் பெரிய மனிதர்கள்—இப்படிப் பலவகை மக்கள் அந்த வரிசையில் நின்றிருந்தார்கள். நான் அப்படியே மலைத்துப் போய்விட்டேன். என் உள்ளத்தில் இருந்த தவறான அபிப்பிராயம் மாயமாய் மறைந்துவிட்டது. மிகவும் மகிழ்ச்சி உண்டாயிற்று.

அங்கே சூழ்நிலை மிக்க அமைதியாக இருந்தது. யாரைப் பார்த்தாலும் பகவத் விஷயமான கதைகளையும் விசேஷங்களையுமே சொல்லிக்கொண்டிருந்தார்கள். உண்மையில் என்னைப் பொறுத்தமட்டில் வீட்டுக் கவலையோ, வேறு எண்ணமோ தோன்றவில்லை. யாவற்றிலுமிருந்தும் விடுதலைப் பெற்றமாதிரி இருந்தது. கடைசியாக நாங்கள் இருவரும் பூஜை அறையில் நுழைந்து ஸ்ரீ கேசவய்யாஜீயை அணுக முடிந்தது. பூஜை அறையை நெருங்கும்போதே ஏதோ ஒரு புதிய சூழ்நிலையில் நுழைவதுபோல் இருந்தது. சாயி பாபாவைத் தரிசித்தோம். தெய்வாம்சமாகத் தோன்றிய அவரை சாஷ்டாங்கமாக வணங்கிக் கைகுவித்தோம். ஸ்ரீகேசவய்யாஜீ நெற்றியில் விபூதியிட்டு வாயில் விபூதி போட்டார். "வருகிற வாரம் வாருங்கள்"

என்ருர். ''சரி'' என்று சொல்லி மெதுவாக மாடிப்படி இறங்கி வந்தோம்.

1956—ஆகஸ்டு 12ம் தேதிக்குமுன் சுவாமிஜி இதே வீட்டில், மாடியில் ஜாகை வைத்துக்கொண்டு பூஜையையும் அங்கேயே செய்துவந்தார். பிறகு பக்தர்களுக்கு வசதி போதாதக் காரணத்தால் தம் ஜாகையை இப்பொழுது கீழே மாற்றிக்கொண்டிருக்கிருர்.

பாபாவின் அருள் நோக்கால், கஷ்டங்களிலிருந்து விடுதலை பெற்று, மன அமைதி பெறுகிருேமென்று பலர் சொல்லக் கேட்டேன். ஆங்கிலோ இந்தியப் பெண் ஒருத்தி பாபாவின் சந்நிதிக்கு வருவதைக் கண்டு மகிழ்ந்தேன். ''ஈசுவர சிருஷ்டியில் எல்லோரும் சமமே'' என்ற பேருண்மையை ஸ்ரீ கேசவய்யாஜி செயலில் காண்பிப்பதைக் கண்டு நான் எல்லையற்ற ஆனந்தம் அடைந்தேன்.

## ஆபத்தில் காப்பவர் பாபா

ஸ்ரீ கேசவய்யாஜீயின் செயலாற்றும் தன்மை:

ஸ்ரீ எஸ். ஐராவதம், சென்னை.

ஸ்ரீ ஐராவதம் பிரசித்திப் பெற்ற ஆங்கிலப் பத்திரிகாசிரியர். தம் வாழ்க்கையைப் பத்திரிகைகளிலேயே கழித்தவர். ஆங்கில பத்திரிகைகள் பலவற்றில் வேலை செய்திருக்கிருர். சிறந்த அனுபவம் பெற்றவர். ஆனல் பணம் போதாமல் எப்பொழுதும் கஷ்டப்படுவதுபோலவே காணப்படுவார், சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜி ஷெனய் நகரில் பாபா பூஜையைத் துவக்கியபோதே பூஜைக்கு வந்தவர். ஆகையால் இவருடைய கருத்துக்களுக்குத் தனிச் சிறப்பும் அபிப்பிராயங்களுக்குக் கௌரவமும் உண்டு. அதனல் பக்தர்களுடைய அனுபவங்களோடு சேர்க்காமல் இவருடைய அபிப்பிராயத்தை இங்கே எழுதுகிருேம்.

நான் பாபாவின் பக்தன் ஆவதற்கு வெகு காலம் முன்பே சாயி பாபாவைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனல் நான் அப்பொழுதெல்லாம் இவ்வளவு அக்கறை காண்பிக்கவில்லை. மூன்று ஆண்டுகளுக்கு முன்புதான் அவரே என்னைத் தம்மிடம் கவர்ந்தார். கான்பகதூர் அப்துல் கரீம் சாகேப் விசித்திர முறையில் ''இஸ்லாம்'' பற்றி ஒரு நூலை வெளியிட்டார். அதில் பாபாவின் உபதேசங்கள் இருக்கின்றன. நான் அந்த நூலைப் படித்துவிட்டு ''பிரீ பிரஸ்'' எனும் ஆங்கில தினசரியில் விமரிசனம் எழுத வேண்டியதாக இருந்

மற்ற மகாபுருஷர்களைப் போலின்றி சாயி பாபா எப்பொழுதும் தம் பக்தர்களைத் தேடி அலைந்து கொண்டிருப்பார். எல்லா மதத்தினருக்கும் எல்லா வகுப்பினருக்கும் அவருடைய இதயக் கதவுகள் திறந்தே இருக்கின்றன. நாம் சாயி பாபாவின் நிழலில் சேர்ந்தவுடன் அவர் நம்மை காக்கும் பொறுப்பை மேற்கொண்டு விடுகிறார். நமக்காக கஷ்டப்படுகிறார். நம்மீது விழும் அடிகளை அவர் ஏற்றுக் கொள்கிறார். நமது நியாயமான கோரிக்கைகளை நிறைவேற்றப் பாடுபடுவார். துன்பங்களிலிருந்து விடுபட துணைச் செய்வார். அவர் தற்கால மனிதனுக்கு எல்லா வகையிலும் ஏற்றவராக இருக்கிறார். வாழ்க்கைப் போராட்டத்தில் மனிதன் விரைவில் பயனடையவும், தீமை கலக்காத லாபத்தை அடையவும் விரும்புகிறார். இக்கால மனிதனுக்கு அவை மிகவும் அவசியமானவை. என்றைக்கோ எங்கேயோ நம் நன்னடத்தை நியம நிஷ்டைகளுக்கேற்ப சொர்க்க சுகங்களைக் கொடுப்பதாக வாக்குக் கொடுக்கும் கடவுளால் அவனுக்குப் பயன் இல்லை.

மனிதத் தன்மையைப் பெற்றிருப்பதாலேயே சாயி பாபா மகா புருஷனாகிறார். ஸ்ரீராமரைப்போல் கருணைக் கடல். அவருடைய வாழ்க்கையே பக்தர்களை ஆபத்திலிருந்தும், வீழ்ச்சியிலிருந்தும் காத்த அற்புத நிகழ்ச்சிகள் நிரம்பப் பெற்றவை. பாபாவின் அருளாலும் உரிய காலத்தில் அவர் செய்யும் உதவியாலும் ஒவ்வொரு பக்தனும் அமோகமான அனுபவத்தைப் பெறுகிறான்.

முதல் படியாகவும் எல்லா மக்களும் விரும்புவதாகவும் எளிதில் ஏற்றுக்கொள்ளக் கூடியதாகவும் செயலில் கொண்டு வரக்கூடியதாகவும் இருப்பதால் பாபாவின் அன்பு மயமான உபதேசங்கள் வெகுவேகமாகவும் விஸ்தாரமாகவும் பரவிக் கொண்டிருக்கின்றன. இந்த விஷயத்தில் சாயி மந்திரங்களும் சாயி சமாஜங்களும் புகழத்தக்க முறையில் வேலை செய்கின்றன. பாபா தம் உதாரகுணம் மிக்க செயலைச் சக்தியுள்ள மற்றொரு முறையிலும் நிறைவேற்றுகிறார். ஸ்ரீசாயி பக்த கேசவய்யாஜிதான் பாபா தேர்ந்தெடுத்த கருவி. சாயி பக்தர் உலகம் இந்த விஷயத்தைப் புரிந்து கொண்டு அவரைக் கௌரவிக்கிறது. உத்தியோக முறையில் சப்ரிஜிஸ்திரார் ஆனாலும் நகரத்தில் அவர் மற்றொரு ஸ்தாபனமாக விளங்குகிறார். சென்னை நகரில் உள்ள அவருடைய வீடு (116F) யாத்திரை ஸ்தலமாக விளங்குகிறது. சுகத்தைக்கொடுக்கும் ஆத்மீக கேந்திரமாக விளங்குகிறது. ஒவ்வொரு வியாழனன்றும் பாபா தேர்ந்தெடுத்தத் தூதரான சுவாமிஜியின் வாயிலாக பாபாவின் ஆசியைப் பெறுவதற்காக நூறு பேருக்குக் குறையாமல் (இப்பொழுது இந்தத் தொகை ஆயிரக் கணக்குக்கு வந்து விட்டது.) வருகிறார்கள். பாபா தீர்மானித்த

வேலைக்குப் பயன்படும் ஒரு கருவிதான் சுவாமிஜீ. ஸ்ரீ கேசவய்யாஜீ பேசும்போது, பாபா எதைச் சொல்லச் சொல்கிறாரோ அதைத்தான் சொல்லுவார்.

சுவாமிஜீ ஸ்பரிசம் பாபாவின் ஸ்பரிசமாகும். அந்த ஸ்பரிசம் பக்தர்களுக்கு ஊக்கத்தைக் கொடுத்து அவர்களை நல்வழியில் செலுத்தும். விரும்பியவுடனே இந்த ஸ்பரிசம் கிடைக்கும். இந்த ஸ்பரிசத்தால் பல பக்தர்கள் நன்மை அடைந்திருக்கிறார்கள். அதனாலேயே வியாழக்கிழமை யாத்திரிகர்களின் எண்ணிக்கை வளருகிறது.

1949ம் ஆண்டு நவம்பர் மாதக் கடைசி வியாழக்கிழமையன்று 116-F, ஷெனாய் நகரில் பூஜை செய்யும்போது சாயி பக்த கேசவய்யாஜீயை நான் முதன் முதலாக தரிசித்தேன். முதலே நினைத்துக் கொண்டிருந்ததாலோ என்னவோ அவர் என்னை திடமாகக் கவர்ந்து விட்டார். அதற்கு முன்பே நான் என்னைப்பற்றிய விஷயங்களைக் கடிதத்தில் எழுதி ஒளிவு மறைவு இல்லாமல் தெரிவித்தேன். அதனால் அவரை நான் எதுவும் கேட்கவில்லை. அவர் தாமாகவே இதைச் சொன்னார். ''நீ வெற்றியடைவாய். ஆனால் 1950—மார்ச்சுக்குப் பிறகுதான் இது நடக்கும். பாபா உனக்கு உதவி செய்வார்.'' எதிர்பார்க்கும் சக்தியைக் கிட்டத்தட்ட இழந்துவிட்ட எனக்கு இச்சொற்கள் திருப்தியை அளிக்கவில்லை. உற்சாகத்தையும் கொடுக்கவில்லை. ஒரு கணம் பொறுத்து என் நிலையை அறிந்த அவர் மறுபடியும் இப்படிச் சொன்னார். ''ஆம் ஐயா, சில ஆண்டுகளாக எதிர்பார்த்துக் காத்திருந்து கனவு கண்டுகொண்டிருக்கிறீர்கள். இன்னும் சில மாதங்களே காத்திருக்க ஏன் வருந்துகிறீர்கள்? நாம் எல்லோரும் வினைக்குக் கட்டுப்பட்டவர்கள். ஸ்ரீ கிருஷ்ணனையே ஆப்த நண்பர்களாகக் கொண்ட பாண்டவர்கள் என்ன செய்ய முடிந்தது?'' இச்சொற்கள் மிக சாதாரணமானவையே; ஆனால் இவை பாபாவின் அதிகாரவாக்கில் வந்ததனால் எனக்கு அவை விலைமதிப்பற்றவையாகவும், சக்தி மிக்கவையாகவும் காணப்பட்டன. ''பாபா உங்களுக்கு உதவுவார்'' என்ற வாக்கியம் எனக்கு ஸ்ரீராம ரக்ஷையாகவும் அபய வாக்காகவும் இருந்தன. சில வாரங்களுக்குப்பின் சுவாமிஜீ, பாபாவின் ஆசிகளுடன் என்னிடம் ஒரு ரூபாய் நோட்டு ஒன்று கொடுத்து, ''இதை உயிரைப்போல் போற்றிக் கூடவே வைத்துக்கொள்'' என்றார். 'பணக் கஷ்டத்திலிருந்து விடுதலைபெற இது உதவும்'' என்றும் சொன்னார். அதுமுதல் என் பணக் கஷ்டம் படிப்படியாகக் குறைந்து வந்தது. பணம் இல்லாமல் படும் துன்பத்தின் தீவிரம் குறைந்தது. இவ்விதமாக சுவாமிஜீ பணம் இல்லாமையால் துன்பப்படுகிறவர்கள் பலருக்கு உதவி செய்கிறார்.

விதி, வெற்றியை அருகில் கொண்டுவரும்போது—வினை ஒழியும் சமயத்தில்தான் — யாருமே பாபாவைப்பற்றி யோசிப்பார்கள். அதாவது நீங்கள் பாபாவைப்பற்றி நினைத்தால் நல்ல செயல் செய்தீர்கள். இனிமேல் நீங்கள் நிச்சயமாக வெற்றி பெறுவீர்கள். உங்கள் அபயக் குரலை பாபா கேட்டுவிட்டால் காப்பாற்றுவார். இனி பாபா உங்களைக் காக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டு போக வேண்டிய இடத்தில் உங்களைச் சேர்ப்பிப்பார். விதியின் செயலும் வினைப் பயனும் இருப்பதால் தடைகள் வரும். ஆனாலும் சிரமப் பட்டு அவற்றை வெற்றி கொள்வீர்கள். இந்த முயற்சியில் பாபா உங்களது அருகிலேயே இருந்து உங்கள் துன்பங்களைத் தாங்கி உங் களை உத்சாகப்படுத்திக்கொண்டிருக்கிறார் என்பதை அனுபவத்தால் நீங்களே அறிவீர்கள். சாயி பக்தனுக்கு பட்டபாடு வீணாவதோ தோல்வி ஏற்படுவதோ இல்லை. தெளிவான அனுபவங்கள் வாயி லாக பக்தர்கள் இந்த வாக்கியத்தின் சத்தியத்தை அறிந்துகொண் டிருக்கிறார்கள். என்னோடு சுவாமிஜீயிடம் வந்த சிலருடைய அனு பவங்களைச் சொல்கிறேன்.

பாவம்! ஓர் இளம் பெண்ணுக்குக் கெட்ட கனவுகளே வருவ தால் இரவில் தூக்கம் குறைந்து மிகவும் துன்புற்றாள். அவளுக்கு சுவாமிஜி விபூதி கொடுத்தார். இரண்டு மாதங்களில் ஆச்சரியகர மான பலன் ஏற்பட்டது. மற்றோர் அம்மாள் ஏழு குழந்தைகளுக் குத் தாயார். அவள் தன்னுடைய துன்பமயமான கதையை சுவாமிஜீயிடம் விண்ணப்பித்துக்கொண்டாள். அவளுடைய கண வனும் கடைசிக் குழந்தைகள் இருவரும் இன்னதென்று புரியாத நோயால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார்கள். டாக்டர்களுடைய உதவி பயனற்றுவிட்டது. இத்துன்ப நிலைக்குக் காரணத்தை சுவாமிஜி தெரிந்துகொண்டார். அவள் சிறிது காலமாக வீட்டில் உள்ள தெய்வங்களை அலக்ஷியம் செய்துவிட்டாள். பூஜை நிவே தனங்கள் நடைபெறவில்லை. "நீங்கள் திரும்பவும் உங்கள் வீட்டு தெய்வங்களுக்குப் பூஜை புனஸ்காரங்களைத் தொடர்ந்து செய் யுங்கள்" என்று சொன்னார். அவள் அப்படியே செய்தாள். குழந் தைகள் எல்லோரையும்போல் ஆரோக்கியம் பெற்றார்கள். கண வனுக்கும் படிப்படியாக குணம் கண்டது.

"தியாகராய நகரில் ஒரு பெண் க்ஷய நோயால் துரும்பாகிவிட் டாள். அவள் சுவாமிஜி கொடுத்த பாபாவின் விபூதியை நாற்பது நாட்கள் உட்கொண்டாள். ஆச்சரியகரமாகத் தேறிவிட்டாள். பாபாவின் அருளாலும் சுவாமி கேசவய்யாஜீயின் மூலமாக அவர் பக்தர்களுக்கு அளித்த ஆசியாலும் கஷ்டங்களிலிருந்து விடுபட்ட வர்கள் பலர். மேலே சொன்ன செய்திகள் உதாரணங்கள் மட்டுமே ஆகும்.

சுவாமிஜி ஜோதிடர் அல்ல. தம்மை கேட்டவர்களுக்கு பாபா வின் உதவியால் வருங்காலத்தைப்பற்றிச் சொல்கிருர். தமக்குத் தெளிவாகத் தெரிந்தபோது விஷயத்தை கச்சிதமாகச் சொல்லி அதற்குப் பரிகாரம் சொல்கிருர். சூசனே அவ்வளவு தெளிவாக வராதபோது சில வியாழக்கிழமைகள் அப்பக்தனே வரச் சொல்லு வார். கடைசியில் விஷயத்தை அறிந்துகொண்டு வழி காண்பிப்பார். அவர் என்றைக்குமே பட்டதும் படாததுமாக சொல்ல மாட்டார். இரண்டு பொருள் தொனிக்கும் பேச்சுக்கு இடமே இல்லே. தாட் சணியப்பட்டோ வெறுப்புடனே அவர் பேசமாட்டார். அவரு டைய குரலின் மென்மையாலும் பேச்சின் இனிமையாலும் தங்க மிகப் பாதகமான செய்தியைக்கூட பக்தர்கள் தைரியத்துட -றுதியுடனும் ஏற்றுக்கொள்வார்கள். சுவாமிஜீயின் வியாழக் ..மை பூஜைக்கு வருபவர்களுள் பலர் மற்றவர்களுடைய பவங்களேத் தெரிந்துகொண்டு நம்பும் பேர்வழிகள் அல்லர். சுவாமி ஜியிடம் பக்தர்கள் ஆவலாக வந்து அவர் ஸ்பரிசத்தால் பெறும் வெளிப்படையான லாபங்களேவிட சுவாமிஜி ஆயிரக் கணக்கான பக்தர்களுக்கு ஏற்படுத்தும் நன்மைகள் ஆயிரம் பங்கு அதிகமாகும். தாம் தேர்ந்தெடுத்த கருவி (ஸ்ரீ கேசவய்யாஜி) யால் பாபா மங்கிப் போன ஆத்மாக்களே ஒளிவீசச் செய்கிருர். அவை தகதகவென்று ஒளி வீசும் ஆத்மாக்களாக மாறுகின்றன.

## முற்பிறவித் தொடர்பு
## மாருதியின் வடிவில் பாபா பிரத்தியக்ஷம்
## பெனுகொண்டாவில் சுவாமிஜீயின் அனுபவம்

ஸ்ரீ எஸ். சுப்பாராவ், குத்தி.

1944ஆம் ஆண்டு ஏப்ரல் 4ஆம் தேதியன்று பெனுகொண்டா வுக்குச் சென்று அந்த மகா பக்தரான ஸ்ரீ கேசவய்யாஜீயிடம் பாபா வைப் பற்றியும் பாபாவின் பக்தர்களேப் பற்றியும் பேசிக்கொண் டிருந்தேன். மாலே சுமார் ஐந்தரை மணி இருக்கும். ஒரு சிறு கிழக் குரங்கு வந்து ஸ்ரீ கேசவய்யாஜீயின் பக்கத்திலே உட்கார்ந்து கொண்டது. அவர் உடனே எழுந்திருந்து வீட்டினுள் சென்று அரிசி கொண்டுவந்து தம் கையிலேயே வைத்துக்கொண்டார். அக் குரங்கு தைரியமாக ஸ்ரீ கேசவய்யாஜீயின் கையிலிருந்த அரிசியைத் தின்றுவிட்டுப் போயிற்று. அப்பொழுதே இந்த நிகழ்ச்சியைப்பற்றி நான் ஸ்ரீ கேசவய்யாஜீயிடம் கேட்டேன். 'முற்பிறவித் தொடர் பால் அக்குரங்கு உணவருந்த இங்கே வருகிறது' என்ருர். அங்கே சிறிய குரங்குகளும் பெரிய குரங்குகளும் பல இருக்கின்றன. கிழக் குரங்கு வந்து ஸ்ரீ கேசவய்யாஜீயின் கையிலிருக்கும் அரிசியைத்

தின்று போவதை அவைகளெல்லாம் பார்க்கின்றன. ஆனால் அவை கள் வருவதில்லை. கிழக் குரங்கை ஸ்ரீ கேசவய்யாஜீ அழைக்கவும் இல்லை; பழகவும் இல்லை, அது தானே வரும். அவரே உணவு கொடுத்த பிறகுதான் போகும். உறவுக்காக ஊரில் வேறு யாரிட மும் போகாது. ஸ்ரீ சாயிபாபா முன்பிறவித் தொடர்புபற்றி நிறை யச் சொல்லி இருக்கிறார். இந்த நிகழ்ச்சி அதை நிரூபிக்கிறது. குரங்கைப் பார்த்தால் ஸ்ரீகேசவய்யாவுக்கோ, அவரைப் பார்த்தால் குரங்கிற்கோ பயமில்லை.

உணவு கொடுப்பவர் வாங்குபவர் இருவருக்கும் பயமில்லை. முத லில் ஸ்ரீ கேசவய்யாஜீ தம் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்தபோது அவரிடம ஒட்டிக்கொண்டு உட்கார முயன்றது. குரங்குக்கு அவ் வளவு இடம் கொடுக்க முதலில் அவர் தயங்கினார். ஆனால் ஏத னாலோ அவருக்கு அக்குரங்கின்மேல் மனம் சென்றது. அருகில் வர விட்டார். இந்த நிகழ்ச்சியை தினந்தோறும் மற்ற எல்லா குரங்கு களும் பார்த்தாலும் அவற்றுள் எதுவும் ஸ்ரீ கேசவய்யாஜீயிடம் வருவதில்லை.

கிருஷ்ணன், ராமன், சிவன், மாருதி முதலியோருடைய உருவமானவர் ஸ்ரீ சாயி என்பது எல்லோருடைய கருத்தாகும். ஸ்ரீ கேசவய்யாஜி பாமிடியிலிருந்தபோது இளமையில் சிவாலயத் திலும் சென்ன கேசவசுவாமி கோயிலிலும் ஹனுமார் கோயிலிலும் தியானம் செய்தார் என்பது வாசகர்களுக்கு நினைவிருக்கும். பழைய தொடர்பினாலேயே பாபா தம் பக்தர்களைத் தம் அருகில் அழைத்துக் கொள்வார். இதனாலேயே இந்த நிகழ்ச்சிக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது.

## சுவாமிஜி என் வழிகாட்டி, என் குருநாதர்

சென்னை ரெயில் பெட்டி தொழிற்சாலையில் பணி புரியும் திரு. எஸ். தியாகராஜன், பி.எஸ்.ஸி. எழுதுவதாவது:

நான் சுவாமிஜீயை முதன் முதலாக சந்தித்தது 1952ம் ஆண்டு மார்ச் மாதத்தில் ஒரு வியாழக்கிழமை. பி.எஸ்.ஸி. பரீட்சை தேறி யவுடன் நான் உத்தியோகத்திற்காக பல இடங்களில் மனு செய்தும் வேலை கிடைக்காமல் அவதிப்பட்டுக்கொண்டு, மனச் சோர்வுடன் இருந்தேன். என் பக்கத்து வீட்டுக்காரர் சுவாமிஜீயை தரிசிக்கும் படியும், அவர் ஆலோசனையை பெறும்படியும் எனக்குச் சொன்னார். அவ்வாறே நான் சுவாமிஜீயை சந்திக்கச் சென்றேன். (அப்போது சுவாமிஜி சாயி நிலையத்தின் மேல் மாடியில் குடியிருந்துகொண்

டிருந்தார். மேல் மாடி படியில் தொடங்கி மக்கள் அமைதியாக வரிசையாக நின்றுகொண்டிருந்தனர்) நான் அந்த இடத்திற்கு புதியவன். உள்ளே சென்றதும் என்ன செய்ய வேண்டுமென்றுகூட எனக்குத் தெரியாது. என் முறை வந்து உள்ளே சென்றதும் அங்கு நான் கண்ட காட்சி என்னை வியப்பில் ஆழ்த்தியது. அங்கே கோயி லில் உள்ள காட்சிபோல் இருக்குமென்று எண்ணிக்கொண்டிருந்த எனக்கு அவ்வாறு ஒன்றும் இல்லாதது ஆச்சரியத்தை விளைவித்தது. ஒரு மேஜைமீது சாயி பாபாவின் படம் வைக்கப்பட்டு மலர்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. ஊதுவத்தியின் மென் மணம் வீசிக் கொண்டிருந்தது. சுவாமிஜி ஒரு வேட்டி அணிந்துகொண்டு உடம் பின்மீது ஒரு பனியன்மட்டும் போட்டுக்கொண்டு தெற்கு நோக்கி நின்று பக்தர்கள் வரும்போது அவர்களுக்கு ஆசி வழங்கி 'உத்தி' கொடுத்துக் கொண்டிருந்தார். நான் கொண்டுபோயிருந்த மலர் களை சுவாமிஜி மேஜைமீது வைக்கும்படி கூறினர். பிறகு நான் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தபோது சுவாமிஜி (பிறகு வழக் கப்படி செய்வதுபோல்) என் முதுகைத் தடவிக் கொடுக்கவில்லை. எழுந்து நின்றதும் என் நெற்றியில் தன் பெருவிரலை வைத்து அழுத்தி திலகமிட்டு, "உனக்கு சிறிதளவு கர்மவினை உள்ளது. அது நீங்க வேண்டும். அதற்காக வியாழக்கிழமைகளில் உபவாசம் இருந்து, அந்த உணவை ஒரு ஏழைக்கு வழங்கி ஒருஅணவும் அளிக்க வேண்டும். இவ்வாறு ஏழு வாரங்கள் செய்தபிறகு நீ மகிழ்ச்சி அடைவாய்" என்று சொன்னர். எனக்கு மலர்களும், பழங்களும் அளித்து, விபூதி பிரசாதமும் கொடுத்தார். இவைகளைப் பெற்றுக் கொண்டு நான் படிகளில் இறங்கிவரும்பொழுதே என் மனதிலிருந்த பெரும் பாரம் குறைந்தது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. ஆனல் இதை மற்றவர்களுக்கு எடுத்துச் சொல்ல என்னுல் இயலவில்லை. பிறகு ஒவ்வொரு வியாழக்கிழமையும் தவருமல் சென்று தரிசனம் செய்துவந்தேன்.

1952ம் ஆண்டு ஜூன் மாதம் இறுதிவரையில் எனக்கு உத்தி யோக நியமன உத்தரவு வரவில்லை. அதனல் நான் என் சொந்த ஊருக்குத் திரும்பிவிட நினைத்தேன். என் தீர்மானத்தை சுவாமி ஜீயிடம் சொன்னபோது, "உனக்கு சென்னையில்தான் உத்தியோகம் கிடைக்கும். இப்போது நீ ஊருக்குப்போனுலும் திரும்பவும் சீக்கிரம் சென்னைக்கே வந்துவிடுவாய்" என்று சொன்னர். ஊருக்கு சென்ற பதினைந்து நாட்களுக்குப் பிறகு நியமன உத்தரவு கிடைத்தது. அதனல் சென்னைக்குத் திரும்பி வேலையில் அமர்ந்தேன். என் எதிர் காலம்பற்றி சுவாமிஜி முதன் முதலாக சொன்னது பலித்ததுபோல் பிறகு பல சம்பவங்களை அவர் முன்கூட்டி சொன்னதும் பலிதம் ஆக ஆரம்பித்தன.

என்தாயாருக்கு 1952ம் ஆண்டு அக்டோபர் மாதம் மாரடைப்பு ஏற்பட்டது. என் தாயாரைப் பார்த்துவிட்டு திரும்பியதும் சுவாமி ஜீயிடம் அவள் நிலைமையை எடுத்துச் சொன்னேன். ''இன்னும் இரண்டு வருடங்களுக்கு அந்த அம்மாளைப்பற்றிக் கவலைப்படவேண் டாம்; அவர்கள் சீக்கிரம் குணமடைந்து விடுவார்கள்'' என்று சுவாமிஜி சொன்னார். அவர் சொன்னபடியே என் தாயார் குணம் அடைந்துவிட்டார். பிறகு 1954ம் ஆண்டு :ஜூன் மாதம்தான் இறைவனடி சேர்ந்தார்.

நான் 1942ம் ஆண்டு முதல் ஸ்ரீ சாயி பாபா பக்தனாக இருந்த போதிலும், சுவாமிஜீயுடன் பழக ஆரம்பித்ததிலிருந்து அப்பக்தியும், பாபாவிடம் உள்ள நெருக்கமும் நாளுக்குநாள் வளர ஆரம்பித்தது. மேலும் சுவாமிஜி பாபாவின் அருளால் நம் தொல்லைகளை போக்க வழி காண்பித்து வருங்காலத்தில் நடக்கவிருப்பவைகளை முன்கூட் டியே அறிவித்து அவர் சொல்லும் வார்த்தைகள் சொல்லுக்குச் சொல் உண்மையாக பலிதமாவதாலும், நம் முதுகிலும் தலையிலும் தடவிவிட்டு நெற்றியில் விபூதி இடும்போது நமக்கு ஒரு அலாதி யான மனச்சாந்தி ஏற்படுவதாலும் பாபாவின் பக்தி நிலைத்து நின்று வருகிறது. ஸ்ரீ பாபாவை நான் நேருக்கு நேராக சுவாமிஜீ மூலம் பார்ப்பதினால் அவர் என் இரத்தத்துடன் கலந்துவிட்டார். அத னால் நான் எப்போதும் சுவாமிஜீயின் ஆலோசனைப்படியே நடந்து வருகிறேன். இவை இரண்டும் எனக்கு என்றும் துணையாயிருந்து நற்பயன்களை அளித்து வருகின்றன.

இன்னும் சில அனுபவங்களை நான் குறிப்பிட விழைகின்றேன்.

டாக்டர்கள் என் குழந்தை பிழைக்காது என்று கைவிட்டுவிட்ட போதிலும் சுவாமிஜீயின் அருளால் அக்குழந்தை முற்றிலும் குணம் அடைந்தது. சுவாமிஜி விபூதி கொடுத்து அதை ஒரு மஞ்சள் துணி யில் சுற்றி குழந்தையின் கையில் கட்டி நாற்பது நாட்களுக்கு வைத் திருந்து, தொடர்ந்து வைத்தியம் செய்துகொண்டிருக்கும்படி கூறி னார். அவ்வாறே நாங்கள் செய்தோம். டாக்டர்கள் வியக்கும்படி குழந்தை நோய் நீங்கி குணமடைந்தது.

ஒரு நண்பர் என்னிடம் சில ஆயிரம் ரூபாய்கள் கடனாகக் கொடுத்து உதவும்படி கேட்டார். ஆனால் அவரால் அதைத் திருப் பித்தர முடியுமா என்று எனக்கு சந்தேகம் தோன்றியது. நான் சுவாமிஜியிடம் ஆலோசனை கேட்டேன். அவர் இவ்வுதவி செய் வது உசிதமல்ல என்று சொன்னார். அதன்படியே நான் உதவி செய்யாமல் இருந்துவிட்டேன். சில மாதங்களுக்குப் பிறகு என்

நண்பரின் குடும்பத்தில் சண்டை சச்சரவு உண்டாகி சொத்து பிரிவினையும் ஏற்பட்டுவிட்டது. என் நண்பர் குடும்ப பராமரிப்புக்கு ஏற்பட்ட செலவுகளுக்கு தான் பொறுப்பேற்க முடியாது என்று தட்டிக் கழித்துவிட்டார். நான் அவருக்கு கேட்டபடி கடனளித்து உதவியிருந்தால் என் கதியும் அதோகதிதான். பணம் போனது போனதுதான். பக்தர்களின் நலன்களை பாபா எவ்வாறு கண் காணிக்கிறார்!

என் குடும்பத்தில் உள்ள பல தொல்லைகளினால் என் இலாகாப் பரீட்சைகளில் நான் தேர்வுபெற முடியாமல் இருந்தேன். மீண்டும் நான் பரீட்சை எழுத இருந்தபோது சுவாமிஜீ, "இம்முறை பாபா உனக்கு அருள் செய்வார். கவலைப்படாதே" என்று அபயம் அளித்தார். நான் பரீட்சையில் தேறிய நற்செய்தியை சுவாமிஜீயிடம் சொன்னபோது ' உனக்கு பாபாவிடம் ஆழ்ந்த நம்பிக்கை உள்ளது. ஆகவே பாபா உனக்குக் கைகொடுக்கிறார்'' என்றார். இந்நிகழ்ச்சி என்னிடமிருந்த பாபாவின் பக்தியை மேலும் உறுதிப்படுத்தியது.

நான் தேசீய சேமிப்பு நிறுவனத்தில் ஒரு கணிசமான தொகையைப் போட்டிருந்தேன். ஆனால் அந்த அத்தாட்சிப் பத்திரங்கள் காணாமல் போய்விட்டதினால் பதிலுக்கு வேறு அத்தாட்சிகள் வாங்கி வைத்திருந்தேன். இப்பணத்தைப் பெறுவதற்காகப் பல ஆண்டுகளாக அரசாங்கத்துடன் கடிதப் போக்குவரத்து நடந்தும் பணம் கிடைக்கும் வழியைக் காணோம். வழக்கப்போல் இது குறித்து நான் சுவாமிஜீயைக் கேட்டபோது, "அது உன் பணம். இன்னும் சில நாட்கள் கழித்து அது உனக்கே வந்து சேரும்" என்றார். அவர் குறிப்பிட்ட நாட்கள் கடந்தும் ஒன்றும் நடக்கக் காணோம். இரண்டு வாரங்கள் கழித்து ஒரு குறிப்பிட்ட தபால் ஆபீசுக்குப் போய், தக்க ஆதாரம் காண்பித்து பணத்தைப் பெற்றுக் கொள்ளும்படி உத்தரவு வந்தது. அவ்வுத்தரவின் தேதியை நான் குறிப்பாக ஆராய்ந்தபோது, சுவாமிஜீ எந்த நாளைக் குறிப்பிட்டாரோ அதே தேதியே அக்கடிதத்தில் காணப்பட்டது. அரசாங்க அலுவலகங்களில் வழக்கமாக ஏற்படும் கால தாமதத்தினாலேயே அக்கடிதம் இரண்டு வாரங்கள் கழித்து வந்திருக்கிறது.

கடிதத்தில் குறிப்பிட்டிருந்த தபாலாபீசில் எனக்குத் தெரிந்தவர் என்று யாரும் இருப்பதாகத் தெரியவில்லை. பாபாவின்மீது முழுப் பாரத்தையும் போட்டுவிட்டு நான் அத்தபாலாபீசுக்குப் புறப்பட்டேன். என்ன ஆச்சரியம்! அங்கு எனக்கு மிகவும் பழக்கமான ஒருவர் சமீபத்தில்தான் மாற்றலாகி வந்து பணி புரிந்து

கொண்டிருந்தார். அவர் என்னை அடையாளம் கா...
பணம் பெற்றுக் கொள்ள உதவினார். சுவாமிஜீ சொன்னபடி என்
பணம் என்னிடமே வந்து சேர்ந்துவிட்டது.

மிகக் கடுமையான மூல வியாதியால் நான் அவதிப் பட்டுக் கொண்டிருந்தேன். ஊசிமருந்தும் மற்ற மருந்துகளும் தாற்காலிகக் குணத்தைத்தான் கொடுத்தன. சுவாமிஜீயிடம் இக்கஷ்டத்தைச் சொல்வதா, வேண்டாமா என்று பல நாட்கள் குழம்பிக் கொண்டிருந்தேன். ஆனால் நிலைமை முற்றிவிடவே அவரிடம் நான் மௌனமாக அனுபவித்து வந்த கஷ்டங்களை விவரித்தேன். அவர் எனக்கு விபூதி கொடுத்து, அதைத் தேங்காயெண்ணெயில் குழைத்து மூன்று இரவுகள் புண்ணின் மீது போடும்படிச் சொன்னார். புனிதமான விபூதியை புண்பட்ட இடத்தில் அவ்வாறு போடுவது தகுமா என்று நான் தயக்கம் காண்பித்ததை சுவாமிஜீ ஊகித்தறிந்து கொண்டு, "ஒன்றும் தயக்கம் வேண்டாம். நான் சொல்லியபடியே புண்ணின் மீது போடுங்கள். அது மீண்டும் வரவே வராது" என்றார். அதன் பிறகு இன்றுவரை எனக்கு ஒரு சொட்டு இரத்தம்கூடச் சிந்தியது கிடையாது.

நான் நெடுநாட்களாகச் சென்னையில் ஒரு வீடு வாங்க வேண்டுமென்று கனவு கண்டுகொண்டிருந்ததும் சுவாமிஜீயின் ஆசியினால் 1962ல் நிறைவேறியது.

என் மனைவிக்குக் கடுமையான நோய் கண்டது. வைத்தியர்கள் அவநம்பிக்கையுடன் என் உறவினர்களுக்கெல்லாம் சொல்லியனுப்பும்படிச் சொன்னார்கள். அவ்வாறே செய்தேன். "பாபா உன் மனைவியை இன்னும் சில ஆண்டுகளுக்கு அவருக்குச் சேவை செய்ய விட்டு வைத்திருப்பார். நீங்கள் பாபாவிடம் முறையிடுங்கள். நாளையதினம் சாயந்திரத்துக்குள் உங்கள் மனைவி சுகமடைவார்" என்று சுவாமிஜீ எனக்கு ஆறுதல் கூறினார். மறுநாள் மாலை என் மனைவியின் உடல் நிலையில் முன்னேற்றம் கண்டது. மறுதினம் காலையில் என் மனைவி சுய நினைவுடன் பேசியதுகண்டு வைத்தியரே மனம் நெகிழ்ந்தார். சில மாதங்களுக்குப் பிறகு அவளுக்குப் பூரண குணமேற்பட்டது.

எனக்கு மார்புவலி ஏற்பட்டு ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப் பட்டேன். பிறகு இது 'மாரடைப்பு' என்று தீர்மானிக்கப்பட்டது; பல மாதங்கள் நான் படுத்தபடுக்கையாகி விட்டேன். உடம்பும் இளைக்கத் துவங்கியது. ஆனாலும் சுவாமிஜியின் ஆசியாலும், அவர் எனக்கு அளித்துவந்த தேறுதல் மொழிகளாலும், விபூதியினாலும்

எனக்கு மனேதிடம் அதிகரித்து வந்தது. நீண்ட நாட்களுக்குப் பிறகு நான் பூரண நலம் பெற்று, சுவாமிஜியின் தரிசனத்தைப் பெற்றபோது என் நோயின் விளைவால் எனக்கு ஏற்பட்டிருந்த பணக்கஷ்டங்களை விவரித்தேன். "ஏன் பணத்தைப் பற்றிக் கவலைப் படுகிருய்? உனக்கு உடல் நலமிருந்தால் எவ்வளவு பணம் வேண்டு மானுலும் சம்பாதிக்கலாமே. துரதிர்ஷ்டவசமாக உனக்கு ஏதாவது ஏற்பட்டிருந்தால் உன் மனைவியின் கதி என்ன ஆகியிருக்கும்? அவள் நல்லகாலம் நீ குணமடைந்து விட்டாய். உன் உடல் நலத்தைப் பற்றி நான் உண்மையில் கவலை கொண்டிருந்தேன். பாபாதான் உன்னைக் காப்பாற்றிஞர். போய் வா" என்று சுவாமிஜி அன்புடன் சொன்ஞர்.

தன் பக்தர்களுக்கு ஏற்படும் கஷ்டங்களைப் போக்கி நல்லவை களுக்கு உற்சாகம் காட்டித் தேறுதல் சொல்லும் இப்புண்ணிய ஆத்மாவுக்கு நான் எவ்வளவு கடமைப் பட்டுள்ளேன்! 'பாபாவின் மீது நம்பிக்கை கொள்ளுங்கள்; என்ஞலாவது ஒன்றுமில்லை' என்று சுவாமிஜி சொல்வார். சுவாமிஜீயின் ஆசியிஞலேயே எனக்கு எல்லாம் நடந்ததாகச் சொல்லும்போது, அவர் உடனே, "எல்லாம் கருணைக்கடலான பாபாவின் அருள்தான். நான் யார்? நானும் உன்னைப்போல் ஒரு பக்தன்தானே!" என்பார். சுவாமிஜி பக்திப் பெருங்கடல்; அடியார்க்கு அடியார்; மெய்யன்பர்; கருணையே வடிவானவர்.

1952ம் ஆண்டு மார்ச் மாதம் நான் சுவாமிஜீயுடன் தொடர்பு கொண்டதுமுதல் ஆலோசனைக்கோ, நல்வழி காட்டவோ, உத விக்கோ நான் வேறு யாரிடமும் செல்வதில்லை. ஆண்டவனின் பரி பூரண அருள் பெற்றுள்ள சுவாமிஜீயை தவிர வேறு யார்தான் எனக்கு இதயபூர்வமான அனுதாபத்தையும், தேறுதல் மொழிகளை யும், கஷ்டங்கள் வந்த காலங்களில் மன ஆறுதல் அளித்து தேற்ற முடியும்? நன்றிப் பெருக்கால் என் கன்னங்களில் கண்ணீர் வழிந்து ஓட நான் இதைவிட சிறப்பாக எழுத முடியாது.

சுவாமிஜீயின் அருமை வாழ்க்கைத் துணைவியாரை நாங்கள் 'அம்மா' என்றுதான் அழைப்பது வழக்கம். நானும், எனது குடும் பத்தினரும் அம்மாவின் ஆசியையும் அருளுரைகளையும் பெற்றதை இச்சமயத்தில் நான் குறிப்பிடாமல் இருக்க இயலாது. 1966ம் ஆண்டு அம்மா அவர்கள் ஜீவன் முத்தியடைந்த பிறகு எங்கள் வேண்டுதல்களை நிறைவேற்றி வருகிருர். எங்கள் கோரிக்கை களுக்கு அடிக்கடிசெவிசாய்த்து வருகிருர்.

இவைகளெல்லாம் எதைக் காட்டுகின்றன என்ருல் நமக்கு எவ்வளவு கஷ்டங்கள், துன்பங்கள் வந்தாலும் நாம் நம் குருவின் மீது அசையாத நம்பிக்கை வைத்திருந்தால், கஷ்டங்கள் எல்லாம் நீங்குவதுடன் மன அமைதியும் கிட்டும் என்பதைத்தான். குருவின் மீது நம்பிக்கையும், அவர் வாக்கில் நிலேத்த உறுதியும் நம் இருதய பூர்வமாக இருக்க வேண்டும். அந்த நிலேயில் நமக்கு முக்தி கிடைப்பதும் உறுதி.

“உறுதியான நம்பிக்கை, அசையாத பொறுமை” என்ற முதுமொழிகளே நான் எப்போதும் கடைப்பிடித்து வருகிறேன். இவைகள்தான் என்னேப் பல சோதனைகளிலிருந்தும் கஷ்ட நிலேகளிலிருந்தும் காப்பாற்றியுள்ளன.

## சித்து விளேயாட்டு வேண்டாம்

திரு. தா. ராஜாராம், மேலாளர், சிறுவர் அரங்கம், சென்னே-2 எழுதுவதாவது :

நான் கடந்த பன்னிரண்டு ஆண்டுகளுக்கு மேலாக சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜீயுடன் தொடர்பு கொண்டுள்ளேன். ஒவ்வொரு வியாழக்கிழமையும் தவருது பூஜைக்கு சென்று வருகிறேன். நான் எப்போதாவதுதான் கோயிலுக்குப் போவேன். ஆனுல் பாபா பூஜைக்குத் தவருமல் சென்று வருகிறேன். சாயி நிலேயத்தில் மனதிற்கு அமைதியும், சுவாமிஜீயிடம் நம் குறைகளே சொல்லிக்கொள்வதில் பாரம் இறங்கியதுபோன்ற ஒருவித உணர்வும் பெற்று வருகிறேன். சுவாமிஜி என்னிடம் எப்போதும் பரிவும், அன்பும், ஆதரவும் காட்டுவார். கஷ்ட காலங்களில் மனதிற்கு தெம்பு உண்டாக பாபா அருள் மொழிகளே வழங்குவார்.

என் வாழ்க்கையில் பாபாவின் அருளால் ஒரு மகன் பிறந்ததை குறிப்பிடாமல் இருக்க முடியாது. அவனுக்கு சாயிராம் என்றே பெயர் வைத்திருக்கிருேம்.

என் மைத்துனருக்கு திருமணம் முடிக்க இருந்தோம். ஓராண்டு கழித்துத்தான் திருமணம் முடிவாகுமென்று சுவாமிஜி சொன்னுர். நாங்கள் எவ்வளவோ முயற்சி செய்தும் ஓராண்டு கழித்துத்தான் அவருக்குத் திருமணம் முடிந்தது.

பல நண்பர்களே நான் சுவாமிஜீயிடம் அழைத்துச் சென்றிருக்கிறேன். ஒரு நண்பர் தன் கஷ்டங்களே அவரிடம் சொல்லவில்லே.

சுவாமிஜி தானுகவே அவரிடம் பின்வருமாறு சொன்னூர்: ''உங்கள் அலுவலகத்தில் ஒருவர் உங்களுக்கு எதிராக சதி செய்து வருகிருர். அதைப்பற்றி கவலைப்பட வேண்டாம். முடிவில் எல்லாம் உங்களுக்கு சாதகமாகவே முடிந்து உத்தியோக உயர்வும் கிடைக்கும்'' என்ருர். என் நண்பர் ஆச்சரியத்தில் மூழ்கிவிட்டார். சில மாதங்களில் சுவாமிஜி குறிப்பிட்டபடியே எல்லாம் சரியாகவே நடந்தன.

பாபாவின் அருளால் சுவாமிஜி மக்களின் கஷ்டங்களைப் போக்கி அவர்களுக்கு நல்ல தொண்டாற்றி வருகிருர். ஆத்மீக வழியில் பக்தர்களைத் திருப்பி அன்ருடத் துன்பங்களிலிருந்து விடுதலை பெற வழி காண்பித்து வருகிருர். சுவாமிஜீக்கு ஏமாற்று வேலைகள், சித்து விளையாட்டுகள் என்ருல் அறவே பிடிக்காது. இவ்வித சித்து விளையாட்டுகளைச் செய்து மக்களை ஏமாற்றும் 'சாமியார்களிடம்' மக்கள் செல்லக்கூடாது என்று எச்சரிப்பார். தம் பக்தர்களில் சிலர் இதில் நம்பிக்கைகொண்டு மற்றவர்களிடம் செல்வதை சுவாமிஜி அறிவார். இருப்பினும் அவர்களைக் கட்டாயப்படுத்த மாட்டார். அவரவர் உண்மையறிந்து நல்வழிப்படுவர் என்பது சுவாமிஜியின் கருத்து. சுவாமிஜி பக்தி மார்க்கத்தின் சிறப்பைத்தான் எடுத்து உரைப்பார். பாபாவின்மீது ஆழ்ந்த பக்தியும் குருவின்மீது உறுதியான நம்பிக்கையும் இருக்க வேண்டும் என்பார். பல குருமார்களிடம் சென்று கொண்டிருப்பதைவிட ஒரு குருவின் தலைமையை ஏற்று, பக்தி செலுத்தி, நம்பிக்கை வைத்து, அவர் காட்டும் பாதையில் செல்வதே சிறப்பானது என்பார்.

சுவாமிஜீ தன்னிடம் அசாதாரன சக்தி இருப்பதாக என்றும் சொல்லிக்கொண்டதில்லை. தான் பாபாவின் தொண்டன் என்றும், தன்னிடம் ஏதாகிலும் இருக்குமாயின் அது பாபாவின் சக்தி என்று தான் கூறுவார்.

———:o:———

# மூன்றும் பகுதி

## சுவாமிஜி கொண்டாடும் விழாக்கள்

### மகா சமாதி, ஸ்ரீ ராமநவமி உற்சவங்கள்

சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜீ பாபாவின் பக்தராகி பெனுகொண்டாவில் மக்களை கைதூக்கிவிட சாயி பூஜை தொடங்கியது முதல் விஜயதசமியன்று ஸ்ரீ சாயி பாபா மகா சமாதி உற்சவங்களையும், ஸ்ரீ ராமநவமியன்று பாபாவுக்கு மிகவும் பிடித்த ஸ்ரீ ராமநவமி உற்சவங்களையும் மிகச் சிறப்பாக ஆடம்பரம் இல்லாத விமரிசையுடன் நடத்தி வருகிறார். இந்த இரண்டு உற்சவ சந்தர்ப்பங்களிலும் அவர் பக்தர்களுக்கு ஒவ்வொரு வருடமும் இறையருளை நினைவூட்டியும், கடமையை போதித்தும் உபதேசம் செய்கிறார். பாபா பக்தர்களுக்கு இந்த உபதேசங்கள் அரசியல் சட்டத்தின் பீடிகை (ப்ரீஆம்பில்) போன்றது. மிக முக்கியமானது. சாயி பாபா பக்தர்கள் கூட்டமாகவோ அல்லது தனியாகவோ அப்புனித நாளில் சுவாமிஜீயின் உபதேசங்களைப் படிப்பார்கள். இந்த உபதேசங்கள் பலவற்றை இந்நூலில் சேர்த்திருக்கிறேன்.

சுவாமிஜி இவ்வுபதேசங்களை நடத்தும் — நடத்தி வைக்கும் முறையும் கவனிக்கத் தக்கது. இவ்வுற்சவங்களின் நிகழ்ச்சிகளுள் சிலவற்றை விவரிக்கிறேன். இதைத் தவிர வியாழக்கிழமை பூஜை மூலமாகவும், கடந்த இருபது வருடங்களுக்கு மேலாகப் பல்வேறு ஊர்களுக்குச் சென்று பாபா பூஜை செய்வதன் மூலமாகவும் பாபா பக்தியை பிரசாரம் செய்கிறார். இப்பிரசார விவரங்களையும் கிடைத்தமட்டும் இந்நூலில் சேர்க்க முயன்றுள்ளேன்.

எவ்வளவு சிரத்தையுடன் செய்திருந்தாலும் குறைகள் இருக்கலாம்; தவறுகள் நேர்ந்திருக்கலாம். பொறுப்பு என்னுடையது தான். இரண்டாம் பதிப்புக்குச் சந்தர்ப்பம் ஏற்படுமென்றும் அப்பொழுது ஸ்ரீ கேசவய்யாஜீயின் உபதேசங்களையும், பக்தர்களின் குறிப்புக்களையும், அன்பர்களின் விமரிசனங்களையும் கவனித்துத் தேவையான மாறுதலைச் செய்யலாம் என்றும் நினைக்கிறேன், அந்த

சந்தர்ப்பம் மறுபடியும் எனக்குக் கிடைத்தால் (சுவாமிஜீயின் சரித்திரத்தை எவ்வளவு எழுதினாலும் அது முடிவுற்றதாகத் தோன்றாது) விரிவாகவும், பூர்ணமாகவும் எழுதவேண்டுமென்பது என் அவா அப்படி எழுதுகிறவர்களுக்கு இது ஆதார நூலாகவாவது உதவும் என்று நம்புகிறேன். உண்மையில் இந்த படைப்பு என்னுடையது அல்ல. இது ஒரு தொகுப்பு நூலாகும். ஸ்ரீ சுவாமிஜீயின் ஆணைப்படி ஸ்ரீ சாயிபாபா அநுக்கிரகித்த முறையில் இந்த நூலை முடித்திருக்கிறேன். பக்தர்கள் சாரத்தையே கிரகித்துக்கொள்வார்கள் என்றும் அதற்கு மொழி உதவும் என்றும் நம்புகிறேன்.

## மகா சமாதி உற்சவங்கள்

1959ம் ஆண்டில் சென்னை நகரில் வசிக்கும் பாபா பக்தர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து, ஸ்ரீ சாயி பாபா சமாஜத்தை ரிஜிஸ்தர் செய்து கொள்ளும்வரையில் மகாசமாதி உற்சவங்களை சுவாமிஜி தாமே ஏற்று நடத்தி வந்தார். பக்தர்கள் விரும்பிக் கொடுத்த சந்தாக்களைச் சேகரித்து, வசூலான ஒவ்வொரு பைசாவையும் வெகு ஜாக்கிரதையாக செலவு செய்வார். உற்சவம் முடிந்தபின், இந்த உற்சவத்தை நிர்வகிக்க ஏற்பட்ட பக்தர் குழுவினருக்கு கணக்குகளைக் காட்டுவார். மீதம் உள்ள தொகையை அடுத்த வருட உற்சவ செலவுக்காக ஒதுக்கி வைப்பார். சமாஜம் ஏற்பட்டபின்பு இவ்வசூல், செலவு ஆகியவற்றின் பொறுப்பு முழுவதும் சமாஜத்தினருக்கே உரியது என சுவாமிஜி ஒப்பித்துவிட்டு பூஜை முதலிய நிகழ்ச்சிகளைமட்டும் கவனித்துக்கொள்கிறார்.

இந்த உற்சவங்களில் ராஜ்ய கவர்னர்கள், மத்திய அரசாங்க மந்திரிகள், ராஜ்ய மந்திரிகள், உயர்ந்த அதிகாரிகள், உயர் நீதிமன்ற நீதிபதிகள் ஆகியோர் பங்கெடுத்துக் கொள்கிறார்கள். இந்த உற்சவங்கள் துவங்கியதுமுதல் இதுவரை நடந்த ஒவ்வொரு வருடத்து உற்சவ விவரங்களையும் இங்கே வரிசையாக சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. 1961ம் ஆண்டில் நடந்த உற்சவ நிகழ்ச்சிகளின் விவரங்களை மட்டும் உதாரணமாக இங்கே சொல்லுகிறேன்.

## ஓம் ஸ்ரீ சாயிராம்

1967ம் ஆண்டு அக்டோபர் 12ம் தேதி ஷெணாய் நகர் சாயி நிலையத்தில் நடந்த ஸ்ரீ சாயிபாபா மகா சமாதி தினக் கொண்டாட்டத்தின்போது சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜி பக்தர்களுக்கு அளித்த செய்தி:

பலர் சாயி பாபாவைக் கடவுளின் அவதாரமாகக் கொண்டாடுகிறார்கள். அவர் உயிரோடு வாழ்ந்த காலத்திலேயே அவரை பரமாத்மாவின் அவதாரம் என்றும் தம் சொற்களாலும், செயல்களாலும் பக்தர்களுக்கு அவர் ஞான மார்க்கத்தைக் காட்டினாரென்றும் நம்பினார்கள். அவர் தம் உடலை உதறிய பிறகு பரமாத்மாவோடு கலந்து ஒன்றாகி நின்றபடியே, பேச்சற்ற அமைதியான முறையில் தம்மை நாடும் பல கோடி பக்தர்களுக்கு இன்றும் துணை புரிந்து வருகிறார். தாம் வாழ்ந்தபோது ஸ்ரீ சாயி பாபா உலகில் தோன்றிய கடவுள் எப்படி இருப்பார் என்பதற்கு உதாரணமாக இருந்தார். நம் பழங்காலத்து ரிஷிகள், கடவுளைக் குறித்து சொன்ன 'அந்தர்யாமி' தத்துவத்தைத் தம் செயல்களால் அவர் நிரூபித்தார்.

சாயி பாபாவின் உபதேசங்கள் புரியாதவையோ, பின்பற்றக் கஷ்டமானவையோ அல்ல. மனிதனுடைய குறைபாடுகளை அறிந்த அவர் கஷ்டமான சாதனைகளை உபதேசிக்கவில்லை. மனிதனுக்கு இயற்கையான உணர்ச்சிகளையும் போக்குகளையுமே பக்தி வாய்க்காலின் வழியே திருப்ப முயன்றார். ஆரம்பத்தில் லௌகீக சுகங்களைக் கொடுத்து ஆசை காட்டி, நாட்டின் பல பகுதியிலிருந்தும் பக்தர்களைத் தம்பால் இழுத்துக்கொண்ட அவர், பிறகு அவர்களுடைய ஒழுக்கத்தையும் குணத்தையும் நல்ல நெறியிலே திருப்பி, முடிவில் ஆத்மீக வளர்ச்சிக்கு வழி கோலினார். ஆத்மீக வளர்ச்சி பெற விரும்பும் ஒருவன் உலக வாழ்வையும் அதோடு தொடர்புகொண்டவற்றையும் விட்டுவிடுவது அவசியம் என்று சாயி பாபா நினைக்கவில்லை. சித்த சுத்தி பெறுவது, பாவம் செய்யாமல் இருப்பது, பாவ எண்ணங்களுக்கே இடங் கொடுக்காமல் இருப்பது இவைகள் மட்டும் ஆத்மீக வளர்ச்சிக்குப் போதும் என்பது அவர் கொள்கை. கடமையில் தவறாமல் இருப்பதே புகழுக்கு வழி என்பது சாயி பாபாவின் உபதேசம். பலனை எதிர்பாராமல் பலனில் பற்றற்றுக் கடமைகளைச் செய்வதை அவர் வற்புறுத்தினார். ஞானம், கர்மம், லௌகீகம், ஆத்மீகம் இவற்றுக்கிடையே முரண் இல்லை என்பதைக் காட்டுவதே சாயி பாபாவின் உபதேசங்களுள் முக்கியமானது. சமயச் சடங்குகளால் மட்டும் பயன் ஏற்பட்டுவிடும் என்பதை அவர் நம்பவில்லை. மனிதனை நல்லவனாக்கி அவனை தரும நோக்குடையவனாகச் செய்வதே சமயத்தால் ஏற்படவேண்டிய நன்மை என்பதை பாபா வற்புறுத்தினார். மனித குலத்தினிடம் அன்பு, ஏழை எளியவர்களுக்கு உதவி, வெறுப்பு பொறாமை இவைகளிலிருந்து விடுதலை ஆகிய இவற்றைத் தருவது எதுவோ அதுவே நல்ல சமயப் பழக்கம் என்று பாபா போதித்தார்.

திருவள்ளுவரைப் போன்ற நமது பழங்காலப் பெரியோர்கள் காமம், வெகுளி, மயக்கம், அகங்காரம் இவற்றிலிருந்து விடுபட்டவர்களே உண்மையான பெரியவர்கள் என்று சொல்லி இருக்கிறார்கள். பாபாவும் இதே கருத்தைத்தான் போதித்தார். அவருடைய நன்னடத்தை போதனை உலகம் அனைத்துக்குமே பொதுவானது. ‘நாம் ஆராய்ந்து பார்த்தால் உண்மையோடு ஒப்பிடக்கூடியது வேறொன்றுமே இல்லை’ என்பது வள்ளுவர் வாக்கு. பாபா வற்புறுத்தியதும் இதே கருத்தைத்தான். ஒருவர் தம் கடமையை தன்னலமும் பற்றும் அற்ற முறையில் செய்வது, சித்த சுத்திக்கும் ஆத்மீக வளர்ச்சிக்கும் காரணமாகும் என்று ஸ்ரீ ராமாநுஜர் அடித்துச் சொல்லியிருக்கிறார். இதே கருத்தைப் பாபாவின் உபதேசங்களிலும் காணலாம். சண்டை சச்சரவுகளும், பலவகை முரண்பாடுகளும் நிறைந்த தற்கால உலகத்திற்கு பாபாவின் உபதேசங்கள் மிகப் பொருத்தமானவை. சாயி பாபாவின் உபதேசங்களை நினைவில் கொண்டு பின்பற்றினால் தினசரிவாழ்க்கையில் நமக்கு எதிர்ப்படும் கஷ்டங்களையும், சந்தேகங்களையும் நாம் சுலபமாக வென்று டலாம்.

சாயி பாபாவின் பிறப்பும் ஆரம்ப வாழ்க்கையும் யாருக்குமே தெரியவில்லை. பதினாறு வயது பாலகனாக இருக்கும்போது அவர் சீரடிக்கு வந்தார். அப்பொழுதே அவர் ஆத்ம சாட்சாத்காரம் பெற்ற நிலையில் இருந்தார்; அடிக்கடி தியான சமாதியில் ஆழ்ந்து விடுவார். அதற்குப்பின் அவர் வாழ்ந்த அறுபது வருஷ காலத்தில் அவர் மனிதர்களின் கஷ்டங்களையும், துக்கங்களையும் போக்கும் முயற்சியிலேயே தம் பொழுதைக் கழித்தார். மனிதனுடைய பண்பை உயர்த்தவும் பாடுபட்டார். ஆத்மீக நிறைவால் இயற்கையாகவே தமக்குக் கிடைத்த சித்திகளின் காரணமாகப் பல அற்புதங்களைச் செய்து, பலரிடம் தெய்வ நம்பிக்கையை தூண்டினார். அவருக்குத் தெரியாத விஷயமே இல்லை. எல்லோருடைய அந்தரங்கமும் அவருக்குத் தெரியும். எல்லோருடைய மனத்துக்கும் ஆறுதல் தர அவரால் முடியும்.

இன்று பாபா மகா சமாதி அடைந்து 49 ஆண்டுகள் முடிந்து விட்டன. இது ஒரு புனிதநாள். பாபாவின் ஆத்மீக உபதேசங்களையும், சித்த சுத்தி உபதேசங்களையும் பின்பற்றுவதாக நாம் இன்று மறுபடியும் உறுதிகொள்வோமாக. சரியான தர்ம மார்க்கத்தில் நடந்து அஞ்ஞான இருளைவிட்டு நீங்கி ஞான ஒளி பெற்று, அழியாத பேரின்ப வாழ்வு பெற நமக்கு சரியான வழியைக் காட்டி கருணை புரியும்படி நாம் பாபாவை வேண்டுவோமாக.



ஷெனுய் நகர் சாயி நிலையத்தில் 1967ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 20ம் தேதி ஸ்ரீ ராமநவமி விழா கொண்டாடப்பட்டபோது கூடியிருந்த பிரமுகர்கள். இடமிருந்து வலம் : ஸ்ரீ ஏ. பகீரதன் (வருமான வரித்துறை அதிகாரி), ஸ்ரீ கே. வெங்கட சுவாமி நாயுடு, ஸ்ரீ டி. புருஷோத்தம், நீதிபதி ஸ்ரீ டி. ராமபிரசாத ராவ் மற்றும் சுவாமி கேசவய்யாஜி.



1961ம் ஆண்டு மார்ச் 25ம் தேதி ஸ்ரீ ராம நவமி விழாவில் தலைமை வகித்த ஸ்ரீ பி. டி. இராஜன், எம்.எல் சி, மற்றும் ஸ்ரீமான்கள் வி. என். ராமநாதராவ் (சப்-ஜட்ஜ், ரிட்), என். வெங்கட்டராவ். எம்.ஏ., (சென்னை பல்கலைக் கழக தெலுங்கு மொழித் துறை தலைவர்) ஆகியோர் சுவாமிஜீயுடன் இருப்பது.



1969ம் ஆண்டு மார்ச் 27ம் நாள் நடைபெற்ற ஸ்ரீராமநவமி விழா வின்போது கூடியிருந்த மக்கள் கூட்டத்தின் ஒரு பகுதி

# சாயி நிலையத்தில் பாபா மகா சமாதி தினக் கொண்டாட்டம்

முன்னாள் மத்திய அரசாங்க செய்தித் துறை அமைச்சர் திரு சி. ஆர். பட்டாபிராமன் சாயி நிலையத்தில் 1967ம் ஆண்டு அக்டோபர் மாதம் 12ம் தேதி நடைபெற்ற பாபாவின் 49ம் மகா சமாதி தினக் கொண்டாட்ட விழாவிற்குத் தலைமை வகித்தார். அப்போது பேசிய அவர், ஆத்மீக விழிப்பின் அவசியத்தைப்பற்றி வற்புறுத்தினார். நகரத்தின் பல பகுதிகளிலிருந்தும் மூவாயிரத்திற்கு அதிகமான சாயி பக்தர்கள் கூட்டத்திற்கு வந்திருந்தார்கள். சாயி நிலையத்திற்கு எதிரே அமைக்கப்பட்டிருந்த விசேஷ பந்தலில் கூட்டம் நடைபெற்றது. கொடிகளாலும், தோரணங்களாலும், வண்ண விளக்குகளாலும் பந்தலை அலங்கரித்திருந்தார்கள். பி. லலிதாவின் தோத்திரப் பாடலோடு கூட்டம் ஆரம்பமாயிற்று.

முன்னாள் ஜனாதிபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன், ஜனாதிபதி டாக்டர் ஜாக்கிர் ஹுசேன், உப-ஜனாதிபதி ஸ்ரீ வி. வி. கிரி, மகாராஷ்டிர கவர்னர் டாக்டர் பி. வி. செரியன், சென்னை கவர்னர் சர்தார் உஜ்ஜல் சிங், ஆந்திர மேல் சட்டசபைத் தலைவர் திரு பிரம்மையா, மத்திய அரசாங்க உணவு மந்திரி ஸ்ரீ ஜகஜீவன்ராம், அண்ணாமலை பல்கலைக் கழகத் துணை வேந்தர் ஸ்ரீ சந்திரா ரெட்டி, ஹைதராபாத் விவசாய பல்கலைக் கழகத் துணைவேந்தர் ஸ்ரீ புல்லா ரெட்டி ஆகியோர் அனுப்பி இருந்த செய்திகளை சமாஜக் காரியதரிசி ஸ்ரீ சி. பி. வேணுகோபால் வாசித்தார்.

## மன அமைதி

பதினெட்டு வருடங்களுக்கு முன்பு ஷெனாய் நகருக்கு குடிவந்த சுவாமி கேசவய்யாஜி மக்களுக்குச் செய்துவரும் ஆத்மீக சேவையைப் பற்றித் தமது வரவேற்புரையில் சமாஜ சேர்மன் முன்னாள் அமைச்சர் ஸ்ரீ கே. வெங்கடசாமி நாயுடு குறிப்பிட்டார். ஷெனாய் நகரில் சாயிபாபா கோயில் இல்லாத குறையை சுவாமிஜீயின் சாயி நிலையம் நிரப்புகிறது என்று சொன்னார். மகா சமாதி தினத்தை கொண்டாடுவதால் தங்கள் கடமையை செய்வதில் மக்களுக்கு ஆர்வம் அதிகரிப்பதாக அவர் சொன்னார். பலவகை நெருக்கடிகள் நிறைந்த இக்காலத்தில் மன அமைதியும், நல்ல இதயமும் அவசியத் தேவைகள் என்று குறிப்பிட்டார். மனிதர்களுக்கு நல்வழி காட்டிய பெரிய மகான்களையும், தொண்டர்களையும் இந்த நாடு பெற்றிருக்கிறது என்றார். இழந்துவிட்ட அமைதியையும், செல்வச் செழிப்பையும் நம்நாடு திரும்பப் பெற முயல்வது மிக அவசியம் என்று குறிப்பிட்டார்.

பிறகு சுவாமி கேசவய்யாஜி தம் ஆத்மீகச் செய்தியைப் படித்தார்.

## சொன்னது பலித்தது

"சுவாமிஜி எதிர்காலத்தைப்பற்றிச் சொன்ன விஷயங்கள் எல்லாம் பலித்திருக்கின்றன. சாயி நிலையத்தை தரிசித்தபிறகு பலர் உத்தியோக உயர்வு பெற்றிருக்கிறார்கள். மக்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்யவும், அவர்களுடைய மன, உடல் தொல்லைகளை நீக்கவும் சாயிபாபாவின் கைக் கருவியாக சுவாமிஜீ இருக்கிறார். சாயி நிலையத்தை தரிசித்தவர்களுக்கெல்லாம் மன அமைதியும், ஆசை நிறைவும் ஏற்பட்டிருக்கின்றன. சாயி பாபாவின் அருள் மின்சாரத்தைப்போல, எங்கும் பரவும் தன்மையுள்ளது. இப்பொழுது கூட்டம் நடக்கும் இவ்விடத்திலேயே அடுத்த வருடத்துக்குள் தியான மண்டபம் ஒன்று கட்டி முடிந்துவிடும். 50வது மகா சமாதிக் கொண்டாட்டம் அதில் நடக்குமென்று நான் நம்புகிறேன்." இவ்வாறு ஸ்ரீ டி. புருஷோத்தம் பேசினார்.

"இப்படி ஒரு நல்ல நாளில்—ஒரு சிறந்த கொண்டாட்டத்தில் கலந்துகொள்ள நேர்ந்ததைப் பெரும் பாக்கியமாகவே நான் நினைக்கிறேன். ஸ்ரீ கேசவய்யாஜி பக்தி மார்க்கத்தை நகரமெங்கும் பரப்பி வருகிறார். ஒப்பற்ற அவருடைய வியாழக்கிழமை பூஜை பல்லாயிரம் மக்களை கவர்ந்திருக்கிறது. அவருக்கு முன்னாலிருந்த பலரைப் போல சாயி பாபாவும் ஒரு பெரிய மகான். பக்தி மட்டும் போதாது; சாயி பாபாவின் உபதேசங்களை நாம் எல்லோரும் பின்பற்ற வேண்டும். இந்திய மக்கள் எல்லோருக்குமே பொது மதம் ஒன்றை அவர் உபதேசிக்கிறார். ஒவ்வொருவருக்கும் தம் இஷ்ட தெய்வத்தை உபாசிக்கும் சுதந்திரம் உண்டு. ஆனால் நம்பிக்கையும், பக்தியும் அவசியம் என்று பாபா போதித்திருக்கிறார். எல்லோருடைய இதயத்திலும் கடவுள் இருக்கிறபடியால், மனிதர்களிடத்தில் அன்பு காட்டி அவர்களுக்குச் சேவை செய்வதே கடவுள் சேவை என்பதை பாபா வற்புறுத்தியிருக்கிறார்" என்று அறநிலைய கோவில்கள் பாதுகாப்பு போர்டு உதவிக் கமிஷனர் ஸ்ரீ ஏ. சிதம்பரம் பேசினார்.

"இன்று ஒரு நல்ல நாள்; விஜய தசமி. ராவணனைக் கொன்ற ராமன், வெற்றி வீரனாக அயோத்தியில் புகுந்த நாள் இது. பாபாவின் சமாதி நாளும் விஜயதசமியும் ஒன்றாக வருவது, மிகவும் புனிதமான ஒரு சேர்க்கையாகும். கடவுள் அருளால் மனிதன் காமக் குரோதம் முதலியவற்றை வெல்ல முடியும் என்பதை இது குறிக்கிறது. தாம் ஒரு சித்தர் என்பதைத் தம் வாழ்நாட்களில் பாபா நிரூபித்துவிட்டார். நம் நாடு தொன்றுதொட்டே சமய உணர்ச்சி

யில் ஊறிய ஒரு நாடாகும். இத்தகைய நாட்டில் சாயி பாபா மதம் ஆழமாக வேர்விட்டு அகலப் பரவுவதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை'' என்று அம்பத்தூர் தொழிற்பேட்டை நிர்வாக ஆபீசர் ஸ்ரீ வேணு கோபால் நாயக்கர் பேசினார்.

''கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்'' என்னும் தமிழ்ப் பழமொழியையும் ''ஆல்போல் பரவி அருகுபோல் வேரோட வேண்டும்'' என்ற தமிழ் ஆசீர்வாதத்தையும் பேரறிஞர் ஒருவர் சொல்லக் கேட்டிருக்கிறேன். இவை தமிழுக்கே சிறப் பானவை. தாய்மையை மதிக்கும் அளவுக்குக் கடவுள் நம்பிக்கை வளரும். இந்த உலகத்தில் இன்றும் கடவுள் நம்பிக்கை இருப் பதற்குக் காரணம் அரசியல் வாதிகளோ, அரசியல் நிபுணர்களோ அல்ல. நம் நாட்டின் பெண்மணிகளே ஆவர். மகான்களின் போதனைகளே மக்களுக்கு நல்ல வழிகாட்டியாகும். சாயிபாபா அத்தகைய மகான்களுள் ஒருவர்'' என்று சென்னை மேல்சட்ட சபை மெம்பர் ஸ்ரீ எஸ். டி. சுந்தரம் பேசினார்.

''ஸ்ரீசாயிபாபாவின் உபதேசங்களை நாடெங்கும் பரப்புவதில் சுவாமிஜீ செய்துவரும் தொண்டு நிகரற்றது. கடவுள் நமக்குள் ளேயே இருக்கிறார் என்பதை நாம் உணரவேண்டும் என்று நம் சாஸ்திரங்கள் போதிக்கின்றன. நான் பல நாடுகளுக்குப் போய்ப் பார்த்திருக்கிறேன். அங்குள்ள மக்களுக்கு இன்னும் மன அமைதி கிடைக்கவில்லை. 'உணவுப் பற்றுக் குறைக்கும், வறுமைக்கும் இடையே இந்தியர்கள் எப்படித்தான் மன அமைதியுடன் வாழ் கிறார்களோ' என்று மேல் நாட்டார் வியக்கின்றனர். தனக்கு நிறைய வரும்படி வந்தும் எல்லா செல்வாக்கும் இருந்தும் மன அமைதி மாத்திரம் கிடைக்கவில்லை என்று அமெரிக்க டாக்ஸி டிரைவர் என்னிடம் மனம்விட்டு ஒப்புக்கொண்டார். ஸ்வீடனில் வாழ்க்கை நிலை மிக மிக உயர்ந்திருக்கிறது. ஆனால் உலகத்தி லேயே அதிகமான தற்கொலை விகிதம் அங்குதான் உள்ளது. ஆகை யால் எல்லாவற்றைக் காட்டிலும் மனச் சாந்திதான் யாருக்கும் அத்தியாவசியம்' என்று ஸ்ரீ சி. ஆர். பட்டாபிராம் பேசினார்.

ஸ்ரீ செங்கல்வராய பிள்ளையின் வந்தனோபசாரத்திற்கு பிறகு ஸ்ரீ கேசவய்யாஜீ எல்லோருக்கும் பிரசாதங்கள் வழங்கினார்.

1968ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 7ம் தேதி ஷெனாய் நகரில் நடந்த ஸ்ரீராமநவமி உற்சவத்தின்போது ஸ்ரீசாயிபாபா பக்த சமாஜத் தலைவரான சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜீ மக்களுக்கு வழங்கிய உப தேசம்:

ஸ்ரீசாயிபாபா பக்த சமாஜத்தின் ஆதரவில் நடக்கும் புனிதமான—என்றும் நினைவில் இருக்க வேண்டிய ஸ்ரீராமநவமிக் கொண்டாட்டத்திற்காக நாம் இன்று இங்கே கூடியிருக்கிறோம். நம் நாடு முழுவதிலும் மட்டும் அல்லாமல் வெளிநாடுகளிலும்கூட ஒவ்வோர் ஆண்டும் ஸ்ரீராமநவமியைக் கொண்டாடுகிறார்கள். ஸ்ரீராமச்சந்திர மூர்த்தி, ஸ்ரீசீதாதேவி இவர்களின் புனிதமான எண்ணம், சொல், செயல் முதலியவற்றை இன்று நினைவு கொள்வதால் நமது எண்ணங்களைத் தூயதாக்கி மனத்தைப் புனிதமாக்கி, சொற்களை இனிமையாக்கிச் செயல்களைத் தார்மீகமாக்கிக் கொள்ள இந்த உற்சவத்தில் கலந்துகொள்ளும் எல்லோருக்கும் வாய்ப்பு ஏற்படுகிறது. மகாவிஷ்ணு, மகாலக்ஷ்மியின் அவதாரங்களாகிய ஸ்ரீராமச்சந்திரனும் ஸ்ரீ சீதாதேவியும் மக்களுக்குக் காட்டிய நல்வழிகளை, வால்மீகி, கம்பர், துளசிதாசர், பாஸ்கரர் முதலிய கவிகள் தத்தம் ராமாயண காவியங்களில் வெகு சிறப்பாகக் கூறியிருக்கிறார்கள். மக்கள் சமூகத்திற்கே என்றென்றும் மலைமேல் ஏற்றிய விளக்கைப் போல் ராமாயணம் விளங்குகிறது. புகழ் பெற்ற ராமாயணப் பாத்திரங்கள் எல்லாம் தர்ம மார்க்கத்தில் நடக்க நமக்கு வழி காட்டுகின்றன. எத்தனை முறை படித்தாலும் கேட்டாலும் ராமாயணம் திகட்டாதிருக்க இதுவே காரணம்.

பழங் கால வீரர்களுக்கு லட்சிய புருஷராகவும், சத்தியம் நன்னடத்தை இவற்றின் உருவமாகவும், லட்சிய புத்திரனாகவும், லட்சியக் கணவனாகவும், எல்லாவற்றிற்கும் மேலாக லட்சிய அரசனாகவும் ராமபிரானை கவிசிரேஷ்டராகிய வால்மீகி நமக்குக் காட்டியிருக்கிறார். சீதையைப் பற்றியோ என்றால், அம்மாதரசியின் பெருமை புகழுக்கு அப்பாற்பட்டது. "ஒருவேளை, பல ராமர்கள் இருந்தாலும் இருந்திருக்கலாம். ஆனால் ஒரு சீதைக்குமேல் இருந்திருக்க முடியாது" என்று சுவாமி விவேகானந்தர் தம் பிரசங்கங்களில் சொல்லும் அளவுக்கு சீதையின் பெருமை உயர்ந்திருக்கிறது. "இந்தியப் பெண்மைக்கே அவள் ஓர் லட்சியம். பாரதநாடு எங்குமுள்ள ஒவ்வோர் ஆண், பெண், குழந்தை இவர்கள் கைகூப்பும் தெய்வமாக பல்லாயிரம் ஆண்டுகள் சீதாதேவி இருந்து வருகிறாள். புகழால் ஒளிரும் இந்தச் சீதை பரிசுத்தத்தையே பரிசுத்தம் ஆக்கும் இயல்பு கொண்டவள். பொறுமையும் தியாகமும் உருவாக நிற்பவள், கொஞ்சமும் முணுமுணுக்காமல் வாழ்க்கைச் சுமை முழுவதையும் தாங்கிய பெருமாட்டி அவள். தூய்மையும் கற்பும் நிறைந்த மனைவி. மக்களும் தெய்வங்களும்கூட வழிபடும் திருச்செல்வி. பெருமை மிக்க இந்தச் சீதை என்றுமே தெய்வீகம் பெற்றவள் ஆவாள். பாரத மக்களின் உடலில்—உதிரத்துக்குள்ளேயே அம்மாதரசி புகுந்துவிட்டாள். நம்நாட்டு பெண்மணிகளைப் புது நாக



முன்னாள் நிதியமைச்சரும் இந்நாள் காங்கிரஸ் தலைவருமான திரு சி. சுப்பிரமணியம் சாயி நிலைய விழாவில் பங்குகொண்ட போது எடுத்த படம். உடன் இருப்பவர் சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜி



சுவாமி ஸ்ரீ கேசவய்யாஜி நீதிபதி திரு சதாசிவம் அவர்களுக்கு நெற்றியில் விபூதியிட்டு ஆசீர்வதித்தல்



இந்திய அரசின் பாதுகாப்புத் துறையின் முன்னுல் காரியதரிசி திரு ஓ. புல்லாரெட்டி, ஐ. சி. எஸ் , 1958 ஜுன் 5ம் நாள் தன் குடும்பத்துடன் சாயி நிலையத்திற்கு விஜயம் செய்து ஸ்ரீ பாபாவை வணங்கினுர். அவரை சுவாமிஜி மாலையிட்டு வரவேற்று விபூதியும் பிரசாதங்களும் வழங்கினுர்.



சாயி நிலையத்தில் 1960ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 30ம் தேதி ஸ்ரீ சாயிபாபா மகா சமாதி தினத்தின்போது சுவாமிஜி அப்போது வருவாய்த்துறை அமைச்சராகவிருந்த திரு. எம். ஏ. மாணிக்கவேல் நாய்க்கர் (தற்போது மேல் சபைத் தலைவர்) அவர்களுக்கு விபூதி இடுதல்.



1968 ஏப்ரல் மாதம் 7ம் நாள் ஸ்ரீ ராமநவமி விழாவின்போது விழாவை ஆரம்பித்து வைத்த சென்னை ஷெரீப் திரு. எஸ். நாராயண சுவாமி. ஹைகோர்ட் நீதிபதி திரு. கே. வீராசாமி (தற்போதைய பிரதம நீதிபதி) தலைமை வகித்தார். சுவாமிஜீயும் அவர்களுடன் உள்ளார்.

ரீகப் போக்கில் ஈடுபடுத்தும் முயற்சிகள் நடைபெறுகின்றன. ஆனால் சீதையின் ஸ்திரீ லட்சியத்திலிருந்து இந்தப் போக்குச் சிறிது விலகி யிருப்பதால் அந்த முயற்சி பயனின்றிப் போவதை நாம் ஒவ்வொரு நாளும் காண்கிறோம். இந்தியப் பெண்மணிகள் சீதையின் லட்சியத் தைப் பின்பற்றியே முன்னேற வேண்டும். அது ஒன்றுதான் அவர் களை முன்னேற்றும் வழி; வேறு வழியில்லை'' என்று ஸ்வாமி விவேகானந்தர் சீதையைப் புகழ்கிறார்.

சாயிபாபா இந்த உலகத்தில் வாழ்ந்தபோது அவர் ஒவ்வொரு ஆண்டும் ஸ்ரீராம நவமியைக் கொண்டாடத் தவறியதில்லை. ஸ்ரீராமர், ஸ்ரீசீதை இவர்களும் சிறந்த ராமாயண பாத்திரங்களா கிய பரதன், லக்ஷ்மணன், குகன், விபீஷணன் இவர்கள் காட்டிய தருமநெறியில் மக்கள் நடக்க ஊக்கம் உண்டாக வேண்டும் என்ப தற்காகவே பாபா இப்படிச் செய்து வந்தார். இந்துக்களும், முஸ்லீம்களும் ஸ்ரீராமநவமி, சந்தனத் திருவிழா ஆகிய இரண்டை யும் ஒரே சமயத்தில் முழு ஒற்றுமையோடு சாயிபாபாவின் புனித சந்நிதானத்தில் சீரடியில் கொண்டாடுவார்கள். ஜாதி மத பேதம் எதுவும் இல்லாமல் இரண்டு மத பக்தர்களுமே பாபாவைத் தம் குருவாகக் கருதிப் போற்றி வந்தார்கள். ''தருமம் க்ஷீணித்து அதர்மம் ஓங்கும் போதெல்லாம், தர்மாத்மாக்களைக் காக்கவும், அதர்மத்தை ஒழிக்கவும் நான் அவ்வப்போது உலகில் அவதரிக் கிறேன்'' என்று கீதோபதேசத்தில் கிருஷ்ண பகவான் கொடுத்த வாக்கு நமக்கெல்லாம் நினைவில் இருக்கிறது. அக்கிரமத்தையும் அதர்மத்தையும் ஒழிக்கவும், நீதியையும் தர்மத்தையும் பரிபாலிக்க வும் மகா விஷ்ணு ராமனாக அவதரித்தார்.

'நம்மை தீங்கிலிருந்து காக்கவும் தம் கருணை நிழலில் நமக்கு இடந் தரவும் ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியே பாபாவாக அவதரித்தார்' என்ற நம்பிக்கை இருந்து வருகிறது. ''நீங்கள் எங்கே இருந்தாலும் சரி; என்ன செய்தாலும் சரி; எல்லாம் எனக்குத் தெரியும்; இதை மறக்க வேண்டாம். எல்லோருடைய உள்ளத்தையும் ஆள்பவன் நானே; அவர்கள் இதயத்தில் நானே அமர்ந்திருக்கிறேன்; சரா சரங்கள் எல்லாவற்றுக்கும் உறைவிடமாக இருப்பவனும் நானே; அண்டசராசரங்களுக்கும் சூத்திரதாரி நானே; எல்லாவற்றையும் அடக்கி ஆள்பவன் நானே; எல்லாப் பொருள்களின் தோற்றத்துக் கும் காரணம் நானே; சமரச முக்கோணச் சேர்க்கையும் நானே; எல்லா நடவடிக்கைகளுக்கும் மூல சக்தி நானே; ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழில்களைச் செய்பவனும் நானே; என் னிடம் மனத்தைச் செலுத்துகிறவனை எந்தத் தீங்கும் அணுகாது.

ஆனால் என்னை மறப்பவனையோ, மாயை தன் சாட்டையால் விளாசு விளாசென்று விளாசும்" என்று பாபா ஒருமுறை தன் பக்தர்கள் கூட்டத்தில் புகன்றார்.

இன்று நாம் மனம், உடல், ஆத்மா, எல்லாவற்றையும் கடவுளுக்கு அர்ப்பணம் செய்வதாக இப்புனித நாளில் உறுதி பூண்டு உலகக் கவலைகளிலிருந்து விடுபடுவோமாக. அவனுடைய திருவடிக் கமலங்களை அடையும் எளிய வழி பக்தி மார்க்கம்தான் என்று மாபெரும் முனிவர்கள் உபதேசித்திருக்கிறார்கள். இந்தப் பக்திக்குப் பல உதாரணங்களை ராமாயணத்தில் காணலாம். ராமாயணத்தில் கண்ட உபதேசங்களை நாம் பின்பற்றலாம். பாபா காட்டிய பக்தி மார்க்கத்தில் ஈடுபடலாம். நம்பிக்கையோடும் உறுதியோடும் அமுதம் போன்ற 'சாயிராம்' என்ற மந்திரத்தை இரவும் பகலும் நாம் எங்கிருந்தாலும், என்ன செய்துகொண்டிருந்தாலும் எல்லா சூழ்நிலைகளிலும், களிப்பிலும் கஷ்டத்திலும், சுகத்திலும் துன்பத்திலும், சொல்ல பழகிக்கொண்டு அவருடைய கருணைக்கு ஆளாவோமாக.

சாயி பாபா எப்போதும் நம்முடனேயே இருந்துகொண்டு தினசரி வாழ்க்கையை நடத்த நமக்கு வழிகாட்டி, நம்மை ஆசீர்வதிக்க வேண்டும் என்று நான் சாயி பாபாவை ஆழ்ந்த பக்தியோடு பிரார்த்திக்கிறேன். உலகத்து மக்களிடையே ஒற்றுமையும் சகோதரத்துவமும் வளர பாபா அருள் புரிவாராக. நம் நாடு முழுவதிலும், உலகெங்கிலும் அமைதியும் நல்லெண்ணமும் ஓங்குக.

## சாயி நிலையத்தில் ஸ்ரீராம நவமி

ஸ்ரீ சாயி பாபா பக்த சமாஜத்தின் ஆதரவில் ஷெனாய் நகர் சாயி நிலையத்தில் 1968ம் ஆண்டு 7ம் தேதி தக்கமுறையில் ஸ்ரீ ராம நவமி விழாவைக் கொண்டாடினார்கள். சென்னை ஹைகோர்ட் நீதிபதி ஸ்ரீ கே. வீராசாமி தலைமை தாங்கினார். சென்னை ஷெரீப் ஸ்ரீ எஸ். நாராயணசுவாமி விழாவைத் துவக்கி வைத்தார். சென்னையின் பல பகுதிகளிலிருந்தும் வெளியூர்களிலிருந்தும் பக்தர்கள் திரளாக வந்திருந்தார்கள்.

கூட்டம் துவங்குவதற்குமுன் ஸ்ரீ பாமர்த்தி வெங்கடேசுவர ராவ் கோஷ்டியார், மனத்தை உருக்கும் பக்திப் பாடல்களைப் பாடினார்கள். சாயிபாபா பக்த சமாஜத்தைப்போன்ற ஸ்தாபனங்களின் முக்கியத்துவத்தைப்பற்றித் தலைவர்களும், சொற்பொழிவாளர்களும் வற்புறுத்தி பேசினார்கள். ஸ்ரீ கேசவய்யாஜி மக்களுக்குச் செய்துவரும் சேவைகளைப்பற்றி மிகப் பாராட்டி பேசினார்கள்.

இந்திய ஜனாதிபதி டாக்டர் ஜாக்கிர் உசேன், முன்னாள் ஜனாதிபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன். உதவி ஜனாதிபதி ஸ்ரீவி.வி. கிரி, லோகசபைத் தலைவர் ஸ்ரீ என். சஞ்சீவ ரெட்டி, சென்னை கவர்னர் சர்தார் உஜ்ஜல் சிங், மகாராஷ்டிர கவர்னர் டாக்டர் பி. வி. செரியன், இரும்பு எஃகு மந்திரி டாக்டர் எம். சென்னாரெட்டி, ஆந்திர பிரதேச விவசாய பல்கலைக் கழக முன்னாள் துணை வேந்தர் ஸ்ரீ ஓ. புல்லாரெட்டி. முதலியவர்கள் அனுப்பியிருந்த செய்திகளை விழா ஆரம்பத்தில் ஸ்ரீ ராஜாராம் வாசித்தார்.

சமாஜ் சேர்மன் ஸ்ரீ கே. வெங்கடசாமி நாயுடு விழாத் தலைவரையும், பிரமுகர்களையும் மற்றவர்களையும் வரவேற்றுப் பேசினார். இந்த நாள் இந்தியா முழுவதிலும் பல கோடி மக்களுக்குப் புனித நாளாகும் என்று அவர் சொன்னார். சத்ரபதி சிவாஜியும், மகாத்மா காந்தியும் ஸ்ரீ ராமபிரானை லட்சிய வீரனாகவும், தர்மஸ்தாபகனாகவும் நினைத்துப் பூஜித்தார்கள் என்றார் அவர். ராமாயணத்தில் கண்ட நல்ல அரசியல் வாழ்க்கையை ஆதாரமாகக் கொண்ட ராமராஜ்யம் காண காந்திஜீ கனவு கண்டார்.

"சுவாமி கேசவய்யாஜீயின் ஆத்மீகப் பணி மிக உயர்ந்தது' 1947–க்கு முன் ஷெனாய் நகர் தண்டகாரண்யக் காடுபோல் இருந்தது. ஸ்ரீகேசவய்யாஜீ இங்கேவந்து தமது வியாழக்கிழமைப் பூஜையைத் தொடங்கியது முதல் இது ஒரு பெரிய ஆத்மீக ஸ்தலமாக மாறிவிட்டது. இதனால் ஷெனாய் நகரே புண்ணிய பூமியாக மாறி விட்டது. ஆண்டாள் பிறந்த வைஷ்ணவத் திருப்பதியாகிய ஸ்ரீவில் லிப்புத்தூரில் பிறந்த நீதிபதி ஸ்ரீவீராசாமி இந்தக் கூட்டத்துக்குத் தலைமை வகிப்பது மிகவும் பொருத்தம்.

"பாபா சுவாமிஜீ இவர்களுடைய ஆசியாலும் தலைவரையும் ஷெரீபையும் போன்ற பெருமக்களின் நல்லெண்ணத்தாலும் இந்தச் சமாஜத்தின் இயக்கம் நாளுக்குநாள் பெருகி இது ஓர் உலக ஆத்மீக கேந்திரமாக விளங்கும் என்று நான் நம்புகிறேன்" என்று ஸ்ரீ கே. வெங்கடசாமி நாயுடு கூறி முடித்தார்.

"ராமாவதாரம் ஒப்பும் உயர்வும் அற்றது. தாமே தமக்கு எல்லை வகுத்துக்கொண்டு ஸ்ரீ ராமபிரான் இந்த அவதாரத்தில் சாதாரண மனிதனைப்போலவே வாழ்ந்தார். பல கஷ்டங்களையும் தொல்லைகளையும் அனுபவித்தார். சீதாதேவி, லக்ஷ்மணன் முதலியவர்களும் சாதாரண மக்களைப்போலவே வாழ்ந்து, வாழ்வில் உயர்ந்த நோக்கை உலகுக்கு விளக்கிக் காண்பித்தார்கள். கனம் வி. எஸ். ஸ்ரீநிவாச சாஸ்திரி போன்றவர்கள் இந்தச் சிறப்பை எடுத்துக் காட்டி இருக்கிறார்கள்,

இரக்கம், தியாகம், நடுநிலைமை, எந்தச் சூழ்நிலையிலும் கலங்காத மனநிலை, எந்த நிலையிலும் சத்தியத்தையும் தருமத்தையும் பின்பற்றும் உறுதி, ராஜ்யத்தையும் மனைவியையும் இழக்க நேர்ந்தாலும் இவற்றைக் கடைப்பிடித்தல் ஆகிய சிறந்த நற்பண்புகளை ராமன் தம் வாழ்க்கையில் மேற்கொண்டு நமக்கு வழி காட்டினர். ராமாயணத்தில் இவற்றை விரிவாகக் காணலாம்.

''ராமாயணம் வெகுதூரம் சென்று வேறு நாடுகளிலும் பெருமை பெற்று, அந்த நாட்டு மக்களின் இதயங்களை ஆட்கொண்டிருக்கிறது. ஜாவா முதலிய இடங்களில்கூட இது இப்படி பரவி இருக்கிறது. இதயத்தைத் தொடும் அதன் கவர்ச்சியே இதற்குக் காரணம்'' என்றார், சென்னை ஷெரீஃப் ஸ்ரீ எஸ். நாராயணசாமி தம் தொடக்க உரையில். நாஸ்திகம் பரவி வரும் இந்தக் காலத்திலும் ஆத்மீக ஜோதியை அணையாமல் காக்க மனமார முயன்று வரும் சுவாமிஜீக்கும் சமாஜத்துக்கும் அவர் நன்றி செலுத்தினர்.

ஸ்ரீ டி. செங்கல்வராய பிள்ளை பின்வருமாறு பேசினர்.

''விலைமதிக்க முடியாத அனுபவ ரத்தினங்களையும், முத்துக்களையும் தன்னிடத்தே கொண்ட சமுத்திரம், ராமாயணம். திக்கற்றவர்களிடம் இரக்கம், சுக துக்கங்களைச் சமமாகப் பார்க்கும் மன நிலை, அடக்கம் இவைகளே ராமபிரானிடம் இருந்த உயர் குணங்கள். தம் தம்பி பரதனுக்கு ராஜ்யம்; தனக்குக் காடு என்று ஸ்ரீ ராமரிடம் கைகேயி கூறியபோதும் ராமருடைய மனம் சிறிதும் கலங்கவில்லை. சீதாதேவி பட்ட கஷ்டங்களைச் சொல்ல முடியாது. அவற்றை எல்லாம் அவள் தைரியத்துடன் பொறுத்துக்கொண்டாள். யாரையும் குற்றம் சொல்லவே இல்லை.

''அசோக வனத்தில் ராமருடைய முத்திரை மோதிரத்தைக் கண்ட சீதாதேவி ராமரைக் கண்டதுபோலவே மகிழ்ந்தாள். ராமரிடம் அவளுக்கு அப்படிப்பட்ட அன்பு. ராமபிரானும் சீதையிடம் அவ்வளவு அன்பு வைத்திருந்தார். அவர் ஏகபத்தினி விரதம் பூண்டவர். லக்ஷ்மணன், குகன், விபீஷணன் இவர்கள் சரணாகதி தத்துவத்துக்கு உதாரணமாக நிற்கிறார்கள். இத்தகைய சிறந்த நாளில் பாபாவின் பக்தர்கள் எல்லோரும் அவதார புருஷராகிய ஸ்ரீ ராமரையும் தங்கள் இஷ்ட தெய்வமும் ஆன பாபாவையும், அவர் தேர்ந்தெடுத்த பிரதிநிதியான சுவாமிஜீயையும் தியானம் செய்து அவர்களுடைய ஆசியைப் பெறுவார்களாக.''

அடுத்தபடியாக, சல்லா-ராதாகிருஷ்ண சர்மா தெலுங்கில் பேசினார் :

"வால்மீகி ராமாயணம் ஆனாலும் கம்பராமாயணம் ஆனாலும் பாஷை வேறு, அவை தோன்றிய காலம் வேறு என்பதைத் தவிர முக்கிய உபதேசங்கள் நல்வழிகள் எல்லாவற்றிலும் ஒன்றுதான். அவதார புருஷரான ஸ்ரீராமர் தெய்வீகம் நிறைந்த அவருடைய மனைவி சீதாதேவி, அவருடைய சகோதரர்கள், மற்றவர்கள் எல்லோரையும் பற்றிய உண்மை வரலாறு அது. பக்தியோடு அதைப் படிப்பவர்களின் குணநலன்களை உயர்த்தி அவர்களுக்கு மிக உயர்ந்த ஆத்மீக முன்னேற்றம் கிடைக்கும்படி செய்யும். ஸ்ரீ ராமருடைய வாழ்க்கை எல்லோருக்கும் மனக் கிளர்ச்சி தரக்கூடியது. இந்தியா முழுவதையும் ஒற்றுமைப் படுத்தும் அம்சங்கள் அவருடைய வாழ்க்கையில் இருந்தன. ஸ்ரீ ராமன் எல்லா எல்லைகளையும் மீறி எல்லா வேற்றுமைகளையும் தகர்த்தெறிந்துவிட்டு வடக்கே இமயமலையில் இருந்து தெற்கே சேது வரையும் பிரயாணம் செய்தார்.

"ஸ்ரீ ராமன் தரும ரக்ஷகர்" "ராமன் காப்பாற்றுகிறான்" என்ற தொடர். பழமொழியாகவே நம் நாட்டில் வழங்குகின்றது. உலக தருமமே ராமனுடைய லட்சியம். மிக உயர்ந்த பதிவிரதா தர்மத்தைச் சீதாதேவி மேற்கொண்டார். ஸ்ரீ லக்ஷ்மணனே சில அம்சங்களில் ராமனையே மீறிவிட்டார். ஆத்ம நிவேதனம் செய்யும் உறுதி மிகுந்த பக்திக்கு அவர் லட்சிய புருஷனாக நின்றார். வேறு எதையுமே அவர் மதிக்கவில்லை. லக்ஷ்மணனுடைய சக்தியும் துறவும் ஒப்புயர்வற்றவை. ராமன் காட்டில் சீதையை தேடியபோது சீதாபிராட்டியின் ஆபரணங்கள் சில :கிடைத்தன. காதணியை அடையாளம் தெரிகிறதா? என்று லட்சுமணனிடம் கேட்டபோது, "எனக்குத் தாயான சீதாபிராட்டியின் காலணிதான் தெரியும். நான் தாயின் காலடியைத் தவிர வேறு எதையும் பார்த்ததில்லை" என்று சொன்னார். அத்தகைய குணசீலர் அவர். ராமாயணத்தில் உள்ள இந்த ஒரு நிகழ்ச்சியே ஆதிபுருஷன், அவன் சக்தி அனந்தன் எல்லோரிடத்திலும் உயர்ந்த பக்தி செலுத்துவதற்கு மக்களுக்கு ஊக்கம் தரும். பெரிய உண்மைகளும் நல்வழிகளும் புதைந்து கிடக்கும் பொக்கிஷம்; அறிவுச் சுரங்கம் ராமாயணம். அதை எவ்வளவு முறை படித்தாலும் கேட்டாலும் சலிப்புத் தட்டாது. உலக சகோதரத்துவம், சமத்துவம் இவை மூலம் உலகமே ஒன்று என்ற லட்சியத்தை போதிப்பதுதான் ராமாயணச் சாரம். உலகத்தின் சுகதுக்கங்களை முணுமுணுக்காமலும், குழம்பாமலும் ஒரே மாதிரியாகப் பார்க்கும் வீரமும் உறுதியும் கொண்ட மனிதன்

இருக்க முடியுமா என்ருல், முடியும். ராமன் அத்தகைய லட்சிய புருஷன். ரகுவமிசத்தின் சூரியன் அவன்'' என்று அவர் பேசி முடித்தார். ஜனங்களின் ஆத்மீக முன்னேற்றத்துக்காக சுவாமிஜீயும் சமாஜமும் மக்களுக்குச் செய்யும் ஆத்மீக சேவையைப் பாராட்டி நன்றி செலுத்திஞர்.

''பல்லாயிரம் வருஷங்களாக ராமனுடைய பெயர் எல்லா இந்துக்களின் நாவிலும் இருந்து வருகிறது. சூரியன், சந்திரன், மலை, ஆறு இவைகள் எல்லாம் இவ்வுலகில் நிலைத்திருக்கும் வரையில் அவன் பெயரும் நிலைத்திருக்கும்.

''தரும சாஸ்திரத்தில் சொல்லியுள்ள நுட்பமான உண்மைகளை எல்லாம் திரட்டி தன்னிடத்தில் கொண்டது ராமாயணக் காவியம். சுலபமான முறையில் எல்லோரும் பின்பற்றும்படி அந்த உண்மைகளை ராமாயணம் விளக்குகிறது. தருமத்தை ஆதாரமாகக்கொண்ட நல் வழிகளை எல்லா மக்களுக்கும், எல்லாக் காலத்துக்கும் பொதுவாக ஸ்ரீராமன் எடுத்துக்காட்டி இருக்கிருர். பெண்கள் உலகுக்கே லட்சிய தீபமாக நின்ற சீதாதேவி பெண்கள் தங்களையும், தங்கள் கணவன்மார்களையும் உயர்த்திக்கொள்ள வழிகாட்டியாயிருக்கிருர். சிறந்த ராம பக்தனுக வாழ்ந்த ஆஞ்சநேயர், ராம நாமமே தாரக மந்திரம் என்பதை விளக்கி, அந்த நாமத்தை நம்பிஞல் மலைகளையும் அசைத்துவிடலாம் என்பதைக் காட்டியிருப்பதோடு, சரணுகதி தத்துவத்தின் பெருமையையும் தம் வாழ்க்கையில் விளக்கிக் காட்டி இருக்கிருர்'' என்று ஸ்ரீ D. ஆஞ்சநேயலு பேசிஞர்.

ஸ்ரீசாயிபாபாவும் மகாத்மா காந்தியும் ஸ்ரீராமனிடம் மிக்க மதிப்பு வைத்திருந்தார்கள். எனவே பக்தர்கள் எல்லோரும் ஸ்ரீராமனுடைய ஆசியையும் சுவாமிஜீயின் ஆசியையும் பெறுவது தகுந்ததுதான்'' என்ருர் ஸ்ரீ ஆஞ்சநேயலு.

ஸ்ரீராமர், சீதை முதலிய எல்லோருமே தொடக்கம் முதல் கடைசி வரையிலும் மனிதர்களாகவே நடந்து கொண்டார்கள். தாங்கள் யார் என்பதைக் காட்டிக் கொள்ளவேயில்லை. மனிதப் பண்பில் உயர்ந்தது எது என்பதை அவர்கள் தம் வாழ்க்கையில் காட்டிஞர்கள், அரசன், இல்லறத்தான், லட்சியநாயகன், கற்பும் அன்பும் நிறைந்த மனைவி, சமயசஞ்சீவியான தம்பி தந்தை சொல் தவருத மகன், நம்பிக்கை மிக்க குடிமகன் முதலியவர்களின் கடமைகளை எல்லோரும் வாழ்ந்துகாட்டிஞர்கள். தெய்வங்கள் மனித உருவில் வந்து நடத்திய நாடகம் அது. 'தெய்வம் மனுஷ்யம் மன்யே',

ராமருடைய பெருமைக்கு ஈடு இணையே இல்லை. மனித உருவில் தோன்றிய தெய்வம் அவர். பொறுமை, இரக்கம், தூய்மை ஆகியவற்றின் உருவம் சீதாதேவி. நல்லொழுக்கம் பற்றிய அவள் அறிவு மிக உயர்ந்தது. சில சந்தர்ப்பங்களில் ஸ்ரீராமபிரானுக்கே அவள் யோசனை கூறியிருக்கிறாள். காரணம் இல்லாமல் ராமர் அவளைக் காட்டுக்கு அனுப்பியபோதும் அவள் தன் நாயகனைப் பற்றிக் குற்றமாக ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. தனக்கு மறுபிறவி உண்டானாலும் அப்போதும் தன் தெய்வமான ராமனுக்கே மனைவியாக வேண்டும் என்றுதான் பிரதிக்ஞை செய்து கொண்டாள். எல்லோருமே தனக்கு எதிராக இருந்தபோதும் ஸ்ரீராமர் விபீஷணனுக்கு அபயம் கொடுத்தார். ராமனது குணமும் கருணையும் இதனால் விளங்குகின்றன. ஆஸ்திகர்களும் பக்தர்களும் ஸ்ரீராமநவமியைக் கொண்டாடி பாபாவின் ஆசியையும் சுவாமிஜீயின் ஆசியையும் பெறவேண்டும்'' என்றார் ஸ்ரீ ஏ. ஜி. வெங்கடாச்சாரி.

ஜஸ்டிஸ் கே. வீராசாமி அவர்கள் சாயிநிலையத்தில் கொண்டாட்டம் நடைபெற்ற சிறந்த முறையைப் பாராட்டிப் பேசினார். அமைதியாக ஆடம்பரமின்றி சுவாமிஜீ அவர்கள் சென்னையில் முக்கியமாக ஷெனாய் நகரில் செய்து வரும் ஆத்மீகச் சேவையை அவர் மிகவும் பாராட்டிப் பேசினார். சுவாமிஜீ தலைமைத் தாங்கும் சாயிமந்திரைத் தம்மிடையே கொண்ட ஷெனாய் நகர் வாசிகள் அதிர்ஷ்டசாலிகள் என்றார். அவரால் அந்த மக்களுக்கு உற்சாகமும் ஆறுதலும் கிடைக்கின்றன. காந்திநகரிலும் பிற இடங்களிலும் கூட சுவாமிஜீ இத்தகைய ஸ்தாபனங்களை நிறுவ வேண்டும் என்றார் அவர். ஆத்மீகம் குறைந்தும் லௌகீகம் மிகுந்தும் வரும் இந்தக் காலத்துக்கு பக்தியையும் ஆத்மீக விஷயங்களையும் பரப்பும் இத்தகைய ஸ்தாபனங்கள் மிக அவசியம் என்று அவர் கூறினார்.

தாம் சில மகான்களின் ஆசிரமங்களுக்குப் போயிருப்பதாகவும் ஆனால் சாயிபாபாவைப் பற்றித் தமக்கு அதிகம் தெரியாதென்றும் அவர் கூறினார். ஆனால் சாயிநிலையத்திற்கு வந்த பிறகு அங்கே நிலவும் ஆத்மீகச் சூழ்நிலை அவரை மிகவும் கவர்ந்ததாகச் சொன்னார். ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர், ஸ்ரீரமணர், ஸ்ரீசாயிபாபா முதலிய மகான்கள் பலருக்கு வெளிப் பார்வைக்குச் சாதாரண மனிதர்களாகவே தோன்றுவார்கள். ஆனால் அவர்கள் ஆசி பெற்றவர்கள் தம்மைப் பற்றி அறிவதோடு அவர்களிடமிருந்து வீசும் ஆத்ம ஒளியின் பெருமையையும் உணர்வார்கள் என்றார் அவர். எனவே ஸ்ரீராமனைப் போன்ற அவதார புருஷர்கள் சாதாரண மனிதர்களைப் போல் நடந்துகொள்வதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை என்றும் அப்படியில்லையென்றால் சாதாரண மக்கள் அவரைப் பின் பற்றி நடக்கமுடியாதென்றும் அவர் தம் முடிவுரையில் கூறினார்.

"உலக வாழ்க்கையும் ஆத்மீக வாழ்வும் சிலர் நினைப்பதுபோல் நேர் முரணானவை அல்ல. பிரகிருதியும் புருஷனும் (சக்தியும்) ஒன்றுக்கொன்று தொடர்புள்ளவை. கடவுள் எல்லாவற்றிலும் இருக்கிறார். நீதிமன்றத்தில் பணி புரியும் வக்கீல், ஆஸ்பத்திரியில் பணிபுரியும் டாக்டர், வயலில் பணிபுரியும் உழவன், காட்டில் தியானம் செய்யும் ரிஷி எல்லோரும் அவரவருக்கு ஏற்றபடி தெய்வீகத்தையே பின்பற்ற முயல்கிறார்கள். எனவே எல்லாரும் தம் கடமையைச் செய்யும்போது நிஷ்காம்யமாகச் செய்யும் பண்பையும் சகோதரத்துவ உணர்வையும் உலக மக்களிடம் அன்பையும் வளர்த்துக் கொள்ள வேண்டியது அவசியம். ராமாயணப் பாத்திரங்களான ஸ்ரீராமரும் பிறரும் தங்கள் வாழ்க்கையில் லட்சியங்களைக் காட்டியிருக்கிறார்கள். எல்லோரும் அவற்றைப் பின்பற்ற முயலவேண்டும். மகாத்மா காந்தி அவர்களும் தம் லட்சிய வாழ்க்கையில் ஸ்ரீராமபிரானைப் பின்பற்றி நமக்கு வழிகாட்டியிருக்கிறார். இப்போது நடப்பது போன்ற கூட்டுப் பிரார்த்தனைகளாலும் விழாக் கொண்டாட்டங்களாலும் சமூகத்துக்கு மிக்க நன்மை உண்டாகும்" என்றார் ஜஸ்டிஸ் வீராசாமி. சுவாமிஜியின் திறமைமிக்க தலைமை காரணமாக அந்த சமாஜம் மேலும் மேலும் முன்னேறும் என்ற நம்பிக்கை தமக்கு இருப்பதாகக் கூறினார். தன் பேச்சை முடிப்பதற்குமுன் அவர் சுவாமிஜீக்கும் சமாஜ நிர்வாக சபை மெம்பர்களுக்கும் தலைவருக்கும் தனக்கு இந்த சந்தர்ப்பம் கொடுத்ததற்காக நன்றி கூறினார்.

## நன்றியுரை

ஸ்ரீபாப்ஜி நாயுடு அவர்கள் நன்றியுரை கூறினார். சமாஜ சார்பில் புகழ்மிக்க தலைவருக்கும் மற்றும் சிரமம் பாராமல் கௌரவித்த பெரியோர்களுக்கும் நன்றி கூறினார். கூட்டமாக வந்த பக்தர்களுக்கும் இரவில் வெகுநேரம் வரை பஸ் வசதி கொடுத்த போக்குவரத்து அதிகாரிகளுக்கும், பந்தோபஸ்து ஏற்பாடு செய்திருந்த போலீஸ் அதிகாரிகளுக்கும், நிகழ்ச்சிகளை ஒலி பரப்ப முன் வந்த ரேடியோ ஸ்தாபன அதிகாரிகளுக்கும் குப்பை கூட்டும் பணிகளுக்கு ஏற்பாடு செய்திருந்த கார்ப்பரேஷன் அதிகாரிகளுக்கும் நன்றி கூறினார். அலங்காரம், விளக்கு இவற்றை மேற்கொண்ட காண்ட்ராக்டர்களுக்கும் உதவி செய்த தொண்டர்களுக்கும் நன்றி கூறினார். இந்தக் கொண்டாட்டம் இவ்வளவு சிறப்பாக நடைபெற யோசனை கூறி வழிகாட்டிய சுவாமிஜீக்கு கடப்பாடு தெரிவித்ததோடு அவர் தம் சேவையைத் தொடர்ந்து செய்யப் பல ஆண்டுகள் வாழவேண்டும் என்றும் கூறினார்.



1964ம் ஆண்டு டிசம்பர் 12ம் தேதி சென்னை ஆக்டிங் கவர்னராகவிருந்த திரு பி. சந்திரா ரெட்டி மற்றும் அவர்களின் குடும்பத்தினர் சாயி நிலையத்திற்கு விஜயம் செய்தனர். பூசைக்குப்பிறகு சுவாமிஜி அவர்களுக்கு விபூதியும், பிரசாதமும் வழங்கினார்.



சாயி நிலையத்தில் 1964ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 20ம் தேதி ஸ்ரீ ராம நவமி விழாவில் பங்கு பெற்றவர்கள். இடமிருந்து வலம்: ஸ்ரீமதி சௌந்தரம் கைலாசம், ஸ்ரீ டி. புருஷோத்தம் ஸ்ரீ எம். எஸ். கோடீஸ்வரன், அமைச்சர்திருமதி ஜோதி வெங்கடாசலம், அமைச்சர் திரு எஸ். எம். ஏ. மஜீது மற்றும் சுவாமிஜி அவர்கள்.



1969 ஆு ஜூலை மீ 31ம் உ குரு பூர்ணிமை தினத்தன்று விழாவில் கலந்துகொண்ட சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி திரு பி. ராமகிருஷ்ண ஐயர், ஐ.சி.எஸ். அவர்களும் சுவாமி கேசவய்யாஜி அவர்களும் ஸ்ரீ விஷ்ணு சகஸ்ரநாம பாராயணத்தை கேட்டுக்கொண்டிருத்தல்



1969ம் ஆண்டுஅக்டோபர் மாதம் 20ம் தேதி சாயி நிலையத்தில் ஸ்ரீ சாயி பாபா மகா சமாதி தினம் கொண்டாடியபோது விழாவினைத் துவக்கி வைத்த தமிழ்நாடு அரசு அறநிலைய, அறக்கட்டளைகள் அமைச்சர் திரு. கே. வி. சுப்பையா அவர் களுக்கு சுவாமிஜி நெற்றியில் விபூதி பூசுதல். பக்கத்திலிருப்ப வர் சென்னை ஹைகோர்ட் நீதிபதி திரு M. நடேசன் அவர்கள்



சுவாமிஜி, அமைச்சர் திரு. கே. வி. சுப்பையா, நீதிபதி
திரு எம். நடேசன் மற்றும் திரு என். முருகேச முதலியார்
ஆகியோருடன் சாயி நிலையத்தில் இருப்பது.

முடிவில் பிரசாதமும் (இனிப்புப் பண்டம்) பாபாவின் விபூதியும் பக்தர்களுக்கு வழங்கப்பட்டன.

*1968ம் வருட குரு பூர்ணிமைக் கொண்டாட்டத்தின்போது கேசவய்யாஜி மக்களுக்கு அளித்த செய்தி :*

## குரு பூர்ணிமையின் ஆத்மீக முக்கியத்துவம்

''குருவே பிரம்மா; குருவே விஷ்ணு; குருவே மகேசுவரன்; குருவே எங்கும் நிறைந்த பரப்பிரம்மம்'' என்று வேதங்களும் உபநிஷத்துக்களும் கோஷிக்கின்றன. குருவின் அருளால் அபூர்வமான நன்மைகளை ஒருவர் அடைய முடியும். சத்குருவின் பெருமை இது. இத்தகைய சத்குருக்களுள் சீரடி ஸ்ரீ சாயி பாபாவும் ஒருவர். 'ஒருவருக்குத் தம் குருவினிடத்தில் அசையாத நம்பிக்கை இருக்க வேண்டும்' என்று அவர் பல முறை சொல்லி இருக்கிறார். 'குருவின் கருணையே நாம் அருள் பெறும் வழியாகும். குருவை விட்டு மற்றொரு குருவிடம் தாவக் கூடாது. முழு நம்பிக்கையுடன் ஒரே குருவைப் பிடித்து கொள்ளவேண்டும்' என்று பாபா எச்சரித்தார். மற்ற குருமார் எவ்வளவு பெருமை பெற்றவர்களாய் இருந்தாலும் சரி, ஒருவர் மாறக்கூடாது. உயிர் உடலைவிட்டுப் பிரிவதற்கு முன்பே நாம் ஆத்ம சாக்ஷாத்காரம் பெறவேண்டும் என்றும் அதனால் கேவல அத்வைத சுகம் கிடைக்கும் என்றும் அந்த ஆத்ம சாக்ஷாத்காரம் பெற குருவின் அருள் அவசியம் வேண்டும் என்றும் பாபா வற்புறுத்தினார்.

''நம் நாட்டு மகரிஷிகளுள் மிகச் சிறந்த ஒருவர் மகா விஷ்ணு பரம பக்தரான நாரதர் ஆவார். நாராயண நாம சங்கீர்த்தனம் செய்தவண்ணம் அவர் எப்பொழுதும் மூவுலகங்களிலும் சஞ்சரித்துக்கொண்டிருப்பார். ஒரு கிராமத்தில் இருந்துகொண்டு மகாத்மாவுக்குச் சேவை செய்துவந்த ஓர் ஏழை விதவையின் மகனாகப் பூர்வ ஜன்மத்தில் நாரதர் இருந்ததாகச் சொல்லிக்கொள்ளுகிறார்கள். அப்பொழுது அச்சிறுவன் மிக ஆவலுடன் அந்த மகாத்மாக்களுடைய உபதேசங்களை யெல்லாம் கேட்பான். அவர்கள் உண்ட சேஷத்தையே உண்பான். அவ்வளவு தாழ்மை, விசுவாசம், பக்தி பூண்டவனாக இருந்தான். இதனால் பரிசுத்தம் அடைந்த அவன் மனதில் ஆத்ம சாட்க்ஷாத்காரம் பெறவேண்டுமென்ற ஆசை கொழுந்துவிட்டு எரியத் தொடங்கியது. இதன் பயனாக அந்தச் சிறுவன் தன் வாழ்க்கையின் ஒவ்வொரு நிமிஷத்தையும் ஒரு முகப்பட்ட தீவிர பகவத் தியானத்திலும் நாம மனனத்திலும் கழித்து

வந்தான். அதனால் அவன் முன் பிரத்யட்சமான ஸ்ரீமந் நாரா யணன் அடுத்த பிறவியில் அவன் பெரிய பக்தன் ஆவான் என்று வரம் கொடுத்தார். குருவின் அருளைவிடப் பெரியது ஒன்றுமில்லை என்பதை இந்த நிகழ்ச்சி ஒன்றே காட்டுகிறது.

''தன் குருவான துரோணாச்சாரியாரிடம் வைத்த அபார பக்தி யும், நம்பிக்கையும் காரணமாக ஏகலைவன் வில் வித்தையில் நிபுணன் ஆனான். 'பக்தி இல்லாத சங்கீத ஞானம் பயனற்றது. மோட்சத் தைத் தராது' என்று சிறந்த ராம பக்தரும் சங்கீத மேதையுமான ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள் பாடியிருக்கிறார்கள்.

''பெருமை மிக்க தம் பக்தி ஸூத்திரங்களில் ஞானம், கர்மம், ராஜயோகம் இவற்றையெல்லாம்விட பக்தியே (பராபக்தியே) உயர்ந்ததென்று நாரதர் சொல்லி இருக்கிறார். 'ஈசுவரனிடம் அள வற்ற பக்தி ஏற்பட்டுச் சரணாகதி நிலை வந்தவுடன் பக்தன் ஈசுவர னோடு இரண்டறக் கலந்துவிடுகிறான். பக்தியே அமிர்தம்' என்று அவர் அங்கே சொல்லி இருக்கிறார். 'உன் சித்தத்தை என்பால் வைத்து விடு; என் பக்தனாக இரு; என்னிடம் சரணாகதி அடைந்து விடு; என்னை சாஷ்டாங்கமாக வணங்கு; என்னிடம் இரண்டறக் கலப்பதற்கு இதுவே வழி; இது சத்திய வாக்கு; துக்கப்படாதே என்று ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா பகவத் கீதையில் கடைசி பாகத் தில் பக்தியின் பெருமையைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்.

''நாயன்மார்களும் ஆழ்வார்களும் அமுதம் போன்ற தங்கள் பக்திப் பாடல்களில் தங்களுக்கு முக்தி தேடிக் கொடுத்த பக்தியின் பெருமையைப் பற்றிச் சொல்லி யிருக்கிறார்கள். நான்கு புருஷார்த் தங்களுள் ஒன்றாகிய மோட்சத்துக்கு இதுவே வழி.

''சாயி பாபா சீரடியில் உயிரோடு இருந்தபோது அவரே குரு பூர்ணிமை விழாவைத் தொடங்கி வைத்தார். ஒரு குருபூர்ணிமை யின்போது அவர், ஸ்ரீ ஹெச்.வி. சாத்தேயின் மாமனாரைப் பார்த்து 'இன்றைக்குக் குரு பூர்ணிமை என்பது உனக்குத் தெரியாதா? பூஜாத் திரவியங்களைக் கொண்டுவந்து பூஜை செய்' என்று கட்டளை யிட்டார். மிகப் பழங் காலத்திலிருந்தே ஆடி மாதத்தில் வரும் பௌர்ணமியை, வியாச பூர்ணிமை அல்லது குருபூர்ணிமை என்றும் ஒரு முக்கிய தினமாகவும் மக்கள் கருதி வருகிறார்கள். வேதங்களைத் தொகுத்தவரும், ஐந்தாம் வேதம் என்ற மகா பாரதம், பாகவதம் இவற்றின் ஆசிரியருமான வியாச மகரிஷியின் பூஜைக்கு உரிய நாள் இது. விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் வியாசரை விஷ்ணு ரூபர் என் றும், விஷ்ணுவை வியாச ரூபர் என்றும் சொல்லியிருக்கிறது. வியா

சர் குருவாகிய தெய்வம் என்பதே இதன் பொருள். சீரடியில் குரு பூஜை நடந்தபோது, பக்தர்கள் சாயிபாபாவின் பாதங்களுக்கு பூஜை செய்து சால்வைகள், நாணயங்கள், பழங்கள், பூக்கள், தானியங்கள், சந்தனம் முதலியவற்றைப் பாதங்களில் சமர்ப்பிப்பார்கள். குருபூர்ணிமையாகிய மிகப் புனித தினத்தில் குருவுக்குப் பாத பூஜை செய்வதால் ஏற்படும் நன்மைகள் அளவற்றவை; மதிக்க இயலா

"நம் நாட்டிலுள்ள ஒவ்வொரு மத சம்பந்தமான ஸ்தாபனமும் புனிதமான இந்தக் குருபூர்ணிமையைத் தக்க முறையில் கொண்டாட வேண்டும். ஒவ்வொரு பக்தனும் தத்தம் குருவினிடம் உறுதியான நம்பிக்கை வைத்து அன்று பூஜிக்க வேண்டும். சாயி பாபாவின் உபதேசங்களைப் பின்பற்றி இப்பிறவியிலேயே ஆத்ம சாட்க்ஷாத்காரம் பெறவேண்டும். இதுவே என் மனப் பூர்வமான ஆசை. தம் பக்தர்களின் மேல் கருணைக் கடலாகிய ஸ்ரீ சாயி பாபா கருணைமயமான தம் ஆசீர்வாதங்களைப் பொழிவாராக."

ஓம் சாந்தி, சாந்தி, சாந்தி!

வேத சாஸ்திர முறைப்படி குருதேவர் சுவாமி கேசவய்யாஜீயின் குருபூர்ணிமா மகோற்சவம் நடந்தது. ஸ்ரீசாயிபாபா பக்த சமாஜத்தாரின் ஆதரவில் அன்று சாயங்காலம் நடந்த கூட்டத்துக்குச் சென்னை அறநிலைய இலாகா கமிஷனரான ஸ்ரீ ஏ. ராதாகிருஷ்ணன் தலைமை வகித்தார். இந்தப் புனித விழாவில் பங்கு கொள்ளும்பொருட்டு பக்தர்கள் பலர் சாயிநிலையத்திற்கு வந்திருந்தார்கள். பெங்களூர், ஹைதராபாத், சித்தூர், நெல்லூர் முதலிய பகுதிகளிலிருந்தும், சென்னையின் பல பகுதிகளிலிருந்தும் பக்தர்கள் வந்திருந்தார்கள்.

ஏராளமான பக்தர்களாலும் புனித ஆத்மீக நினைவின் சூழ்நிலையாலும் சாயி நிலையம் தெய்வ நிலையமாக மாறிவிட்டது. சுவாமிஜீ வழக்கமாகச் செய்யும் குருவாரப் பூஜையுடன் உற்சவ நிகழ்ச்சி தொடங்கியது. பண்டிதர்களின் வேத கோஷத்துடனும் முதலில் கணபதி பூஜை, பிறகு கலசத்தில் லக்ஷ்மி நாராயணப் பிரதிஷ்டை ஸ்ரீலக்ஷ்மி பூஜை, ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாம பாராயணம் எல்லாம் நடந்தன. மாலை 6-30 மணிக்கு மங்களாரத்தி எடுத்தார்கள். ஆரத்தி சமயத்தில் பக்தர்கள் எல்லோரும் பூர்ணபக்தியுடன் நின்று ஸ்ரீசாயிபாபாவின் திருவடிகளில் மனத்தைச் செலுத்தி அவர் தேர்ந்தெடுத்த பிரதிநிதியான—திவ்ய சக்திபெற்ற—குருதேவர் சுவாமி கேசவய்யாஜீயிடம் பக்திசிரத்தையுடன் பிரார்த்தனை செய்தார்கள்,

பிறகு சுவாமிஜி புனிதமான குரு பூர்ணிமைச் சந்தர்ப்பத்தில் புத்துயிர் கொடுக்கும் தம் தெய்வீகச் செய்தியைப் படித்தார்.

சென்ற பதினறு வருடங்களாக சுவாமிஜீயின் ஆத்மீகச் சக்தியாகிய செல்வத்தைக் குறித்துத் தாம் கேள்விப் பட்டிருந்தாலும் இந்தப் புனிதமான ஆத்மீகக் கேந்திரத்துக்கு வந்து தரிசிக்கும் மாபெரும் பாக்கியம் தமக்கு இவ்வளவு நாட்களுக்குப் பிறகுதான் கிடைத்ததென்று கூட்டத்துக்குத் தலைமை வகித்த ஸ்ரீராதா கிருஷ்ணன் சொல்லித் தம் மகிழ்ச்சியை வெளியிட்டார். சமாஜத்தலைவர் ஸ்ரீவேங்கடசாமி நாயுடு பலமுறை சாயி நிலயத்தைத் தரிசிக்கும்படிக் கேட்டுக் கொண்டார். ஆனல் இன்று இப்புனித நாளில் வந்து கூட்டத்துக்குத் தலைமை வகித்துப் பூஜையைக் காணும் வாய்ப்பு தனக்கு பாபா கிருபையினல் கிடைத்தது என்றும் சொன்னர்.

''ஹிந்து சாஸ்திரங்களில் குரு பூஜைக்கு மிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்துமதம் நமக்கு சாஸ்திரங்களையும் பகவத்கீதையையும் கொடுத்தருளியிருக்கிறது. அவற்றைப் பின்பற்றி நடப்பதே நமது கடமை. ஸ்ரீசாயிபாபா பிறப்பால் எந்த மதத்தைச் சார்ந்தவர் என்று சொல்ல முடியாதென்ருலும் சாஸ்திரங்களை முழுமனதுடன் கிரகித்துக் கௌரவித்தார். பக்தர்களின் உபயோகத்துக்காக சுவாமிஜீயின் முன்னிலையில் அவருடைய ஆசிகளுடன் இந்தக் குரு பூர்ணிமை உற்சவத்தில் பங்கெடுத்துக் கொள்வதில் எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது'' என்று சொல்லி இந்து மதத்தின் சாரமான பக்தி தத்துவத்தைத் தக்க முறையில் ஆராதிக்கும் பக்தர்களுக்கும் சுவாமிஜீக்கும் ஸ்ரீ ராதா கிருஷ்ணன் தம் நன்றியைத் தெரிவித்து வாழ்த்துக் கூறினர்.

சமாஜத் தலைவர் ஸ்ரீ கே. வெங்கடசாமி நாயுடு முதலில் வரவேற்புரை நிகழ்த்தினர். ஸ்ரீசாயிபாபா உயிருடன் இருந்தபோது குரு பூர்ணிமை விழாவை அவரே தொடங்கி வைத்ததாகச் சொன்னர். குரு பூர்ணிமை விழாவின் முக்கியத்துவத்தைப் பற்றியும் அவர் தெரிவித்தார்.

ஸ்ரீ பாப்ஜி நாயுடு வந்தனேபசாரம் சொன்னர்.

பிறகு சுவாமிஜீ நடு இரவு வரையிலும் விபூதி, நாணயங்கள், பழம், பூ எல்லாம் பக்தர்களுக்கு வழங்கினர்.

பலவகை மதங்களையும் இனங்களையும் குலங்களையும் சேர்ந்த பக்தர்கள் சுவாமிஜீக்குப் பாலைக் கொண்டு பாத பூஜைகள் செய்து ஆசி பெற்ருர்கள்.

## ஸ்ரீகேசவய்யாஜீக்குப் பக்தர்களின் பாராட்டுகள்

ஸ்ரீசாயிபாபா பக்த சமாஜ (ரிஜிஸ்டர்டு) த்தின் ஆதரவில் சென்னை 30, ஷெனாய் நகர் சாயி நிலையத்தில் 1968ம் ஆண்டு செப்டம்பர் 30ஆம் தேதியும், அக்டோபர் 1ம் தேதியும் ஸ்ரீசாயிபாபா மஹா சமாதியின் ஐம்பதாவது குருபூஜை விழா மிக விமரிசையாக நடைபெற்றது.

1918 இல் விஜய தசமியன்றுதான் ஸ்ரீசாயிபாபா தம் உடலை விட்டு நீங்கி சீரடியில் மகாசமாதி அடைந்தார்.

முதல்நாள் சீர்காழி கோவிந்தராஜனின் பாட்டுக் கச்சேரி வெகு சிறப்பாக நடைபெற்றது. அவருடைய இனிமையான பாட்டுகள் பக்திப் பரவசம் அளிப்பவையாக இருந்தன.

அன்று இரவு 8-45 மணிக்கு சமாஜ ஸ்தாபகத் தலைவரான சுவாமி கேசவய்யாஜீ நாட்டு மக்களுக்கு அளித்த செய்தியான "பாபாவின் வாழ்க்கையும் உபதேசங்களும்" என்பதைச் சென்னை ரேடியோவில் ஒலிபரப்பினார்கள்.

அக்டோபர் முதல்தேதி மாலை ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. பக்தர்கள் திரளாக வந்திருந்தார்கள். சென்னை உயர் நீதி மன்ற நீதிபதி கனம் என். கிருஷ்ணசாமி ரெட்டியார் கூட்டத்துக்குத் தலைமை தாங்கினார்.

இந்திய ஜனாதிபதி டாக்டர் ஸ்ரீ ஜாக்கீர் ஹுஸேன், முன்னாள் ஜனாதிபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன், உப ஜனாதிபதி ஸ்ரீ வி. வி. கிரி, லோகசபைத் தலைவர் ஸ்ரீ என். சஞ்சீவ ரெட்டி, சென்னை கவர்னர் சர்தார் உஜ்ஜல்சிங், மகாராஷ்டிர கவர்னர் ஸ்ரீ பி. வி. செரியன், மைசூர் முதல் மந்திரி ஸ்ரீ வீரேந்திர பட்டீல், ஸ்ரீ சி. ஆர். பட்டாபிராமன், ஸ்ரீ ஓ. புல்லாரெட்டி, ஐ.சி.எஸ். (ஓய்வுபெற்றவர்) சென்னை மேயர் ஸ்ரீ ஹபிபுல்லா பெய்க் முதலியவர்கள் அனுப்பிய செய்திகளை சமாஜக் காரியதரிசியான ஸ்ரீ சி. பி. வேணுகோபால் வாசித்தார்.

சமாஜத் தலைவர் ஸ்ரீ வெங்கடசாமி நாயுடு கூட்டத்தினரை வரவேற்றார். ஆத்மீகம் மிகத் தாழ்ந்த நிலையில் இருக்கும் இந்நாளில் பாபாவின் உபதேசங்கள் உலக மக்களுக்கு வெகு அவசியம் என்றும் சுவாமி கேசவய்யாஜீயைப் போன்ற ஆத்மீகத் தலைவர்களின் சேவை மிகவும் முக்கியமானதென்றும் அவர் சொன்னார்.

அவதார புருஷர்களுள் கடைசியாக இன்று தோன்றியுள்ளவர் சாயிபாபா என்றும் அவர் உடல் மறைந்தாலும் இன்றும் அவர் தம் பக்தர்களோடு அபூர்வமான முறையில் தொடர்புகொண்டு அவர்களுக்கு இன்பமூட்டி வருகிறார் என்றும், ஸ்ரீகேசவய்யாஜீ உணர்ச்சியைத் தூண்டும் தம் பேச்சில் கூறினார். (29-9-68—ஃப்ரீ இந்தியாவில் இவர் அருளிய செய்தியைக் காணலாம்).

'கடவுள் பெருமை மிக்கவர் என்றாலும் அடியார்க்கு எளியவர். இதை அவதாரங்களில் காணலாம். தர்ம விரோதிகளை அழிப்பது மட்டும் அவதார நோக்கம் அல்ல. சரணாகதி என்று தம்மை அடையும் பக்தர்களுக்கு அபயம் கொடுத்துக் காப்பதே முக்கிய நோக்கம். கடவுளிடம் நம்பிக்கையும் சத் சங்கமும் சாயிபாபா போன்ற சத் குருக்களின் உதவியும்தான் சாதாரண மக்களுக்கு ஆத்மீகவழியைக் காட்டும் கருவிகள்' என்றார் டாக்டர் நாகராஜராவ்.

சுவாமி கேசவய்யாஜீயின் ஆத்மீக சேவையை அவர் மிகவும் பாராட்டினார். அமைதியான முறையில் பல்லாயிரம் பக்தர்கள் மனத்தில் சாயிபாபாவின் பக்தியை விதைத்த அவரைப் பெரிய 'மகான்' என்று குறிப்பிட்டார்.

நர்களை நல்லொழுக்கம் உள்ளவர்கள் ஆக்க பழங்காலக் குருகுல முறைதான் மிகச் சிறந்தது' என்றார் ஸ்ரீ ஜே. வி. ஸோமையாஜுலு. எல்லோரும் வேத சாஸ்திரங்களைப் பின்பற்ற வேண்டும் என்றும் கடவுளிடமும் சுவாமிஜீயைப் போன்ற சத்குருக்களிடமும் சரணாகதி அடைந்துவிட வேண்டும் என்றும் அவர் கேட்போர் மனத்தில் நன்கு பதியும்படிப் பேசினார்.

சாயிபாபா இன்றும் தம் பக்தர்களுக்கு உதவி வருவதாகவும் சுவாமிஜீ தமக்கு ஆத்மீக முன்னேற்றம் அடைய முக்கிய காரண கர்த்தர் என்றும் கூறிய ஸ்ரீ டி. புருஷோத்தம் சாயிபாபா பக்தர்களைக் காப்பது பற்றிய தம் சமீப அனுபவம் ஒன்றைக் கூறினார்.

குருவின் அழைப்பே கடவுளின் அழைப்பு என்றும் சாயி பாபா சுவாமி கேசவய்யாஜீயைப் போன்ற சத்குருமார்களின் அருளால் எல்லாம் கிடைக்கும் என்றும் ஸ்ரீ பி. என். ரெட்டி சொன்னார். ஒவ்வொருவரும் தம் மனசாட்சியை மதித்து நடக்க வேண்டுமென்றும் அவர் சொன்னார்.

'நம்பிக்கைதான் எதற்கும் ஆதாரம். சாயி பாபா தம் சூக்ஷ்ம சரீரத்தோடு நம்மோடு கூடவே என்றும் இருக்கிறார். நம் செயல்

கள் ஒவ்வொன்றையும் கவனித்து நமக்கு வழிகாட்டி வருகிறார். "உறுதியான நம்பிக்கையோடும் பக்தியோடும் என்னை நம்பி சரண் அடையும் யாரையும் நான் காப்பாற்றுகிறேன்" என்று உறுதி கூறி னார் சாயி பாபா. சாயி பாபாவைப் போன்ற பெரிய மகான்கள் தான் இப்படிக் கூற முடியும் என்றார் ஜஸ்டிஸ் என். கிருஷ்ணசாமி நாயுடு.

சுவாமி கேசவய்யாஜீயின் சேவையை மிகப் பாராட்டிப் பேசிய அவர், பலர் இத்தகைய கொண்டாட்டங்களில் கலந்துகொண்டு நன்மை பெறவேண்டும் என்றார். ஒருவர் தம் வாழ்க்கை முழுவதும் வேத சாஸ்திரங்களால் படிப்பதைவிட இப்படிப்பட்ட சத் சங்கத் தால் கூடுவதால் அதிக நன்மை பெறலாம் என்றார் அவர் சில காலத்துக்குப்பின் இந்த சமாஜம் ஓர் ஆத்மீக கேந்திரம் ஆகிவிடும் என்று முடித்தார்.

சமாஜ உபதலைவர் செங்கல்வராய பிள்ளை வந்தனோபசாரம் கூறினார்.

## சுவாமிஜீ செய்யும் சாயி பாபா பிரசாரம்

தென்னாட்டில் தீவிரமாகவும் விஸ்தாரமாகவும் ஸ்ரீ சாயி பாபா வைப் பற்றிப் பிரசாரம் செய்தவர் ஸ்ரீ பி.வி. நரசிம்மசுவாமி. வேறு வேலை ஏதும் வைத்துக்கொள்ளாமல் சர்வ சுதந்திரமாக இருந்த தால் அவர், ஓயாமல் நாட்டின் நான்கு திசைகளிலும் சுற்றுப் பிர யாணம் செய்தார். அவர் ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்ட நூல் களும், பாபாவைப்பற்றிய பிரசாரங்களுக்கு மிகவும் உதவின. சுவாமி கேசவய்யாஜீக்கு பாபா பிரத்யக்ஷமானதும், ஸ்ரீ நரசிம்ம சுவாமி பாபாவைப்பற்றிய பிரசாரத்தைத் துவங்கியதும் கிட்டத் தட்ட ஒரே காலத்தில் நடந்த நிகழ்ச்சிகள் ஆகும். ஒருவர் பாபா வைப்பற்றிய பிரசாரத்துக்கும், மற்றொருவர் பாபாவை ஆராதனை செய்வதற்குமாக இருவரும் தம் வாழ்க்கையை பாபாவுக்கு அர்ப் பணித்துவிட்டார்கள். சுவாமி கேசவய்யாஜி அரசாங்கத்தில் வேலை செய்துகொண்டிருந்ததால் சுற்றுப் பிரயாணம் செய்ய அவருக்குச் சந்தர்ப்பம் குறைவு.

இதை யோசித்துத்தான் பாபா இவரைப் பூஜையில் புகுத்தி இருக்க வேண்டும். இருந்தாலும் சுவாமிஜி சந்தர்ப்பம் கிடைத்த போதெல்லாம் (1942ம் ஆண்டிலிருந்து) ஆந்திரா, கர்நாடக, தமிழ் நாடுகளில் சுற்றுப் பயணம் செய்து, பூஜை செய்ததோடு பொதுச் சபைகளில் உபந்நியாசம் செய்து தென்னாட்டில் நன்றாக பிரசாரம்

செய்திருக்கிறார். அந்தப் பிரசாரத்தின் விவரங்களைக் கிடைத்த மட்டும் சுருக்கமாக இந்த அத்தியாயத்தில் எழுதுகிறேன்.

1942ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 3ம் தேதியன்று இவர் பெங்களூர் சென்றார். அவ்விடத்து வக்கீல்களான ஸ்ரீ என். பாலகிருஷ்ணையா ஸ்ரீ டி. ஆர். சுப்பையர், ஸ்ரீ என். ராமச்சந்திரன் முதலியோர் சுவாமிஜியைப் பெங்களூருக்கு அழைத்தார்கள். மூன்றும் தேதி அன்று சுவாமிஜீயைக் கொண்டு சாயி பூஜையை நடத்தினார்கள். பெரிய உத்தியோகஸ்தர்களோடு நூற்றுக் கணக்கான பக்தர்கள் பூஜைக்கு வந்திருந்தனர்.

நான்காம் தேதியன்று சேஷாத்திரிபுரம் உயர்நிலைப் பள்ளியில் நடந்த கூட்டத்தில் ஸ்ரீ சுவாமிஜி, பாபாவின் மகிமையையும் அவருடைய போதனைகளையும்பற்றி சுமார் இரண்டு மணிநேரம் உபந்நியாசம் செய்தார். மறுநாள் கண்டோன்மெண்டில் நடந்த கூட்டத்தில் பாபா, தம் பக்தர்களுக்கு உதவி செய்யும் அற்புதமான வழிகளைப் பற்றி சுவாமிஜி பிரசங்கம் செய்து சபைகளில் ஆத்மீகச் சூழ்நிலையை உண்டாக்கிவிட்டார்.

மைசூர் சமஸ்தானத்தைச் சேர்ந்த பிரமுக உத்தியோகஸ்தர்கள் பலர், சுவாமிஜீயை தனிமையில் சந்தித்தார்கள். சுவாமிஜீயை சமஸ்தானத்து நீதி இலாகா மந்திரியின் வீட்டுக்கு அழைத்துச் சென்றார்கள். கிட்டத்தட்ட அரைமணி நேரம் அங்கே இருந்தார். 'நீங்கள் ஒரு சமஸ்தான திவானாக இருந்து ஆளப் போகிறீர்கள் என்று சுவாமிஜி அவரிடம் சொன்னார். பிறகு அப்படியே நடந்தது. டெய்லி நியூஸ் பத்திரிகை ஆசிரியரான ஸ்ரீ பி. ஆர். ராமையா, குடும்பத்துடன் பூஜைக்கு வந்திருந்தார். "உங்களுக்குப் பிள்ளைக் குழந்தை பிறக்கப் போகிறான்" என்று சுவாமிஜீ அவரிடம் சொன்னார். அப்படியே ஆண் குழந்தை பிறந்தது.

வக்கீல் ஸ்ரீ எம். மல்லி ரெட்டியின் அழைப்பின்மேல் சுவாட அனந்தபூர் போயிருந்தார். அன்று மாலை 6 மணி முதல் 10 மணி வரையில் சாயி பூஜை செய்தார். ஊர்ப் பிரமுகர்கள் பலரும், அதிகாரிகளும் மற்ற மக்களும் பூஜைக்கு வந்திருந்து தீர்த்தம், பிரசாதம், விபூதி எல்லாம் பெற்றுக்கொண்டார்கள்.

மே மாதம் 29ம் தேதி பெல்லாரிக்குச் சென்றார். அங்கே தங்கிய இடத்தில் காலை 9 மணியிலிருந்து மாலை 3 மணிவரையிலும் பிரம்மாண்டமாக பூஜை நடந்தது. 30ம் தேதியன்று சுமார் 2,000 பக்தர்கள் பூஜைக்கு வந்தார்கள். தீர்த்தம், பிரசாதம்,

எல்லாம் பெற்றுக்கொண்டபின் பலர் சுவாமிஜீயின் ஆலோசனை யையும், உதவியையும் பெற்றார்கள். மாலையில் நடந்த பொதுக் கூட்டத்தில் சாயிபாபா சம்பந்தமாக பக்தியைப்பற்றி சுவாமிஜி பிரசங்கம் செய்தார். ஜில்லா போர்டுத் தலைவரான ராவ்பகதூர் வை. மகாபலேச்வரப்பா, பெரிய உத்தியோகஸ்தர்கள் உட்படச் சுமார் 3,000 பேர் கூட்டத்திற்கு வந்திருந்தார்கள்.

வருமானவரி ஆபீசர் ஸ்ரீ வி. பிச்சைய செளதரியின் அழைப்புக் கிணங்க சுவாமிஜி, நவம்பர் முதல் தேதியன்று குண்டூருக்குச் சென் றார். இரண்டாம் தேதியன்று அவர் வீட்டில் பூஜை செய்தார். தெனாலி, பாபட்லாவில் இருந்தெல்லாம்கூட பக்தர்கள் வந் தார்கள். 1000 பேருக்கு மேல் இந்தப் பூஜைக்கு வந்தார்கள்.

அன்று மாலை ஹிந்து கலாசாலையில் பொதுக்கூட்டம் நடந்தது. கூட்டத்துக்கு பல மாணவர்களும் வந்திருந்தனர். ஸ்ரீ ஒடிம்பல்லி சீதாராமையா தலைமை வகித்தார். பாபாவின் மகிமை, பக்தி இவை பற்றியும் போதனைகளைப் பற்றியும் சுவாமிஜீ சொற்பொழிவாற்றி னார். இரவு திரும்பவும் சாயி பூசை நடந்தது. ஓய்வு பெற்ற டிபுடி கலெக்டர் ஸ்ரீ கே. எம். ஆசாரி பூசைக்கு வந்தார். 5-ஆம் தேதி யன்று ஸ்ரீநடிம்பல்லி சீதாராமையாவின் வீட்டில் பாபாவுக்கு பூசை நடந்தது. பூசைக்குப் பலர் வந்திருந்தார்கள்.

1943 அக்டோபரில் சுவாமிஜீ இரண்டாம் தடவையாகக் குண் டூருக்குப் போனார். அப்போதே தெனாலிக்கும் சென்றார். 24 ஆம் தேதியன்று காலை குண்டூருக்கு வந்தார். அன்றிரவு 7 மணியிலிருந்து 10 மணிவரையில் பப்ளிக் பிராசிக்யூட்டரான ராவ் சாகேப் தாசரி ஸ்ரீமந் நாராயண செளதரியின் வீட்டில் சாயி பூஜை செய்தார். ஜில்லா ஜட்ஜ் ஸ்ரீ பி. ராமகிருஷ்ண ஐயரும் அவருடைய மனைவியும் பூஜைக்கு வந்தார்கள். பூஜைக்குப்பின் பல பக்தர்கள் பல விஷயங் களைக் குறித்து சுவாமிஜீயைக் கேட்டு உதவிபெற்றார்கள்.

29-ஆம் தேதியன்று உள்ளூர் சாயிபக்தர்களுடைய அழைப்பின் பேரில் சுவாமிஜீ தெனாலிக்குச் சென்றார். அன்று காலை மோட்டார் காரின் பின்னால் பாபாவின் படத்தை வைத்து முன்புறம் சுவாமி ஜீயை உட்காரவைத்து மேள தாளங்களுடன் தெருக்களில் ஊர் வலம் நடத்தினார்கள். காலை பூஜை சத்திரத்தில் நடந்தது. பக்தர் 5000 பேர் பாபாவின் பூஜைக்கு வந்து விபூதியும் பிரசாதமும் பெற் றுக்கொண்டார்கள். சாயந்திரம் ஹைஸ்கூல் மைதானத்துக்கு அருகே ஜில்லா முன்சீப் ஸ்ரீ T. H. M. சதாசிவையாவின் தலைமை யில் பெரிய பொதுக் கூட்டம் ஒன்று நடந்தது. பாபா மகிமையை

யும், தம் அனுபவங்களையும பற்றி சுவாமிஜீ பேசினார். சுமார் 3500 பேர் கூட்டத்திற்கு வந்திருந்தார்கள். சுவாமிஜீ இரண்டுமணி நேரம் உபந்நியாசம் செய்தார். சபைக்குப் பெண்கள் அதிகமாக வந்தது ஒரு விசேஷம். இரவு வி. எஸ். ஆர். கிருஷ்ணையாவின் வீட்டில் பூஜை செய்தார்கள். ஆண்களும் பெண்களுமாக 500பேர் பூஜைக்கு வந்திருந்தார்கள். எல்லோருக்கும் சுவாமிஜி விபூதியும் பிரசாதமும் கொடுத்தார். சிலருக்கு யோசனை சொன்னார். சில ருடைய கேள்விகளுக்குப் பதில் சொன்னார். இரவு சாப்பாட்டுக் குப்பின் ஸ்ரீ வி. வி. சௌத்ரியுடன் குண்டூருக்குச் சென்றார்.

அந்த ஆண்டு டிசம்பரில் சுவாமிஜி சென்னையில் ஒரு வாரம் இருந்து பல பிரமுகர்கள் வீட்டில் பாபா பூசை செய்தார். 20ம் தேதியன்று சுவாமிஜி ஸ்ரீ ஆர். வி. நாதன் வீட்டில் இரவு 7 மணி யிலிருந்து 10 மணிவரையில் பூசை செய்தார். பூஜைக்குப் பலர் வந்திருந்தார்கள். பூசைக்குப் பிறகு சுவாமிஜி பக்தர்கள் பலருக்கு யோசனைச் சொல்லி அவர்களுடைய சந்தேகங்களைப் போக்கினார். மறுநாள் 21ம் தேதியன்று ஸ்ரீ சி. வி. ராஜன் வீட்டில் ஏழைகளுக்கு அன்னதானம் செய்தார். அவர் சாயிபாபாவின் பெயரால் பல தான தர்மங்கள் செய்திருக்கிறார். இங்கே சுவாமிஜி பூசை செய்து பக்தர்களுக்குத் தீர்த்தப் பிரசாதங்கள் கொடுத்து, அவர்களுடைய கேள்விகளுக்குப் பதில் சொல்வது இரவு 7 மணிக்குத் தொடங்கி நள்ளிரவு 2 மணிவரை நீடித்தது.

22ம் தேதியன்று 'ஸண்டே டைம்ஸ்' பத்திரிகையின் நிர்வாகி யான ஸ்ரீ கே. சுப்பிரமணிய ஐயரின் வீட்டில் சுவாமிஜி, பாபா பூஜை செய்தார். பூஜைக்கு பல பக்தர்கள் வந்தார்கள்.

23ம் தேதியன்று அகில பாரத சாயி சமாஜக் காம்பவுண்டில் பிரம்மஸ்ரீ பி. வி. நரசிம்மசுவாமியின் தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் சுவாமிஜி, பாபாவின் வாழ்க்கை பற்றியும் தம்முடைய சொந்த அனுபவங்களைப் பற்றியும், தாம் எப்படி பாபாவின் பக்தர் ஆனார் என்பதைப்யற்றியும் விவரித்தார். சபையில் இருந்த ஒருவர் 'சென்னையில் குண்டு விழுமா?' என்று கேட்க, அப்படியொன்றும் நடக்காதென்று சொன்னார். அப்படியே அங்கு குண்டு விழவில்லை. தலைவரான ஸ்ரீ பி. வி. நரசிம்ம சுவாமி ஸ்ரீ சுவாமி கேசவய்யா ஜீயின் தன்னலமற்ற சேவையைப் பற்றிப் புகழ்ந்து, பாபாவின் பக்திப் பிரசாரத்துக்கு இவர் செய்துவரும் சேவைக்காக வணக்கம் செலுத்தினார். சுவாமி கேசவய்யாஜீ, தம் பிரசங்கத்தில் ஸ்ரீ பாபா மகா விஷ்ணுவே என்று சொன்னார்.

1944ம் ஆண்டில் சுவாமிஜீ சென்னை, கோயம்பத்தூர், குண்டூர் மற்றும் பல பகுதிகளில் சுற்றுப் பிரயாணம் செய்தார். ஜனவரி 13ம் தேதியன்று சென்னையில் ஸ்ரீ சி. வி. ராஜன் வீட்டில் சாயி பாபாவின் பூஜை செய்தார். பூஜைக்குமுன் ஏழைகளுக்கு அன்ன தானம் நடந்தது. பூஜைக்குப் பிறகு சுவாமிஜி, வந்தவர்கள் எல் லோருக்கும் தீர்த்தப் பிரசாதங்கள் கொடுத்து, அவர்களுடைய கேள்விகளுக்குப் பதில் சொன்னார். இந்த நிகழ்ச்சி இரவு பதினொரு மணிக்கு முடிந்தது. பிறகு ஸ்ரீ ராஜன் பூஜைக்கு வந்த பக்தர்கள் எல்லோருக்கும் விருந்து செய்தார்.

மே மாதம் 11ம் தேதியன்று சுவாமிஜி மூன்றும் முறையாக குண்டூருக்குச் சென்றார். ஸ்ரீ தாசரி ஸ்ரீமன் நாராயண சௌதரி யின் வீட்டில் வியாழக்கிழமை பூஜை நடத்தினார். பல பக்தர்கள் பல விஷயங்களில் சுவாமிஜீயின் யோசனையை இரவு 2 மணிவரை யில் பெற்றார்கள். ஜில்லா கலெக்டர் ஸ்ரீ T. பாஸ்கர ராவும் மற் றும் பெரிய உத்தியோகஸ்தர்களும் வந்திருந்தார்கள். பக்தர்கள் ஆயிரம் பேருக்குமேல் தீர்த்தப் பிரசாதம் பெற்றுக்கொண்டார் கள்.

சுவாமிஜீ ஜனவரி மாதத்தில் சென்னை சென்றபோது ஸ்ரீ சி. வி. ராஜன் வீட்டில் பூஜை நடந்த மறுநாள் — 14 ஆம் தேதி ஸ்ரீ ஆர். வி. நாதன் வீட்டிலும் 16 ஆம் தேதி இரவு பப்ளிக் சர்வீஸ் கமிஷன் காரியதரிசியான ராவ் பகதூர் பி. எஸ். ஞானசுந்தரம் வீட்டிலும் பூஜை நடத்தினார்.

ஜனவரி 1ம் தேதியன்று சுவாமி கேசவய்யாஜீ அகமத் நகரில் இருந்தார். அகமத் நகர் ஜில்லா சாயி சேவா மண்டலியின் சார் பில் தனியாக ஒரு பொதுக் கூட்டத்தை ஏற்பாடு செய்தார். ஜில்லா செஷன்ஸ் ஜட்ஜ் ஸ்ரீ வி பி. ராஜூ தலைமை வகித்தார். முதல் வகுப்பு சபார்டினேட் ஜட்ஜ் மஞ்சேஷ்வர், சுவாமிஜீயை சபையோர் களுக்கு அறிமுகம் செய்தபோது ஸ்ரீ சாயி பாபாவின் கிருபையால் இவர் அற்புத சக்திகளைப் பெற்றிருக்கிறார் என்றும் கடந்த நான்கு வருடங்களாக இவர் மகா யோகியான சாயி பாபாவின் சித்தாந்தத் தைப் பிரசாரம் செய்து மக்களை அநாத்மவாத மயக்கத்திலிருந்து விழிப்புறச் செய்து அரும்பெரும் சேவை செய்து வருகிறார் என்றும் பாராட்டினார்.

சுவாமி கேசவய்யாஜி ஸ்ரீ சாயி பாபாவின் பெருமையும் அவ ருடைய போதனைகளைப் பற்றியும் பேசினார். தம் சொந்த அனு பவங்களைப் பற்றி விவரித்தார். உலகக் கலவரங்களிலிருந்து விடு

தலை பெற்று ஆத்மீக மோட்சம் பெறுவதற்குக் கடவுளுடைய கட்டளைக்குத் தக்கபடி வாழ வேண்டும் என்றும் நீதி, நேர்மை, அடக்கம், தர்மபுத்தி இவைகளைப் பெற்றுக் குருவிடம் அசையாத குற்றமற்ற நம்பிக்கை வைக்க வேண்டும் என்றார். தலைவரான ஸ்ரீ வி. பி. ராஜு, மகா யோகிகள் பலருக்குப் பிறப்பிடமான அகமத் ஜில்லாவுக்குத் தாம் மாற்றலாகி வந்தது தம் அதிர்ஷ்டம் என்றும் ஸ்ரீ சாயிபாபா சந்தேகம் இல்லாமல் அவதார புருஷர்தாம் என்றும் சொன்னார். ஸ்ரீ கனவிந்தே வந்தனோபசாரம் சொன்னார். ஸ்ரீராவ் பகதூர் எஸ். இ. சவாலே, சுவாமிஜீக்கு மாலை அணிவித்தார்.

சுவாமி கேசவய்யாஜி அகமத் நகருக்குச் சென்றது மூன்றுந் தடவையாகும். முதன் முதலாக 1943ம் ஆண்டு அக்டோபர் மாதம் சென்றார். சீரடி போகும்போது 1944ல் மற்றொருமுறை சென்றார்.

1943ம் வருடம் அக்டோபர் மாதம் 9ம் தேதியன்று சுவாமிஜி சீரடியில் இருந்தார். அன்று அங்கே பாபாவின் மகாசமாதி உத்சவத்துக்காக வந்த பக்தர்கள் சுவாமிஜீயின் பேச்சைக் கேட்க விரும்பி ஒரு கூட்டத்தை ஏற்பாடு செய்தார்கள். சீரடி சாயி சமஸ்தான சங்கத் தலைவரான ஸ்ரீ எம். டபிள்யூ. பிரதான் கூட்டத்துக்குத் தலைமை வகித்தார். சுவாமிஜி சாயி பாபாவின் போதனைகள் மிகச் சுலபமாக இருக்குமென்றும் சபையோர் சீரடி மகா யோகியிடம் பரிபூரண நம்பிக்கை வைக்க வேண்டும் என்றும் அப்படி வைத்தால் அந்த மகான், தாமே எல்லோரையும் காக்கும் பொறுப்பை ஏற்றுக்கொள்வார் என்றும் சொன்னார். சுவாமிஜீ பிறகு தாம் பெற்ற அனுபவங்களை விவரித்தார். பாபாவின் போதனைகள் போன்ற நடையிலேயே அமைந்த சுவாமிஜீயின் பிரசங்கத்தை ஸ்ரீ காட்கில் மிகவும் பாராட்டினார். கூட்டத்திற்கு அகமத் நகர் சப் ஜட்ஜ் ஸ்ரீ பி. வி. மஞ்ஜேஷ்வர், ஜில்லா முன்சீப்பான ரகுராமையா ஆடிட்டர் ஸ்ரீ பி. சாம்பையா ஸ்ரீ நடிம்பல்லி தசரத ராமையா, பாரிஸ்டர், குண்டூர், ஸ்ரீ டி. வி. எஸ். சூரி, தாசில்தார், குண்டூர், ஸ்ரீ ஆர். விச்வநாதன் முதலியோர் வந்திருந்தார்கள்.

சுவாமிஜி 1944—ஏப்ரலில் மறுபடியும் சென்னை வந்தார். 16ம் தேதியன்று ராவ்பகதூர் பி. கே. ஞான சுந்தர முதலியாரின் (பப்ளிக் சர்வீஸ் கமிஷன் மெம்பர்) வீட்டில் பாபா பூசை செய்தார். பூசைக்கு அதிகாரிகளும் மற்றவர்களுமாகப் பலபேர் வந்திருந்தார்கள். சுவாமிஜி எல்லோருக்கும் தீர்த்தப் பிரசாதம் கொடுத்தார். பக்தர்களுடைய முக்கியமான கேள்விகளுக்கு யோசனைகள் சொன்னார்.

ஜூன் மாதத்தில் கோயம்பத்தூரில் உள்ள ஸ்ரீ நாக சாயி மண்டலியாரின் அழைப்பின்மேல் சுவாமிஜி 17ம் தேதி சென்றவர் அங்கேயே 30ம் தேதிவரை தங்கினார். இந்தச் சுற்றுப் பிரயாணத்தைப்பற்றிப் பப்ளிக் பிராஸிக்யூட்டர் ராவ்சாகிப் டி. டி. ஆர். பிள்ளை 'கோயம்பத்தூர் டைம்ஸ்' பத்திரிகையில் இப்படி எழுதி இருக்கிறார்.

''நாக சாயி மண்டலியாரின் அழைப்பின்பேரில் சாயி பாபாவின் பக்த சிகாமணியாகிய ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாஜி ஜூன் 17ம் தேதியன்று கோயம்பத்தூருக்கு வந்து 30ம் தேதிவரை இருந்தார். இவர் கோயம்பத்தூருக்கு வருவது இது இரண்டாம் தடவை. சாயி பாபாவின் போதனைகளைப் பிரசாரம் செய்வதன் மூலம் இவர் ஒப்பற்ற சேவை செய்திருக்கிறார். பாபாவின் தத்துவம் நல்லுரைகள் இவைபற்றி இவர் உள்ளூர் மக்களுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை ஏற்படுத்தி இருக்கிறார்.

தேவகோட்டை குமார ஜமீன்தார் ஸ்ரீ கலைராஜா, (பப்ளிக் பிராஸிக்யூட்டர், கோயம்புத்தூர், நீலகிரி) ஸ்ரீ டி. டி. ரத்தினசபாபதிபிள்ளை, மின்சார இலாகா சூபரென்டெண்டிங் இஞ்சினீயர் திரு. நரசிம்ம மூர்த்தி, வக்கீல் ஸ்ரீ கே ஆர். கிருஷ்ணசாமி ஐயர், வர்த்தகப்பிரமுகர் ஸ்ரீ கண்ணப்ப செட்டியார், ஸ்ரீ வரதராஜையா ராவ்பகதூர் ஸ்ரீராஜாபிள்ளை ஸ்ரீ சேது செட்டியார் ஆகியோருடைய வீடுகளில் சுவாமிஜீ பாபா பூசை செய்தார். இந்தப் பூசைகளுக்கு ஏராளமான பிரமுகர்கள் வந்திருந்தார்கள். சென்னை ஹைகோர்ட் ஜட்ஜ் ஸ்ரீ சி. என். குப்புசாமி ஐயர், ஓய்வு பெற்ற ஜில்லா ஜட்ஜ் ஏ. அனந்தராமையர், ஸ்ரீ வி. சி. வெள்ளியங்கிரி கவுண்டர் முதலிய பிரமுகர்கள் இந்தப் பூசைக்கு வந்தார்கள். ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாஜீயின் ஆத்மீக சிகிச்சைக் கேந்திரத்தைத் தரிசித்தார்கள். கேந்திரத் தலைவரான ஸ்ரீ டி. ஆர். நாராயண ஐயர் சுவாமி கேசவய்யாஜீயின் சேவையைப் புகழ்ந்து ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்சர் வேலையை ஸ்ரீ விவேகானந்தர் முடித்தது போல் சாயிபாபாவின் வேலையை ஸ்ரீ கேசவய்யாஜீ பூர்த்தி செய்து கொண்டிருக்கிறார் என்று சொன்னார். ஸ்ரீ கேசவய்யாஜி ஆனந்தாச்ரம பஜனையைப் பார்த்தார். சுவாமி கேசவய்யாஜீயின் பூசைகளாலும் பிரசங்கங்களாலும் ஆயிரக்கணக்கான பக்தர்கள் நன்மை பெற்றார்கள். ஸ்ரீகேசவய்யாஜீ இன்னும் சிறிதுகாலம் அங்கேயே தங்கியிருந்தால் நன்றாயிருக்குமென்று பக்தர்கள் கருதினார்கள். கோயம்புத்தூரிலேயே ஸ்திரமாக இருக்க வேண்டுமென்று பக்தர்கள் விரும்பினார்கள். நாட்டின் மற்ற பகுதியாருக்கும் இது போன்ற சந்தர்ப்பம் கிடைக்க வேண்டுமென்று கோயம்புத்தூர் பக்தர்கள் விரும்பினார்கள்.''

## உலகெங்கும் பரவட்டும்

கோயம்புத்தூர், நீலகிரி ஜில்லாக்களின் பப்ளிக் பிராசிகியூட்டரான ராவ் ஸாகிப் டி. டி. ரத்தின சபாபதி பிள்ளை, பி.ஏ., பி.எல்., இப்படி எழுதுகிறார்:

"யாருக்கு சாயி பாபாவின் அருள் கிடைக்கிறதோ அவர்கள் சாயிபாபாவை 'மகான்களுக்கெல்லாம் மகான்; அல்லது கடவுளின் அவதாரம்' என்று உணர்கிறார்கள். யாராஞலும் சரி சாயிபாபாவிடம் முழுமனதுடன் உண்மையாக பக்தி செலுத்திஞல் அவருடைய கஷ்டங்கள் எல்லாம் நீங்கிவிடும்; அவருக்கு முக்தி நிச்சயம். அவர் மகா சமாதி அடைந்தபிறகும்கூட அவருடைய அருளும் ஆற்றலும் பக்தர்கள்பால் பரவி உண்மை பக்தர்கள் விஷயத்தில் பல அற்புதங்களை நிகழ்த்துகின்றன. சாயிபாபாவின் உபதேசம் நம் நாடெங்கும் பரவவேண்டும்; விரைவிலேயே உலகம் முழுவதும் பரவவேண்டும் என்பதற்காகவே இந்தக் கட்டுரையை எழுதுகிறேன்" பிரசாரத்திஞல்தான் இது சாத்தியமாகும். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரின் உபதேசங்கள் உலகெங்கும் பரவக் காரணமாய் இருந்தவர் அவருடைய உண்மைச் சீடர்களுள் சிறந்தவர் ஆன விவேகானந்தர் அல்லவா? 'என்னுடைய உபதேசங்களைப் பக்தர்களிடம் பரப்புங்கள்' என்று இயேசு நாதரே சொல்லியிருக்கிறார். தங்கள் வாழ்நாளில் ரிஷிகளும் மகான்களும் மிகப் பெருமை உடையவர்களாக இருந்திருக்கலாம்; என்றாலும் அவர்களை உலகம் மறக்காமல் செய்து, அவர்கள் உபதேசங்களைப் பிற்கால மக்களிடம் பரப்பிய பெருமை அவர்களுடைய சிஷ்யர்களையே சாரும். சாயி பாபாவின் விஷயமும் அப்படித்தான். சாயியின் உபதேசங்களை நாடெங்கும் பரப்பும்சேவையை அவர் பக்தர்கள்தான் செய்ய வேண்டும்.

பிரம்மஸ்ரீ பி. வி. நரசிம்ம சுவாமியை நான் உங்களுக்கு அறிமுகப் படுத்த வேண்டியதில்லை. அவர், தாம் எழுதிய புத்தகங்கள் வாயிலாகவும் பிரசங்கங்கள் வாயிலாகவும் இந்தியா முழுவதிலும் சாயிபாபாவின் பெருமையைப் பரப்பியிருக்கிறார். தம் வயதையும் உடல் நலத்தையும் லட்சியம் செய்யாமல் இந்தச் சேவையை அவர் செய்துவருகிறார். இதற்காகத் தென்னிந்திய மக்கள் அவருக்கு நன்றிக்கடன் பட்டிருக்கிறார்கள்.

அதுபோலவே பெனுகொண்டா சப் ரிஜிஸ்திரார் ஆன ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாவுக்கும் நாம் மிகவும் கடமைப் பட்டவர்கள் ஆவோம். அவருக்கும் சாயிதான் தெய்வம். அவருக்குத் தம் சத்

குருவான சாயிபாபாவிடம இருக்கும பக்திக்கும் நம்பிக்கைககும் அளவேயில்லை. அவர் சாயியின் உபதேசங்களை எங்கும் பரப்பவே தம் வாழ்க்கை முழுவதையும் அர்ப்பணம் செய்துவிட்டார். தம் மோடு தொடர்பு கொள்ளும் ஒவ்வொருவரும் சாயி நம்பிக்கையை பெறவேண்டி அவர் சாயி பக்தர் வீடுகளுக்கெல்லாம் சென்று சாயி பூசை செய்கிறார். பூசைக்குப் பிறகு பிரசாதம் வழங்குகிறார்.

## கிடைக்காத பாக்கியம்

இந்த ஆண்டு ஜூன், ஜூலையில் இந்த இரண்டு பெரியோர் களையும் தன்னிடத்தே இழுக்கும் பாக்கியம் கோயம்புத்தூருக்குக் கிடைத்திருக்கிறது. ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாஜி ஜூனில் கோயம் புத்தூருக்கு வந்து புகழ்பெற்ற சாயிபக்தரான ஸ்ரீ வரதராஜையா அவர்கள் வீட்டில் பத்து நாட்கள் தங்கினார். இந்த ஊர் உத்தி யோகஸ்தர்களும் பிறரும் இந்தச் சந்தர்ப்பத்தை நன்கு பயன்படுத் திக் கொண்டனர். பலர் அவரைத் தம் வீட்டுக்கு அழைத்து சாயி பூசை செய்வித்துக் கொண்டனர். இந்தப் பூசைக்குப் பலர் வந் தார்கள். வந்த எல்லோரும் சாயி பக்தர்கள் ஆகிவிட்டார்கள்.

ஸ்ரீ எஸ். பி. கேசவய்யாஜி வந்துபோனபிறகு பிரம்மஸ்ரீ பி. வி. நரசிம்ம சுவாமி இங்கே வந்தார். பாபா கோவிலில் பாபாவுக்கு அவர் தம் கையால் அபிஷேகமும் அர்ச்சனையும் செய்வதைப் பார்க் கும் பாக்கியம் கோயம்புத்தூர் வாசிகளுக்குக் கிடைத்தது. பூசைக் குப்பிறகு அவர் சாயிபாபாவைப் பற்றி வெகு சிறப்பாகப் பேசினார். பிறகு பிரசாதங்களையும் வழங்கினார். ஸ்ரீ எஸ். பி. கேசவய்யா கோயம்புத்தூருக்கு வந்திருந்து பல பக்தர்கள் வீடுகளுக்குச்சென்று சாயி பூசை செய்தார் என்று அவரிடம் சொன்னார்கள். இதைக் கேட்ட அவர் சந்தோஷத்துக்கு அளவேயில்லை. 'என் பிரசங்கங் களைக் கேட்பதால் ஆயிரத்துக்கு நூறு பேர் நன்மை அடைந்தால் கேசவய்யாஜீயின் பூசையால் ஆயிரத்துக்குத் தொள்ளாயிரம் பேர் நன்மை பெறுவார்கள்' என்று அவர் சொன்னார். இந்த மகரிஷியின் வாக்கால் புகழப் பெற்ற சுவாமிஜீயின் ஆத்மீக ஆற்றல் பெருகும் என்பது நிச்சயம். பிரம்மஸ்ரீ பி. வி. நரசிம்ம சுவாமியிடமும் சுவா மிஜீயிடமும் நாம் நன்றி மிக்கவர்களாக இருக்கவேண்டும். மக்க ளுடைய ஆத்மீகம் உயர்வதற்காகவே சாயிபாபா செய்த வேலையை இவர்கள் தொடர்ந்து செய்துவருகிறார்கள்.

இவர்கள் இருவரும் நீடூழி வாழ்க!

இவர்கள் புகழ் வளர்க!'

சுவாமிஜீ முதலில் பிப்ரவரி 13 ஆம் தேதியன்று நாகசாயி புகழ் ஸ்ரீ சி. வரத ராஜையாவின் அழைப்பை ஏற்று கோவை சென்றார். அவர் வீட்டில் பாபா பூசை செய்தார். பக்தர்கள் பலர் பூசைக்கு வந்திருந்தார்கள். அன்று மாலை சாயி மந்திரத்தில் வர்த்தகப் பிரமுகரான ஸ்ரீ ஜி. கங்கா நாயுடு தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் சாயிபாபாவையும் அவருடைய லீலைகளைப் பற்றியும் சுவாமிஜீ இரண்டு மணி நேரம் பேசினார். சமயத்துக்கேற்றபடித் தம் அனுபவங்களையும் விவரித்தார். பக்தர்கள் மிகுந்த பக்தி சிரத்தையுடன் பிரசங்கத்தைக் கேட்டார்கள். ஸ்ரீ சி. வரதராஜையா பாபாவின் காசுகளையும் பாபாவைப் பற்றிய புஸ்தகங்களையும் எல்லோருக்கும் இலவசமாக வழங்கினார்.

ஆகஸ்டு மாதத்தில் சுவாமிஜீ திரும்பவும் சென்னைக்கு வந்தார். 9 ஆம் தேதி அன்று மாஜி மந்திரியும் ஸ்டேட் கௌன்ஸில் உறுப்பினருமான ஸர் ஏ. பி. பாத்ரோவின் வீட்டில் பூசை செய்தார். உத்தியோகஸ்தர்களும் கல்விமான்களும் வந்திருந்தார்கள். 1944ம் ஆண்டு முதல் வாரத்தில் சுவாமிஜி செகந்தராபாத் சென்றார். அங்கே ஜம்ஷெட்ஜீ ஹாலில் ஸ்ரீ எம். எஸ். கோட்டேசுவரன் (மஹபூப் காலேஜ் பிரின்ஸிபால்) தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் சுவாமிஜி சாயி பாபாவைப் பற்றியும், மற்ற யோகிகளைப் பற்றியும் கடவுள் கிருபைப் பெறுவதற்கு பாபா காண்பித்த எளிய முறைகளைப் பற்றியும் பிரசங்கம் செய்தார்.

பெண்களுக்கென்று தனியாக ஒரு கூட்டம் ஏற்பாடாயிற்று. சுவாமிஜி உபந்நியாசம் செய்தார். இவருடைய உபந்நியாசத்தைக் கேட்டபின் பாபாவைப்பற்றித் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற தாபம் எல்லோருக்கும் உண்டாயிற்று.

1944ம் ஆண்டு செப்டம்பர், நவம்பர் மாதங்களில் சுவாமி இரண்டுமுறை சென்னைக்குச் சென்றிருந்தார். செப்டம்பர் 18ந் தேதியன்று தேவகோட்டை ஜமீன்தார் ஸ்ரீ ஏ கே. ஏ எம். கலைராஜாவின் வீட்டில் சாயி பூசை செய்தார். ஜில்லா ஜட்ஜ் ஸ்ரீ எம். ஸி. பி. கோமன், ஸ்ரீ சி. வி. ராஜன் முதலியோர் பூசைக்கு வந்திருந்தார்கள்.

நவம்பர் 12ம் தேதியன்று கவர்னருடைய அந்தரங்கக் காரியதரிசிகள் காரியாலய சூப்பிரின்டெண்ட் ஆன ஸ்ரீ கோபால் வீட்டில் பூசை செய்தார். ஷெரீப் ஸர் எம். பாலசுந்தரம் நாயுடுவும் வேறு பலரும் வந்திருந்தார்கள்.

1945ம் ஆண்டில் சுவாமிஜி குண்டூர், ஹைதராபாத், செகந்தரா பாத் முதலிய இடங்களுக்கு சென்றிருந்தார். மே மாதம் 16ம் தேதியிலிருந்து 19ம் தேதி வரையிலும் செகந்தராபாத்தில் இருந் தார். 16, 17 தேதிகளில் ஜம்ஷெட் ஹாலில் கூட்டங்கள் நடை பெற்றன. டாக்டர் பரதன் தலைமை வகித்தார். திரு காசி விசுவ நாதம், சுவாமிஜீயை சபையோருக்கு அறிமுகம் செய்து வைத்தார். இவர் மகாத்மா, இவரது தீவிரமான அன்பு பக்தி காரணமாக பாபா தம் கிருபையை இவர் மீது செலுத்தி இருக்கிறார்' என்று சொன்னார். சுவாமிஜி தம் அனுபவங்களை விவரித்தார். சாயிபாபாவின் பெரு மையைச் சொன்னார். வெளிவராத சாயிபாபாவின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் சிலவற்றை சுவாமிஜி வெளியிட்டார். தலைவரான ராவ் சாகேப் டாக்டர் பரதன் பேசும்போது பாரத நாடு மகாத் மாக்கள் நிறைந்த பூமி என்றும் இம்மகாத்மாக்களுடைய அன்புக் கட்டளைகளை ஓரளவாவது பின்பற்றினால் உலகம் சுபிட்சமாக இருக் கும் என்றும் சொன்னார். இப்பொழுதுள்ள துவேஷம், பொறாமை, ரத்தம் சிந்தல் முதலியவை இராது என்றார்.

சுவாமிஜீயின் தன்னலமற்ற சேவையைப் புகழ்ந்து உள்ளூர் சாயி பக்தர்கள் பட்டுத் துணியில் அச்சடித்த சன்மானப் பத்திரம் ஒன்றைச் சமர்ப்பித்தார்கள். திரு காசி விசுவநாதம் பத்திரத்தைப் படித்தார். அந்த வரவேற்புப் பத்திரத்தின் உள்ளுறை இது:

''கடந்த ஐந்து ஆண்டுகளாக நீங்கள் பல பகுதிகளில் சென்று பார்த்து சத்தியம், அன்பு இவற்றைப் பிரசாரம் செய்து சாயி பாபா வின் வேலையைச் செய்துகொண்டிருக்கிறீர்கள். ஆத்மீக உயர்வு பெற்று அதன்மூலம் மக்களுக்குச் சேவை செய்ய சர்வ சங்க பரித்தி யாகம் செய்து சந்நியாசி ஆசிரமத்தை ஏற்றுக்கொள்ள வேண்டு மென்ற நம்பிக்கை ஒன்று இருக்கிறது. ஆனால் உங்கள் வாழ்க் கையே இந்தக் கருத்தும் இந்த நம்பிக்கையும் சரியல்ல என்பதை நிரூபித்திருக்கிறது நீங்கள் கிருகஸ்தராகவே இருக்கிறீர்கள். எல் லோரும் மதிக்கும்படி அரசாங்க உத்தியோகத்தையும் நிருவகிக் கிறீர்கள். நீங்கள் இப்படி வாழ்க்கை நடத்தினாலும் சாயி பாபா உங்கள்மேல் தன் அருளை ஏராளமாக அள்ளி சொரிந்திருக்கிறார். நோயாளிகளுக்கு ஆரோக்கியத்தை அருளி, துன்பமுற்றவர்களின் தொல்லையைப் போக்கி, வெறுப்பாலும் ஏமாற்றத்தாலும் குன்றிப் போனவர்களை நம்பிக்கையூட்டும் உங்கள் அமுத வாக்கால் உத்சா கப்படுத்தி நீங்கள் செய்யும் அமோகமான சேவையால் நீங்கள் எல் லோருடைய அன்புக்கும் அபிமானத்துக்கும் பாத்திரராக இருக் கிறீர்கள். சாயி பாபாவிடம் நம்பிக்கையை அதிகரிக்கச் செய் திருக்கிறீர்கள்.

18ம் தேதியன்று லால்குடா ரெயில்வே இன்ஸ்டிடியூட்டில் நடந்த கூட்டத்தில் சுவாமிஜி உபந்நியாசம் செய்தார். ஆங்கிலோ இந்தியர்களும், பார்ஸிகளும், இன்னும் பலரும் வந்திருந்தார்கள். சுவாமிஜி தெலுங்கிலும் ஆங்கிலத்திலும் பிரசங்கம் செய்தார். ஸ்ரீ ராஜகோபால் நல்ல ஏற்படுகள் செய்திருந்தார். 18ம் தேதி இரவு ஸ்ரீ கந்தம் நாயுடு வீட்டில் பாபா பூசையைச் செய்தார். பூசைக்குப்பின் சுவாமிஜீயைப் பார்க்கும்போது அவர் மிகவும் கம்பீரமாகவும் பிரகாசமாகவும் தோன்றுவார். பூசைக்குப் பிறகு பக்தர்கள் பலருக்குத் தீர்த்தப் பிரசாதங்கள் கொடுத்தார். சிலருடைய கேள்விகளுக்குப் பதிலும் யோசனைகளும் சொன்னார்.

19ம் தேதியன்று ஹைதராபாத் ரேடியோ நிலையத்தில் பதினைந்து நிமிடம் தெலுங்கில் பாபாவைப் பற்றிப் பேசினார். 1945ம் ஆண்டு ஜூன் 22ம் தேதி ஸ்ரீதாசரி ஸ்ரீமந் நாராயண செளதரியின் அழைப்பின்பேரில் சுவாமிஜீ நான்காம் தடவை குண்டூருக்குச் சென்றார். அன்றிரவு அவர் வீட்டிலேயே சாயி பூசை செய்தார். 1000 பேருக்குமேல் பக்தர்கள் வந்தார்கள். ஜில்லா ஜட்ஜ் திரு ராமகிருஷ்ணையர் தம்பதிகள் பூசை முடியும்வரையில் இருந்தார்கள்.

23ம் தேதியன்று திவ்யஞான சமாஜ மந்திரத்தில் ஸ்ரீ பி. ராமகிருஷ்ணையர் தலைமையில் ஏற்பாடான பொதுக் கூட்டத்தில் சுவாமிஜி பேசினார். பக்தர்களுடைய அனுபவங்கள் பலவற்றை அவர் விவரித்தார். பாபாவின் கிருபையைப் பெற ஒவ்வொருவரும் ஒருநாளில் சிறிது நேரத்தை ஒதுக்க வேண்டுமென்று விண்ணப்பித்துக் கொண்டார். திரு பி. ராமகிருஷ்ணையர் சுவாமிஜீயின் தன்னலமற்ற சேவையைப் புகழ்ந்து, 'பாபாவின் போதனைகளை இவர் அழகாக எல்லோருக்கும் புரியும்படி விளக்குகிறார்' என்று சொன்னார்.

அன்றிரவு ஜில்லா ஜட்ஜ் திரு பி. ராமகிருஷ்ணையர் வீட்டில் பாபா பூசை செய்தார். ஜில்லா போலீஸ் சூப்பரின்டெண்டெண்ட் திரு மேனனும் மற்ற அதிகாரிகள் பலரும் பூசைக்கு வந்திருந்தார்கள். பூசைக்குப் பிறகு திரு ராமகிருஷ்ணையருக்கு மதுரைப் பக்கம் மாற்றலாகும் என்றும் அங்கே தான் பிரங்கம் செய்யும் கூட்டத்துக்கு அவர் தலைமை வகிப்பார் என்றும் சுவாமிஜி சொன்னார். சில நாட்களில் அதுபோலவே திரு ராமகிருஷ்ணையரை ராமநாதபுரம் ஜில்லா நீதிபதியாக மாற்றினார்கள். அவருடைய காரியாலயம் மதுரையில் இருந்தது. சுவாமிஜி மதுரை சென்றபோது அங்கே நடந்த பொதுக்கூட்டத்தில் திரு ராமகிருஷ்ணையர் தலைமை வகித்தார். ஜில்லா போலீஸ் சூபரின்டெண்டன்ட் திரு எம்.கே. மேனனுக்

கும் 1946ம் வருடம் ஜனவரியில் மாற்றலாகும் என்று சுவாமிஜீ கூறி ஞர். அவருக்கும் அப்படியே மாற்றலாயிற்று.

நச் சுற்றுப் பிரயாணச் சந்தர்ப்பத்திலேயே சுவா... ... சாயி மந்திருக்கு ஆரம்பவிழா நடத்திஞர். சப் ஜட்ஜ் திரு கிருஷ்ணமூர்த்தி தலைமை வகித்தார்.

திரும்பவும் செப்டம்பரில் சுவாமிஜி குண்டூர் சென்று குண்டூர் முனிசிபாலிட்டியார் வாசித்து அளித்த வரவேற்புப் பத்திரத்தைப் பெற்றுக்கொண்டார்கள். 18ம் தேதியன்று முனிசிபாலிட்டி சங்க விசேஷக் கூட்டத்தில் தலைவர் திரு தெல்லாகுல ஜாலையா சுவாமி ஜீயின் சேவையையும் அவர் பிரசாரம் செய்யும் ஆத்மீகத் திட்டத் தையும் புகழ்ந்தார். அதற்கு முதல்நாள் ஸ்ரீ தாசரி ஸ்ரீமந் நாரா யண செளதரியின் தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் சுவாமிஜி பேசிஞர்.

## வரவேற்புப் பத்திரம்

ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ சாயி பக்த எஸ். பி. கேசவய்யாவுக்கு முனிசிபாலிடி சங்கத்தார் அளிக்கும் வரவேற்புப் பத்திரம்.

பூஜிக்கத் தக்கவரே,

தாங்கள் எங்கள் ஊருக்கு வந்த சந்தர்ப்பத்தில் எங்கள் மனப் பூர்வமான வரவேற்பளிக்கிருேம்.

பெருமை மிக்கவரே,

சென்ற ஐந்து ஆண்டுகளாக தாங்கள் பற்பல நகரங்களுக்குச் சென்று சாயி பாபாவின் உபதேசத்தைப் பிரசாரம் செய்து சாயி பாபா அவர்களுடைய சேவையாகிய அரிய செயலைப் பூர்த்திசெய்து வருகிறீர்கள், அதற்காக நாங்கள் எங்கள் மகிழ்ச்சியைத் தெரி வித்துக்கொள்ளுகிருேம்.

மதிப்பிற்குரியவரே,

சம்சாரத்தைத் துறந்து வெளியேறிஞலன்றி, ஆத்மீக சக்தி யான செல்வத்தைப் பெற்று மக்கள் சேவை செய்ய யாருக்கும் இயலாதென்ற ஓர் எண்ணம் உலகில் வலுத்திருக்கிறது. ஆனுல் தங்களுடைய திவ்விய வாழ்க்கை அந்த அபிப்பிராயம் ஆதாரம் அற்றது என்பதை நிரூபிக்கிறது.

தியாகியே,

இல்வாழ்பவரும் அரசாங்க உத்தியோகஸ்தருமாக இருந்து கொண்டே தாங்கள் தங்கள் கடமையைப் போற்றத் தக்கமுறையில் செய்து ஸ்ரீ சாயி பாபாவின் அநுக்கிரகத்துக்குப் பாத்திரராய் ஆத்மீக சக்தியைச் சம்பாதித்து அதை மக்களுடைய நலனுக்காக உபயோகிக்கிறீர்கள். உடலைப் போஷிப்பதை விரும்பாமல் பல கஷ்டங்களுக்கு உட்பட்டு இன்றைக்கும் தாங்கள் நடத்திவரும் தியாக வாழ்வுக்கு எங்கள் நன்றி. நோயாளிகளுக்கும் துன்புற்றவர்களுக்கும் தாங்கள் செய்யும் சேவை போற்றத் தக்கதாகும்.

திவ்விய மதகுருவே,

கஷ்டம் ஏற்பட்ட சமயங்களில் தாங்கள் அருளும் நம்பிக்கையூட்டும் செய்திகள், எங்கள் உள்ளங்களில் ஆச்சரியத்தையும், அன்பையும் நிரப்பி, பாபா அவர்களிடம் எங்களுக்கு உள்ள பக்தி விசுவாசங்களை வலுப்படுத்துகின்றன. திவ்விய திருஷ்டியால் வருங்காலத்தை உணர்ந்து, கஷ்டத்தில் வாடும் பக்தர்களுக்குத் தாங்கள் செய்யும் எச்சரிக்கைகளும், புனிதமான விபூதியோடு தங்கள் கை பட்ட மாத்திரத்தில் துன்பம் நீங்குவதும், கஷ்டத்திலேயே உழலும் மக்களுடைய விமோசனத்துக்காக ஸ்ரீ சாயி பாபா தங்களைக் கருவியாக உபயோகிக்கிறார் என்பதை எங்களுக்குத் தெளிவாகக் காட்டுகின்றன.

கருணை மிக்கவரே,

இதுபோன்று பக்தி சிரத்தையுடன் பகவத் காரியங்களை நிர்வகிப்பதற்காக ஸ்ரீ சாயி பாபா தங்களுக்கு நீண்ட ஆயுளையும், ஆரோக்கியத்தையும் அருள வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.

இப்படிக்கு,

தங்களுடைய ஆசிகளை விரும்பும் குண்டூர் முனிசிபாலிட்டி
சங்கத் தலைவரும், அங்கத்தினர்களும்.

முனிசிபாலிட்டி சங்கத்தாருடைய வரவேற்புக்கு சுவாமிஜி நன்றி சொன்னார்.

1946ம் ஆண்டு ஜனவரி, மார்ச்சு மாதங்களில் சுவாமிஜி திரும்பவும் சென்னைக்குச் சென்றார். ஜனவரி 17ல் பிரபாத் டாக்கீஸ் சொந்தக்காரரான ஸ்ரீ சி. பி. கோபால் வீட்டில் பூசை செய்தார். ஸ்ரீ டி. பாஸ்கரராவ், ஐ.ஸி.எஸ்., ஸ்ரீ எம். ராமச்சந்திரராவ் நாயுடு

(நீதி இலாகா காரியதரிசி), எம். கே. மூர்த்தி நாயுடு (உதவி போலீஸ் கமிஷனர்), ஸ்ரீ டி. பிரபாகர ராவ், ஸ்ரீ வி. என். ரெட்டி (வாஹினி பிச்சர்ஸ்), ஸ்ரீ டி. கோபால முதலியார் (கவர்னர் காரியாலய சூப்பரின்டெண்டென்ட்) இன்னும் பலர் பூசைக்கு வந்தார்கள். பூசை நான்கு மணி நேரம் நடந்தது.

மார்ச்சு மாதம் 14ம் தேதியன்று திரு கே. ரகுராமையா (நீதி இலாகா டெபுடி காரியதரிசி; தற்போது மத்திய அரசின் அமைச்சர்) வின் வீட்டில் பூசை செய்தார். திரு வி. ராமகிருஷ்ணு, ஐ ஸி.எஸ். திரு எம். ஆர். நாயுடு (மருத்துவ சுகாதார இலாகா உதவி டைரக்டர்) திரு வி. பி. சௌதரி (வருமானவரி ஆபிசர்) திரு சி. வி. ராஜன் முதலியோர் வந்திருந்தார்கள்.

அக்டோபர் மாதம் முதல் தேதியன்று சுவாமிஜி மதுரை சாயி சமாஜத்தாரின் அழைப்பை ஏற்று அங்கே சென்றார். ரயில் நிலையத்தில் சாயி சமாஜம் காரியதரிசி ஸ்ரீ ஏ. ராஜாராம் நாயுடு, பொக்கிஷதார் டாக்டர் சூரிய நாராயணு, ராவ்சாகிப் ஸ்ரீ கதிர்வேல் பிள்ளை முதலிய உள்ளூர்ப் பிரமுகர்கள் சுவாமிஜியை வரவேற்றார்கள். சுவாமிஜி ராமநாதபுரம் ஜில்லா நீதிபதி ஸ்ரீ பி. ராமகிருஷ்ணையரின் விருந்தாளியாக இருந்தார்.

அன்று மாலை சௌராஷ்டிரா உயர்நிலைப் பள்ளியில் மீனாக்ஷி அம்மன் கோயில் நிர்வாக அதிகாரியான ஸ்ரீ ஆர். எஸ். நாயுடுவின் தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் பாபாவின் வாழ்க்கையைப் பற்றியும், போதனைகளைப் பற்றியும் சுவாமிஜி இரண்டு மணி நேரம் உபந்நியாசம் செய்தார். நமக்குத் தேவையான சந்தர்ப்பங்களில் உதவி செய்து ஆதரிக்கும் சாயி பாபாவிடம் பரிபூர்ணமான நம்பிக்கை வைக்க வேண்டுமென்று சபையோருக்கு யோசனை சொன்னார்.

அன்றிரவு ஸ்ரீ பி. ராமகிருஷ்ணையரின் வீட்டில் சாயி பூசை செய்தார். மதுரை ஜில்லா நீதிபதி ஸ்ரீ பி. ராஜகோபாலன் அடிஷனல் ஜில்லா முன்சீப் ஸ்ரீ வி. ஆர். கிருஷ்ணசாமி ஐயர் ஸர் பி. டி. ராஜன், ராவ் சாகிப் ஸ்ரீ கதிர்வேல் பிள்ளை, ஸ்ரீ ராஜமன்னார் நாயுடு, டாக்டர் சூரியநாராயணு முதலியோர் பூசைக்கு வந்திருந்தார்கள். இரண்டாம் தேதியன்று ரீகல் டாக்கீஸில் திரு பி. ராமகிருஷ்ணையரின் தலைமையில் பொதுக் கூட்டம் நடந்தது. 2000 பேருக்கு மேற்பட்ட பக்தர்கள் கூட்டத்துக்கு வந்திருந்தார்கள். கடவுள் ஒருவரே என்பதையும், யாராகயிருந்தாலும் பாபாவை எப்படி பூஜிக்க வேண்டும் என்பதையும், அற்புதமான முறையில்

பாபா பக்தர்களுடைய நம்பிக்கையை வளர்ப்பதைப் பற்றியும் சுவாமிஜி விவரித்தார். பாபாவின் கிருபையை பெறுவதற்கு நான்கு வேதமும் ஆறு சாஸ்திரங்களும் படிக்கவேண்டிய அவசியம் இல்லை; ஆழ்ந்த அன்பும் அசையாத நம்பிக்கையும் இருந்தால் பாபாவின் கிருபையைப் பெறலாம் என்று சொன்னார்.

சாயி பாபாவின் கைக்கருவியாக இருந்து சுவாமிஜி பல விதங் களில் ஆத்மீக சேவை செய்து வருகிறார் என்று தலைவர் பாராட் டினார்.

அன்றிரவு சுவாமிஜியை மீனாக்ஷியம்மன் கோயிலுக்கு அழைத் துச் சென்றார்கள். ஆலய மரியாதைகளுடன் சுவாமிஜியை வர வேற்றார்கள். சுவாமிஜி ஒருமணி நேரம் இருந்து வேதபாரா யணத்தை கேட்டுத் தீர்த்தப் பிரசாதங்கள் பெற்றுக்கொண்டு விடை பெற்றார்கள்.

3ம் தேதியன்று காலை ஸர் பி. டி. ராஜன் அவர்கள் வீட்டில் சாயி பூசை செய்தார். நகர பிரமுகர்கள் பலர் பூசைக்கு வந்து தீர்த்தம், பிரசாதம், விபூதி இவற்றைப் பெற்றுக் கொண்டார்கள்.

சாயங்காலம் சுவாமிஜீயை ரயில்வே காலனிக்கு அழைத்துச் சென்றார்கள். பக்தர்கள் பலர் சுவாமிஜீயை தரிசித்தார்கள். சுவாமிஜி சாயி லீலைகளைப் பற்றி பேசினார். பாபாவிடம் பக்தி, பாபா தியானம் என்றால் உண்மையான அர்த்தம் என்ன என்பதை விளக்கினார்கள்.

மதுரையில் பி. டி. ராஜன், பார்-அட்-லா அவர்களுடைய தலை மையில் மதுரை சாயி பக்தர்கள் சாயி பக்த ஸ்ரீ கேசவய்யாஜீக்கு வாசித்தளித்த வரவேற்புரை :

மதிப்பிற்குரிய பெரியவரே !

சாயிபாபாவின் பக்தர்களான நாங்கள், உங்களை மிகப் பழைய வரலாற்றுப் பெருமை பெற்ற இந்த அழகிய மதுரை நகருக்கு வர வேற்பதில் மிகுந்த சந்தோஷப்படுகிறோம். எங்களிடையே நீங்கள் வந்திருப்பது—அதுவும் புண்ணிய தினமாகிய சாயி பாபாவின் மகா சமாதிக் கொண்டாட்டத்தின்போது வந்திருப்பது எங்கள் அதிர்ஷ் டம்தான்.

சீரடி மகானான சாயிபாபா கடவுள் ஒருவரே என்றும், ஹிந்து மதம், பாரசீக மதம், புத்தமதம், கிறிஸ்துவ மதம், இஸ்லாம் மதம் இவற்றின் அடிப்படைத் தத்துவங்கள் ஒன்றுதான் என்றும்

தொழுகை முறையில்தான் வித்தியாசம் இருக்கிறதென்றும் மக்களுக்கு உபதேசம் செய்தார். உலக மக்கள் எல்லோரும் சகோதரர்கள் எல்லோரும் ஒருவரிடத்தில் ஒருவர் அன்பு செலுத்த வேண்டும். அப்பொழுதுதான் உலக மக்களுக்கு உண்மையில் இன்பம் கிடைக்கும். போரிடும் நாடுகளுக்கு அமைதி கிடைக்கும் என்ற உண்மையை சாயி பாபா பக்தர்கள் மனதில் வேரூன்றச் செய்தார்.

சில வருடங்களாகவே நீங்கள் ஒய்வு ஒழிவு இல்லாமல் பாபாவின் உபதேசங்களாகிய சத்தியம், சகோதரத்துவம், அன்பு முதலியவற்றை எங்கும் பரப்பி வருவதைக் கண்டு நாங்கள் பெருமைப்படுகிறோம். இரவும் பகலும் நீங்கள் சாயி பாபாவுக்காகவே உழைத்து வருகிறீர்கள் என்று சொன்னால் அது மிகை ஆகாது. பூசையின் மூலம் எதிர்காலத்தைப்பற்றிச் சொல்லியும் புனிதமான விபூதியைக் கொடுத்தும் மக்களின் நோய்களையும் கஷ்டங்களையும் போக்கிவரும் உங்கள் சேவையால் பாபாவினிடத்தில் எங்களுக்கு அன்பும், மதிப்பும், நம்பிக்கையும், பக்தியும் பெருகி வருகின்றன. இச்சேவையை நீங்கள் நெடுநாட்கள் செய்துவர, வேண்டிய பலத்தையும் நீண்ட ஆயுளையும் உங்களுக்குக் கொடுக்கும்படி நாங்கள் சாயி பாபாவை வேண்டுகிறோம்.

1951ம் ஆண்டு ஜனவரி மாதம் 28ம் தேதியன்று சுவாமிஜி சீராலாவுக்குச் சென்றார். முனிசிபாலிட்டியாரும், ஊராரும் சுவாமிஜீயை மிக விமரிசையாக வரவேற்றார்கள். முனிசிபாலிட்டி பெண்கள் பள்ளிக்கூடத்தில் சாயங்காலம் ஏற்பாடான பொதுச் சபையில் சுவாமிஜீக்கு வரவேற்புப் பத்திரம் வாசித்தளித்தார்கள்.

சுவாமிஜி பாபாவைப் பற்றியும் அவருடைய போதனைகளைப் பற்றியும் பேசினார். பிறகு பக்தர்கள் எல்லோரும் சுவாமிஜி தங்கியிருந்த முசாபரி பங்களாவில் கூடி பாபாவைப்பற்றிய பிரசாரத்துக்காக ஒரு பத்திரிகையை ஆரம்பிக்க வேண்டுமென்று தீர்மானித்தார்கள். சுவாமிஜீயைத் தலைவராக வைத்து ஒரு சங்கத்தை ஏற்படுத்தினார்கள். மறுநாள் பேரலா சாயி கோயிலில் பாபா பூசை செய்து சுவாமிஜீ பக்தர்களுக்குத் தீர்த்தப் பிரசாதங்கள் கொடுத்தார்.

1954ம் ஆண்டு அக்டோபர் மாதம் சுவாமிஜீ ஆதோனிக்குச் சென்றார். அதற்கு ஆறு வருடம் முன்பு ஒரு தரம் அங்கே சென்றிருந்தார். அதற்குப் பின்பும் ஒருதடவை போய்வந்தார். அங்கே வர்த்தகப் பிரமுகரான திரு ஏ. பசவண்ண கௌடரின் விருந்தாளியாக இருந்தார். பப்ளிக் பிராஸிக்யூட்டர் திரு எச். லிங்கண்ண

ரெட்டி, மாஜி மந்திரி திரு சீதாராம ரெட்டி, திரு கே. சித்தண்ண கௌடர், திரு பசவண்ண கௌடர், முதலியோர் வீட்டில் பாபா பூஜை நடத்தினர். எல்லா பூஜைகளுக்கும் ஏராளமான பக்தர்கள் வந்திருந்தார்கள். பூஜைகள் இரவில் வெகுநேரம் வரையில் நடந்தன. தேவனபந்துவில் திரு பாட்டில் திம்மா ரெட்டி வீட்டிலும் பூஜை செய்தார். பலர் தத்தம் கஷ்டங்களைச் சொல்லிக்கொண்டு பரிகாரம் கேட்டுக்கொண்டார்கள்.

சென்னை சாயி நிலையத்தில் பூஜை செய்யும்போதே பக்தர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கி அவரவர்களுடைய ஊர்களுக்குச் சென்று சாயி பூஜை செய்வது வழக்கம்.

1957ம் ஆண்டு ஜனவரி 28ம் தேதி சீராலா முனிசிபல் கௌன்சில், சாயி பக்த கேசவய்யாவுக்கு அளித்த வரவேற்பு :

தெய்வத் தன்மை மிக்க பெரியவரே!

உங்களுக்கு மனமார்ந்த வரவேற்புத் தரும் பாக்கியமும், உங்கள் தரிசனத்தைப் பெற்று நன்மை அடையும் பாக்கியமும் எங்களுக்குக் கிடைத்தது எங்களுடைய ஒப்பற்ற அதிர்ஷ்டம்தான்.

குரு பாபாஜீயின் ஆத்மீக வாரிசாக இருந்து பாவிகளான மக்களுக்கு ஆத்மீக உயர்வைத் தேடித் தந்து பாபாவின் உபதேசங்களை அழியாமல் காத்துவரும் உங்களை நாங்கள் வணங்குகிறோம். உங்களைப் பார்த்த மாத்திரத்தில் எங்கள் உடல் வேதனைகளும், மன வேதனைகளும் ஓடிப்போகின்றன. ஆத்மீகம் கிளர்ந்தெழுகிறது. தாழ்ந்தவர்களையும், வழி தவறியவர்களையும் மீட்டுக் காக்கும் பெருமை மிகுந்த பாபாவின் அருளை எங்கும் பரப்ப சாயி பாபா தங்களையே தக்கவராகத் தேர்ந்தெடுத்திருக்கிறார்.

கஷ்டங்களாலும், சந்தேகங்களாலும் பிணிக்கப்பட்ட நாங்கள் உங்கள் அருளுக்குப் பாத்திரராக முந்துகிறோம். உங்கள் ஆசீர்வாதம் எங்கள் நெஞ்சில் நம்பிக்கை ஒளியை உதிக்கச் செய்கிறது. பாபாவின் அருளால் நாங்கள் விடுதலை பெறுகிறோம். எங்களுக்கு வழி காட்டும்படி உங்களையும் பாபாவையுமே எதிர்பார்க்கிறோம். அதனால் பக்தி மலருகிறது. ஒருவர் செய்யவேண்டிய வேலை எவ்வளவு சலிப்பு மிக்கதாக இருந்தாலும் அந்த வேலையை செய்து கொண்டே யாரும் கடவுளின் அருளைப் பெறமுடியும் என்பதற்கு உங்கள் வாழ்க்கையே ஒரு நல்ல அத்தாட்சியாக இருக்கிறது. ஒருவருடைய ஜாதி, மதம், அந்தஸ்து, வாழ்க்கைமுறை எதையும் கவனிக்காமல் தேடி வருகிற எல்லோருக்கும் நீங்கள் பாபாவின் அருளை

வாரி வழங்குகிறீர்கள். உலகம் ஒரு எரிமலையின் வாயில் இருப்ப தாக உண்மை அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். மனித முயற்சி யில் உலகத்தின் அழிவைத் தடுக்க முடியாது. கடவுளால்தான் தடுக்க முடியும். ஒரு ரிஷியின் அருளோ ஒரு மகானின் ஆசியோ தான் உலகத்தைக் காப்பாற்ற முடியும். உலகம் எங்கும் நிறைந் திருக்கும் அளவற்ற அன்பை மக்கள் அலட்சியம் செய்கிறார்கள். சுயநலக்காரர்களாகப் பணம் சம்பாதிக்கும் முயற்சியில் பல தவறான வழிகளை மேற்கொள்ளும் மக்கள், கடவுளைப் பற்றியோ அவர் சிருஷ் டித்த உயிர்களைப் பற்றியோ நினைப்பதே இல்லை. பாவிகளான மனி தர்களுக்கு ஒரே ஒரு நம்பிக்கைதான் இருக்கிறது. உலகைக் காத்து வளர்க்கும் அவன் கருணைதான் அந்த நம்பிக்கை.

பாரத தேச வாசிகளாகிய நாம் ஒரு வகையில் நிலையான தன் மையில்தான் நிற்கிறோம். நமது நாடு என்றுமே ஆத்மீக வாழ்க்கை யின் தொட்டிலாக இருந்து வருகிறது. பெரிய மகான்களும் ரிஷி களும் அடிக்கடி இங்கே தோன்றித் தங்கள் வாழ்க்கையாலும் உப தேசங்களாலும் உலக மக்களுக்கு ஆறுதல் தந்திருக்கிறார்கள். அவர்கள் தம்முடைய அருள் அலைகளை பக்தர்களுக்குள் பாய்ச்சி, அவர்களை அழியாத வாழ்க்கைக்கு அழைத்துச் செல்லுவதாக ரஸவாதம் செய்துகொண்டு நம்மிடையே இன்னும் இருக்கிறார்கள். நம்மை மூடியிருக்கும் அஞ்ஞான மேகங்களுக்கு இடையிலே இந்த மகான்களுடைய அருள்தான் ஒளி வீசிக் காப்பாற்றுகிறது.

நாங்கள் கைகூப்பி உங்களை வணங்குகிறோம். உங்களைப்போன்ற மகான்களே உலகைக் காக்கும் தெய்வங்கள் ஆவர். பேராசைக் காரர்களைக் கண்டித்து தேவைப்பட்டவர்களுக்கு உதவுவதற்கும் மக்களுக்கு சேவை செய்வதற்கும் வேண்டிய பலத்தையும் நீண்ட ஆயுளையும் பாபா உங்களுக்கு அருள்வாராக.

சாயி எல்லோரையும் ஆசீர்வதிக்கட்டும் !

அன்ன தாதா நாகேந்த்ருடு,
சேர்மன்,
சீராலா முனிசிபல் கௌன்சிலர்கள்.

## ஹைதராபாத்தில் சாயி சமாஜம் நிறுவியது.

ஹைதராபாத் சாயி பாபா சேவா சமாஜத்தாரின் அழைப்பின் பேரில் சுவாமி கேசவய்யாஜி 1962ம் ஆண்டு ஜூன் மாதம் 28ம் தேதி அன்று செகந்தராபாத்துக்குப் போனார். அவர் அங்கே சாயி பக்த ஸ்ரீ ஜி வி. ஆர். நாயுடுவின் விருந்தாளியாக இருந்தார். வழியில் விஜயவாடாவில் பல பக்தர்கள் சுவாமிஜீயை தரிசித்து விபூதி பெற்றுக்கொண்டார்கள். 28ம் தேதி காலையில் செக்கந்தராபாத் ஸ்டேஷனில் ஸ்ரீ ஜீ. வி. ஆர். நாயுடு, ஸ்ரீ பி. வேங்கடேச்வரலு முதலியோர் சுவாமிஜீக்கு வரவேற்பு அளித்தார்கள். அன்று மாலை ஹைதர்ாபாத் பிரதாப கிர்ஜி கோட்டியில் சுவாமிஜீ சாயி பாபா பூஜை செய்து பக்தர்களுக்கு விபூதியும் பிரசாதமும் கொடுத்தார். அதே இடத்தில் நடந்த பொதுக் கூட்டத்தில் சுவாமிஜீ இரண்டு மணி நேரம் பாபாவைப்பற்றி உபந்நியாசம் செய்தார். கூட்டத்துக்கு உள்துறை மந்திரி ஸ்ரீ ஆலப்பாட்டி வெங்கட்ராமையா தலைமை வகித்தார். ஸ்ரீ பிச்சி ரெட்டி, ஸ்ரீ விஜயரங்கம் மற்றும் பல அதிகாரிகளும் பிரமுகர்களும் வந்திருந்தார்கள். மகிழ்ச்சி ஆரவாரத்துக்கிடையே சுவாமிஜீ பாபா சேவா சமாஜத்தைத் துவங்கி வைத்தார்.

30ம் தேதியன்று ஸ்ரீ ஜானகிதாஸ் நிர்வகிக்கும் சாயி மந்திரை தரிசித்துப் பக்தர்களுக்குத் தீர்த்தப் பிரசாதங்கள் கொடுத்தார்.

அன்று சாயந்திரம் ஸ்ரீ பைடி லக்ஷ்மையா (அறநிலையத் துறை கமிஷனர்) வின் தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது. பாபாவின் மகிமையைப்பற்றி சுவாமிஜீ இரண்டுமணி நேரம் பேசினார். பிறகு அங்கிருந்த எல்லோருக்கும் சுவாமிஜீ பாபாவின் விபூதியைக் கொடுத்தார்.

ஜூலை முதல் தேதியன்று முதல் மந்திரியான ஸ்ரீ நீலம் சஞ்சீவ செட்டியின் அழைப்புக்கு இணங்கி அவருடைய வீட்டுக்குச் சென்றார். அங்கே அவருடைய குடும்பத்தாருக்கு விபூதி கொடுத்து அவர்கள் எல்லோரையும் ஆசீர்வதித்தார். ஸ்ரீ சஞ்சீவ ரெட்டி சுவாமிஜீக்கு வேஷ்டிகள் கொடுத்து மரியாதை செய்தார். அன்று மாலை செக்கந்தராபாத் ஜம்ஷெட் ஹாலில் விவசாய மந்திரி ஸ்ரீ ஏ. பலராமி ரெட்டியின் தலைமையில் கூட்டம் நடந்தது. கைத்தொழில் இலாகா காரியதரிசி ஸ்ரீ ஐ. ஜே. நாயுடு, ஐ.ஏ.எஸ்., ஸ்ரீ பைடி லக்ஷ்மையா, ஸ்ரீ எம். எஸ். கோடேச்வரன், ஸ்ரீ சிஷ்டா அப்பாராவ் முதலியோர் பேசினார்கள். பக்தர்கள் சமர்ப்பித்த பொன்னாடையை மந்திரி ஸ்ரீ பலராமிரெட்டி சுவாமிஜீக்குப் போர்த்தினார். மாபெரும்

கூட்டத்துக்குப் பிறகு ஸ்ரீ ஜீ. வி. ஆர். நாயுடுவின் வீட்டில் பூசை செய்து பக்தர்களுக்குத் தீர்த்தப் பிரசாதங்கள் கொடுத்தார். 1000 பேருக்குமேல் பக்தர்கள் வந்திருந்தார்கள்.

இரண்டாம் தேதியன்று ஸ்ரீடைபடி லக்ஷ்மையாவின் வீட்டிலும் ஸ்ரீ பீச்சி ரெட்டி (பப்ளிக் சர்வீஸ் கமிஷன் மெம்பர்) யின் வீட்டிலும் பூசை செய்தார். சுவாமிஜீ நடத்திய நிகழ்ச்சிகளால் இரட்டை நகரங்களான ஹைதராபாத்திலும் செகந்தராபாத்திலும் தீவிர ஆத்மீக கிளர்ச்சி ஏற்பட்டு பாபாவிடம் பக்தி சிரத்தைகள் அதிகரித்தன.

## சீராலா பயணம்

ஜூலை 28ம் தேதியன்று சீராலா சீர்திருத்த சங்கத்தாரின் அழைப்பின்பேரில் சுவாமிஜீ அங்கே சென்றார். ஸ்ரீ ஆர். தேவேந்திர நாதம், ஸ்ரீ சத்திய நாராயண குப்தா மற்றும் பல பிரமுகர்கள் எல்லோரும் சுவாமிஜீயை வரவேற்றார்கள். ஸ்ரீ தேவேந்திர நாத்தின் வீட்டில் காலை 9 மணியிலிருந்து நடுப்பகல் 1 மணி வரையில் சாயி பூசை செய்து சுவாமிஜீ பக்தர்களுக்குத் தீர்த்தப் பிரசாதங்கள் கொடுத்தார். மாலையில் உள்ளூர்க் காலேஜ் பிரின்ஸிபாலின் தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் பக்தர்களுக்கு ஆபத்து ஏற்பட்ட காலங்களில் பாபா எப்படி எவ்வாறு உதவினார் என்பதை சுவாமிஜீ விவரித்தார். 30ம் தேதியன்று சுவாமிஜீ ரோட்டரி கிளப்பில் பக்தியைப்பற்றி பேசினார். பக்தர்களைத் திருத்தி அவர்களிடம் பகவத் பக்தியை எப்படி பாபா தூண்டினார் என்பதை சுவாமிஜீ சொன்னார். பாபாவை பிரார்த்தனை செய்வது மிகவும் சுலபம் என்றும் எல்லோரும் பாபாவின் கிருபையைப் பெறமுடியும் என்றும் சுவாமிஜீ சொன்னார். சுவாமிஜீயின் பிரசங்கம் மிக ஊக்கத்தைத் தருவதாக இருந்ததென்று தலைவர் பாராட்டினார்.

ஆகஸ்டு மாதம் முதல் தேதியன்று ஸ்ரீ சி. சத்தியநாராயண குப்தா ஆகியோருடைய வீட்டில் சுவாமிஜீ சாயி பூசை செய்தார். ஈபுருபாலம் சென்று அங்கே சாயி பக்தர்களைச் சந்தித்து, பாபாவின் பக்தியைப்பற்றி பேசினார்.

நான் இதுவரையில் சொன்னவற்றுள் எல்லா நிகழ்ச்சிகளும் அடங்கிவிட்டன என்று சொல்லிவிட முடியாது. சுவாவமிஜீ இன்னும் பல பகுதிகளுக்குச் சென்றிருக்கலாம். மேலே குறிப்பிட்ட இடங்களுக்கே திரும்பத் திரும்பச் சென்றிருக்கலாம். நான் எனக்குக் கிடைத்த செய்திகளை மட்டும்தான் எழுதினேன்.

சுவாமிஜீ பக்தி சம்பந்தமான நிகழ்ச்சிகள் மட்டிலுமேயன்றி லௌகீக விவகாரங்களையும் மிகச் சிரத்தையுடன் நிர்வகிப்பார்.

கோயம்பத்தூரில் நடைபெற்ற 9வது அகில இந்திய ஸ்ரீ சாயி பக்தர்களின் கூட்டத்தின்போது வரவேற்புக் கமிட்டித் தலைவரான ராவ் சாகேப் ஸ்ரீ டி. டி. ரத்தின சபாபதி பிள்ளை அவர்களுடைய பேச்சின் ஒரு பகுதி பின்வருமாறு:

"கோயம்பத்தூரில் சாயி பக்தி வளர்ந்ததற்குக் காரணம் என்ன என்று பார்க்கும்போது முக்கியமாக சுவாமிஜீயின் சேவையைப் பற்றிச் சொல்லாமல் இருக்க முடியாது. 1945ல் ஸ்ரீகேசவய்யாஜீ இங்கே வந்தார். அப்போது கோயம்பத்தூர்ப் பிரமுகர்கள் பலர் அவரை அழைத்துத் தங்கள் தங்கள் வீட்டில் பூசை செய்யச் சொன்ஞர்கள். அப்போது அவர் செய்த பூசைகளும், பிரசங்கங்களும் மிக்க உற்சாகத்தையும் ஊக்கத்தையும் ஊட்டுவனவாக இருந்தன. அவர் 1945ம் ஆண்டில் இங்கே வந்தது சாயி இயக்கமும் கோயிலும் பிரபலமடைய பெரிய தூண்டுதலாக இருந்தது என்பதை யாரும் மறுக்க முடியாது. சாயி பாபா இயக்கத்தைப் பரப்ப, பக்தியோடு இடைவிடாமல் உழைக்கும் இப்பெரிய சுவாமிஜீக்கு பாபாவின் பக்தர்கள் எல்லோரும் நன்றிக்கடன் பட்டவர்கள் ஆவார்கள். சென்னையில் இது விஷயமாக இவர் செய்துவரும் சேவை எல்லோருக்கும் நன்ருகத் தெரியும். அதைப்பற்றி நான் சொல்லவேண்டிய அவசியம் இல்லை. முதல்நாள் கூட்டத்துக்குத் தலைமை வகிக்க அவர் இங்கே இருப்பது நம் அதிர்ஷ்டமேயாகும்.

வரவேற்புக் கமிட்டியின் சார்பிலும் என் சார்பிலும் இக்கூட்டத்திற்குத் தலைமை வகிக்கும்படி சுவாமி கேசவய்யாஜீயை நான் வேண்டிக்கொள்கிறேன்.

கோயம்பத்தூரில் 1963ம் ஆண்டு மே மாதம் 25, 26 தேதிகளில் நடைபெற்ற 9வது அகில இந்திய சாயி சமாஜ பக்தர்கள் சம்மேளனத்தின்போது ஸ்ரீ கேசவய்யாஜி வழங்கிய தலைமை உரையின் சில பகுதிகள்:

சகோதர சகோதரி பக்தர்களே! நண்பர்களே!

கைத்தொழில் பிரசித்திப் பெற்றதும் இந்தியாவின் லங்காஷையர் என்று புகழப்படுவதுமான கோயம்பத்தூரில் நாம் சந்திப்பது இது இரண்டாவது முறை. 1947ல் இரண்டாம் சம்மேளனத்தின் போது முதல் முறையாக நாம் சந்தித்தோம். இந்தியாவின் கைத்தொழில் வளர்ச்சிக்கும், வியாபார வளர்ச்சிக்கும் எடுத்துக்காட்

டாக இந்த நேரம் இருக்கிறது. எட்டு ஆண்டுகளுக்குப் பிறகு நமது நாடு ஆபத்துக்கு உள்ளாகி இருக்கும் இச்சமயத்தில் இச்சம்மேளனம் ஏற்பாடானது ஒரு நல்ல சகுனம். என்னுடைய காரியங்களில் எல்லாம் பாபாவின் தூண்டுதலையும் தவறாமல் நான் கண்டு அனுபவித்து வருகிறேன். என்னைத் தலைமை வகிக்கும்படி கேட்டபோது மிகத் தாழ்ந்த கருவியாக என்னை இச்சேவைக்கு ஆளாக்கிய பாபாவின் கருணையை நினைத்து நன்றியோடு இதை ஏற்றுக்கொண்டேன். அவரை முழுவதும் நம்பி இதை நான் ஏற்றுக்கொண்டேன். இச்சம்மேளனம் வெற்றிகரமாக முடிய அவர் அருள் புரிவார் என்று நம்புகிறேன். நமது அமைப்பிலும் சேவையிலும் புகுந்துள்ள குறைகள் நீங்கிவிடும் என்பதும் என் நம்பிக்கை.

சமயந்தான் இந்தியாவின் ஜீவன்! அதன் இயங்கு சக்திகளும், கொள்கைகளும், உபதேசங்களும் மட்டும் சமயம் அல்ல; அவற்றைப் பின்பற்றி வெற்றி கண்டு அனுபவமாக்குவதுதான் சமயம். உலகில் காணும் சமய உண்மைகளை எல்லாம் ஒன்றாக அணைத்துக்கொள்ளும் சமரச வழிதான் பாபா காட்டியது. பாபா செய்த இச்சேவையால் தத்தார் அவருக்குச் சீடரானார். அவர் இன்று நம்மிடையே இல்லை. அவரை இழந்தது ஈடு செய்ய முடியாத பெரிய நஷ்டமாகும். ஆனால் யாரும் சாவுக்கு பயப்படக் கூடாது, சாவு என்பது ஆத்மாவுக்கு ஏற்படும் ஒரு மாறுதல்தான். ஆத்மாவின் சுற்றளவுக்கு எல்லை இல்லை. உடல்தான் அவ்வட்டத்தின் மையம். ஒருவர் ஓர் உடலைவிட்டு இன்னொரு உடலை ஏற்கும்போது மையம் மாறுகிறது; அவ்வளவுதான். எனவே, சகோதர சகோதரிகளே, நம்மிடையே தத்தார் இருப்பதை நாம் உணருகிறோம். அவருடைய ஆத்மாவுக்கு நாம் வணக்கம் செலுத்துவோமாக. நாட்டுக்கும், சமயத்துக்கும், சாயிக்கும், அவர் செய்த சேவையைப் பாராட்டுவோமாக.

என் பேச்சை முடிப்பதற்குமுன் இங்கே கூடியிருக்கும் பக்தர்களுக்கு பாபாவின் வாழ்க்கை சம்பந்தமான அடிப்படைத் தத்துவத்தைப்பற்றி நினைவூட்ட விரும்புகிறேன். பாபாவின் கொள்கை என்னவென்று மக்கள் அடிக்கடி கேட்கிறார்கள். பசியைப் போக்கிக் கொள்ள உணவு கிடைக்காத மக்கள் ஆத்மீக பயிற்சி செய்ய முடியாது என்பதை பாபா உணர்ந்தார். போக நிறைவை ஓரளவுக் கூட பெற முடியாத ஒரு நாட்டு மக்களிடையே துறவு எவ்வாறு ஏற்படும்? எனவே உண்ணத் தேவையான சோற்றையும், அனுபவிக்கத் தேவையான போகங்களையும் மக்களுக்கு முதலில் கிடைக்

கச் செய்த பிறகுதான் பாபா ஆத்மீக போதனைக்கு அவர்களைத் தகுதியுள்ளவர்கள் ஆக்கினார். "மக்கள் விரும்புவதை எல்லாம் அவர்களுக்கு நான் கொடுக்கிறேன். பிறகுதான் அவர்கள் நான் கொடுப்பதை வாங்கும் தகுதி பெறுவது சாத்தியமாகிறது" என்று பாபா சொன்னார். இதோடு குருவுக்கும் சீடனுக்கும் இடையே இருக்கவேண்டிய உறவு பற்றிய அவர் கொள்கையும், உபதேசம் கொடுக்கும் அவர் முறையும், அவர் தோற்றுவித்த தனிமுறைகள் என்று சொல்லலாம். ராதாபாய் தேஷ்முக் பாபாவிடம் தம்மை சிஷ்யையாக ஏற்று உபதேசம் தரும்படி வேண்டிக் கொண்டபோது பாபா தம் குருவைப் பற்றியும், அவர் தமக்கு உபதேசம் செய்த முறையைப் பற்றியும் கேட்போர் மனம் உருகும்படி சொன்னார். அவருடைய குரு உபதேசத்துக்கு இரண்டு பைசா தட்சிணை கேட்டார். ஒன்று உறுதியான நம்பிக்கை; இரண்டு விடா முயற்சி. பன்னிரண்டு ஆண்டுகாலம் பாபா தம் குருவுக்கு பணிவிடை செய்தார். அவருடைய குரு அன்பு நிறைந்தவர்; அன்பின் அவதாரம். இரவும் பகலும் பசி தாகங்களை மறந்து பாபா தம் குருவை உற்றுப் பார்த்தபடியே இருப்பார். பாபாவின் கண்கள் குருவைவிட்டு அகல்வதே இல்லை. அவருடைய குரு எப்பொழுதும் ஆழ்ந்த தியானத்தில் இருப்பார். எந்த மந்திரமும் அவர் வாயிலிருந்து வெளி வராது. பாபாவுக்கு குருவிடம் உறுதியான நம்பிக்கை இருந்தது. அவரையன்றி வேறு புகலிடம் பாபாவுக்கு இல்லை. பொறுமையோடு காத்திருந்த அவர் மனமார குரு சேவை செய்துவந்தார். உறுதியான நம்பிக்கையோடு குருவின் உபதேசத்துக்காக காத்திருக்கும் பண்பு பக்தனுக்கு அவசியம். குருவின் அருளையடைய விரும்பும் சிஷ்யனுக்கு முக்கியமான இரண்டு குணங்கள் உறுதியான நம்பிக்கையும், சலிக்காத பொறுமையும் என்று பாபா சொல்வார். பாபாவுக்கு அவர் குரு மந்த்ரோபதேசம் எதுவும் செய்யவில்லை. அவருடைய கருணைப் பார்வைதான் எல்லாம். தாய் ஆமை அன்போடு தன் குட்டிகளைப் பார்ப்பதுபோன்றது அது.

இதுபோன்ற குருவின் கடாக்ஷம்தான் பாபா பெற்ற உபதேசம். பாபாவும் அப்படியே தம் பக்தர்களைத் தம் கடாக்ஷத்தால் மட்டுமே ஆட்கொண்டார். இன்றும் அவர் உருவப் படத்துக்கு முன் உறுதியான நம்பிக்கையோடும், ஆழ்ந்த பக்தியோடும் நாம் அமர்ந்து வேண்டினால் அவர் தம் கடாக்ஷத்தால் ஆசீர்வதிக்கிறார். குருநாதன் சூத்ரதாரி என்று சிஷ்யன் திடமாக நம்ப வேண்டும். தன் குருவின் பெருமையை உள்ளபடி அறிந்து அவரே ஹரி, ஹரன், பரப்பிரம்மம், திரிமூர்த்திஸ்வரூபம் என்ற உறுதி எந்த சிஷ்யனுக்கு ஏற்படுகிறதோ அவன் பாக்கியவான்.

## சாயி பாபாவின் லீலைகள்

நெல்லூர் சாயி பாபா பக்த மண்டலியின் வெள்ளி விழாக் கூட்டத்தில் கலந்துகொள்ள சுவாமிஜி நெல்லூருக்குப் போயிருந் தார். அப்போது அவர் பேசிய பேச்சின் சில பகுதிகள் இவை:

சாயி பாபாவின் பிறப்பையோ, வயதையோபற்றி யாருக்கும் எதுவும் தெரியாது. நாமதேவரும், கபீரும் சாதாரண மக்கள் பிறந்ததுபோல் பிறக்கவில்லை. ஸீரடியில் ஒரு வேப்பமரத்தின் அடி யில் பதினாறு வயதுப் பாலகனாக சாயி பாபா தோன்றினார். அவர் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் ஓர் அவதாரம்தான். தூய மனத்தோடும் பக்தியோடும் சாயிபாபாவை ஒரு தடவை நினைத்தால் போதும். அவர் உங்கள் பக்கத்தில் இருப்பார். உங்கள் பாரத்தை எல்லாம் அவர் மேலே போட்டுவிட்டால் அவர் உங்களைக் காப்பார். மற்ற அவதாரங்களை அலட்சியம் செய்ய வேண்டும் என்பது இதன் பொருள் அன்று. அவர் அப்படி உபதேசம் செய்யவே இல்லை. உங்களுக்குப் பிடித்தமான எந்த வழியிலும் அவரைத் தொழலாம். கடவுளை ராமன் என்றோ, ஹரி என்றோ, ஹரன் என்றோ, கிறிஸ்து என்றோ, ரஹீம் என்றோ எப்படி நினைத்தாலும் அதில் ஏதும் தவறு

கடவுளுடைய லீலைகளைப் புரிந்து கொள்ளுவது கஷ்டம். சாயி பாபா ஜால வித்தைக்காரர் அல்ல. தம்மைச் சரண் அடையும் பக்தர்களைக் காப்பாற்றுவதாக அவர் கொடுத்த வாக்குறுதி ஸ்ரீ கிருஷ்ணன் கொடுத்த வாக்குறுதியைப் போன்றது. ஸீரடி வியா பாரிகள் விளக்குக்கு எண்ணெய் கொடுக்க மறுத்தபோது துவாரகா மாயியில் இருந்த விளக்குகளில் பாபா தண்ணீரைவிட்டு எரிய வைத்தார். அதைக் கண்ட அந்த ஊர் மக்களுக்கு அவரிடம் கவர்ச்சி ஏற்பட்டது. முதன் முதலாக பாபா செய்த வைத்தியம் சில பச்சிலைகளைக் கொடுத்து வியாதிகளைப் போக்கியதுதான். யோகத்தைப் பற்றிய எல்லா விஷயங்களும் பாபாவுக்குத் தெரியும். மனித உருவில் இருந்தாலும் அவருடைய செயல்கள் எல்லாம் தெய்வீகமாகவே இருந்தன. தன்னலத்தைப்பற்றி அவர் கருதி யதே இல்லை. தம்மை அளவில்லாத கஷ்டங்களுக்கு உட்படுத்திக் கொண்டும் அவர் மற்றவர்களுடைய க்ஷேமத்துக்காகவே உழைத் தார்.

ஒருநாள் பாபா தம் கையை எரியும் ஹோம குண்டத்தில் நுழைத்தார். கை எரிந்துவிட்டது. பக்தர்கள் கையைப் பிடித்து வெளியே இழுத்து, ''தேவா, எதற்காக இப்படிச் செய்தீர்கள் என்று

கேட்டார்கள். ''ஏதோ ஓர் ஊரில் ஒரு கருமானின் மனைவி உலைக் குத் துருத்தியை ஓட்டிக்கொண்டிருந்தாள். அவள் புருஷன் அவளைக் கூப்பிட்டான். மடியிலிருக்கும் குழந்தையை மறந்து அவள் எழுந்து வேகமாக ஓடினாள். குழந்தை உலைக்குள் விழுந்துவிட்டது. நான் என் கையை ஹோம குண்டத்தில் விட்டு குழந்தையைக் காப்பாற்றி னேன். குழந்தையின் உயிரைக் காத்ததற்காக சந்தோஷப்படு கிறேன்'' என்றார் பாபா.

ஸ்ரீ ஜி. எஸ். காப்பார்டே என்ற பிரசித்தி பெற்ற பாரிஸ்டரின் மனைவி ஒருமுறை பாபாவிடம் போய், நடுங்கும் குரலில் தன் மக னுக்குப் 'பிளேக்' வந்திருப்பதாகச் சொன்னார். பாபா அவளிடம் அன்பாகப் பேசினார். ''ஆகாயத்தை மேகம் மூடியிருக்கிறது. ஆனால் விரைவில் அவை விலகி அமைதி ஏற்படும்'' என்றார். அப்படிச் சொல்லிக்கொண்டே, அவர் தமது அங்கியை இடுப்பளவுக்குத் தூக்கி அங்கே இருந்தவர்களுக்கெல்லாம் தன் இடுப்பிலிருந்த நான்கு 'பிளேக்' கட்டிகளைக் காண்பித்தார். ''என் பக்தர்களுக் காக நான் கஷ்டப்பட வேண்டி இருக்கிறது. அவர்களுடைய கஷ் டத்தை நான் ஏற்றுக்கொள்கிறேன்'' என்று சொன்னார்.

அவருடைய ஒரு பார்வையால் பிச்சைக்காரன் அரசன் ஆகி விடுவான். ஆனால் அவர் தம் உணவுக்காக தினந்தோறும் சீரடியில் வீடு வீடாகப் பிச்சை எடுத்தார். மசூதியின் விட்டங்களிலிருந்து கந்தைக் கிழிசலால் கட்டித் தொங்கிய ஊஞ்சல் போன்ற ஒரு பலகைதான் அவர் படுக்கை. அப்பலகையின் இரண்டு ஓரங்களி லும் எப்பொழுதும் அகல் விளக்குகள் எரிந்துகொண்டிருக்கும். அக்கந்தல் துணிகளால் பலகையையே தாங்க முடியாது. பாபா வின் கனத்தை அவை எப்படித் தாங்கினவோ! அவருடைய சித்தி களுக்கு இதுவும் ஒரு சாட்சி.

ஒருமுறை எம். டபிள்யூ. பிரதான் என்ற பக்தர் ஒருவர் சீரடிக்கு வந்திருந்தார். அவர் பம்பாய் நீதி மன்றத்துக்கு ஒருநாள் போக வேண்டியிருந்தது. அன்று மழை கொட்டியபடியால் ஸ்டேஷனுக் குப் போய் ரயிலைப் பிடிப்பது கஷ்டம் என்று தோன்றியது. அவர் பாபாவை வேண்டிக்கொண்டார். பகவத் கீதை ஒன்பதாம் அத்தி யாயத்தில் 19வது சுலோகத்தில் சொல்லியபடி மழையை பெய்விப் பதும் நிறுத்துவதும் கடவுளால்தான் முடியும். பக்தர்களிடம் அன்பு மிகுந்த பாபா, எழுந்திருந்து மசூதியின் கதவருகே நின்றுகொண்டு இடிபோன்ற உரத்தக் குரலில் மழையைப் பார்த்து, ''மழையே நில், நில்! உன் கோபத்தை அடக்கிக்கொள்: அமைதியாக இரு'' என்று கட்டளை இட்டார். மழை குறைந்தது; அந்த பக்தர் ஸ்டேஷனுக்

குப் போய் ரயிலைப் பிடித்து, பம்பாய் நீதி மன்றத்தை அடைந்து தம் வழக்கையும் ஜெயித்துவிட்டார்.

பக்தர்களிடம் தரும புத்தியை உண்டாக்கவும் அவர்களுடைய பணப் பற்றைப் போக்கி சித்த சுத்தியை உண்டாக்க வேண்டியும் பாபா அவர்களிடமிருந்து தட்சிணை வாங்குவார். ஆனால், தாம் வாங்குவதைப்போல நூறு மடங்கு கொடுக்கவேண்டி நேரும் என்று பாபா சொல்லுவார். ஒவ்வொரு நாளும் பாபாவிடம் தட்சிணைப் பணம் நிறையச் சேரும். ஆனால் அன்றைக்கு எல்லாப் பணத்தையும் அவர் ஏழைகளுக்குக் கொடுத்துவிட்டு மறுநாள் காலையில் அவர் ஏழைப் பக்கிரியாகிவிடுவார்.

டாக்டர் பிள்ளை என்பவர் பாபாவிடம் பக்திகொண்ட நெருங்கிய நண்பர். அவர் வயிற்றில் கட்டி ஏற்பட்டு மிகத் துன்புற்றார். வயிற்றில் ஏற்பட்ட புண்ணால் வலி தாங்க முடியவில்லை. தீட்சித் என்ற வக்கீல் மூலம் பாபாவுக்கு இப்படிச் சொல்லி அனுப்பினார். "வலிதாங்க முடியவில்லை. மிகமிகக் கடுமையாக இருக்கிறது. வலியை இப்போது நிறுத்தி இக்கருமப் பயனைப் பத்து ஜன்மங்களில் அனுபவிக்கும்படி செய்ய வேண்டும்." பாபா தீட்சித்திடம் இப்படி பதில் சொல்லி அனுப்பினார். "அவரை பயப்படாமல் இருக்கச் சொல்லுங்கள். பத்தே நாட்களில் அவர் தம் கரும வினையை அனுபவித்துத் தீர்த்துவிடலாம். அவரை யாராவது இங்கே முதுகில் தூக்கிக்கொண்டு வரட்டும்."

டாக்டர் பிள்ளையை அப்படியே மசூதிக்குக் கொண்டு வந்தார்கள். அவரைப் பார்த்து பாபா இப்படிச் சொன்னார். "இப்பொழுது ஒரு காக்கை வந்து அப்புண்ணைக் கொத்தும். பிறகு எல்லாம் சரியாகிவிடும்". சிறிது நேரத்துக்குப் பிறகு மசூதியில் வேலை செய்துகொண்டிருந்த அப்துல் என்ற பக்தன் அங்கே வந்தான். தற்செயலாக அவன் தனது காலை அப்புண்ணின்மேல் வைத்து அழுத்திவிட்டான். புண் நசுங்கி புழுக்கள் எல்லாம் வெளியே வந்துவிட்டன. வலி தாங்க முடியாமல் டாக்டர் பிள்ளை உரக்க அலறிவிட்டார். பிறகு அவர் பாபாவைப் பார்த்து, "காக்கை எப்போது வரும்?" என்று கேட்டார். "அப்துல்தான் காக்கை போய் ஓய்வு எடுத்துக்கொள்ளுங்கள். சீக்கிரம் சரியாகிவிடும்" என்று பாபா சொன்னார். பாபா சொன்னபடியே பத்து நாட்களில் அந்த நோய் மருந்தோ, சிகிச்சையோ இல்லாமல் முற்றும் குணமாகிவிட்டது. மற்றொருவருடைய பிராப்த கருமத்தில் தலையிட்டு அதை அழிக்கும் சக்தியும் பாபாவுக்கு உண்டு என்பது இதனால் தெரிகிறது.

பச்சைக் குழந்தையான பிரகலாதன் பட்ட சித்திரவதை சொல்லி முடியாது. என்றாலும் அவன் பயப்படவும் இல்லை; சாக வும் இல்லை. பிரகலாதனுக்கு இச்சக்தி எப்படிக் கிடைத்தது? கட வுளிடம் அவனுக்கிருந்த நம்பிக்கையால்தான். "எவன் ஒருவனுக் குக் கடவுளிடம் உறுதியான நம்பிக்கை ஏற்படுகிறதோ அப்போதே அவனுக்கு எல்லாம் கிடைத்துவிட்டது" என்று பாபா அடிக்கடி சொல்லுவார். நம்பிக்கையைவிட உயர்ந்தது எதுவும் இல்லை. கட வுளின் அவதாரமான ஸ்ரீ ராமர் கடலைக் கடந்து இலங்கையை அடைய பாலம் கட்டவேண்டி இருந்தது. ஆனால் ராமரிடம் அளவில் லாத நம்பிக்கைக்கொண்ட ஹனுமாரோ கடலை ஒரே தாவில் தாண்டிவிட்டார். மீரா தனக்குக் கொடுத்த விஷத்தை ஒரே விழுங்கில் குடித்துவிட்டாள். ஹரியின் நாமஸ்மரணை செய்து கொண்டு, தன்னைத் துன்புறுத்துபவர்களை மன்னிக்கும்படி வேண் டியவண்ணம் ஹரிதாசர் சாட்டை அடிகளை ஏற்றுக்கொண்டார், உண்மை பக்தனிடம் அடக்கம் வேண்டும்; அவன் கடவுளை முற்றும் சரணாகதி அடைய வேண்டும்; அவரிடம் அவனுக்கு முழு நம்பிக்கை இருக்கவேண்டும். ராமநாமத்தில் உள்ள பக்தியாலும், கீதையைக் கையில் வைத்துக்கொண்டும் கடவுளிடமிருந்த பக்தியால் காந்தி அடிகள் நமக்கு சுதந்திரம் பெற்றுத் தந்தார்.

கடவுள் நாமஸ்மரணையின் சக்தியை சுவாமிஜி வற்புறுத்தினார். 'அது நம்மைப் பாவங்களிலிருந்தும் கெட்ட எண்ணங்களிலிருந்தும் காப்பாற்றுகிறது. சம்சார சாகரத்திலிருந்தும் விடுவிக்கிறது. இதைவிட சுலபமான சாதனை இல்லை. சித்த சுத்திக்கு இது மிக நல்ல மருந்து. இதற்கு ஆடம்பரமோ, ஆசாரமோ தேவை இல்லை. இது மிக எளியது. ஆனால் மிகவும் பலன் உள்ளது. இச்சாதனையை பழகும்படி பாபா ஷாமா என்ற ஒரு பக்தரிடம் சொன்னார். ஆனால் அவர் இதைத் தீவிரமாக மேற்கொள்ளவில்லை. எனவே பாபா விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் செய்யும்படி அவரை கட்டாயப் படுத்தினார்.

மாயையைப்பற்றிப் பேசிய சுவாமிஜி நாரதர் கதை ஒன்றைச் சொன்னார். ஒரு முறை கிருஷ்ண பரமாத்மா, தமக்கு வெகு தாக மாக இருப்பதாகச் சொல்லி குடிக்கத் தண்ணீர் கேட்டார். நார தர் தண்ணீரைத் தேடிச் சென்றார். கொஞ்ச நேரத்துக்குப் பிறகு ஒரு சிறு குளத்தைக் கண்டார். ஆனால் குளக் கரையில் ஓர் அழகிய பெண் உட்கார்ந்திருந்தாள். நாரதருக்கு அவளிடம் காதல் ஏற் பட்டது. அவள் சம்மதம் பெற்று அவளை நாரதர் மணந்தார். அவருக்கு அவளிடம் பல குழந்தைகள் பிறந்தன. தம் மோகம்

காரணமாக கிருஷ்ணன் தாகத்துக்கு தண்ணீர் கேட்டதையே நாரதர் மறந்துவிட்டார். நாரதர் வாழ்ந்த கிராமத்தை வெள்ளம் வந்து முழுக்கிவிட்டது. நாரதருடைய மனைவி மக்களை வெள்ளம் அடித்துக்கொண்டு போய்விட்டது. அப்போது கிருஷ்ண பரமாத்மா நாரதர்முன் தோன்றித் திரும்பவும் தமக்குத் தாகம் என்பதை நினைவூட்டினார். அப்போதுதான் நாரதருக்குத் தம் தவறு தெரிந்தது.

சுவாமிஜி இப்படிப் பல செய்திகள் மூலம் பாபாவின் லீலைகளைப் பற்றிச் சொன்னார். சாயி சத்சரித்திரம், தம் சொந்த அனுபவம் சென்னை ஷெனாய் நகர சாயி நிலைய பக்தர்களின் அனுபவம் இவற்றிலிருந்தெல்லாம் சொன்னார். இவை பாபாவின் மகிமையைக் காட்டுகின்றன. பாபாவின் உபதேசங்களைப் பின்பற்றும்படி அவர் பக்தர்களைக் கேட்டுக்கொண்டார். "பலனைக் கருதாமல் உண்மையையே பேசுங்கள். தருமம் செய்யுங்கள். முடிந்தமட்டும் பிறருக்கு உதவி செய்யுங்கள் யாரைப்பற்றியும் கெடுதல் நினைக்கவோ கேடு பேசவோ வேண்டாம். மற்றவர் க்ஷேமத்தைக் கண்டு பொறாமைப்பட வேண்டாம். சோம்பேறியாக வீண்பொழுது போக்க வேண்டாம். உதவிக்காக உங்களை நாடுபவர்களை அலட்சியம் செய்ய வேண்டாம். எப்பொழுதும் திருப்தியுடன் இருங்கள். எப்பொழுதும் கடவுளை நினையுங்கள்" என்பவை பாபாவின் உபதேசங்கள்.

உற்சாகமூட்டும் இரண்டு பிரசங்கங்களுக்குப் பிறகு சுவாமிஜி விபூதியும் பிரசாதமும் கொடுத்து, வந்திருந்த மூவாயிரத்துக்கு மேற்பட்ட பக்தர்களை ஆசீர்வதித்தார்.

## ஆபத்தில் உதவுபவர் சுவாமி கேசவய்யாஜி

## பல ஏகலைவர்களுக்கு துரோணாச்சாரியார்

நாம் இருட்டில் பிரயாணம் செய்யும்போது கையில் இருக்கும் 'டார்ச் லைட்'டிலிருந்து எவ்வளவோ பயனைப் பெறுவோம். நடக்கவேண்டிய வழியை அதனால் தெரிந்துகொள்ள முடியும். வழியில் ஏதாவது விஷப் பூச்சிகள் எதிர்ப்பட்டால் டார்ச் லைட்டின் ஒளியால் விலகிப் போவோம். அவ்வொளி சில தீய சக்திகளைத் தள்ளி நிற்கச் செய்துவிடுகிறது. நாம் போகும் வழி பயனற்றதா, பயனுள்ளதா? சரியானதா, தவறானதா? என்பதை அதன் உதவியால் அறிந்துகொள்ள முடியும். டார்ச்சிலிருந்து வரும் ஒளியால் காரிருளிலும் க்ஷேமமாக பிரயாணம் செய்து குறிப்பிட்ட இடத்

துக்குப்போய் சேருவோம். தேவைப்பட்டபோது மட்டும் டார்ச்சை உபயோகித்துக்கொண்டு, பிரயாணம் செய்தால் 'பாட்டரி'யின் சக்தி வெகு காலம் நீடித்திருக்கும். டார்ச் லைட் வெகு காலம் உபயோகப்படும்.

ஆத்மீக வாழ்வில் குருவின் பாத்திரத்தின் பயனும் இப்படிப் பட்டதுதான். குருவிடம் நம்பிக்கையுடன் குருவின்மேல் பரிபூர்ண விசுவாசம் வைத்தால் எளிதில் குறிப்பிட்ட இடத்தை அடைய முடியும். ஸ்ரீ சாயிபாபா கூட, குருவின் தேவையைப் பல சந்தர்ப் பங்களில் கூறியிருக்கிறார். மும்மூர்த்திகளுக்கு உள்ள சக்திகள் குரு வுக்கும் உண்டு. குரு நமக்கு நம்பிக்கையை ஊட்டுவார். பிறகு நமக்கு அசைவற்ற நிலையை அருளுவார். இவ்விரண்டையும் சரி யான முறையில் பயன்படுத்திக்கொண்டால் ஈசுவரனை அடைய லாம். இவற்றைத் தவறான முறையில் உபயோகித்தால் வீழ்ச்சி தப்பாது.

ஒருமுறை குருவைத் தேர்ந்தெடுத்தபின் அக்குருவைப்பற்றி யார் என்ன சொன்னாலும் அக்குருவை விடக் கூடாது. அடிக்கடி குருவை மாற்றுவதால் எவ்விதமான பயனும் இருக்காது. நோய் விரைவில் தீரவில்லை என்று வைத்தியர்களை மாற்றினால் என்ன பயன் ஏற்படும்? ஒவ்வொரு வைத்தியரும் சிகிச்சையை முதல்படியிலிருந்து தொடங்குவார். குருவை மாற்றுவதால் ஏற்படும் பயனும் இது தான். குரு நமக்கு டார்ச் லைட்டைப் போன்றவர். நம் நம்பிக்கை பாட்டரி போன்றது. பாட்டரியின் சக்தியைப் பொறுத்தே டார்ச் சின் ஒளியும் இருக்கும் அல்லவா? அதுபோலவே நமது நம்பிக் கைக்கேற்றபடி குருவினிடமிருந்து பயன் பெறுவோம்.

ஸ்ரீ சாயி பக்த சுவாமி கேசவய்யாஜீ, பாபாவிடம் பரிபூர்ண விசுவாசம் வைத்து உத்தேசித்த இடத்தை அடைந்த பக்தர். அவரை குருவாகக் கருதிய ஏகலைவர்கள் பலர் இருக்கிறார்கள். அவர் கள் எல்லோருக்கும் அவர் பல வகையில் உதவி செய்து வருகிறார். துன்பங்களிலிருந்து கரையேற அவர் பலருக்கு வழி காண்பித்திருக் கிறார். அவரால் நடுக் கடலில் இருந்தவர்கள் கரை சேர்ந்திருக் கிறார்கள். சுவாமிஜீயும் குருவின் முக்கியத்துவம்பற்றி பக்தர் களுக்கு விவரித்துச் சொல்லி இருக்கிறார். தனக்குப் பிடித்த குருவை அடைந்தபின் அவரிடம் எத்தனை குற்றம் குறை காணப்பட்டாலும் அக்குருவை விடக்கூடாதென்று ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்ஸர் சொல்லியதுபோலவே சுவாமிஜீயும் போதிப்பார். அது காரண மாகவே பலருக்கு அவர் முன்னிலையில் மன அமைதியும் ஆத்ம விசு வாசமும் ஏற்படுகின்றன.

ஓய்வெடுத்துக் கொள்ளுவதற்கென்று தற்சமயம் சுவாமிஜி பெங்களூருக்கு வந்திருக்கிறார். அப்படி இருந்தாலும் அவர் பக்தர்களுக்குத் தரிசனம் கொடுத்துக்கொண்டும் அவர்களுக்கு யோசனைகள் சொல்லிக்கொண்டும்தான் இருக்கிறார். குருமார்களுக்குப் பக்தர்களுடைய சேவையைச் செய்வதே ஓய்வுதானே! தினந்தோறும் காலையில் இரண்டு அல்லது மூன்று மணி நேரம் இச்சேவையில்தான் அவர் பொழுது போக்குகிறார். இன்னும் பதினைந்து நாட்கள் இங்கே தங்கியிருப்பார். அது பெங்களூர் வாசிகளுடைய அதிர்ஷ்டமாகும்.

—ஒரு நிருபர், ஆந்திரப் பிரபா, 3-6-'68

## அமைதிக்கும் சுகத்துக்கும் ஸ்ரீ பாபா காட்டிய வழி

## சுவாமி கேசவய்யாஜீயின் விளக்கம்

ஸ்ரீ பி.வி. நரசிம்ம சுவாமியின் இடைவிடாத உழைப்பு, சுவாமி கேசவய்யாஜீயின் தொடர்ந்த பூஜை இவற்றின் பயனாகத் தென்னாட்டில் ஸ்ரீ சாயி தத்துவப் பிரசாரம் விரிவாக நடந்திருக்கிறது. காலஞ்சென்ற ஸ்ரீ நரசிம்ம சுவாமி தென்னாட்டில் மட்டுமின்றி வடநாட்டிலும்கூட விசேஷ சுற்றுப்பிரயாணம் செய்தார். சுவாமி கேசவய்யாஜி சிறப்பாக ஆந்திரா, சென்னை, மைசூர் ராஜ்யங்களில் சுற்றுப் பிரயாணம் செய்து பல ஊர்களில் சாயி பாபா பூஜை செய்தார். சாயிபாபா தேர்ந்தெடுத்த முக்கிய பக்தராகப் பெயர் பெற்றார்.

சாயி பாபாவின் உபதேசங்களையும், முறைகளையும் நன்றாகப் புரிந்துகொண்டு பாபா வகுத்த வழியில் மிக அடக்கத்துடன் மக்கள் சேவை செய்து வருகிறார். கிட்டத்தட்ட முப்பது வருடங்களாக தற்காலத்துக்கு சாயி பாபா காட்டிய வழிதான் பின்பற்றத் தக்கது என்பது சுவாமிஜீயின் நம்பிக்கை. தம்மிடம் வரும் ஆயிரக் கணக்கான துன்புற்ற மக்களுக்கு சுவாமிஜீ இதைத்தான் விவரித்துச் சொல்லுவார்.

அவர் சென்ற வாரம் பெங்களூருக்கு வந்தார். H. M. T. காலனியிலுள்ள அவருடைய ஜாகையில் பக்தர்கள் பலர் சுவாமி கேசவய்யாஜியை தரிசித்தனர். அவர் பலருக்குக் கடைத்தேற வழி சொன்னார்; வழி காண்பித்தார். சாயி பாபாவைப்பற்றி சுவாமிஜீ பல விஷயங்கள் சொன்னார். திங்களன்று சுவாமிஜீயை சந்தித்த

போது தற்காலச் சமூக, பொருளாதார, ஆத்மீகப் பிரச்னைகளின் தீர்வுக்கு சாயி பாபாவின் போதனைகள் எப்படி உபயோகப்படுகின்றன என்பதைப்பற்றி ஒருமணி நேரம் விளக்கினார். அவர் சிலவற்றைப் பேசும்போது, சாயி பாபா சுவாமிஜீயிடம் ஆவேசித்திருக்கிறாரோ என்று தோன்றியது. சாயி பாபா தம் பக்தர்களுடன் கோஷ்டியாக இருப்பது போலவே ஸ்ரீ கேசவய்யாஜீ தம் சிஷ்யர்களுடன் பேசிக்கொண்டிருக்கிறார்.

"இந்தக் காலத்தில் மக்கள் குறைந்தபட்சத் தேவைக்கே இரவும் பகலும் பாடுபட்டு வேலை செய்ய வேண்டியிருக்க, பகவானைக் குறித்து சாவதானமாக தியானிக்கவோ, நெடு நேரம் பூசை செய்யவோ, நூல்களை பாராயணம் செய்யவோ அவகாசம் எங்கே இருக்கிறது" என்று சுவாமிஜி கேட்கிறார். அதனாலேயே சாயி பாபா தற்காலத்துக்கு நாமஸ்மரணையே போதுமென்றும் குறிப்பிட்ட ஒரு சமயத்தில் ஏதோ ஒரு பகவத் நாமாவை நினைந்துக் கரையேற வழி இருக்கிறதென்றும் பக்தர்களுக்கு எடுத்துச் சொன்னார் என்று ஸ்ரீ கேசவய்யாஜி சொன்னார். மத மாற்றத்தை பாபா கண்டித்தார். அந்தந்த மதத்தினர் தத்தம் மதத்தின் பழக்கங்களைப் பின்பற்றியே பகவானை அடைய முடியும் என்றும் கடவுளுடைய எல்லாப் பெயர்களும் ஒன்றுதான் என்றும் சாயி பாபா உபதேசித்ததாக சுவாமிஜி தெரிவித்தார். ஒரே பொருளுக்குப் பல்வேறு மொழிகளில் பல்வேறு பெயர்கள் இருப்பதுபோலவே பகவானுக்கும் பல பெயர்கள் இருப்பதாகவும் அந்த பகவானை எந்தப் பெயரால் நினைத்தாலும் பெறும் லாபம் ஒன்றுதானென்றும் சுவாமிஜி சொன்னார்.

அரை நூற்றாண்டுக்கு முன்பே சாயி பாபா ஹிந்து முஸ்லீம் ஒற்றுமையைப் போதிப்பதோடு அந்த ஒற்றுமையை எப்படி சாதிக்க வேண்டுமென்பதையும் கண்கூடாகக் காண்பித்தார். அவர் ஹிந்துவா, முஸ்லீமா என்ற பிரச்சினைக்குப் பதிலைப் பெற வேண்டுமென்று அவர் உயிருடன் இருக்கும்போதே பலர் முயன்றார்கள். சாயி பாபா அப்பிரச்னைக்கு பதில் சொல்லவில்லை; இடந்தரவில்லை. பாபாவிடம் ஹிந்துக்கள், முஸ்லீம்கள், பார்ஸிகள், கிறிஸ்தவர்கள் ஆகிய எல்லா மதத்தினரும் பல ஜாதியினரும் வருவார்கள் என்றும் இப்பொழுது சீரடிக்கு இவர்கள் எல்லோரும் வருகிறார்கள் என்றும் சுவாமிஜீ சொன்னார். சென்னையில் சுவாமிஜீயிடமும் குல, மத, ஜாதி பாகுபாடின்றி எல்லோரும் வருகிறார்கள். 'நீ யார்' என்று சுவாமிஜி யாரையும் கேட்கமாட்டார். "உனக்கு என்ன வேண்டும்?" என்றுதான் கேட்பார்.

சுவாமி கேசவய்யாஜீ தம் பூசைகளின் வாயிலாகவும் பக்தர்களின் கஷ்டங்களைப் போக்குவதின் மூலமாகவும் மக்களிடையில் பாபாவைப்பற்றிய நம்பிக்கையை ஏற்படுத்துவதோடு ஆத்மீக விஷயங்களிலும் ஆசையை உண்டாக்கினார். எவ்வளவு சிக்கலான விஷயங்களையும் அவர் நேராக மனதுள் பதியும்படியும் இதயத்துடன் ஒன்றிவிடும்படியும் சொல்லுகிறார். ஆனால் அவர் அதிகமாக நாட்டில் சுற்றுப்பயணம் செய்து பக்தியைப் பரப்புவதில்லை. அதற்குக் காரணம் கேட்டபோது, இக்காலத்தில் பாபாவின் பெயரைச் சொல்லிக்கொண்டு பலபேர் அலைந்துகொண்டிருக்கிறார்கள் என்றும் மக்கள் எளிதில் அவர்களிடம் ஏமாந்துவிடுகிறார்கள் என்றும் அதனால் சாயி தத்துவத்துக்கு மிக்க அபசாரம் நடக்கிறதென்றும் அவர் சொன்னார். மட்டரகமான பிரசாரத்தாலும் செயல்களாலும் மக்களிடை ஆஸ்திக மனப்பான்மை ஏற்படாது; பாபாவின் போதனைகளை அதிகமாகப் பிரசாரம் செய்யவேண்டிய அவசியம் இருக்காது என்றும் அவர் தெரிவித்தார்.

பெங்களூருக்கு சுவாமிஜி நன்றாக அறிமுகமானவர். இதற்குமுன் இங்கே பல பிரமுகர்களுடைய பல வீடுகளில் சாயி பாபா பூசை செய்திருக்கிறார். பலருக்கு வரப்போகும் உயர் பதவிகளைப்பற்றி வெகு காலத்திற்கு முன்னாலேயே தெரிவித்தார். இப்பொழுதும் வருங்காலத்தைப்பற்றி சொல்லுகிறார். அவர் பெங்களூரில் தங்கிய பத்து நாட்களிலும் பல பக்தர்கள் அவரை தரிசித்து கஷ்டங்களிலிருந்து விடுதலை பெற வழி தெரிந்துகொண்டனர். கஷ்டங்களிலிருந்து விரைவில் விடுபட அதிர்ஷ்டம் இல்லாதவர்களுக்கு அந்தக் கஷ்டங்களைத் தாங்கும் சக்தியையும், தைரியத்தையும், உறுதியையும் அவர் அருளினார். பிரசாரத்தைவிட இச்செயல் முறைதான் முக்கியம் என்பது சுவாமிஜீயின் அபிப்பிராயம்.

—நிருபர், ஆந்திரப்பிரபா 1968 ஜனவரி 4

## முதல் சுதந்திர தினக் கொண்டாட்டம்

1947ம் ஆண்டு ஆகஸ்டு 14, 15 இரவு பாரத நாடு சுதந்திரம் பெற்ற சந்தர்ப்பத்தில் சுவாமிஜி பெனுகொண்டாவில் விசேஷ பூசை செய்து பக்தர்களுக்குத் தீர்த்தப் பிரசாதங்கள் கொடுத்தார். அன்று வியாழக்கிழமையாக அமைந்துவிட்டதால் சாயி பாபாவின் பக்தர்களுடைய மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. சுவாமிஜி அன்றிரவு விசேஷ பூசை செய்தார். பாபாவின் ஆசியை வேண்டினார். இரவு 11-30 மணிவரையில் பஜனை நடந்தது. சப்கலெக்டர் ஸ்ரீ ஆர். பி.

நாயக்கும் ஜில்லா முன்சீப் ஸ்ரீ டி. எச். எம். சதாசிவையாவும் பூசைக்கு வந்திருந்தார்கள்.

பூசைக்குப்பின் ஸ்ரீ சதாசிவையா முகூர்த்தத்தின் முக்கியத் துவத்தைப்பற்றிப் பேசினார். இரவு 12-30 மணிக்கு சுவாமிஜி வீட்டு காம்பவுண்டில் தேசீயக் கொடியை ஏற்றினார்கள். பிறகு ஸ்ரீ ஆர். பி. நாயக் தேசீயக்கொடியின் சிறப்பைப்பற்றியும் சுதந்திர பாரதத்தில் நம் கடமையைப் பற்றியும் பேசினார்.

சுவாமிஜி பேசியபோது தற்சமயம் அதிகாரத்தை ஏற்றுக் கொண்டிருப்பது குடியரசு என்றும் தங்கள் குறைகளை வெளியிடு பவர்கள் முன்போல் வேலை நிறுத்தங்களும், ஒத்துழையாமையும் நடத்தக் கூடாதென்றும், எதையும் சட்டப்படிதான் செய்யவேண்டு மென்றும், அரசாங்கத்தைச் சங்கடத்தில் ஆழ்த்தக் கூடாதென்றும் யோசனை சொன்னார். பிறகு எல்லோருக்கும் தீர்த்தமும், பிரசாத மும் கொடுத்தார்.

## நாகசாயி கோயிலில் நாகம் பிரத்தியட்சமானது

1943ம் ஆண்டு ஜனவரி மாதம் 7ம் தேதி வியாழக்கிழமையன்று கோயம்பத்தூர் சாயி கோயிலில் வழக்கம்போல் பஜனைகள் நடந் தன. மாலை 5-30 மணி அளவில் சுமார் 4 அடி நீளமுள்ள பாம்பு ஒன்று கோயில் படிக்கு அருகே வந்தது பாம்பு ஒரு ஹரிஜன பக் தனின் கால்களின்மேல் ஊர்ந்து வந்ததை ஒரு பக்தர் பார்த்துவிட்டு 'பாம்பு, பாம்பு'! என்று கத்தினார்.

கோயிலில் ஆண்கள், பெண்கள், குழந்தைகள் எல்லோருமாக கிட்டத்தட்ட 400 பேர் கூடியிருந்தார்கள். பஜனை நடந்துகொண் டிருந்தது. பாம்பைப் பார்த்தவுடன் வாயிலுக்கு அருகே உட் கார்ந்திருந்த சிலர் எழுந்திருந்தார்கள். பாம்பு படம் விரித்து இப் படியும் அப்படியும் ஆடத் தொடங்கியது. யாரும் பயம்கொள்ள வில்லை. குழந்தைகளும் பெண்களும்கூட அருகிலேயே இருந்து பாம்பைப் பார்த்தார்கள். பாம்பு சுமார் பத்து நிமிடம் சாயி பாபாவின் படத்தின்முன் ஆடிவிட்டுத் தெற்குபுறமாகச் சென்று கூட்டத்துக்குப் பத்தடி தூரத்தில் தங்கி படத்தை அசைத்துக் கொண்டே இருந்தது. இரவு 9 மணிவரை பஜனை நடந்தது. பாம் பும் பஜனையைக் கேட்டுக்கொண்டு அப்படியே இருந்தது. இருள் சூழ்ந்த போதிலும் யாரும் பயப்பட்டு எழுந்து போகவில்லை.

இரவு 9 மணிக்கு எல்லோரும் எழுந்திருந்து பூஜைக்குப் பின் பிரசாதம் பெற்றுக்கொண்டு அவரவர் வீட்டுக்கு சென்றார்கள். ஆசிரமத்தில் இருப்பவர்களும் வேறுசிலரும் இரவு முழுவதும் பஜனை செய்துகொண்டே இருந்தார்கள். பாம்பு அன்றிரவெல்லாம் அப் படியே ஆசிரமத்தில் தங்கிவிட்டது.

8ம் தேதி வெள்ளிக்கிழமையன்று காலை ஸ்ரீ சி. வரதராஜையா (இந்த சாயி கோயிலைக் கட்டியவர்) வும் வேறு சிலரும் வந்து அஷ் டோத்ரம் சொல்லிப் பூஜை செய்தார்கள். தூக்கிய படத்தின்மேல் ஒரு கூடை பூவை சொரிந்தார்கள். பாம்பு ஒன்றும் செய்யவில்லை. அமைதியாக பூக்களை ஏற்றுக்கொண்டது. பிறகு 9 மணிக்கு கோயிலை பிரதக்ஷிணம் வந்து கோயில்அருகே சென்று தெற்கிலிருந்து வடக்கே போய் ஆடத் தொடங்கியது.

அங்கிருந்து மூன்று மைல் தூரத்தில் இருக்குப் போட்டோ எடுப்பவர் ஒருவருக்குச் செய்தி அனுப்பினார்கள். அவர் வந்து பாம்புக்கு 2 அடி தூரத்தில் நின்று போட்டோக்கள் எடுத்தார். போட்டோ எடுப்பதற்காக பாபாவின் படத்தைப் பாம்புக்கு அரு கில் வைத்தார்கள் பாபாவின் படமும், பாம்பும் படத்தில் அழ காக விழுந்திருக்கின்றன. பிறகு பாம்புக்கு அருகே பாலை வைத் தார்கள். பாம்பு பாலைக் குடித்தது. 11 மணிக்கு வடக்கு முக மாகச் சென்று மறைந்துவிட்டது. பாம்பு பொன்னிறமாக இருந் தது. படத்தில் சங்குசக்கர அடையாளம் இருந்தன.

வெள்ளியன்று காலை செய்தி ஊரெல்லாம் பரவி மக்கள் ஆயிரக் கணக்கில் வந்து பாம்பைத் தரிசித்தார்கள்.

சாயி மந்திருக்கு அருகிலோ அக்கம்பக்கத்திலோ எங்கும் பாம்பு புற்று இல்லை. ஆனால் இந்நிகழ்ச்சிக்குப் பிறகு ஒரு புற்றுத் தோன்றி இருக்கிறது. புற்றுக்கு மேலே ஒரு மண்டபத்தைக் கட்டி இருக் கிறார்கள்.

—சாயி சுதா 1943 ஜனவரி

சாயி பாபா இவ்வாறு பாம்பு உருவில் வருவது இது முதல் முறையல்ல. நெவாஸியில் பாலாஜி பட்டேல் என்னும் பாபா பக்தர் ஒருவர் இருந்தார். பாபாவின் அன்புக்கு மிகவும் பாத்திர மான அவருக்கு இரண்டு மனைவிகளும் குழந்தைகளும் இருந்தார் கள். அவர் அடிக்கடி சீரடிக்குச் சென்று பாபாவை தரிசிப்பது வழக்கம். அவர் சீரடிக்கு போனபோதெல்லாம் பாபா அவர்கள் வீட்டில் எல்லோருக்கும் துணிமணிகள் வாங்கித் தம் ஆசியுடன் கொடுப்பார். ஒருநாள் அவர் வீட்டுக்கு சீரடியிலிருந்து ரதபாட்டில்

என்பவர் வந்தார். அன்று மாலை மாட்டுக் கொட்டகையில் புஸ் என்று சீறிக்கொண்டு ஒரு பாம்பு வந்தது. மாடுகள் பயந்தன. வீட்டில் உள்ளவர்களும் பயப்பட்டார்கள். ஆனால் பாலாஜிமட்டும் சாயி சர்ப்ப ரூபத்தில் தம்வீட்டுக்கு வந்திருக்கிறார் என்று கருதினார். சிறிதும் பயப்படாமல் ஒரு கிண்ணத்தில் பாலைக் கொண்டுவந்து பாம்பின்முன் வைத்தார். "ஏன் இப்படி புஸ்புஸ் என்று சீறி சத்தம் போடுகிறாய்? பாபா! இப்படி எங்களை பயமுறுத்தலாம் என்று பார்க்கிறாயா? அமைதியாக இக்கிண்ணத்துப்பாலை ஏற்றுக்கொள்" என்று சொல்லி பாலாஜீ அப்பாம்பின் பக்கத்திலேயே தைரியமாக அமர்ந்தார். மற்ற எல்லோரும் பயந்து நடுங்கி செய்வதறியாமல் திகைத்து நின்றார்கள். சிறிது நேரத்தில் பாம்பு மறைந்துவிட்டது. போன சுவடே யாருக்கும் தெரியவில்லை. கொட்டகை முழுவதும் வலை போட்டு தேடியும் பாம்பு காணப்படவில்லை.

சாயி சத் சரிதை (ஆங்கிலம் பக்கம் 198)

## வரவேற்பு உரை

பெனுகொண்டாவைச் சார்ந்த ஸ்ரீ சாயி பக்த கேசவய்யாஜீ அவர்களுக்கு மதுரை மாநகரில் சர் P. T. ராஜன், பார்-அட்-லா, தலைமையில் 1946ம் ஆண்டு அக்டோபர் மாதம் 3ம் தேதி நடந்த பொதுக் கூட்டத்தில் வாசித்தளிக்கப்பட்ட வரவேற்புரை :

போற்றத்தக்க பேரன்புடையீர்,

எளிமையான சாயி பக்தர்களான நாங்கள் எங்கள் அழகிய புராதன நகராகிய மதுரைக்கு தங்களை வரவேற்பதில் மிக்க களிப்படைகிறோம். அதிலும், இப்புனித நந்நாளாகிய ஸ்ரீ சாயி பாபா மகா சமாதி விழாவில் தங்களை எங்களிடையே இருக்கப் பெற்றது எங்கள் பெரும் பேறு ஆகும்.

சீரடி மஹான், ஸ்ரீசாயிபாபா, கடவுள் ஒருவரே என்றும் இந்து, புத்த, ஜொராஸ்ட்ரிய, கிறிஸ்துவ, இஸ்லாம் மதங்களின் முக்கிய தத்துவங்களில் வித்தியாசம் ஒன்றுமில்லை என்றும், கடவுளை வழிபடும் விதத்தில்தான் பேதமிருக்கிறது என்றும் போதித்தார். மேலும் அம்மஹான் சண்டை சச்சரவுகளில் ஈடுபடும் நாடுகளுக்கு உலக மக்களிடை ஒற்றுமையும், சகோதர பாவமும் அன்பும்தான் உண்மையான நிலைத்த சுகத்தையும் அமைதியையும் நிலவச் செய்யும் என்று எடுத்துக் காட்டினார்.

சில வருடங்களாக தங்கள் மக்களிடையே சத்தியம், சகோதர உணர்ச்சி, அன்பு என்ற ஸ்ரீ பாபாவின் கொள்கைகளை உலக மக்

களுக்கு போதிப்பதிலும், பரப்புவதிலும் தளராத ஊக்கம் எடுத்துக் கொள்வதை மிக்க பெருமிதத்துடன் கண்டுகொண்டிருக்கிறோம். தாங்கள் ஸ்ரீ சாயி பாபா சேவையிலேயே இரவும் பகலும் தங்கள் உயிரையும் செயலையும் அர்ப்பணம் செய்கிறீர்களென்று சொன்னால் அது மிகையாகாது. நோய்வாய்ப்பட்டவருக்கு சிகிச்சை அளிப்பதிலும், இக்கட்டுகளில் சிக்கி துன்பக் கடலில் மூழ்கியவரை அத்துன்பங்களினின்று மீட்பதிலும், சாயி பூசை மகிமையினால் தவறுதல் இல்லாத எதிர்கால அறிகுறிகளை எச்சரிக்கைசெய்வதிலும், பாபாவின் தூய்மையான திருநீர் பிரசாதத்தினை மக்களை புனிதமாக்குவதிலும் தாங்கள் புரியும் திவ்ய சேவையானது எங்கள் மனத்தில் வியப்பையும் அன்பையும் பெருக்குவதுடன் பாபாவிடம் ஆழ்ந்த நம்பிக்கையையும் பக்தியையும் உருவாக்குகிறது.

நாங்கள் அனைவரும் தாங்கள் நிறை ஆயுளும், பக்தியும் நோய்த் தீமை அணுகாத திறமும், மெய்த் திடமும் பெற்று வாழ்வாங்கு வாழ பகவான் சாயிபாபாவை மனமாற இறைஞ்சுகின்றோம்.

பெருமித தங்கள் சேவையில்
எப்பொழுதும் ஈடுபடும்
எளிமையான பாபா பக்தர்கள்

மதுரை
3-10-1946

:o:

# நான்காம் பகுதி

## சுவாமிஜீயின் பேருரைகளும் கட்டுரைகளும்

### சுவாமிஜீயின் படைப்புகள்

சுவாமி கேசவய்யாஜி வியாழக்கிழமை பூசை மூலமாக மட்டும் பாபாவின் பக்திப் பிரசாரம் செய்தார் என்று சொல்லிவிட்டால் போதாது. ஓய்வு கிடைத்தபோதும், சந்தர்ப்பம் வாய்த்தபோதும் ஸ்ரீசாயிபாபாவைப் பற்றியும் ஆத்மீக விஷயங்களைப் பற்றியும் எழுதிக் கொண்டிருப்பார். சில கட்டுரைகள் கிடைத்தன. அவற்றை விஷயங்களுக்கேற்றபடி வரிசைப் படுத்தி இந்நூலில் சேர்த்திருக்கிறேன். இக்கட்டுரைகள் தவிர பாபா மகா சமாதி உற்சவ காலத்திலும் ஸ்ரீராமநவமி உற்சவ காலங்களிலும் அவர்விசேஷ உபதேசங்கள் செய்கிறார். அந்தப் பிரசங்கங்களுள் சிலவற்றை இப்பகுதியில் சேர்த்திருக்கிறேன். இவர் பாபாவைப் பற்றி எழுதிய இரண்டு கட்டுரைகளை முதலிலேயே சொல்லியிருக்கிறேன்.

### கடவுள் பிரார்த்தனை

தெய்வப் பிரார்த்தனை என்பது ஜீவாத்மா பரமாத்மாக்களின் ஐக்கியத்தின் சின்னம். சாஸ்வதமானதும் புனிதமானதுமாகிய விஷயங்களிடம் வைக்கும் ஆசையின் உருவமே பிரார்த்தனை. உன்னதமான பரிசுத்தமாக பாடுபடும் மனிதன் தன்னுடைய பலவீனத்தை அறிந்து பரமாத்மாவின் எதிரில் பச்சாத்தாபத்துடன் மன்னிப்புக் கோருவதற்கு உபயோகப் படுவதே பிரார்த்தனை. அதே சமயத்தில் பரமாத்மாவின் கையிலுள்ள கருவியாகி ஒவ்வொரு வேலையிலும் கடவுளே செய்விப்பவனாக இருப்பதை உணர்ந்து தன் செயலற்ற தன்மையை வெளியிடுவதே பிரார்த்தனை. மனிதர்களுடைய ஜீவ யாத்திரையில் மனிதன் தேர் என்றால் கடவுள் அதை ஓட்டுபவராக இருக்கிறார். சாரதி ரதத்தை எவ்வழியில் ஓட்டுகிறானோ அவ்வழியெல்லாம் ரதம் செல்லும். ஆனால் பொதுவாக பிரார்த்தனை என்பது உலக வாழ்க்கையில் வியாபார நிலைக்கு இறங்கிவிட்டது. மனிதனுடைய உலக வாழ்க்கைக்கு ஏற்பத் தங்களைப் பணக்காரர்

களாகச் செய்யவேண்டுமென்றும் வேலையில் உயர்வு வேண்டும் என்றும் கெஞ்சுவதற்கு உபயோகப்படுகிறது. அது மனிதனுடைய அஞ்ஞானத்தைக் காட்டுகிறதேயன்றிப் பிரார்த்தனையே ஆகாது.

உண்மையான பிரார்த்தனை எப்பொழுதும் உருவத்துடனோ உருவம் இல்லாமலோ கடவுள் இருக்கிறார் என்று பறையடிக்கிறது. நம்பிக்கைதான் ஆத்மீக வாழ்க்கைக்கு அடிப்படையானது. ஒவ்வொரு கணமும் சந்தேகத்துடனிருந்தால் பக்தி மார்க்கத்தால் எதையும் சாதிக்க முடியாது. நம்பிக்கை, பல கஷ்டங்களிலிருந்து நம்மைத் தப்பவைக்கிறது. நம்முடன் ஒத்தவர்களுக்கு உதவி செய்தால் நம் நம்பிக்கையை உறுதிப்படுத்தும். நம்மைப்போன்ற மனிதர்களுக்குச் சேவை செய்பவர்களுடைய இருதயத்தில் கடவுள் குடி இருப்பார். பிரார்த்தனையால் நிறைந்த இதயம் ஆத்மாவுக்கும் மனித சேவைக்கும் வாகனமாக எப்பொழுதும் பகவத் தியானத் நிலேயே லயித்திருக்கும்.

மனிதன் தன் உடல், உள்ளம், புத்தி, ஆத்மா ஆகியவற்றை முழுவதும் பகவானுக்கு அர்ப்பணமாக்குவதுதான் பிரார்த்தனை. உதடுகளை அசைத்து எதையாவது ஜபித்தமாத்திரத்தில் இதயம், புத்தி; ஆத்மா, இவைகள் கடவுளிடம் லயிக்காவிட்டால் அது பிரார்த்தனை ஆகாது. அது வெறும் நடிப்பே ஆகும். பிரார்த்தனை மனிதனைப் பரிசுத்தப்படுத்தும். நம்மில் உள்ள மமதை, கோபம், பேராசை போன்ற துர்க்குணங்களைத் தடுத்து, ஒருவரிடம் ஒருவர் பொறுமை காட்டுதலையும், நல்லக் கருத்தையும் உண்டாக்கும். சில சந்தர்ப்பங்களில் மனிதன் சந்தேகங்களுக்கும், ஏமாற்றங்களுக்கும், அஞ்ஞானத்துக்கும் இலக்காக வேண்டியிருக்கிறது, அப்பொழுது எல்லையற்ற பொறுமையையும், தைரியத்தையும் பழகிக்கொண்டு அவைகளை எதிர்க்க வேண்டியிருக்கிறது. கடவுளைப் பிரார்த்திக்கப் பழகியவர்களுக்கு புகழின்மையும் தோல்வியும் இருக்காது.

பக்தியுடனும், வணக்கத்துடனும் கடவுளை வேண்டுவதுதான் பிரார்த்தனை. இதயம், தன்னைப் படைத்த கடவுளிடம் ஐக்கியமாவதற்கு துணை செய்வது பிரார்ந்தனை. பிரார்த்தனை என்பது மானசீகச் செயலே தவிர, பேச்சுக்களின் வடிவமோ, கோர்வையோ அல்ல. விதவிதமான சாதனைகள் நம்மை உத்தமர்களாகச் செய்து கடவுளின் இச்சை இல்லாமல் எந்த வேலையும் நடக்காதென்றும் கடவுள் குயவனுல் நாம் அவருடைய கையிலுள்ள களிமண்ணைப் போன்றவர்கள் என்பதையும் விளக்கும். பிரார்த்தனைக் காலத்தின் அளவு தனி மனிதனுடைய ஆத்மீக சக்திக்கு ஏற்றவாறு மாறுபடும். பிரார்த்தனை அவரவர்களுடைய தாய்மொழியில் இருந்தாலும்

அதை உருப் போடுவதைவிட மௌனப் பிரார்த்தனையே பயனுள்ளதாகும். புனிதமான உள்ளத்திலிருந்து வெளியாகும் பிரார்த்தனைக்குப் பதில் கிடைத்தே தீரும்.

தினந்தோறும் காலைப் பிரார்த்தனை செய்துவிட்டுத் தினசரி வேலைகளில் ஈடுபடுவது சிறந்த வழி. அதனால் கடவுளின் அருள் நோக்கு மனிதனுடைய வாழ்க்கைக்கு அன்றுபூராவும் வழி காட்டியாக இருக்கும். அப்படியே இரவில் கடவுளைப் பிரார்த்தனை செய்வதனால் கெட்ட கனவுகளால் தூக்கம் கெடாமல் சுகமாகவும், அமைதியாகவும் பொழுது விடிந்துவிடும். பிரார்த்தனையின் வடிவம் ஆடம்பரம் அற்றதாகவும் கள்ளங் கபடமற்றதாகவும் இருந்து ஜீவாத்மா பரமாத்மாக்களை ஒன்று சேர்ப்பதாக இருக்க வேண்டும். இதயத்தின் இயற்கையான ஓசைதான் பிரார்த்தனையின் சிறந்த வடிவம். தியானிக்கும் உருவம் எதுவாக இருந்தாலும் பேசும் பேச்சுக்களும், புத்தியும், இதயமும் ஒரே கோட்டில் பகவானிடம் லயிக்க வேண்டும்.

மிகக் கூடுதலான விவரங்கள் நவ நாகரீகத்தின் செயற்கை உருவமாகும். நாம் பச்சிளங் குழந்தைகள்போல் கபடின்றி, பகவானிடம் முழு நம்பிக்கையுடன் 'நான் இருப்பது உண்மையானல் பகவான் இருப்பதும் உண்மை, என்று தொடங்கவேண்டும். பகவானிடம் நமக்கு நம்பிக்கை இருக்கும்போது அதை ஒட்டிவரும் பிரார்த்தனையும் அவசியம்.

## பிரார்த்தனையின் மகிமை

சராசர ரூபமான இந்த உலகம் எல்லாவற்றிற்கும் நீதான் தந்தை. ஆராதிக்கத் தக்க தெய்வம் நீதான். மூவுலகிலும் உனக்கு ஒப்பானவர் இல்லை. உன்னை யார் மீற முடியும்? ஒப்பற்ற சக்தி நீதான்.
—கீதை 11-43

காலையிலும் மாலையிலும் கடவுளைப் பிரார்த்தனை செய்துவிட்டு பிறகு உன் வேலைகளைத் தொடங்கு.
—முகம்மது நபி

குற்றமற்ற இதயம்கொண்டவர்கள் பாக்கியசாலிகள். அவர்களால் தெய்வத்தைக் காண முடியும்.
—ஏசுகிறிஸ்து

கலியுகத்தில் துன்பங்கள் இல்லாமல் சுகம் பெறுவதற்கு எப்பொழுதும் நல்லோர்களுடைய சேர்க்கையும் கடவுள் பிரார்த்தனையும்தான் வழி என்று மத ஸ்தாபகர்கள் எல்லோரும் பல வழிகளில் அறிவுறுத்தி இருக்கிறார்கள். சத்புருஷர்களுடைய சகவாசம்

தால் கடவுள் தத்துவத்தை அறிந்துகொள்ள வேண்டுமென்ற ஆவல் உண்டாகும். அந்த ஆசை வராவிட்டால் சாதகனுக்குச் (பக்தியில் பயில்பவன்) சிறிதும் நன்மை ஏற்படாது. அந்த ஆவல் தோன்றிய வுடன் சாதகனுக்குப் பிரார்த்தனை துணை நின்று மேல்படியில் ஏற்றி ும்.

கடவுளிடம் நம் மனத்தைச் செலுத்தி சிந்தனை செய்வதே பிரார்த்தனை. மனிதன் தன் பலவீனத்தை உணர்ந்து கடவுளின் அருளுக்காக தவம் கிடப்பதுதான் பிரார்த்தனை. தன் செயலற்ற தன்மையை உணர்ந்து காரணபூதனான கடவுளின் கையில், தான் ஒரு சூத்திரபொம்மை என்று மனிதன் தெரிந்துகொள்ளவேண்டும்.

சாதாரணமாக நமக்கு முற்பிறவியைப்பற்றிய நினைவு இருப் பதில்லை. வரப்போகும் பிறவியைப்பற்றியும் தெரியாது. மிஞ்சி இருப்பது நாம் இப்பொழுது செய்யும் செயல்களே. செய்யத் தகாத பல செயல்களை அறிந்தறிந்து செய்கிறோம் என்பது நமக்குத் தெரியும். இருந்தாலும் செய்துகொண்டுதான் இருக்கிறோம். ஆனால் தகாத செயல்களைச் செய்யும்போது நம் மனசாட்சி இதுதான் என்று நம்மை எச்சரித்துக்கொண்டுதான் இருக்கிறது. இதை எப்படி செய் வது என்று நாம் தயங்கவும் நேருகிறது. இவ்வளவு எச்சரிக்கை களுக்குப் பின்பும் கடைசியில் அந்த வேலையை செய்துகொண்டுதான் இருக்கிறோம். தொல்லை எதுவும் இல்லாமல் நமக்கு அச்செயலில் வெற்றி கிடைத்துவிட்டால் அச்செயலைப்பற்றிய நினைவை மறந்து விடுவோம். ஆனால் தகாத செயலை செய்வதால் நமக்குத் துன்பம் நேர்ந்துவிட்டால், வெளிப்படையாக ஒப்புக்கொள்ளாவிட்டாலும் உள்ளுக்குள் குமைந்து பச்சாதாபம் அடைகிறோம். ஒவ்வொரு மனி தனுக்குள்ளும் பகவத் தத்துவமே நன்மை தீமைகளைப்பற்றி எச்சரித் துக்கொண்டிருக்கிறது. கடவுளின் சிருஷ்டியில் மனிதன் தலைசிறந் தவன். அவனுக்கு மட்டுந்தான் அவ்வப்பொழுது பகவத் தத்துவம் புரிகிறது. கடவுளை அறியவும் அவரை அடையவும் மனிதனுக்குத் திறமை இருக்கிறது.

ஆனால் நாம் இந்த நிலையை மறந்து விலங்குகளைப்போல் வாழ் கிறோம். நமது முன்னேற்றம், யோக க்ஷேமங்கள் ஆகியவற்றை நாம் கவனித்துக் கொள்ளத்தான் வேண்டும். ஆனால் பிறருடைய இன்ப துன்பங்களை அலட்சியம் செய்து சுயநலக்காரர்கள் ஆகக் கூடாது.

மனித சமுதாயத்தில் யாருமே தனிப்பட இருந்து வாழ முடி யாது. சிருஷ்டி முறையே அப்படி. பிறந்த குழந்தை பெற்றோர் களுடைய உதவியால்தான் வளர வேண்டும். பிறகுதான் அண்ணன்

தம்பியர், அக்கா தங்கைகள். குடும்பத்தினர் ஒருவர் ஒருவரை அண்டித்தான் வாழவேண்டும். குடும்பமும் அக்கம் பக்கத்தாரை ஒதுக்கி வாழ முடியாது. தினசரி செய்யவேண்டிய வேலைகளுக்கு பிறருடைய உதவியும் ஒத்துழைப்பும் தேவை. இப்படியே கிராமங்கள், பட்டினங்கள், நாடுகள் எல்லாம் ஒன்றை ஒன்று அண்டித்தான் வாழவேண்டும். அரசர்க்கு அரசனானாலும் அவனால் எதுவும் தனியாக செய்யமுடியாது. தன் குடிகளும், வேலைக்காரர்களும் அனுசரணையாய் இருந்தால்தான் அவன் நாட்டை ஆளமுடியும். இது சிருஷ்டியின் இயற்கை நியதி. இதை எப்பொழுதும் மறக்கக் கூடாது. இதை உணர்ந்தால் மனித சமுதாயத்தின் துர்ப்பாக்கிய நிலை வெகுவாக மாறிவிடும்.

உலகத்தில் நாம் காணும் ஒவ்வொரு பொருளிலும் தெய்வத்தின் சக்தி இருப்பதை முன்பே தெரிந்துகொண்டோம். அதனால் தான் எறும்புமுதல் பிரம்மாவரையுள்ள சிருஷ்டி அத்தனையும் பகவத் சொரூபம் என்று நமது சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. ஆனாலும் நம்மில் சிலருக்கு சில சந்தேகங்கள் உண்டாகின்றன. இது மேல்நாட்டு கல்வியறிவின் பயனாக இருக்கலாம். ஆனால் அதி மேதாவியும், சாஸ்திர தத்துவ ஆராய்ச்சியாளரும் என்றும் மறக்க முடியாதவருமான காலஞ்சென்ற ஸ்ரீ ஜகதீச சந்திரபோஸ், தாவர சாஸ்திர ஆராய்ச்சியில் ஈடுபட்டுத் தம் வாழ்நாள் முழுவதையும் அதற்கே அர்ப்பணித்தார். அவர் மரம் செடிகளுக்கு உயிர் உண்டென்றும், அவை நம்மைப்போலவே மூச்சை இழுத்துவிடுகின்றன என்றும், இன்பத்துன்பங்களை அனுபவிக்கின்றன என்றும் சாட்சியோடு நிரூபித்தார். இக்காரணத்தால்தான் நம் முன்னோர் மரம், புற்று, மலை, ஓடை, ஆறு, ஆகியவற்றைக் கடவுளின் சொரூபமென்று ?க்கச் சென்றார்கள்.

சமீபத்தில் உயர்தரக் கல்வி பயின்ற நண்பர் ஒருவர் இப்படிக் கேட்டார். ''ஏன் சுவாமி! சாஸ்திரத்தை விட்டுத் தள்ளுங்கள். பல யுகங்களுக்கு முன்பு வாழ்ந்து மறைந்தவர்கள் தாமே ஸ்ரீ ராமனும், ஸ்ரீ கிருஷ்ணனும். அவர்களை நினைத்து முறையிட்டால் உங்கள் முறையீடு அவர்களுக்கு எப்படி எட்டும்? கணக்கற்றவர்கள் இப்படி முறையிட்டுக் கொண்டிருக்கலாமல்லவா? இத்தனை பேருடைய முறையீடுகளைக் கேட்டுத் தாறுமாறாகப் போய்விடாமல் அவர்கள் எப்படிக் காப்பாற்றி சமாளிப்பார்கள்? உண்மையிலேயே ராம கிருஷ்ணர்கள் இருப்பதாக வைத்துக்கொள்வோம். வேதாந்தப் பேச்சுக்களைச் சொல்லி ஏமாற்றாமல் எளிமையான சொற்களில் பாமரனுக்கும் புரியும்படி சொல்லுங்கள்.'' இக்கேள்வியைக்கேட்டு நான் மனதுக்குள்ளேயே சிரித்துக்கொண்டேன். ஆனால் அவர்

விளையாட்டாக இக்கேள்வியை என்னிடம் கேட்கவில்லை. அதிக மாகப் படித்ததனுல் அவருக்கு ஏற்பட்ட சந்தேகந்தான் அது. நான் நவீன சாஸ்திர ரீதியில் அவருக்குப் புரியும்படியான பரி பாஷையில் சொன்னுலொழிய அவருக்குப் பிடிக்காது. பொருளைப் புரிந்துகொள்ளவும் முடியாது என்றும் தோன்றியது. வேதாந்த விசாரணை கலக்காமல் மத விஷயங்களை அவருக்கு சொல்ல முயன் றேன். அது சிறிது கஷ்டமாகத்தான் தோன்றியது. தற்காலக் கல்வி கற்றவர்கள் பலருக்கு ஏற்படும் சந்தேகங்களே இவை. ஆகை யால் சந்தேகத்தைப் போக்குவது அவசியம். பெரிய பெரிய விஷ யங்களை எடுத்து ஆராய்ந்து எளிதில் புரிந்துகொள்ளும்படி நமக்கு வழிகாட்டி இருக்கும் மகாத்மாக்கள் இதுபோன்ற சிறிய சந்தேகங் களுக்கு பதில் வைத்திருக்கிருர்கள். இவருடைய சந்தேகத்துக்கு எளிதிலேயே பதில் கிடைத்தது.

பிரார்த்தனை என்றுல் என்ன? ராமன், கிருஷ்ணன், சாயி, அல் லது கிறிஸ்து, அல்லா ஆகிய எந்த தெய்வத்தையேனும் உத்தே சித்து நம் சுக துக்கங்களைச் சொல்லிக்கொள்வதும் அத்தெய்வங் களின் சக்தியைச் சொல்லித் துதித்தல், பிறகு நமக்கு வேண்டிய விஷயங்களைச் சொல்லி அவற்றை நமக்குக் கொடுக்கும்படி வேண்டு வது இப்படித்தான் பலர் பிரார்த்தனை செய்கிருர்கள். இவ்வளவு பிரார்த்தனைகளும் பகவானுடைய காதில் விழுமா? என்று கேட் டால், விழும் என்றுதான் சொல்லவேண்டும். "எப்பொழுது காதில் விழும்?" என்பது முதல் கேள்வி; "எப்படி விழும்?" என்பது இரண் டாவது கேள்வி.

வேதாந்தத்தை விட்டுவிடுவோம். நம் நண்பர் சொன்னபடி புதிய சாஸ்திர ரீதியில் ஆராய்வோம். நாம் ரேடியோவைப் பார்க் கிறேம். பாட்டுக் கேட்கிறேம். பம்பாய், கல்கத்தா, கொழும்பு ஆகிய நகரங்களிலோ, உலகின் வெவ்வேறு பகுதியிலுள்ள நகரங் களிலோ பாடும் பாட்டுக்களையும், பேசும் பேச்சுக்களையும் கேட்கி றேம். இது நமக்கு ஏற்பட்டுக்கொண்டிருக்கும் அனுபவம். ஆகை யால் இதை இல்லை என்று மறுக்க முடியாது. நிகழ்ச்சிகள் எவ்வளவு தூரத்தில் இருந்தாலும் கேட்க முடிகிறது. இவ்வளவு கேந்திரங் களிலிருந்து வரும் பாட்டுக்களையும், பேச்சுக்களையும் கொண்டுவரு வது காற்று. இவ்வளவு தொனிகளும் காற்றில் கலந்துதான் வரு கின்றன. ஆனுலும் நாம் எந்த ஊரிலிருந்து வரும் பாட்டைக் கேட்க விரும்புகிறேமோ, அதைமட்டுமே கேட்க முடிகிறது. இது எப்படி ஏற்படுகிறது? அங்கே பாட்டையும் பேச்சையும் காற்றில் விட்டுவிடுகிருர்கள். இங்கே அவற்றைப் பிடித்துக் கொள்கிருர் கள். இதற்காக மீட்டர்கள் என்றும், பாண்டுகள் என்றும், கிலோ

சைக்கிள்கள் என்றும் சாதனங்கள் இருக்கின்றன. இச்சாதனங்களை யும் அளவுகளையும் நாம் கற்பனை செய்துகொண்டோம். இவற்றின் படியே தொனிகளை ஏற்றுக்கொள்கிறோம். உலகத்தில் பல பகுதி களிலிருந்தும் தொனிகள் வந்து காற்றில் கலந்தாலும் கேட்கும் போது தாறுமாறுவதில்லை. சாஸ்திரம் அதாவது விஞ்ஞானம் இவ் விஷயத்தை நிரூபித்திருக்கிறது. ஆகையால் யாரும் மறுப்பதற் கில்லை; மறுக்க முடியாது. நம் பிரார்த்தனை விஷயமும் இப்படித் தான். நாம் இங்கே பிரார்த்தனைகளைக் காற்றில் விடுகிறோம்; கட வுள் அங்கே அவற்றை ஏற்றுக்கொள்கிறார். தாறுமாறாக சிக்குப் படுவதில்லை. எப்போதும் ஏற்றுக்கொள்வார். சரியான அலை நீளத் தில் சரியான அளவில் நாம் அனுப்பும்போது நம் பிரார்த்தனைகள் அங்கே கேட்கும். கன்னாபின்னாவென்று நம் இஷ்டப்படி பாடினாலும் பாடல்களைப் படித்தாலும் அவை அங்கே சேரா. கஜேந்திர மோட் சந்தைப் பாருங்கள். போத்தனா அமாத்யர் இவ்விஷயத்தை எவ் வளவு ஆழகாக விவரமாக சித்தரித்திருக்கிறார். அதை வெறும் புராணக் கதை என்று நினைத்தால் நம் சந்தேகம் தீராது. மகாநு பவரான போத்தனா தெலுங்கில் எவ்வளவு பத்தியங்கள் பாடியிருக் கிறார். கஜேந்திரன் அத்தனை வகையாக முறையிட்டும் பகவானுக்கு எட்டவில்லை. எப்பொழுது எட்டியது? சிறிதும் சக்தியில்லாமல் ''உன்னைத் தவிர வேறொன்றும் அறியேன். இந்த ஏழையை மன்னித்தருளும்'' என்று தீன குரலெடுத்து இதயத்தைத் திறந்து கடவுள் இருக்கும் திசையை நோக்கி மனப்பூர்வமாக முறையிட்ட போதுதான் வைகுண்டத்திலிருந்த மகாவிஷ்ணுவுக்கு எட்டியது. முறையீட்டைக் கேட்டுப் பரபரப்புடன் புறப்பட்டார். அப்படி முறையிட்டாலொழிய பாண்டும் அலை நீளமும் சரிப்பட்டு வராது. சரியான பாண்டில் சரியான அலை நீளத்தில் நாம் முறையிடும்போது அப்பக்கம் அது சென்றே தீரும் அவர் ஏற்றுக்கொள்ளாமல் முடி யாது. இந்த பாண்டையும் அலை நீளத்தையுமகூட நம் ரிஷிகள் நிர் ணயித்து வைத்திருக்கிறார்கள்.

அப்படி நாம் முறையிட்டது எட்டிவிட்டது; சரிதான். அதனால் 'இந்த முறையீடு எங்கிருந்து வந்தது? இது யாருடையது?' என்ற பிரச்சினை இருக்கவே இருக்கிறது, இக்கேள்விக்கு பதிலும் நமது சாஸ்திரங்களில் இருக்கிறது. அதை நாம் கவனிப்பதில்லை அத னால் கேள்விகளே மிஞ்சியிருக்கின்றன. பதில்களே கிடைப்பது இல்லை.

எந்த விரதத்துக்காகட்டும், யாகம் முதலிய ஹோமங்களுக் காகட்டும், சந்தியாவந்தனத்துக்காகட்டும் வழக்கமாகச் செய்யும் பூஜைகளுக்காகட்டும் சங்கல்பம் என்று ஒன்று செய்கிறார்கள். இச்

சங்கல்பம் என்பது என்ன? “யுகே யாதே த்வீபே...... ஸ்ரீ கைலச்ய பிர தேசே” என்று பிரதேசத்தை நிர்ணயம் செய்கிறோம் பிறகு ‘கிருஷ்ணுகாவோ: மதியதேசே’ என்று இடத்தை நிர்ணயிக் கிறோம். பிறகு ‘ஸ்வக்ருகே, வசதிக்ருகே, பந்துக்ருகே” என்று க்ஷேத்ர நிர்ணயம் செய்கிறோம். அதற்குப் பிறகு ‘ஸந்நிதௌ’ என்று ஏதோ ஒரு சந்நிதியைக் குறிப்பிடுகிறோம். பிறகு ரிஷி, கோத்ரம், நம் பெயர் எல்லாவற்றையும் சொல்கிறோம். இப்படி நமது விலாசத்தை விவரமாகச் சொல்லி இன்ன காரியத்துக்காக இன்ன தெய்வத்தை அழைக்கிறோம் என்று விஸ்தாரமாகச் சொல் லிக்கொள்கிறோம். நாம் யார்? எங்கிருந்து என்ன வேலைக்காக யாரைக் கூப்பிடுகிறோம்? என்பதைச் சொல்லிக் கொள்கிறோம். இவ்வளவு விவரமாகச் சொல்லியபின் குழப்பத்துக்கு எங்கே இடம் இருக்கிறது.

இவ்வேலை செய்வதற்கு என்ன என்ன சாதனங்கள் வேண்டுமோ அவைகளை எடுத்துக்கொண்டு புறப்பட்டு நாம் கொடுத்த விலாசத் துக்கு அவர் வருவார். இதில் வேதாந்தமும் ஆத்மீகமும் எங்கிருக் கிறது? ஸ்ரீ ராமனும், கிருஷ்ணனும் இருக்கிறார்கள் என்பதை ஒப் புக்கொண்டு கேள்வி கேட்டதால் அந்த அன்பருக்கு இப்படி பதில் சொன்னேன். ஒருமாதிரியாக அவருக்கு இது பிடித்தது. அதற்குப் பிறகு வேறு சில கேள்விகளும் கேட்டார். அவற்றுக்கும் இது போலவே பதில் சொன்னேன்.

சந்தேகத்தால் தடுமாறுவதைவிட, நமது புராணங்களும் சாஸ் திரங்களும் கட்டுக்கதையில்லை; நமது முன்னோர்கள் அனுபவத்தினால் சேகரித்து வைத்த சாஸ்திர சூத்திரங்கள் என்றும் தெரிந்துகொண்டு அந்நூல்களை நாம் சிரத்தையுடன் படித்தால் இதுபோன்ற சந்தே கங்களுக்கு இடம் குறைவு; சந்தர்ப்பமும் குறைவு.

உயர் கல்வி கற்ற நண்பர் இவற்றையெல்லாம் கேட்டுவிட்டு ‘பிரார்த்தனைகள் ஏன் இவ்வளவு வகைப்பட வேண்டும்? இவ்வளவு நியமனங்கள் எதற்கு? இக்கோயில்கள் எதற்கு? இதிலுள்ள கற்சிலை களுக்கும் படங்களுக்கும் இவ்வளவு சக்தி உண்டா? கடவுள் எங்கும் நிறைந்தவர்; எல்லாம் உணர்ந்தவர் என்று நீங்களே சொன்னீர் கள் அல்லவா? கடவுளைத் தேடிக்கொண்டு எங்கும் போகவேண் டாம் என்று நான் சொல்லவில்லை. படிப்பே இல்லாமல் மனத்தின் மலர்ச்சி என்னும் துன்பம் ஏற்படாமல் மூட நம்பிக்கையோடு இருப் பவருடைய நிலை மேல் என்று தோன்றுகிறது. தற்காலப் படிப்பின் பயனாக உள்ள நம்பிக்கையும் போய்விடுகிறது. ஒவ்வொரு விஷ யத்திலும் சந்தேகம் ஏற்படுகிறது. அவைகளுக்குப் பதில் தெரிவது

இல்லை. வரவர ராமாயணம், மகாபாரதம்கூட யாரோ அதி மேதாவிகள் கற்பனை செய்து எழுதியதோ என்னும் எண்ணம் தோன்றி நம்பிக்கை தளருகிறது. என்னை மன்னித்து, நான் இப்படியெல்லாம் பேசுவதற்குத் தவருக நினைக்காமல் இச்சந்தேகங்களும் தீரும்படி ஏதாவது சொல்லுங்கள்'' என்ருர்.

அவர் படித்த படிப்பில் ஏதோ ஓரளவு நானும் படித்திருக்கிறேன். எனக்கும் ஒரு நிலையில் இவைபோன்ற சந்தேகங்கள் தோன்றின. அவற்றைப்பற்றி யோசித்து யோசித்து தலைவலி வந்துவிட்டது. ஆனால் ஒன்று உறுதியாகத் தெரிந்தது சத்தியம், நித்தியம், அபேதம் என்பவற்றை தருமம் என்ருே நியாயம் என்ருே சொன்னுலும் ஒரு வழியைமட்டும் இந்த நூல்கள் நிர்ணயித்து சொல்லி இருக்கின்றன என்ற நம்பிக்கை ஏற்பட்டது. சத்தியம் அல்லாமல் வெறும் கற்பனைக் கதைகளாக இருந்தால் இவ்வளவு யுகங்களாக அவநம்பிக்கையை ஏற்படுத்தாமல் நிலைத்திருக்க முடியுமா? அதுமட்டுமல்லாமல், அப்படிப்பட்ட கற்பனைக் கதைகளை ஒருவர் எழுதலாம்; அதே கதைப்பொருளை வைத்துக்கொண்டு பல மேதாவிகள் திரும்பத் திரும்ப எழுதுவார்களா? நம் சமூகத்திலும் பழக்க வழக்கங்களிலும் பல மாறுதல்கள் ஏற்பட்டாலும் அந்தந்த காலங்களில் அந்நூல்களில் சொல்லியபடியே அன்றுமுதல் இன்று வரையில் நமது வாழ்க்கையில் நடந்துவருகின்றன. இக்காரணங்களால் நமது புராணங்களிலும், சாஸ்திரங்களிலும் காணப்படும் விஷயங்களும் போதனைகளும் கற்பனைகள் அல்ல என்று எண்ண இடமிருக்கிறது. பல அறிவாளிகள் கற்பனைக் கதைகள் பலவற்றை எழுதியிருக்கிருர்கள். அவைகள் மறைந்துபோய் நாளடைவில் அவைகளைப்பற்றி நினைப்பவர்களே இல்லாமல் அழிந்துவிட்டன. இந்நூல்கள் அந்தந்தக் கால நிலைகளை ஒட்டி அவசியமான நீதிகளையும் கட்டுப்பாடுகளையும் எடுத்துக் காட்டினரேயன்றி எல்லா மக்களுக்கும் எல்லா இடங்களுக்கும் பொதுவான விஷயங்களைச் சொல்லவில்லை. ஆகையால் கற்பனைக் கதைகள் வெகு சீக்கிரத்தில் கால வெள்ளத்தோடு கலந்துவிட்டன. நம் மகா கிரந்தங்கள் அப்படி அல்ல. எக்காலத்துக்கும் ஒன்ருக நடக்கும் சத்தியத்தை வலியுறுத்திச் சொல்லுகின்றன. ஆகையால் இவை உண்மை வரலாறென்றும் மனிதன் எத்தனைதான் மேதாவியாக இருந்தாலும் இப்படியெல்லாம் கற்பனை செய்து எழுத முடியாதென்றும் நம்பத்தான் வேண்டும். மற்ருெரு விஷயம் கிருஷ்ண பகவான் உபதேசித்த பகவத் கீதை, ஏசுகிறிஸ்து சொல்லிய பைபிள், மகமத் நபி தெரிவித்த குர்ஆன் ஆகியவை அறிவாற்றலால் தயார் செய்யக்கூடிய நூல்கள் அல்லவே. உலகில் பல மேதாவிகள் பிறந்திருக்கிருர்கள். அவர்கள் எல்லோரும் இவைபோன்ற நூல்களை எழுத

வில்லை. அவற்றைத் திருத்தக்கூட அவர்களால் முடியவில்லை. அந்த மாபெரும் நூல்களை ஜீரணம் செய்துகொண்டு அவற்றுக்குச் சரி யான பொருள் எழுதுவதற்கே முடியாமல் திண்டாடுகிறார்கள். ஸ்ரீகிருஷ்ணனுடைய வரலாறு கற்பனை என்பதில் ஏதேனும் பொருள் உண்டா?

ஏதோ ஒருவகையில் எல்லோரும் பிரார்த்தனை செய்கிறார்கள் என்பது உண்மை. அந்தராத்மாவின் சாட்சியாக இதை மறுக்க முடியாது. இந்துமத சம்பிரதாயத்தில் பஜனை இருக்கிறது. கோயில் களிலும் வீடுகளிலும் மந்திர தந்திரங்களுடன் செய்யும் பூசை இருக் கிறது. உற்சவங்கள் இருக்கின்றன. இவை எல்லாவற்றுக்கும் அடிப்படை ஒன்றுதான். அங்கே கூடியவர்கள் எல்லோரும் ஏதோ ஒரு மூர்த்தியைப் பிரார்த்திப்பதுதான் அடிப்படை. அந்தச் சமயத் தில் மனம் வேறெங்கும் சிதறாமல் ஒருமுகமாக இருப்பதற்காகவே மற்றத் தடபுடல்கள் எல்லாம் பிரார்த்தனைக்கு இந்தப் பக்க வாத்யங்கள் எல்லாம் என்பது நமது நம்பிக்கை.

பஜனையை எடுத்துக் கொள்ளுங்கள். அதே நினைவாகப் பஜனை தொடங்குவார்கள். கீர்த்தனைகளைப் பாடுவார்கள். பாட்டுகளை யும் பாடல்களையும் பாடுவார்கள். அதற்கேற்ற வாத்தியங்கள் இருக்கின்றன. வாத்தியங்களோடு அவர்கள் குரலும் சுருதி சேர போகப்போக ஸ்தாயியை உயர்த்தி கானத்தோடு நிருத்தியமும் செய்வார்கள். அந்த நிலையில் அவர்கள் மனதில் சங்கீர்த்தனம் ஒன்றுதான் இடம்பெற்றிருக்கும். சங்கீத ஞானமோ, சாகித்யத்தில் பாண்டித்தியமோ இல்லாதவர்கள் சங்கீர்த்தனம் செய்தாலும் சாதாரணமாக அபஸ்வரம் வராது. சிலர் பஜனை செய்யாமல் பார்க்க வந்தவர்களைப் போல் பக்கத்தில் அமர்ந்திருப்பார்கள். கைகளைச் சேர்த்துத் தாளம் போட்டுப் பஜனை செய்தால் அது அநாகரிகம் என்று நினைத்தும் யாரேனும் பார்க்கிறார்களோ என்று மெதுவாக விரல்களால் தாளம் போடுவார்கள். ஆனால் பஜனை சூடு பிடிக்கப் பிடிக்க பக்கத்திலுள்ளவர்களையும் அது கவரும். நாம் பாதி நினைவோடு படிப்படியாகப் பஜனையில் கலந்து கொள்ளு வோம். பிறகு அத்துடன் இரண்டறக் கலந்துவிடுவோம். ஒரு நிலையில் தன்னை மறந்துவிடுவதும் உண்டு. தம்மையறியாமலேயே கைகளைச் சேர்த்துத் தாளம் போடுவோம். மங்களம் பாடும்வரை யில் கூடவே பாடிக்கொண்டிருப்போம்.

முஸ்லிம்களின் பிரார்த்தனையைப் பாருங்கள். எல்லோரும் மசூதியில் கூடுவார்கள். ஒவ்வொருவராக எந்த விதமான நெருக் கடியும் இல்லாமல் பிரார்த்தனையை நடத்துவார்கள். நாம் மனம்

அலையாமல் இருக்க மேள தாளங்களை உபயோகிக்கிறோம். அவர்கள் என்ன செய்வார்கள் தெரியுமா? காதில் விரலை வைத்து மூடிக் கொள்ளுவார்கள். வெளிச் சூழலிலிருந்து வரும் ஓசைகள் காதில் விழாமல் இருக்க இது ஒரு வழி. குரலை உயர்த்திப் பிரார்த்தனை செய்கிறார்கள்.

நாம் மேள தாளங்களின் சந்தடியில் மற்ற ஓசைகளை விலக்கி விடுகிறோம். முஸ்லீம்கள், காதில் விரலை வைத்து மூடி மற்ற ஓசைகளைத் தடுக்கிறார்கள். கூட்டமாகச் சேர்ந்து பிரார்த்தனை செய்வது நம் வழக்கம். அதனால் மற்ற விஷயங்களால் கடபுடா சப்தம் ஏற்பட்டு விரசம் உண்டாகாதிருக்க நம்மவர் சதங்கையின் நாதத்தையும், சிப்ளாக் கட்டையின் நாதத்தையும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். சில புத்திசாலிகள் பஜனைகளுக்கு வந்து, வேறு சந்தர்ப்பமே கிடைக்காததுபோல் அரசியல் விவாதங்களில் இறங்குவார்கள். ஆனால் மேள தாளங்களின் பேரோசையில் அவர்கள் சம்பாஷணைக்கு அவ்வளவு வசதி கிடைக்காது. அதனால் தாமும் பேச்சை விட்டுவிட்டு மெதுவாகப் பஜனையில் மனத்தைத் திருப்புவார்கள்.

அடுத்தாற்போல் கிறிஸ்தவர்களின் மாதா கோயில்களைப் பாருங்கள். பிரார்த்தனைக் காலத்தில் சத்தம் இருக்கக் கூடாது. எல்லோரும் மௌனமாக இருக்கவேண்டும். எல்லோரும் முழங்காற்படியிட்டு உட்கார்ந்திருப்பார்கள். அந்த மோனச் சூழ்நிலையில் பிரார்த்தனையை நடத்துவார்கள். வேறு துர்நாற்றம் தெரியாமல் இருப்பதற்காக எல்லோரும் வாசனையுள்ள ஊதுவத்திகளை கொளுத்துவார்கள். பிரார்த்தனை செய்பவர்கள் எல்லோருடைய குறிக்கோளும் ஒன்றுதான். முறைகள்தான் வேறு. நம்மிலும் ஏகாந்தப் பயிற்சி உண்டு.

கோயிலுக்குப் போவதிலும் பொருள் பொதிந்திருக்கிறது. நம்மில் பிற்காலம் கோயிலுக்குச் செல்பவர்கள் எவ்வளவுபேர் இருக்கிறார்கள்? இவ்வாண்டில் கணக்கெடுப்போம். அப்படித்த நண்பரை, "நீங்கள் ஒருதடவையாவது கோயிலுக்குப் போயிருக்கிறீர்களா?" என்று கேட்டேன். "ஒருமுறைகூடப் போனதில்லையே" என்று நானே கேட்டுவிட்டேன். கோயிலுக்குப் போவதால் பயன் எதுவும் இல்லை என்று வெறுப்பால் பேசாமல் இருந்தாரா? என்றால் அதுவும் இல்லை. 'இதுவரையிலும் ஏன் போகவில்லை என்று கேட்டால் காரணம் சொல்லவும் முடியாது' என்றேன். காலையிலும் மாலையிலும் கோயிலுக்கு போகவேண்டுமென்றும், அங்கே அர்ச்சனையின்போது பகவானுக்கு பழமோ, பூவோ கொடுத்து வணங்கிப் பிரசாதம் பெற்று வரவேண்டுமென்றும் நமது முன்னோர் ஏற்பாடு

செய்து வைத்திருந்தார்கள். நமக்கு அவ்வேளையில் ரேடியோ நிகழ்ச்சி கேட்கவேண்டியிருக்கும். அல்லது நண்பனோடு அரட்டை அடிக்கவேண்டியிருக்கும். அல்லது கிளப்பில் சீட்டாடப் போனால் பொழுது போய்விடும். கோயில் மறந்தே போய்விடும். போகட்டும் நமது தினசரி வாழ்க்கையில் கோயிலோடு தொடர்புகொள்ள வேண்டாம். காலையிலோ மாலையிலோ நமது வேலைப் பட்டியலில் பிரார்த்தனைக்குச் சந்தர்ப்பம் கொடுத்திருக்கிறோமா என்றால் 'இல்லை' என்று திட்டமாகச் சொல்லிவிடலாம். முஸ்லிம்களைப் பாருங்கள். எவ்வளவு வேலை இருந்தாலும் எந்த வேலையில் மூழ்கி இருந்தாலும் குறிப்பிட்ட வேளையில் தாம் இருக்கும் இடத்திலேயே நமாஸ் செய்வார்கள். இயன்றமட்டும் அவர்கள் மசூதிக்கே செல்வார்கள்.

கிறிஸ்தவர்களைப் பார்ப்போம். ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமை அன்றும் தவறாமல் 'சர்ச்சுக்கு' சென்று பிரார்த்தனை செய்வார்கள். நாம் பெரியோர் ஏற்படுத்திய முறையில் கோயிலுக்கும் போவது இல்லை; வீட்டிலும் பிரார்த்தனை செய்வது இல்லை. படித்ததனால் கிறிஸ்தவர்களைப்போல் வாரம் ஒருமுறையாவது கோயிலுக்குப் போய் பிரார்த்தனை செய்கிறோமா? இல்லை. நமக்கு ஏதோ புதிதாக புத்திசாலித்தனம் வளர்ந்துவிட்டதென்றும் அவர்களுடைய நல்ல பழக்கங்களை ஏற்றுக்கொள்வதற்குப் பதிலாக அவைகளை விட்டுவிட்டு நமக்கு உபயோகமில்லாதவைகளை மட்டும் கெட்டியாக பிடித்துக்கொண்டிருக்கிறோம். இது நமது பெரிய குறை நாமாகத் தேடிக்கொள்ளும் கேடு, நாம் யாரையும் தவறு சொல்ல இடம் இல்லை. உருப்படியான எல்லா மதங்களிலும் நல்ல விஷயங்கள் உண்டு. அவை எல்லா மதத்திலும் ஒரே மாதிரியாக இருக்கும். அவற்றை நாம் கவனிப்பதில்லை. கவைக்கு உதவாத முறைகளைப் பின்பற்றுகிறோம் இதனால்தான் கஷ்டம் உண்டாகிறது. நாம் எந்த மதத்தினருடைய — நாட்டினருடைய படிப்பைப் படிக்கிறோமோ அவர்களைப்போலவே நடையுடை பாவனைகளை மாற்றிக் கொள்ளுகிறோம். அவர்களைப்போல் சர்ச்சுக்குப்போய் ஞாயிறன்று பிரார்த்தனையையாவது செய்கிறோமா? அப்படி இருந்தாலும் பரவாயில்லை. நமது கோயில்களுக்குச் சென்று ஒரு கணம் கடவுளை நினைத்து வணங்கினாலும் பயன் உண்டு. இவ்விரண்டு வழியும் இல்லை என்றால் வீட்டிலாவது பகவானை மனதார நினைத்தால் போதும். அதுவும் செய்வதில்லை. இருந்ததையும் விட்டுவிட்டோம். புதியதையும் எடுத்துக்கொள்ளவில்லை. இன்று இதுதான் நமது நிலை.

நாம் கோயில் என்கிறோம். முஸ்லிம்கள் மசூதி என்கிறார்கள். கிறிஸ்தவர்கள் சர்ச்சு என்கிறார்கள். யார் எங்கே போனாலும் ஒரே

செயலுக்காகத்தான். நாம் அங்கே போகும்போது ஒரு நிச்சயத்துடன் புறப்படுகிறோம். கடவுளுடைய சேவைக்கு, பிரார்த்தனைக்குப் புறப்படுகிறோம் என்பதால் மற்ற விஷயங்களைத் தள்ளி வைக்கிறோம். வந்தவர்கள் பலரும் கூடுகிறார்கள். அங்கே ஏதோ புனிதத் தன்மை இருக்கிறதென்றும் தவறான செயல்களை செய்யக்கூடாதென்றும் ஒரு கட்டுப்பாட்டுடனும், மரியாதையுடனும் நடந்துகொள்ளுகிறோம். பத்துப்பேர் மத்தியில் எப்படி நடந்துகொள்ள வேண்டும்? மரியாதை என்றால் என்ன? என்பதைத் தெரிந்துகொள்கிறோம். அந்த சிறிது நேரமாவது வேறு யோசனை செய்யாமல் கடவுளை தியானிக்கிறோம். கடவுளின் சந்நிதியில் இருப்பதுபோல் பாவிக்கிறோம். அந்த லட்சியத்தை சாதிப்பதற்கு மற்ற விவகாரங்களை மறந்துவிட்டு கடவுளை மறக்காமல் இருக்கச் செய்த ஏற்பாடுகள் இவை. இவை தேவையில்லை என்று வீட்டிலேயே இருந்து நிர்மலமான தியானம் செய்ய முடிந்தால் மனத்தை அடக்கிக் கடவுளை பிரார்த்திக்க முடிந்தால் மிகவும் சந்தோஷம் அப்பொழுது இந்த வெளி விவகாரங்கள் இல்லாவிட்டாலும் பரவாயில்லை. ஆனால் அவை எல்லோருக்கும் அவ்வளவு எளிதில் கிட்டாது. அதனால் சாதாரண மக்களுக்கு இந்த வெளி ஏற்பாடுகள் மிக அவசியம். இவற்றால் கெடுதல் ஒன்றும் நேராது.

விக்கிரகங்களுக்கும் படங்களுக்கும் சக்தி உண்டா என்னும் சந்தேகங்களுக்குப் பொருளே இல்லை. கடவுள் தம் சிருஷ்டி எல்லாவற்றுள்ளும் இருக்கிறார் என்று தெரிந்துகொண்டோம் அல்லவா? எல்லா உருவங்களும் அவருடையனவே அல்லவா? குணங்கள் எல்லாம் அவருடையனவே. ஆகையால் இவ்வுருவம்தான் கடவுள், அவ்வுருவம் கடவுள் அல்ல என்று சொல்ல முடியாது. இன்ன குணமுடையவன்தான் கடவுள் என்று இன்றும் நிச்சயப்படுத்த முடியாது. ஆகையால் கடவுள் உருவமற்றவன்; குணமற்றவன்; என்றார்கள். அதனால் கடவுள் குணமற்றவன் உருவமற்றவன் என்றும் சொல்ல முடியாது. அப்படிச்சொன்னால் அது தவறு. நமக்குள்ள சிற்றறிவினால் எல்லா உருவங்களையும், எல்லா குணங்களையும் புரிந்துகொள்வது கஷ்டம். ஆகையால் நாம் ஒரு உருவத்தை வைத்துக்கொண்டு சில குணங்களையும் அதற்குப் பொருத்தி ஒரு வடிவத்தை சிருஷ்டித்துக் கொள்கிறோம். நமக்கு எட்டியமட்டும் புரிந்துகொண்டு அவ்வடிவத்தை ஆராதிக்கிறோம். மொத்தத்தில் ஒரு பகுதியைமட்டும் ஆராதித்தாலும் அது மொத்தத்துக்கும் சேரும்; மொத்தத்தில் ஒரு பகுதியானதால் விக்கிரகங்களையும், படங்களையும் வைத்துக்கொள்வது தவறல்ல. அவைகளுக்கு சக்தி உண்டா என்றால், ஏனில்லை? அது நம் மனோபாவத்தை ஒட்டி இருப்பது.

அவை கடவுளுடைய ஒரு பகுதியே என்பது நிச்சயமானபோது அவைகளுக்கு சக்திகள் உண்டாகும் என்பதில் தடை இல்லை.

படிப்பால் சந்தேகம் வளர்வதுமட்டும் அல்ல; விஞ்ஞானமே உண்டாகிறது. முறையான வழியில் யோசனை செய்து கல்வியால் கிடைத்த ஞானத்தை உபயோகித்தால் சந்தேகம் நீங்கிவிடுமே தவிர வளராது. நமது நாட்டில்மட்டும் அல்லாமல் மற்ற நாடுகளி லும் கூட மகாத்மாக்களும், மகரிஷிகளும், மேதாவிகளும் இருக்கிறார் கள்; உலகத்தில் மனிதன் எப்பகுதியில் இருந்தாலும் அவனது மனப்போக்கு ஒன்றுதான்; கடவுள் சிருஷ்டியில் ஒவ்வோர் அணு வும் உபயோகம் உள்ளதே; நமக்குத் தெரியாதவையும், நாம் அறி யாதவையும் பல விஷயங்கள். அவை நமக்குத் தெரியத் தெரியக் கடவுளின் பெருமையைத் தெரிந்துகொள்வோம். அப்பொழுது தான் நாம் நம் கடவுளுடன் சேர முடியும் என்பது தெளிவாகத் தெரியும். நாம் தக்க முறையில் நமதறிவை உபயோகிக்க வேண் டும். அதுமட்டுமல்ல, எவ்வளவு படித்தாலும் எவ்வளவு பட்டம் வாங்கினாலும் அவைகள் உத்தியோகத்துக்குத்தான் பயன்படும். ஞானச் செல்வத்துக்கு அவைகள் ஆதாரமாகாது என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். ஞானத்தைப் பெற விஞ்ஞானத்தை உபயோகிக்க வேண்டும்.

## பக்தியும் முக்தியும்

### துக்காராமின் உதாரணம்

'வேதங்களை அத்தியயனம் செய்தாலும் சாஸ்திர சித்தாந்தங் களை எழுத்துக்கெழுத்து அனுசரித்தாலும் என்னை அடைய முடி யாது. குற்றமற்ற உள்ளத்துடன்—ஒரே லட்சியத்துடன் என்னை சிந்திப்பவரே என்னை எளிதில் அடைவார்கள். நான் அப்படிப் பட்டவர்கள் உள்ளத்தில் இருப்பேன் என்றார். சிவகீதையில் பர மாத்மா.

ஆனால் இதுபோன்ற பக்தி மார்க்கங்களில் பல கஷ்டங்கள் வரலாம். எவ்வளவு ஆபத்துக்கள் வந்தாலும் உண்மையான பக் தன் தெய்வபக்தியை விடமாட்டான். துக்காராமின் வாழ்க்கை யால் இவ்விஷயம் நன்றாகத் தெரியும்.

மகாராஷ்டிரத்தில் தெஹு என்னும் கிராமத்தில் ராமசந்திர பட் என்னும் பிராமணர் ஒருவர் இருந்தார். அவர் பெரிய பண்டி தர். சநாதன தர்மத்தைக் கடைபிடிப்பவர். அதனால் துக்கா ராமுடைய கீர்த்தனைகள் ராமசந்திரபட்டை மிகவும் கலவரப்

படுத்தின. ஒருநாள் அவர் கிராம அதிகாரியிடம் சென்று இப்படிச் சொன்னார்: 'பிறப்பினால் துக்காராம் சூத்திரன். ஆனாலும் அவன் வேதங்களைக் கற்றதோடு கீழ்ஜாதியார் எல்லோருக்கும் புனித வேதங்களைக் கற்றுக்கொடுக்கிறான். மகரிஷிகள் ஏற்பாடு செய்த கர்ம யோகத்தை நிந்தித்து துக்காராம் பக்தியோகத்தை உபதேசிக்கிறான். தன் இனிய பாட்டால் பலரைத் தன்னுடன் சேர்த்துக் கொண்டு வைதீக மதத்துக்கு அபசாரம் செய்கிறான்''.

துக்காராமைத் தண்டித்து வைதீக மதத்தைக் காப்பாற்ற வேண்டுமென்று ராமசந்திரபட், கிராமாதிகாரியை வேண்டினார். அதன்மேல் துக்காராமை கிராமத்திலிருந்து விலக்க வேண்டுமென்று கிராமாதிகாரி உத்தரவு போட்டார்.

இவ்விஷயம் துக்காராமுக்குத் தெரிந்தது. அவர் ராமசந்திர பட்டின் உதவியையே நாடினார். அப்போது ராமசந்திரபட் இந்திராணி நதியில் ஸ்நானம் செய்துகொண்டிருந்தார். துக்காராமைக் கண்டவுடன் ராமசந்திரபட். கோபாவேசத்துடன் ''வர்ணாச்ரம தர்மங்களையெல்லாம் நீ கேவலப்படுத்துகிறாய். வேத சாஸ்திரங்களை அவமதிக்கிறாய். உன்னுடைய பஜனைகளினால் கேட்பவர்கள் பாவச் செயல்களை செய்யத் தயார் ஆகிறார்கள். நீ இனி கீர்த்தனைகளைப் பாடக்கூடாது'' என்று கர்ஜித்தார். துக்காராம் இச்சொற்களைக் கேட்டு மிகவும் கவலைப்பட்டார். ஆனால் அடக்கத்துடன், ''அப்படியானால் நான் இதுவரையிலும் பாடிய அபங்கங்களை என்ன செய்வது'' என்று கேட்டார். ''இந்திராணி நதியில் வீசி எறி'' என்று பட் உடனே பதில் சொன்னார்.

துக்காராம் துக்கத்தோடு தாம் இயற்றிய அபங்கங்கள் (கீர்த்தனைகள்) எல்லாவற்றையும் ஒரு கட்டாகக் கட்டி எடுத்துக் கொண்டு விட்டோபாவின் கோயிலுக்குச் சென்று இப்படிப் பிரார்த்தனை செய்தார். ''தேவா! அபங்கங்களைப் பாடும்படி ஒரு சமயத்தில் நீ எனக்கு உத்தரவு கொடுத்தாய். இன்று அவற்றை எல்லாம் இந்திராணி நதியில் எறியும்படி ராமசந்திரபட்டின் உருவில் நீயே எனக்குக் கட்டளை இடுகிறாய்'' என்று விட்டோபாவிடம் சொல்லிவிட்டு அந்த அபங்கக் கட்டை ஆற்றில் எறிந்துவிட்டு அங்கிருந்து போய்விட்டார்.

இச்செய்தி தெஹுவில் உள்ளவர்களுக்கும் அக்கம்பக்கத்து கிராமத்தாருக்கும் தெரியவந்தது. அன்றிரவு பலபேருக்கு விட்டோபா தோன்றி, 'ஆற்றிலிருந்து அபங்கங்களை எடுத்து துக்கா

ராமிடம் கொடுக்கவேண்டும்' என்று உத்தரவிட்டார். கிராமத்தினர் காலையில் எழுந்தவுடன் ஆற்றுக்குச் சென்று கீர்த்தனை கட்டைத்தேடி எடுத்துத் துக்காராமிடம் கொடுத்தார்கள்.

சில நாட்களுக்குப் பிறகு ராமசந்திரபட் ஒரு புண்ணிய க்ஷேத்திரத்துக்குப் போனார். அங்கே முஸ்லிம் பக்கிரி ஒருவர் ராமசந்திர பட் ஸ்நானம் செய்துகொண்டிருந்த கிணற்றுக்கு வந்தார். 'யாரை யா நீ?' என்று பட்டை அவர் கேட்டார். 'மிலேச்சருடன் பேச வேண்டி வந்துவிட்டதே' என்ற கோபத்துடன் பட் பக்கீரைப் பிடித்துத் திட்டினார். ஸ்நானம் முடியும் தருவாயில் பட்டுக்கு உடம்பெல்லாம் ஒரே எரிச்சல் தொடங்கிவிட்டது. அந்த எரிச்சல் பொறுக்க முடியாமல் செயலற்றுப்போய் ஞானேச்வர மடத்துக்குச் சென்றார். சிறிது நேரம் பிரார்த்தனை செய்துவிட்டுப் படுத்தார். தூக்கத்தில் ஞானேச்வரி பிரத்யக்ஷமாகி, 'துக்காராமை இம்ஸித்ததால் இந்தத் தாபம் அவருக்கு ஏற்பட்டதென்றும், துக்காராமிடம் சென்று அவனுடைய பாதத்தில் விழுவதைத் தவிர இத்தாபம் போக வேறு வழி இல்லை என்றும் சொன்னார்.

பட்டின் உள்ளம் சஞ்சலம் அடைந்தது. துக்காராமைச் சந்தித்துக் காலில் விழுவதற்கு வெட்கப்பட்டார். அவருடைய தாபம் குறையவில்லை; குறைவதாகவும் தோன்றவில்லை. தம் துன்பங்களை விவரித்து ராமச்சந்திரபட் துக்காராமுக்கு ஒரு கடிதம் எழுதினார். அதற்கு துக்காராம் இப்படி பதில்எழுதினார்: "தூயஉள்ளம் படைத்தவர்களுக்கு விரோதிகள் யாரும் இருக்கமாட்டார்கள். அவர்களுக்கு யாரிடமும் பகைமை இருக்காது. ஜீவராசிகளெல்லாம் அவர்களுக்குச் சமம்தான். நீங்கள் விட்டோபாவின் திருவடிகளை வணங்குங்கள்."

இந்தக் கடிதம் முழுவதையும் படித்து முடிக்குமுன் ராமச்சந்திர பட்டின் தாபம் குணமாகிவிட்டது. அவர் துக்காராம் ஒரு மகான் என்பதை உணர்ந்து அவரைத் தரிசிக்கப் புறப்பட்டார். இந்தச் செய்தியை அறிந்த துக்காராம் ராமசந்திர பட்டை எதிர்கொள்ளப் புறப்பட்டு வந்தார். ராமச்சந்திர பட்டைக் கண்டவுடன் வணங்கினார். பட்டும் துக்காராமைச் சாஷ்டாங்கமாக வணங்கி, "என்னை மன்னியுங்கள்" என்று வேண்டினார். இந்த மாதிரி உண்மையான பக்தன் எப்பொழுதும் பகவானுடைய சந்நிதியிலேயே இருப்பான். பக்தி இல்லாவிட்டால் முக்தி கிடையாது.

## பக்தி மார்க்கமும் – படிகளும்

மோட்சத்தைப் பெறப் பல வழிகள் உள்ளன. வழிகள் பலவாக இருந்தாலும் போய்ச் சேரும் இடம் ஒன்றுதான். நினைவுக்கு எட்டாத காலத்திலேயே இந்தியர்களுக்குப் பக்தி மார்க்கம் மிக அநுகூலமாக இருந்திருக்கிறது. அதனால்தான் நம்மவர்களுக்குப் பக்தியில் பற்று அதிகம். பக்தி மார்க்கத்தில் விடாது சாதனை செய்து பகவானைத் தரிசித்து முக்தியும் பெற்ற பாரதத்தினர் பலர் இருந்திருக்கிறார்கள். அம்மகா யோகிகளுடைய அடிச்சுவடுகளே காலப் போக்கில் நமக்கு வாரிசாக நிற்பவை. தினசரி வாழ்க்கையில் நாள் தோறும் துன்புற்றும் தீராத கஷ்டத்துடனும் தவிக்கும் மனித சமுதாயத்தைச் சரியான வழியில் பக்தி மார்க்கத்தில் செலுத்துவதற்கு அந்த மகாயோகிகளின் அடிச்சுவடுகள் நமக்கு உபயோகப் படுகின்றன. இப்படிப்பட்ட மகான்களுள் ஸ்ரீ சத்குரு சமர்த்த ராமதாஸர் ஒருவர். இவர் பக்தி முறையைப் போதித்தார்.

பக்தி மார்க்கத்தில் சிரவணம் முதல் படியாகும். சிரவணம் என்றால் பகவந் சரிதையையும் ஆத்மீக ஞானத்தையும் விவரிக்கும் வரலாறுகள் போன்ற கதைகளைக் கேட்டல். பக்தி மார்க்கத்துக்குச் சிரவணம் அடிப்படையானது. பக்தனுக்கு இது முதல் லட்சணம். தினந்தோறும் ஒவ்வொரு கணமும் வாழ்நாட்கள் முடியும்வரையில் பகவானுடைய லீலைகளையும் பாகவதக் கதைகளையும் பக்தன் கேட்க வேண்டும். அப்படிக் கேட்கக் கேட்க, அவையெல்லாம் பக்தனுடைய அறிவோடும் வாழ்வோடும் கலந்து விடுகின்றன.

கீர்த்தனை இரண்டாவது படி. பகவத் கீர்த்தனைகளைப் பாடுகிறவர்களோடு அந்தக் கீர்த்தனைகளைக் கேட்பவர்களும் பக்தியால் ஆவேசம் போன்ற ஊக்கம் பெறுகிறார்கள். இந்தமுறையில் பெண்ணும் பொன்னும் பெரிய எதிரிகள். பக்தன் சங்கீதத்துக்கும் வாத்தியங்களுக்கும் மயங்கிக் கடவுளை மறந்துவிடக் கூடாது. அவற்றின் துணையோடு பக்தியை மேலும் வளர்த்துக்கொண்டு மன உறுதியைப் பழக வேண்டும்.

ஆத்மீக முறையில் முன்னேறப் பயன்படும் சாதனங்களில் ஸ்மரணம் மற்றொன்று. ஆத்மீக ஞானம் முழுவதும் மனிதனுடைய சக்திக்கு அப்பாற் பட்டதே. சத்குருவின் கடாக்ஷத்தால் மட்டுமே அந்த ஞானத்தைப் பெறமுடியும். எப்பொழுதும் பகவன் நாமாவை நினைத்துக் கொண்டிருந்தால் பக்தி மார்க்கத்தில் எதிர்ப்படும் கஷ்டங்கள் எல்லாவற்றையும் தாண்டுவதுடன் பகவானைத் தரிசிக்கவும்

இயலும். குருபாத பூஜையும் சேவையும் ஆத்மீக உயர்வுக்குத் தூண்டிவிடும். பிரத்தியக்ஷமாக குருபாத சேவை செய்ய இயலாத போது மானசீகமாகச் செய்யலாம். குருவை நினைத்துச் சாஷ்டாங் கமாக வணங்க வேண்டும்.

அர்ச்சனை அதாவது தேவ பூஜை மற்றொரு வகையான பக்தி. ஈசுவர சாட்சாத்காரம் பெற வேண்டுமென்ற ஆசை தீவிரமானுல் அமைதியான இதயத்துடனும் சஞ்சலமற்ற உள்ளத்துடனும் தெய் வங்களின் மூர்த்தங்களுக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்ய வேண் டும். மனதார முறைப்படி பூஜை செய்ய வேண்டும்.

நமஸ்கார பக்தி முறையும் அர்ச்சனை போன்றதே கடவுள் முன்னிலையில் அல்லது கடவுளுக்குப் பிரதிநிதியான விக்கிரகங்களின் சந்நிதியில் அல்லது தெய்வசொரூபத்துக்கு சாஷ்டாங்க நமஸ்காரம் செய்யவேண்டும். இந்த நமஸ்கார முறையால் அடக்க ஒடுக்கமும் சேவை செய்யும் மனப்பான்மையும் ஆத்மார்ப்பணம் முதலிய குணங்களும் பழகும். மனம் பகவானிடம் ஐக்கியமாகும்படிச் செய் யக் கூடிய பகவத் பக்தர்களுக்குச் சேவை செய்வதால் 'தாஸ்யவிதி' என்னும் பக்தி மார்க்கத்தை அநுசரிக்கலாம். அடியார்களுக்குச் செய்யும் சேவை நிஜமான சேவையாகும்.

பகவானுடன் சிநேகம் செய்து பக்தி செய்வது ஸக்யதா என்ற பக்திமுறை. இது கஷ்டமான முறை. கொடுத்து வாங்கும் முறை யில் ஒருவருடன் ஒருவர் நட்புக் கொள்கிறுர்கள். பகவானுடன் நட்பு கொள்வது அப்படியன்று. நம்முடையவை என்னும் எல்லா வற்றையும் பகவத்தர்ப்பணம் செய்யவேண்டும். அவ்வளவு மன உறுதியும் தீவிரமான நிச்சயமும் அதற்கு வேண்டும். ஆபத்துக் காலத்தில் வெறும் மனிதர்களான நண்பர்கள் மறந்துவிடலாம். ஆனுல் முதலில் ஏற்படும் சில தடைகளை லட்சியம் செய்யாமல் நமது தியாகங்களை பகவான் கவனிக்காமல் இருப்பது போலத் தோன்றி னுலும் உண்மையில் கருணை உள்ளம் படைத்த பகவான் எப்பொழு தும் நம்மைக் கவனித்துக் கொண்டேயிருப்பான். அவ்வளவு பொறுமை ஸ்வாபமுள்ள பக்தனுக்கு பகவான் தன் அன்பை அலட் சியம் செய்வதுபோலும் ஏற்கவே இல்லை என்றுலும் அல்லது ஏற்றுக் கொண்டு பேசாமல் இருப்பது போலும் தோன்றலாம். அந்தக் கருத்து ஏற்படும்போது வெறுப்பும் ஏமாற்றமும் அதிகரிக்கும்; கோபம் வரும். இவ்வளவு சிறிய விருப்பங்களைக் கூட நிறைவேற்ற வில்லையே என்று கடவுளைத் துவேஷிக்கவும் தோன்றும். கடைசியில் பகவானுக்கு எதிரியாகக் கூட மாறுவான். ஆனுல் கடவுளுடன் செய்யும் நட்பு அழியாதது. அழிவை அறியாதது.

கடவுளுடைய அருள் எல்லையற்றது. ஏமாற்றமும் வெறுப்பும் அடைய வேண்டி நேர்ந்தாலும் லட்சியம் செய்யாமல் தைரியத்துடன் கஷ்டங்களை எதிர்க்கவேண்டும். அமைதியாகத் துன்பங்களை அனுபவிக்க வேண்டும். சித்தம் கலகலத்துப் போகவிடக் கூடாது. துன்பங்களும் ஏமாற்றங்களும் ஆத்மீக வாழ்க்கையின் ஒரு பகுதியாகும். அவை இல்லாவிட்டால் ஆத்மீக வாழ்க்கைக்கு உரைகல் இருக்காது. பரமாத்மாவுடன் சிநேகம் செய்வதற்கு உபயோகப்படும் சூத்திரம் பக்தனுடைய கையில்தான் இருக்கிறது. அந்தக் கரணத்திலும் தினசரி வாழ்விலும் உள்மூச்சு வெளிமூச்சுகளிலும் கடவுள் இருக்கிறார். அசையாத பக்தி வேண்டும். குற்றமற்ற மனத்தால் கடவுளை நேசிக்கவேண்டும். நம் செயல்கள், எண்ணங்கள் மற்ற விவகாரங்கள் எல்லாமே தெய்வச் செயலுக்கு உட்பட்டவை. ஒளிவு மறைவு இல்லாத உள்ளத்துடன் மனப்பூர்வமாகக் கடவுளை எவ்வளவு நேசிக்கிறோமோ அவ்வளவுக்கு அவர் அருகில் இருப்போம். அவ்வளவு சிநேக பாவத்துடன் பரமாத்மாவை நேசிக்கும் நிலையில் அவரே நமக்குத் தாய், தந்தை, நண்பர் எல்லாம் ஆவார்.

அகங்காரத்தைத் தாண்டி பரமாத்மாவுடன் ஐக்கியம் அடைவதே ஆத்ம நிவேதனம். ஆத்மீக வாழ்க்கையில் இது மிக உயர்ந்த நிலை. பரமாத்மாவுடன் ஐக்கியம் அடைய வழிகள் பல இருந்தாலும் ஓயாமல் சிந்தனை செய்யும் வழி மிகச் சிறந்தது. பகவானுடைய பவித்ர குணங்களையே எப்போதும் அனுசந்தானம்(சிந்தனை) செய்ய வேண்டும். அப்படிச் செய்து வந்தால் இரண்டு என்ற பாவம் போய் ஜீவாத்மா பரமாத்மாவில் கலக்க, அத்வைத பாவம் பிறக்கும். இந்த அத்வைத அனுபவத்தால் பக்தன் உள்நோக்கு உடையவனாகி பகவானுக்குப் பின்னும் நெருக்கத்தில் செல்லுகிறான். வாழ்க்கை ஒவ்வொரு கணமும் தெய்வ அநுபூதியுடன் வாழ்ந்த மகாயோகிகளுள் ஸ்ரீ சாயிபாபா ஒருவர். பயமோ தயக்கமோ இல்லாமல் தைரியத்துடனும் நம்பிக்கையுடனும் நிறைந்த உற்சாகத்துடனும் சக்தியுடனும் பரிபூரணமான தருமநெறியில் நடந்து கொள்வதற்கு ஸ்ரீ ஸாயி பகவான் உதவுவாராக.

தற்காலத்தில் இம்மை வாழ்க்கையின் தளைகளுள் அகப்பட்டுக் கொண்டவர்களுக்கு; மதம் (சமயம்) யோசனைகளை உருவாக்கவும் முடியாது. அவர்களைக் கவரவும் முடியாது. சத்தியத்தில் அசைக்க முடியாத நம்பிக்கை வைப்பதே மதம். பரமாத்மாவின் குணவாசகங்களில் சத்தியம் ஒன்று. அந்த பரமாத்மாவிடம் ஏற்படும் ஒரு மன நிலையே நம்பிக்கை. அது தனி மனிதனைப் பொறுத்தது. நம்பிக்கையானது வெளிவிஷயங்களிலிருந்து முழுதும் விடுபட்டதன்று. பரமாத்மா இதற்கு மாறுபட்டது. பரமாத்மாவின் விஷயத்தில்

நமது ஈடுபாடு நமது இதயப் போக்குத் தொடர்புள்ள நம்பிக்கை, பரமாத்மாவை இதயத் தலைவனாக நேசித்தல் ஆகியவை ஒரு மனிதனுடைய நடவடிக்கையையும் மனப்போக்கையும் ஆதாரமாகக் கொண்டிருக்கும். கள்ளமற்ற உள்ளத்துடனும் நல்ல நடத்தையுடனும் எந்த நிபந்தனையுமில்லாமல் அப்பரமாத்மாவுக்குப் பரிபூரணமாக வசமாகிவிடுவதுதான் நம்பிக்கை. பகவானுடைய அருளுக்கும் காப்புக்கும் பக்தி பூர்வமாய் அடங்கிப் போவதே நம்பிக்கை.

நமது யோசனைகளையும், கொள்கைகளையும், ஆசைகளையும்பற்றி 'இது இப்படித்தான்' என்று வரையறுத்துச் சொல்ல முடியாது. ஞானமும் சாதனையும் ஓரளவு மனத்தை அமைதி பெறச் செய்து இதயத்தை நிலைபெறச் செய்ய முடியும். ஞான நெறியின் மேடு பள்ளங்கள் பலவற்றைக்குறித்து எச்சரிக்கையாக இருக்கவேண்டும். அசுரர்கள் அதிவிவேகிகள்; புத்தியற்றவர்களல்ல. அவர்களுடைய தவறான வழிகள்தான் அவர்களை அழிவுப்பாதையில் செலுத்தியது. ஸ்ரீ சாயி எப்பொழுதும் இவ்விஷயத்தைச் சொல்லிக்கொண்டே இருந்தார். ஞானியை அவர் ராமசீதாப் பழத்துடன் ஒப்பிட்டது இவ்விஷயத்தில் மறக்க முடியாத ஒன்று. சரியான கருத்தை வெளியிடுவது இந்த உபமானம்.

பக்தியோடு கூடிய நம்பிக்கை ஆராதனைக்குச் சிறப்பான ஒரு சாதனம் என்று ஸ்ரீ சாயி பாபா சொல்லுவார். பல வஸ்துக்களை—விக்கிரகங்கள், பாதுகைகள், பாடங்கள் முதலியவற்றை—ஆராதிப்பதைப்பற்றி அவர் குறிப்பிட்டார். அதுபோன்ற ஆராதனை தக்கதே என்றார். ஞானத்தைக் கொடுக்கும் குருவைத் தாழ்த்தவில்லை. குருவும் ஞான தாதா; நம்பிக்கையை உறுதிப்படுத்தி நிலைக்கச் செய்பவர். ஸ்ரீ சாயி பாபா பக்தனைச் சீதாப் பழத்துடன் ஒப்பிட்டார்.

நாம் போக நினைத்த இடத்துக்குச் செல்லும் வழி செப்பனிடப்பட்டதல்ல. மேடு பள்ளங்கள், கொடிய விலங்குகள், பசித்த ஓநாய்கள், புலிகள் ஆகியவற்றால் நிறைந்தது என்று ஸ்ரீசாயி எச்சரித்தார். இந்த ஆபத்து நிறைந்த வழியில் சென்று குறிப்பிட்ட இடத்தை அடைவதற்கு குருவின் துணை தேவை என்று பாபா சொன்னார். ஞானத்தை சம்பாதிப்பது அதிகமாகக் குருவை ஆதாரமாகக் கொண்டதுதான்.

ஞானத்தைப் பெற விரும்புகிறவர்களுக்குக் குரு கிடைத்தால் மட்டும் போதாது. அவருடைய திருவடிகளின் கீழேயே எல்லாவற்றையும் கற்றுக்கொள்ளும்படியான குரு கிடைக்கவேண்டும். அப்படிக் கிடைத்தால் அது சாதகனுடைய அதிர்ஷ்டம்தான்.

கள் எந்த வேலையைத் தொடங்கினாலும் முதலில் சரியான வழியில் அழைத்துச் செல்லவேண்டும் என்று குருவை பிரார்த்தித்துக்கொள் வார்கள். குருவின் ஆதரவில் முழுவதும் அடங்கிப் போகக்கூடிய மனத்தையும் சங்கற்பத்தையும் தயார் செய்துகொள்வது முக்கியம். நாம் குருவை எந்த நம்பிக்கையுடன் நெருங்குகிறோம், குருவின் திருவடிகளை எப்படிப்பட்ட இருதயத்துடன் பற்றிக்கொள்கிறோம் என்பவை மிக முக்கியம். குருவின் கடாக்ஷத்தைப் பெறுவதற்கு அன்பு, பக்தி, அடக்கம் எல்லாம் அவசியம்.

நம் தேவைகளும், ஆசைகளும் உடனே பூர்த்தியாகாமல் இருக்கலாம். அதனால் ஏற்படும் ஏமாற்றமும் தோல்வியும் நம்மை குருவை விட்டுவிடும்படி தூண்டலாம். நிஜமான பக்தன் இவை களுக்கெல்லாம் பின்வாங்கமாட்டான். அவனுடைய பக்தி பெருகுமே தவிர குறையாது. ஸ்ரீ சாயிபாபா பலமுறை தம் குருவைப் பற்றிச் சொல்லி இருக்கிறார், மனிதர்களுடைய முன்னேற்றத்துக்கும், ஊக்கத்துக்கும் தமது குரு செய்த சேவையைப் பற்றியும் விவரித்துச் சொல்லி இருக்கிறார். நம்பிக்கை, பக்தி, ஆராதனை முதலிய விஷயங்களில் அவர் பழமைப் பிரியர். ஸ்ரீ காவ்லே பட்டீல் பழைய தெய்வ விக்ரகங்களை அகற்றிவிட்டுப் புதிய விக்கிரகங்களைப் பிரதிஷ்டை செய்யவேண்டுமென்று முயன்றபோது அந்த முயற்சியை மறுத்ததோடு தடுத்தும்விட்டார். குருவைப்பற்றிய விஷயத்தில் நம் நெருங்கிய—உயிரோடு கூடிய தெய்வமான ஸ்ரீ சாயிபாபா இப்படிச் சொன்னார். ''மற்ற குருமாரின் சிறப்பு எப்படியிருந்தாலும் நீ உன் குருவுக்கு மட்டுமே கட்டுப்பட்டிருக்க வேண்டும், எந்த நிலையிலும் உன் குருவை விடாமல் அவருக்கே உன் பொறுப்புக்களை எல்லாம் ஒப்படைக்க வேண்டும்.''

குரு நமக்குப் போதிக்கும் விஷயங்களும், உபதேசிக்கும் மந்திரங்களும் பிரதானம் அல்ல. குரு சாந்நித்யம், அவரோடு சேர்ந்திருக்கும் சந்தர்ப்பம், அவர் நோக்கம் அறிந்து செயலாற்றுதல், பக்தியோடு அவரை நேசிப்பது இவைகளே குருவின் கிருபைக்கு நம்மை ஆளாக்கும். குருவின் சாந்நித்யமே நமது இதயத்தை ஊக்குவித்து மனத்தை மலரச் செய்து நம்மை அறிஞனாகவும் சாதுவாகவும் செய்கிறது. தமது குருவைப்பற்றியும், அவருடைய மகிமையைப்பற்றியும் பாபா இப்படிச் சொன்னார். ''பன்னிரண்டு ஆண்டுகள் நான் குருவின் சமூகத்தில் இருந்தேன். என்னிடம் அவர் காட்டிய பேரன்பையும் எல்லையற்ற அருளையும் நான் எப்படி வருணிப்பேன்! அவர் முன் நின்று அப்படியே அவரையே ஊடுருவிப் பார்த்துக்கொண்டிருப்பேன். இருவரும் பேரானந்தம் பெறுவோம். நான் வேறு எதையும் லக்ஷியம் செய்யவில்லை. எதற்காகவும் ஏங்கவில்லை. பசி

தாகங்கள்கூட இல்லாமல் செய்த அவருடைய முகத்தை அன்பால் அபிஷேகம் செய்வேன். நான் எப்பொழுதும் குருவையே தியானித்துக் கொண்டிருந்தேன். மற்ற எதையும் நினைக்கவில்லை. நான் குருவிடமிருந்து எதையும் எதிர்பார்க்கவில்லை. தக்ஷிணையை விரும்பவில்லை. மேலுக்கு எதிலும் பட்டுக்கொள்ளாததுபோல் இருந்தாலும் என்னை எப்பொழுதும் மறக்கவில்லை. அக்கறை காட்டாமல் இருக்கவில்லை. ஒரு பார்வையாலேயே என்னை கவனித்துக்கொள்ளுவார். அவர் எனது காதில் எந்தவித மந்திரமும் ஓதவில்லை. அவருடைய அருளாலேதான் நான் இந்த நிலையைப் பெற்றேன். எண்ணங்களையும் கொள்கைகளையும் முழுவதும் குருவுக்கு சொந்தமாக்கி, நமது எண்ணங்களுக்கும், கொள்கைகளுக்கும் அவரையே பொருளாக செய்தால் மகோன்னத லட்சியம் ஆன பரமாத்மாவை அடைவோம். எனது குரு இந்த சத்தியத்தையேதான் எனக்கு போதித்தார். நாலு சாதனைகளும் ஆறு சாஸ்திரங்களும் தேவையில்லை. குருவிடம் முழுநம்பிக்கை இருந்தால் போதும்.''

ஸ்ரீ சாயிபாபா இப்படிச் சொன்னார்: ''குருவைத் தவிர மற்ற எல்லாவற்றையுமே மறந்து, அவரைப் பார்த்து ஆனந்தம் அடைவேன். என் வாழ்வெல்லாம் என் பார்வையில்தான் இருக்கிறது''. நிசப்தம் குடிகொண்ட இடத்தில் அன்பு நிறைந்த இதயத்தாலும் மௌன தியானத்தாலும் ஒருமுகப் பக்தி இவைகளாலும் ஸ்ரீ சாயி பாபா இந்த மகோன்னத நிலையை அடைந்தார்.

ஸ்ரீ சாயிபாபாவின் சொற்கள் பக்தனுடைய மனத்திலுள்ள தீவிரத்தையும் உள்ளத்தின் ஒருமுகப்பாட்டையும் வெளியிட்டு, பக்தன் எவ்வளவு உயர்ந்த சிகரங்களுக்குப் போக முடியும் என்பதை விவரிக்கின்றன. குருவின் நிழலின்கீழ் பக்தனுக்கு எப்பொழுதும் ஆனந்தம்தான்.

பரமாத்மா எப்பொழுதும் பக்தர்களுடன் கூடவே இருப்பார். இவ்வுண்மையை நிரூபிக்க உதாரணம் வேண்டுமா? மனிதர்களால் துன்புற்று வேதனைகொண்ட கபீர், ராமதாசர் முதலிய சிறந்த பாகவதர்களின் கதைகளால், பகவான் தம்முடைய பக்தர்களை மனிதர்களிடமிருந்து எப்படிக் காப்பாற்றினார் என்பதை நாம் அறிந்துகொள்ளவில்லையா? தேவர்கள் எப்பொழுதும் அசுரர்களிடம் வெற்றியே அடைந்து வந்தார்கள் என்பது நமக்குத் தெரியாத விஷயமன்று. நாம் உணராத சத்தியமும் அன்று. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா தம் பிரதிக்ஞைக்கே பங்கம் வந்ததையும் லட்சியம் செய்யாமல் அர்ஜுனனைக் காக்க எப்படித் தேரிலிருந்து குதித்தார் என்பது நமக்குத் தெரியும்.

குரு க்ஷேத்திரத்தில் பாரதப்போரில் பங்குகொள்ள மாட்டேன் என்றும் ஆயுதம் எடுக்க மாட்டேன் என்றும் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா பிரதிக்ஞை செய்திருந்தார். கௌரவர்களுக்கு அப்படி வாக்குக் கொடுத்திருந்தார். போரில் மூன்றும் நாள் பீஷ்மர் அர்ஜுன னுடைய படைகளைச் சின்னபின்னமாக்கி, அவ்வளவு தைரியசாலி யையே திடுக்கிட வைத்துவிட்டார். பார்த்தன் தன் சிக்கலான நிலைமையை மௌனமாகவே பகவானிடம் தெரிவித்துக் கொண் டான். தேரைச் செலுத்திய கண்ணபிரான் தம் பக்தனுடைய துன்பத்தைப் பொறுக்காமல் தேரிலிருந்து குதித்து சக்கரத்தை எடுத்துக்கொண்டு பீஷ்மரை நோக்கிப் பாய்ந்தார். தாம் இப்படி நடந்துகொள்வதால் சொன்ன சொல்லை மீறியதாகும் என்ற நினைவே அவருக்கு வரவில்லை. தாம் எப்படிப் போனாலும் சரி, தம் பக்தனைக் காப்பதுதான் பகவானுடைய ப்ரதிக்ஞை. இந்த நிகழ்ச் சியானது பக்தனுடைய உள்ளத்தையும் படம் பிடித்துக் காட்டு கிறது. தான் துணையின்றி ஆபத்தில் இருந்தாலும் தன் இறை வனுடைய பிரதிக்ஞை பங்கம் ஆவதை, பக்தனாகிய அர்ஜுனனால் பொறுக்க முடியவில்லை. உள்ளம் சம்மதிக்கவில்லை. பீஷ்மரோ, தம் ஆண்டவன் தம்மைக் கொல்லத்தான் வருகிறார் என்று அறிந் தும் ஆனந்தக் கண்ணீர் நிறைந்த பார்வையுடன் இரு கைகளையும் நீட்டி மனப்பூர்வமாக வரவேற்றார்.

இதுதான் பக்தி மார்க்கம். பக்தர்களுடைய விஷயத்தில் பக வான் அவ்வளவு அக்கறை கொண்டிருக்கிறார். இந்தச் சந்தர்ப்பத் தில் ஸ்ரீ சாயிபாபா சொன்ன சொற்களைத் திரும்பவும் சொல்லு வதைத் தவிர வேறு வழி இல்லை. ‘‘நான் என்ன செய்துகொண்டி ருந்தாலும் எங்கே இருந்தாலும் என் பார்வை என்னை நேசிப்பவர் கள் மேலேயே இருக்கும். நீங்கள் எப்பொழுது எங்கே என்னை நினைத்தாலும் அப்பொழுது அங்கே நான் இருப்பேன் என்பதை மட்டும் நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். என்னைத் தியானம் செய் பவர் அருகிலேயே நான் இருப்பேன். என்னை நினைத்து எல்லாவற் றையும் என்னிடம் சமர்ப்பித்துவிட்டால் அப்படிப்பட்ட பக்தனுக் குக் கடமைப்பட்டவனாகிறேன். எனக்குச் சமர்ப்பிக்காமல் உணவு சாப்பிடாத பக்தனுக்கு நான் அடிமை. நான் பக்தர்களுக்கு வசப் பட்டவன். நான் உங்கள் நடுவில் இருப்பேன். உங்களுக்குள்ளே யும், வெளியேயும் சுற்றிலும் இருப்பேன்.’’

இப்படிக் கொடுத்த வாக்குறுதிகளை ஸ்ரீ சாயிபாபா, எழுத்துக்கு எழுத்து உண்மையாக்கி பக்தர்களைக் காத்த நிகழ்ச்சிகள் அவரு டைய திவ்ய சத் சரிதையில் நிறைந்திருக்கின்றன.

# பக்தன்

"ஏ உத்தவா! யோகம், ஞானம், புனிதத்தன்மை, தவம், பழக்கம், உபந்நியாசம் ஆகியவற்றுள் எதுவும் பக்தி கவருவதுபோல் கவருவதில்லை." என்று ஸ்ரீ சைதன்னிய மகாப் பிரபு தம் கடைசிக் கட்டளையில் பதினோராம் பிரகரணத்தில் இருபதாம் சுலோகத்தில் சொல்லியிருக்கிறார்.

ஆத்மீக மார்க்கத்தில் புகுவதே மனிதர்களின் உயர்ந்த கொள்கை; இந்தக்கொள்கை கைகூடுவதற்கு மனிதன் குறைந்த பட்சம் சில சூத்திரங்களுக்குக் கட்டுப்பட வேண்டும்.

மற்ற மகாத்மாக்கள் எல்லோரும் சொன்னது போலவே சாயி பாபாவும் நற்குணங்களுக்குள் சிறந்தது வணக்கம் என்று சொல்லியிருக்கிறார்கள். தம் பக்தர்களிடம் ஸ்ரீ சாயி இப்படிச் சொல்லுவது வழக்கம். "நான் உங்கள் அடியார்களுக்கும் அடியேன். உங்களுக்குக் கடமைப்பட்டவன். தங்களுடைய தரிசனத்தால் புனித அநுபூதியைப் பெற்றேன். தங்களுடைய பாத தரிசன பாக்கியம் எனக்குக் கிடைக்கச் செய்வது தங்களுடைய பரிபூரண அருளின் பயனே. நான் தங்களுடைய மலத்தில் உள்ள ஒரு புழு." தான் ஒரு சேவகன் என்றும் சிருஷ்டி ஈசுவரனுடைய விவகாரம் என்றும் யார் எப்பொழுதும் நினைக்கிறானோ அவன்தான் உண்மையான பக்தன். உலக விவகாரங்களின் தொடர்பையும் அகம்பாவத்தையும் விடுவது எளிதன்று. நான், எனது என்னும் எண்ணம் அஞ்ஞானத்தால் உண்டாவது. இவ்வுலகத்தில் உள்ள ஒவ்வொரு பொருளும் ஈசுவரனுடையதே என்றும், ஈசுவரன்தான் அவற்றின் எஜமானன் என்னும் எண்ணம் ஞானத்தால் உண்டாவது. இந்தப் பாவம் வரும் வரையில் நாம் ஈசுவரனுடைய சேவகர்கள் என்றும் அடியவர்கள் என்றும் நினைத்துக்கொண்டிருக்க வேண்டும். கீழே காணும் உதாரணத்தின்படி இந்தப் பாவத்தில்கூட அகம்பாவம் இருப்பது தெளிவாகிறது. இந்த அகம்பாவம் உண்மையான ஞானம் ஏற்படும் போது மாயமாய் மறைந்துவிடும். ஒரு சமயம் ஸ்ரீ ராமன், ஆஞ்சநேயரை "என்னை நீ எப்படிப் பார்க்கிறாய்?" என்று கேட்டார். அதற்கு அனுமார் இப்படி பதில்சொன்னார். "ஏ ராமா, என்னுள் நான் என்னும் நினைவு இருக்கும் வரையில் நீ பரிபூரணமாயும் நான் ஒரு பகுதியாகவும், நீ எஜமானனாகவும் நான் சேவகனாகவும் காண்கிறேன். ஆனால் ராமா! எனக்கு சத்தியமான ஞானம் ஏற்படும்போது நீயே நான் என்றும் நானே நீ என்றும் நினைக்கிறேன்." 'பக்தா! உன் வாழ்வில் முதல்படி அடக்கம்!

பக்தனுடைய இரண்டாம்படி ஆத்மார்ப்பணம் — அதாவது தன்னை ஒப்படைத்துவிடுதல். ஐம்புலன்களையும் கூட பக்தன் ஈசுவரனிடம் ஒப்புவித்துவிட வேண்டும். அப்பொழுதுதான் ஈசுவரனுடைய சொந்தச் சேவகன் ஆக முடியும். அப்பொழுது அவனைப் போஷித்துக் காக்கும் பொறுப்பை ஈசுவரன் ஏற்றுக்கொண்டு விடுகிறார்.

பகவத் கீதையில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் அர்ஜுனனிடம் "என்னையே நம்பு; உன்னைப் பாவங்களிலிருந்து விடுவிக்கிறேன்" என்று சொன்னார். ஸ்ரீசாயிபாபாவும், "உங்கள் பாரத்தையெல்லாம் என்மேல் போடுங்கள்; அவற்றை நானே சுமக்கிறேன்" என்று கூறவில்லையா? அப்போது பக்தன் பாப துக்கத்திலிருந்து கரையேறுவான். ஏனென்றால் தான் செய்யும் ஒவ்வொரு செயலையும் பயனை விரும்பாமல் செய்வதால் அவை எல்லாம் ஈசுவரனுடைய செயல்களே ஆகும். ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் இப்படிச் சொல்லியிருக்கிறார்: "பக்தனே பூர்த்தியாக ஆத்மார்ப்பணம் செய்தாயானால் ஈசுவரனிடமிருந்து உன்னை வேறுபடுத்துகிற வெட்கம், பயம், பகை என்னும் மூன்று திரைகளும் விழுந்துவிடும்". பக்தன் தன்னுடையனவாகிய எல்லாவற்றையும், அதாவது உடல், மனம், ஆத்மா, குடும்பம், ஐசுவரியம் என்ற எல்லாவற்றையும், ஈசுவரார்ப்பணம் செய்தால் கவலை, துன்பம் முதலிய துக்கங்களிலிருந்து விடுதலை பெறுவான். அப்பொழுது எல்லாப் பொருள்களிலும் ஈசுவரனையும் ஈசுவரனிடத்தில் எல்லாப் பொருள்களையும் காண்பான். சிருஷ்டியில் உள்ள ஒவ்வொரு பொருளையும் நேசிப்பான். அவையெல்லாம் ஈசுவரனைத் தெளிவாகக் காட்டுவதால் அவனுடைய செயல்களெல்லாம் ஈசுவரனுடைய தூண்டுதலால் நடப்பவையே. இந்த ஆத்மார்ப்பணத்தின் பயன் என்ன என்றால், ஈசுவரனிடத்துக் குறைவற்ற பக்தியும் சிருஷ்டியில் அடங்கிய ஒவ்வொருவரிடமும் அளவற்ற அன்பும் ஏற்படும். அப்படிப் பட்ட பக்தனுக்கு, வாழ்க்கையில் எந்தவிதமான ஏமாற்றமோ, மரண பயமோ உண்டாகாது. அவன் சந்தேகத்துக்கு அப்பாற்பட்டவன். அவன் சாந்தமும் ஸ்திரத்தன்மையும் பெற்று மனிதருள் மாணிக்கம் ஆவான். பணக்காரர் வீட்டு வேலைக்காரி போல் அவன் உலகத்தோடு எவ்வித சம்பந்தமும் இல்லாமல் இருக்கத் தெரிந்தவன்.

இளம்பாலகனாகிய பிரகலாதனை அவன் தந்தை படாத பாடு படுத்தி வைத்தான். அவன் மேல் மத யானைகளை ஏவினான். விஷப்பாம்புகளைக் கடிக்கவிட்டான். மலையுச்சியிலிருந்து உருட்டித் தள்ளினான். விஷக் காற்று நிறைந்த அறையினுள் அடைத்து வைத்தான். ஆனால் பிரகலாதனுக்கு மரணமோ பயமோ ஏற்பட

வில்லை. அதற்குக் காரணம் அவனுடைய உறுதியான தெய்வ பக்திதான்.

ஸ்ரீசாயிபாபா இப்படிச் சொல்லிக் கொண்டிருப்பார். ''யாருக்கு ஈசுவரனிடம் நம்பிக்கை ஏற்பட்டதோ அவனுக்கு முடியாதது ஒன்றும் இல்லை.'' பக்தியிற் சிறந்தது மற்றொன்றில்லை. பகவானாகிய ஸ்ரீராமன் கடலைத் தாண்ட இலங்கைக்குப் பாலம் அமைக்கவேண்டி வந்தது. ஆனால் ஸ்ரீ ராமனிடம் நிறைந்த பக்தி கொண்ட அநுமானால் ஒரேதாவலில் கடலைத்தாண்டி இலங்கையை அடைய முடிந்தது. இந்த நிகழ்ச்சிகள் பக்தியின் பெருமையைப் பறை சாற்றுகின்றன.

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர், ''மனிதனுடைய தியாக சக்தியைப் பொறுத்தே அன்பும்; அதைப் பொறுத்தே லாபமும் அமையும்; எல்லாவற்றுக்கும் பக்திதான் ஆதாரம்'' என்றார்.

மீராபாய் தனக்களித்த விஷத்தை ஒரே மூச்சில் குடித்துவிட்டாள். ஹரிநாமத்தை நினைத்துக்கொண்டு அடிபட்டுக் கொண்டே தன்னை அடித்தவர்களை மன்னித்து விடும்படி பகவானை வேண்டிக் கொண்டாள் அப்படி ஈசன் ஒருவனிடம் பக்தி செலுத்துபவர்கள் பிற மதத்தினருக்குக்கூட எப்படிப்பட்ட கேடும் நினைக்க மாட்டார்கள். ஒருவனுடைய பக்தி சலனமற்றிருந்தால் அவன் சிருஷ்டியில் உள்ள ஒவ்வொரு பொருளிலும் ஈசுவரனையே காண்பான். எல்லாம் ஈசுவரமயமாகத் தோன்றும்.

பக்தர் தன்னைப் பீடிப்பவர்கள் விஷயத்தில் காட்டும் பொறுமை கோழைத்தனம் ஆகாது. பக்தனுடைய இதயம் பொறுமை, தயை, அன்பு, அமைதி என்னும் நற்குணங்களால் நிரம்பியிருக்கும். அவன் பிறருக்குக் கேடு வருவதை விரும்பவே மாட்டான். அவசியமானால் தானே எல்லாத் துன்பங்களையும் அனுபவிப்பான். தனக்கு அபகாரம் செய்தவனுக்கும் உபகாரம்தான் செய்வான். பொறுமை, சாந்தி, தயை, அடக்கம் முதலியன வீரனுக்கு ஏற்ற குணங்கள். ஸ்ரீ சாயிபாபா சொன்னதுபோல் பக்தனுடைய வீரத்துக்கு இதுவே இலக்கணம்.

பக்தர்களுள் பல வகையினர் இருக்கிறார்கள். சிலர் வெகு கடினமான தியாகமும் உழைப்பும் நிறைந்த வழியைப் பின்பற்றுவார்கள். அவர்கள் நீண்ட யோக, தியான மார்க்கங்களைக் கையாண்டு முக்தி பெறுவார்கள்.

சிலர் ஜீவன் முக்தர்கள். அவர்கள் பிறந்தது முதலே ஆத்மீக ஞானம் பெற்றிருப்பார்கள். அவர்கள் ஸ்ரீ சாயிபாபா போன்றவர் கள். உலகத்தைக் கரையேற்ற அவர்கள் அவதரிப்பார்கள்.

கிருபாசித்தர்கள் என்பவர் மற்றொரு வகையினர். அவர்கள் மேல் ஈசுவரனுடைய அருட்பார்வை கேட்காமலேயே பரவும். அவர் கள் வெகு விரைவிலேயே திவ்ய சிருஷ்டியையும், ஞானத்தையும் பெறுவார்கள். நிஜமான பக்தன், ஈசுவரன் இல்லாமல் தான் இருக்க மாட்டான், பக்தன் இல்லாமல் ஈசுவரனும் இருக்கமாட்டான். அப்படிப்பட்ட பக்தனிடம் சுகம் முழுவதும் அழிந்திருக்கும். அவன் தன் உடலையும் ஆத்மாவையும் பூரணமாக ஈசுவரார்ப்பணம் செய் திருப்பான். அவனுக்கு சம்பூர்ண பக்தி (நிஷ்டை), யும் வீரனுக்குத் தக்க பொறுமை (ஸபுரி) யும் இருக்கும் இவைதாம் நிஜமான பக் தர்களுடைய அடையாளம். ஒவ்வொருவரும் தமக்குள் உள்ள ஜோதியை சேருவதற்குத் தக்க வழியை மேலே சொன்னவற்றி லிருந்து கிரகித்துக்கொண்டு அனுசரித்து முக்தி பெறுவார்களாக.

## பக்தியில் உள்ள சக்தி

பாண்டவர்கள் காட்டில் வாழ்ந்தபோது தர்மபுத்திரர் பெரிய யாகமொன்றைச் செய்ய நினைத்தார். மகரிஷிகளுடைய உத்தரவுப் படி அவர்களுடைய அனுமதியுடன் ஸ்ரீ கிருஷ்ணனைத் தலைவனாக அங்கீகரித்தார்கள். யாகம் செய்ய நல்ல முகூர்த்தம் கூட வைத் தாயிற்று. தர்ம புத்திரர் தாம் கிருஷ்ணபக்தர்; ஸ்ரீ கிருஷ்ணன் தமக்கு மைத்துனன்; ஆகையால் தமது வார்த்தையை மீற மாட் டார். யாகம் தொடங்க வெகு நாட்கள் இருப்பதால் ஸ்ரீ கிருஷ்ண னுக்கு யாகத்தைப்பற்றி உடனே செய்தி அனுப்ப வேண்டிய அவ சியமில்லை. சமயத்தில் செய்தி அனுப்பினால் வராமல் இருந்துவிடு வாரா ? என்ற அகங்காரம் ஏற்பட்டது. அதனால் மகரிஷி களுடைய கட்டளையையோ தர்மராஜாவின் தீர்மானத்தையோ கிருஷ்ணபரமாத்மாவுக்குத் தெரிவிக்கவில்லை. தாம் மகாராஜா; கிருஷ்ணனின்மேல் தனக்கு ஏதோ அதிகாரம் இருப்பதுபோல தம் பேச்சுக்குக் கட்டுப்பட்டுத் தம் வார்த்தையைத் தலையால் ஏற்றேத் தீரவேண்டுமென்னும் அகங்காரம் தர்மபுத்திரரிடம் வளர்ந்துவிட் டது. கிருஷ்ணபரமாத்மாவுக்குத் தெரியாதது என்ன இருக்கிறது? தர்மபுத்திரனின் இந்த மனநிலையைக்கண்டு அவர் தமக்குள்ளேயே சிரித்துக்கொண்டார்.

யாகத்துக்குக் குறிப்பிட்டநாள் நெருங்கிக் கொண்டிருந்தது. அப்பொழுது தருமபுத்திரர் அவசரமாக தம்பிகளை அழைத்து அவர்

களுடன் கலந்து ஆலோசித்தார். முறைதவருமல் கிருஷ்ணனுக்கு செய்தி அனுப்ப முயன்ருர். தரும புத்திரருக்கு அடுத்தபடி பீமன் பெரியவர். ஆனல் அண்ணுவுக்கு இந்தத் தம்பியிடம் நம்பிக்கை இல்லை. அவன் சாப்பாட்டு ராமன்; அதிலும் மிருகம் போன்றவன்; புத்திசாலித்தனம் குறைவு; பக்தி சிரத்தை பூஜ்யம். ஆகையால் இப்படிப்பட்ட வேலைகளுக்குப் பீமனை அனுப்பக் கூடாது என்று தருமபுத்திரர் தீர்மானித்தார். அப்பொழுது எல்லோரிலும் இளைய வனுகிய சகாதேவன் முன்வந்து, 'அண்ணன்மார்களே, இவ்வளவு யோசனை ஏன்? உத்தரவு கொடுத்து என்னை அனுப்புங்கள். ஸ்ரீகிருஷ் ணனிடம் நீங்கள் சொன்னவற்றைத் தெரிவித்து அழைத்து வரு கிறேன்' என்று கர்வத்தோடு பேசினுன். எல்லோரும் சரி என்ருர் கள். சகாதேவன் சென்று ஸ்ரீ கிருஷ்ணனை தரிசித்து, "சுவாமி எங் கள் பெரியண்ணு பெரிய யாகம் செய்ய தீர்மானித்திருக்கிருர். நாளைக்கே முகூர்த்தம்; அதற்குத் தலைவராக உங்களைத்தான் நிய மித்திருக்கிருர்கள். நீங்கள் உடனே வரவேண்டுமென்று என் அண் ணன்மார் விரும்புகிருர்கள். ஆகையால் புறப்படுங்கள்" என்று சொன்னுன். கிருஷ்ணனுக்கு புரியாதது என்ன இருக்கிறது? "ஓகோ மிகவும் சந்தோஷம். உங்கள் பெரிய அண்ணு என்னை கௌரவிக்க நிச்சயித்திருக்கிருரோ? இதோ வருகிறேன் நீ போ" என்று அவனை அனுப்பிவிட்டார். சகாதேவன் திரும்பி வந்தானே தவிர கிருஷ் ணன் வரவில்லை.

பிறகு ஸ்ரீ கிருஷ்ணனை அழைத்துவா என்று தருமபுத்திரர் நகுலனை அனுப்பினுர். நகுலன் ஓட்டோடிச் சென்று துவாரகையை அடைந்தான். "கிருஷ்ணு இது உனக்குத் தகாது. தம்பி சகா தேவனிடம், 'இதோ வருகிறேன்' என்று சொல்லிவிட்டு ஏன் வர வில்லை? முகூர்த்தம் நெருங்கிக்கொண்டிருக்கிறது; உடனே என்னு டன் புறப்பட்டு வரவேண்டும்" என்று நகுலன் கிருஷ்ணனை வேண்டி னுன். அவனுடைய பேச்சில் ராஜசம் இருந்தது. "நகுலா, ஏன் அவசரப்படுகிருய்? என் தேர் தயாராகிறது. இன்னும் நேரம் இருக் கிறதல்லவா? இதோ வந்துவிடுகிறேன். நீ போ" என்று சொல்லி ஸ்ரீ கிருஷ்ணன் நகுலனையும் அனுப்பிவிட்டார். நகுலன் திரும்பிச் சென்ருன். கிருஷ்ணன் வரும் சுவடே தெரியவில்லை.

முகூர்த்தம் நெருங்கிவிட்டது. கிருஷ்ணன் வராததால் தர்ம புத்திரர் கலவரம் அடைந்தார். ஒன்றும் தோன்ருமல் அவர் பாண் டவர்களுள் மத்தியமனுகிய அர்ஜுனனை அனுப்பினுர். அர்ஜுனன் மகாவீரன்போல் காண்டீபத்தைத் தோளில் மாட்டிக்கொண்டு கெடுபிடியாகச் சென்று ஸ்ரீ கிருஷ்ணனைக் கண்டான். "என்ன மைத்துனு! தம்பிகள் இருவரையும் அனுப்பினேம்; வருவதாகச்

சொல்லிவிட்டுப் பேசாமல் இருந்துவிட்டாயே! இது என்ன மரி யாதை? புறப்படு; இல்லாவிட்டால் நான் இங்கிருந்து நகரமாட் டேன்'' என்று பிடிவாதம் பிடித்தான். கிருஷ்ணன், ''மைத்துனு! ஏன் இவ்வளவு தடபுடல்? 'இன்னும் நேரம் இருக்கிறது; சமயத் துக்குப் போய்விடலாமே' என்று தாமதித்தேன். இதோ வந்துவிட் டேன்'' என்று ரதம் ஏறிப் புறப்பட்டார். இருவரும் சிறிது தூரம் சென்ருர்கள். கிருஷ்ணன் விளையாட்டாக மனிதக்கோலம் பூண்ட வர் திடீரென்று வானத்தில் பிரளயம்போல் பேரொலிகள் எழும் பின. ''இது என்ன? தேவாசுரர்கள் மோதிக்கொள்கிருர்கள்போல் இருக்கிறது. நான் பார்த்து சரிபடுத்திவிட்டு உன் பின்னுலேயே வந்துவிடுகிறேன் நீ போய் வேண்டியவற்றை யெல்லாம் தயார் செய்'' என்று தாம் வழியிலேயே தங்கி, அர்ஜுனனை அனுப்பி விட்டார்.

அர்ஜுனன் திரும்பிவந்தானே தவிர அவன் பின்னே ஸ்ரீ கிருஷ் ணன் வரவில்லை. முகூர்த்தம் நெருங்கிவிட்டது. நாழிகை, விஞடி நேரங்கூட பாக்கி [illegible] கணங்கள்தாம் இருக்கின்றன. [illegible] ணன் வராவிட்டால் யாகம் நடக்காது. எப்படி நடக்கும்? தருமபுத் திரரின் குழப்பம் அதிகரித்தது. நெஞ்சு பட, படவென்று அடித்துக் கொண்டது. கிருஷ்ணுர்ஜுனர்கள் என்றும் நர நாராயணர்கள் என்றும் இவ்விருவர்களுக்குள் இன்றியமையாத தொடர்பு உள்ள தென்றும் பிரசித்திப் பெற்ற அர்ஜுனனே போய்வந்தும் மாயன் பின்தங்கிவிட்டானே தவிர உடன் வரவில்லை. இனி என்ன செய் வது? தருமபுத்திரர் தாமே நேரில் போய் அழைப்பதாக புறப்பட்டு விட்டார். கண்ணன் தம்மை வஞ்சித்து துரோகம் செய்துவிட்ட தாகப் புலம்பிஞர். அப்பொழுது பீமன் முன்வந்து, ''அண்ணு, ஏன் இப்படி அதைரியப்படுகிறீர்கள்? நம் கண்ணன் நம்மை மோசம் செய்வாரா? அப்படி ஒருநாளும் நடக்காது. கண்ணன் அன்பே உரு வானவர். அவரை நம்பித் தொழுதுகொண்டிருக்கும் நம்மை என் றும் அவர் ஏமாற்றமாட்டார். நீங்கள் தவருக நினைக்கிறீர்கள். ஒரு கணத்தில் கிருஷ்ண பரமாத்மா நம் பக்கத்தில் இருப்பார். நீங் கள் யாக தீட்சை ஏற்றிருக்கிறீர்கள். நீங்கள் போவது உசிதம் ஆகாது. என்னை ஆசீர்வதியுங்கள். அந்த பகவானை வேண்டி அடுத்தக் கணமே அவரை இங்கே அழைத்து வருகிறேன்'' என்று சொல்லி அண்ணனை வணங்கி கதைக்கும் வணக்கம் செய்தான்.

''கருணையே வடிவான 'கிருஷ்ணபரமாத்மா வர மறுத்தால், இக்கதையால் என் தலையையே பிளந்துகொள்வேன். நம் பங்கில் உள்ள தெய்வம், நம் பிரார்த்தனைகளுக்கு செவிசாய்க்க மாட் டாரா? பக்தர்களைக் காக்கவே அவதரித்த பகவான் என்று

உணராமல் அத்தான் என்று மயங்கினீர்கள். இதோ நான் தூக்கிய கதை. ஸ்ரீகிருஷ்ணன் இங்கு வரும்வரையில் இதை விடமாட்டேன். இதோ சபதம் செய்கிறேன். கிருஷ்ணா, தீனரட்சகா, பக்தனுக்கு உறவே, எங்கிருக்கிறாயப்பா? ஏனிந்த கண்ணாமூச்சி! உனக்காக நான் எங்கே வரவேண்டும் ஐயா? நாங்கள் உன்பக்தர்கள் அல்லவா? பிரபு! உன் அருள் இல்லாவிட்டால் எங்களுக்கு என்ன சக்தி இருக்கிறது? இதோ மறுபடியும் சொல்லுகிறேன். அப்பனே! நீ இங்கே வராவிட்டால் இக்கதையால் என் தலையைப் பிளந்து கொள்ள வேண்டியதுதான்'' என்று சொல்லி உரக்க 'கிருஷ்ணா! கிருஷ்ணா!'' என்று கூவிக்கொண்டே முன்னோக்கி நடந்தான்.

''பீமா, இது என்ன விபரீதம்! நீ எப்பொழுதுமே ஆபத்தான பிரதிக்ஞையைத்தான் செய்வாய். கதையை ஏன் தூக்கினாய்? நான் இங்கேதானே இருக்கிறேன் அப்பா. பக்தியுடன் நீ அழைத்தால் நான் வராமல் எங்கே போக முடியும்?'' என்று ஆதரவுடன் பேசிய கிருஷ்ண பரமாத்மா பீமனைக் கட்டித் தழுவிக்கொண்டார். பீமன் கண்ணனுடைய திருவடிகளைத் தொட்டு கண்ணில் ஒத்திக்கொண்டார். ஆனந்தத்தால் எல்லோரும் திருப்தி அடைந்தார்கள். யாகம் பிரம்மானந்தமாக நடந்து முடிந்தது.

அன்றிரவு ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதங்களைப் பிடித்துவிட்டுக் கொண்டிருந்த ருக்மணி தேவி இப்படிக் கேட்டாள். ''சுவாமி! என்ன இது? பீமன் உங்களுக்கு அர்ஜுனனைவிட சிறந்த பக்தனா? பீமனிடம் உள்ள விசேஷம் என்ன? கோபம் சேர்ந்த பீமனுடைய பிரார்த்தனைதான் உங்களுக்குப் பிடித்ததா? இதில் உள்ள ரகசியத்தைக் கூறுங்கள்.''

அதற்கு கிருஷ்ணன் சொன்ன பதில்: ''நீ சொன்னது சரிதான். அர்ஜுனன் என் நண்பனும் பக்தனும் ஆவான். தர்மபுத்திரர் மகானுபவர்தாம். ஆனால் 'பீமன் பிரயோஜனம் அற்றவன், பக்தி ரசம் அறியாத வீணன்' என்று இவர்கள் எல்லோரும் தவறாக அபிப்பிராயப் படுகிறார்கள். அவர்களுக்கு என்னிடமுள்ள சலுகையால் பக்தி மெலிந்துவிட்டது. அகங்காரம் முளைவிட்டது. உண்மையில் பீமன்தான் குற்றமற்ற பக்தியுள்ளவன். பார்ப்பதற்கு கோபக்காரன்போல் தோன்றுவானே தவிர அவனுடைய பக்தியின்பலத்தை நீ அறியவில்லை. பக்தியில் ஏற்றத்தாழ்வு என்பது இல்லை. சலனம் அற்ற மனத்துடன் என்னை நினைத்து என்னைத் தவிர வேறு திக்கில்லை என்று முறையிட்டால் அவன் எப்படிப்பட்டவன் ஆனாலும் நான் அவன் கூடவே இருப்பேன். எவ்வளவு பெரிய சாதகனானாலும் பக்தி

சிரத்தையுடன் என்னை சேவிக்கிறதாக கர்வம்கொண்டு அகம்பாவத்துடன் நடந்துகொண்டால் நான் அவன் பின்னாலேயே இருந்தாலும் என்னை அவனால் பார்க்க முடியாது. பீமன் என்னிடம் வைத்துள்ள பக்தியை நீயே நேரில் பார்ப்பாயாக; என் பின்னே வா.'' இருவரும் புறப்பட்டு, தருமபுத்திரர் முதலியோர் இருந்த பர்ணசாலைக்குச் சென்றார்கள்.

தருமபுத்திரர் கவலையற்றுத் தூங்கிக்கொண்டிருந்தார். அர்ஜுனன் தூக்கத்திலேயே தன் தோள்வலிமையைப்பற்றிப் பிதற்றிக் கொண்டிருந்தான், நகுல சகாதேவர்கள், அவர்களுடைய பெரிய அண்ணாருடைய தர்ம செயல்களைப் பற்றியே பேசிக்கொண்டிருந்தார்கள். பீமனுடைய பர்ணசாலையை நெருங்கியபோது 'கிருஷ்ணா! கிருஷ்ணா!' என்ற சொற்கள் காதில் விழுந்தது. பீமன் தன்னை மறந்து தூங்கிக்கொண்டிருந்தான். ஆனால் இந்த கிருஷ்ண நாமஸ்மரணம் எங்கிருந்து வந்தது? தூங்கும்போது பீமனுடைய உள் மூச்சு, வெளி மூச்சுக்களே 'கிருஷ்ணா, கிருஷ்ணா' என்று சொல்லிக் கொண்டிருந்தன. அவனுடைய உடம்பிலுள்ள மயிர்க் கால்களே அப்படி ஒலியைக் எழுப்பிக்கொண்டிருந்தன. தூங்கும்போதுகூட பீமன் கிருஷ்ணனைக் கண்டும், அழைத்தும், எல்லாம் கிருஷ்ண மயமாகத் தன்மயத்தை அனுபவிக்கிறான் என்று தோன்றியது. இதை நேரில் கண்ட ருக்மணிதேவி கிருஷ்ணனை வணங்கினாள்.

அவ்வளவு சிறந்த பக்தனை ஆடம்பரமில்லாத காரணத்தால் 'மிருகம் போன்றவன், கோபக்காரன், மடையன் என்றெல்லாம் போற்றப்பட்ட தருமபுத்திரர்கூட நினைத்து அலட்சியம் செய்தார். ஆனால் பரமாத்மாவுக்குத் தம் பக்தர்கள் விஷயம் தெரியாமல் இருக்குமா? பக்தி என்பது தனிப்பட்ட ஒருவருடைய சொத்தல்ல. வெளிப் பூச்சு இல்லாததால் ஒருவனை பக்தி அற்றவன் என்று தூற்ற முடியாது. எல்லாம் கிருஷ்ணமயம் என்று நம்பிய பக்த சிகாமணி பீமன். அகம்பாவம் தலை தூக்கினால் பக்தி பின்தங்கிவிடும். மகா பக்தனாகிய அர்ச்சுனனுக்குக் கூட ஸ்ரீ கிருஷ்ணன் வசப்படவில்லை. பீமன் அழைத்தவுடன் பக்கத்திலேயே பிரசன்னம் ஆகிவிட்டார். பக்தியின் சக்தி அப்படிப்பட்டது. 'எல்லாம் உன் வசம்' என்று பகவானை அண்டிய பக்தனைப் பரமாத்மா மறக்கமாட்டான். ஆத்மார்ப்பணம் செய்தால் அன்றி அவன் நமக்கு வசப்பட மாட்டான். அப்படிப்பட்ட பக்தி நமக்கு உண்டாகும்படி பரமாத்மாவே அநுக்கிரகிக்க வேண்டும்.

## மாயை

விஹாய காமான்ய: ஸர்வான்
புமான் சரதி நிஸ்ப்ருஹ:
நிர்மமோ நிரஹங்கார:
நிச்சாந்தி மதிகச்சதி! —கீதை 2--71

யார் ஒருவன் ஆசைகளை விட்டுவிட்டு உலக சுகங்களை வெறுத்து 'நான், என்னுடையவை' என்னும் கருத்தை விட்டுவிடுவானே அவனுக்கே அமைதி கிட்டும். உலக விஷயங்களில் மயங்கி இருப்பதே எல்லா அனர்த்தங்களுக்கும் காரணம். எவ்விஷயத்திலாகட்டும் எந்த மனிதரிடத்திலாகட்டும் அளவுக்கு மிஞ்சிய ஆசையும் அன்பும் இருக்கக்கூடாது. சர்வசங்க பரித்யாகியான சந்நியாசி கூட இந்திரிய சுகங்களைப்பற்றிய எண்ணங்களை மனத்துள் புகவிட்டால் நிச்சயமாக ஆசை உண்டாகும். ஆகையால் 'அதுவேண்டும், இது வேண்டும்' என்ற எண்ணம் உண்டாகும். இதுவே காமம். காமம் உள்ள இடத்தில் குரோதம் இருக்கும். குரோதம் யோசிக்கும் தன்மையை நசுக்கச் செய்யும். சஞ்சலமான யோசனைகள் ஞாபக சக்தியை அழித்துவிடும். ஞாபக சக்தி போய்விட்டால் எவ்விஷயத்தையும் சரியாக புரிந்துகொள்ளும் சக்தி இருக்காது. அதனால் எல்லாம் அழிந்துவிடும். இவ்விஷயம் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய கடைசி உபதேசம் கபோதோபாக்யானத்தில் அழகாக உதாகரிக்கப் பட்டிருக்கிறது.

ஒரு காடு; காட்டில் இரண்டு புறுக்கள் மரத்தில் கூடுகட்டிச் சுகமாக வசித்து வந்தன. அவை இரண்டும் அன்புப் பாசத்தால் கட்டுப்பட்டுப் பரஸ்பரம் ஆசையுடன் சேர்ந்து வாழ்ந்து வந்தன. அவற்றின் தாம்பத்ய வாழ்க்கை மிகவும் சந்தோஷகரமாக இருந்தது. அவைகளுக்குக் குறை ஒன்றும் இல்லை. அவ்விரு பறவைகளும் ஒன்றை ஒன்று பிரியாமல் காலந்தள்ளி வந்தன. பெண்புறு தன்னிடம் காட்டும் அன்புக்கும் ஆசைக்கும் மகிழ்ந்த ஆண்புறு, அது எதைக் கேட்டாலும் எந்தப்பாடு பட்டாவது அதைப் பெண்புறுவுக்குக் கொண்டுவந்து கொடுத்துவந்தது. ஆண்புறு இந்திரிய சுகத்துக்கு முழுவதும் அடிமைப் பட்டுவிட்டது. பெண்புறு முட்டையிட்டுக் குஞ்சு பொரித்தது. தாயும் தந்தையும் குஞ்சுகளை மிக அன்புடன் வளர்த்துவந்தன. குஞ்சுகள் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருவதைக் கண்ட அவை மிக மகிழ்ந்தன. அப்பறவைகள் இரண்டும் மாயையால் மூடப்

பட்டு ஒன்றை ஒன்று பற்றிக் கொண்டு எந்தவிதமான உயர்ந்த சிந்தனையும் இன்றிக் காலந் தள்ளி வந்தன.

ஒருநாள் பறவைகள் இரண்டும் குஞ்சுகளுக்கு இரை கொண்டு வருவதற்காக வெளியே சென்றன. திரும்பிவர நேரம் ஆயிற்று. அதற்குள் வேடனொருவன் வலைவிரித்துக் குஞ்சுகளைப் பிடித்துக் கொண்டான். பெரிய பறவைகள் கூட்டுக்குத் திரும்பி வந்தன. பெண் பறவை தன் குஞ்சுகளின் துன்பத்தைக் கண்டு மிக வருந்தியது. மாயையால் பாசம் என்னும் வலையில் அகப்பட்டுத் தானும் குஞ்சுகளிடம் சென்று நிஜமான வலையில் அகப்பட்டுக் கொண்டது. இந்த நிகழ்ச்சிகளையெல்லாம் கண்ட ஆண் பறவை தன் சுகமயமான குடும்பம் இப்படி அழிந்து விட்டதற்கு வருந்தி வாழ்க்கையில் வெறுப்புக் கொண்டது. புத்தி கெட்டுப்போய்த் தானும் வலையில் வீழ்ந்தது. இப்படி வலியச் சென்று வலையில் விழுந்து புறாக்கள் சர்வ நாசம் ஆயின. நாம் இல்லற தருமத்தில் இருந்தாலும் தாமரை இலைத் தண்ணீர்த்துளி போலும் சேற்றில் உள்ள மீன் போலும் ஒட்டாமல் இருக்க வேண்டும். ஏதாவது ஒரு பொருளில் அதிக மோகம் வைத்தால் துக்கம்தான் மிஞ்சும். மீன் சேற்றில் வாழ்ந்தாலும் மீனுக்குச் சிறிதும் சேறு ஒட்டாது.

ஸ்ரீகிருஷ்ண பகவான் சொன்னது போல், ''பலனை விரும்பாமல் நீ உன் கடமையைச் செய்; அதனால் நீ பிரம்மத்தை அடைவாய்.''

## திவ்விய வாழ்க்கையில் குருவின் பங்கு

குருவைப் பற்றிக் காலத்துக்கேற்றபடி அவரவர் மனத் தத்துவத்தை ஒட்டிப் பலர் அபிப்பிராயங்களை மாற்றிக் கொண்டு வருகிறார்கள். அரிச்சுவடியிலிருந்து கல்வி கற்பிக்கும் ஆசிரியர் தொடங்கி, தட்சிணாமூர்த்தி போல் மகிமை பொருந்திய திவ்விய புருஷர்கள் வரையில் குருபாவம் இருக்கிறது கவி ஒருவர் குருவை இப்படிச் சித்தரித்திருக்கிறார். ''அந்த ஆலமரத்தடியில் இளைஞரான உபாத்தியாயர் ஒருவர் அமர்ந்திருக்கிறார். அவருடைய சீடர்கள் எல்லோரும் வயதில் மூத்தவர்கள். அவர் போதிப்பது மௌனமாக. ஆனால் சீடர்களுடைய சந்தேகம் எல்லாம் நீங்கி விடுகிறது.''

குரு என்றால் திவ்விய வாழ்க்கையை நோக்கி முன்னேறும் யாத்ரீகனுடைய வாழ்வில் திவ்விய ஒளியைப் பரப்பும் துருவ நட்சத்திரம் போன்றவர். அவர் சரியான வழிகாட்டியாக இருப்பார்.

சிலர் அவ்வழிக்குத் தூரத்திலேயே இருக்கிறார்கள். அது இயற்கை வழி. விரைவிலேயோ, தாமதமாகவோ திவ்வியப் பிரகாசத்தின் பக்கமாகத் திரும்புவதுதான் செல்லத் தக்க வழியாக வருணிக்கப் பட்டிருக்கிறது. அப்பொழுது அவர்கள் அந்தகாரத்திலிருந்து ஒளியை நோக்கி நடக்கிறார்கள். அதுதான் சரியான வழி. இதில் குருவின் பங்கு திவ்விய வாழ்க்கையில் ஆசை உள்ளவர்களை உத்த ரோத்தமமாகிய புனித வழியில் அதாவது முக்தி மார்க்கத்தை நோக்கி நடக்கச் செய்வதுதான். குரு ஆசையுடன் வழிகாட்டியாய் அன்பின் உருவமாய் தன் குழந்தையைக் கவனிப்பதுபோல் கவனித் துக் கொண்டிருப்பார்.

முக்தியைச் சாதிப்பதற்குப் பல வழிகள் உள்ளன ஞான, கர்ம, பக்தி, வழிகளுள் பழகுவது அவற்றுள் சில. பலனை எதிர்பாராமல் செய்யவேண்டியவை இவை. முக்தியில் ஆசையுள்ள பலரைப் பக்தி கவருகிறது. இவ்வழியில் குருவுக்காவது, பரமாத்மாவுக் காவது ஆத்ம சமர்ப்பணம் செய்யவேண்டும். இதுவே ஜீவப் பிரம்ம ஐக்கியமாகும். இது மதுர பக்தி வழி. இதை பக்தைகளாகிய ராதை, மீராபாய், கோபிகள், ஆண்டாள் இவர்கள் வாழ்க்கையில் நாம் பார்க்கலாம். தம் திவ்ய ஞானத்தாலும், தம் போதனைகளா லும் சத்குருவானவர் வாழ்க்கையில் பக்தி மார்க்கத்தின் முக்கியத் துவத்தை நிரூபிப்பார்.

ஒரு குருவிடமிருந்து மற்றொரு குருவுக்கு மாறிச் செல்பவர் களைக் கண்டு ஸ்ரீ சாயிபாபா மிகவும் வருந்துவார். 'ஆடுபோல் கறித்தால் வயிறு நிரம்பாது' என்ற பழமொழி உலக ரீதிக்குப் பொருந்துவதுபோல் ஆத்மீகத்துக்கும் பொருந்தும் இது சத்தியம். ஒருபக்தனுக்குத் தன் குருவில்லாத மற்றொரு குரு திவ்விய புருஷனாக வும் பவித்ர மூர்த்தியாகவும் தோன்றியதால் தன் குருவை விட்டு விட்டான். சில மாதங்கள் வரையில் கலங்கிய மனத்துடன் அலைந்து விட்டுப் பழைய குருவிடமே வந்து சேர்ந்துவிட்டான். முதலில் அவன் சாதித்திருந்த மனச் சக்தியையும், ஆத்மீக சக்தியையும் இழந்துவிட்டான். குருவிடம் விசுவாசம் உறுதியாக இருக்கவேண் டும் என்பதை அப்போது அவன் உணர்ந்தான். இதை உறுதிப் படுத்தும் வகையில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் இப்படிக் கூறி இருக்கிறார். ''சீடன் குருவை எப்பொழுதும் விமரிசனம் செய்யக் கூடாது. குருவின் சொல்லுக்கு மதிப்புக் கொடுக்க வேண்டும். குரு, குடிகாரர்கள் வீட்டுக்கும், பாவிகள் வீட்டுக்கும் போனாலும் கூட அவர் புனிதமானவர் என்றே கருதவேண்டும். அதாவது குரு விடம் குற்றம் காணக் கூடாது. அவருடைய நடத்தைகளைப்பற்றி விமரிசனம் செய்யக்கூடாது. அசையாத பக்தியுடனும் நம்பிக்கை

யுடனும் குருவைப் பின்பற்றி அவருடைய ஆஞ்ஞைகளைக் கௌர விக்க வேண்டும். இப்படி ஒரு குருவைத் தேர்ந்து அடைந்தபின் திட பக்தியுடன் ஆத்ம நிவேதனம் செய்ய வேண்டும். ஸ்ரீ சாயி பாபா சொன்னதுபோல் மற்ற குருமார்களின் சிறப்பு எவ்வளவு இருந்தாலும் உங்கள் குருவிடம் குறை இருந்தாலும் நீங்கள் உங் கள் குருவையே உறுதியான விசுவாசத்துடன் பின்பற்றி ஒட்டிக் கொள்ள வேண்டும். அவருடைய பக்கத்தில் இருப்பதை விடாமல் அவரையே நம்புங்கள் இதற்குப் பொறுமையும், விசுவாசமும் அவசியம்.

குரு ஏதோ போதிப்பதும் உபதேசம் செய்வதும் மட்டும் போதாது. குருவின் அருகே இருந்தால் அவரது மகிமை காரண மாகவும், நம் பக்தியோடு கூடிய அன்பு காரணமாகவும் அவருடைய அநுக்கிரகத்தைப் பெற முடியும். குருவின் நினைவே இதயத்தைப் புல்லரிக்கச் செய்யும். ஆத்மாவை உயர்ந்த நிலைக்குச் சேர்க்கும்.

ஸ்ரீ சாயிபாபாவின் பிரவசனங்கள் பக்தனுடைய புத்தியின் மலர்ச்சியையும், ஞானத்தையும் கொடுக்கின்றன. ஸ்ரீ பாபா அன்பு நிறைந்த இதயம், சலனமற்ற மௌனத் தியானம், அருள் நோக்கு இவற்றால் தமக்குள் உள்ள ஜீவாத்மா பரமாத்மாக்களின் புனிதத் தன்மையைப் புரிந்துகொள்ளும் நிலைக்கு உயர்ந்தார். திவ்விய வாழ் வில் ஆசைகொண்டவர்களுடைய வாழ்க்கையில் சத்குரு ஏற்கக் கூடிய பங்கு இது. தெய்வ சொரூபமான குருவின் அன்பும் பரிவும் பக்தனை ஒவ்வொரு கணமும் காப்பாற்றுகின்றன. ஸ்ரீ சாயிபாபா தம் பக்தர்களுக்கு இப்படி அபயம் கொடுத்திருக்கிறார். "எனது பார்வை எங்கே இருந்தாலும், என்ன செய்து கொண்டிருந்தாலும் அன்பர்கள் மீதே இருக்கும். என்னை நினைத்த போதெல்லாம்—தியானித்தபோதெல்லாம்—உங்களுடனேயே இருப்பேன் என்னும் விஷயத்தை மறந்து விடாதீர்கள். என்னை சரண் புகுந்தவர்களுக் கெல்லாம் அருகே இருந்து டாக்டராவேன். எனக்கு நிவேதனம் செய்து சாப்பிட்டவனுக்கு நான் அடிமை. பக்தர்களுக்கு நான் வசப்பட்டவன். உங்களுடனும், உள்ளும், புறமும், சுற்றிலும் இருப் பேன்." இப்படிப்பட்ட மகான்கள்தான் சத்குருவாக இருக்க முடியும். இவர்கள் தமது நிலைக்கு நம்மை உயர்த்தி விடுவார்கள்.

## பொறுமை

மனிதன் இயற்கையில் சுயநலம் மிக்கவன். ஆனால் அவன் சமூ கத்துடன் தொடர்பு கொள்ளாமல் வாழ முடியாது. அதனால் ஓரளவு சுயநலத்தைத் தள்ளிவிட்டு, உடன் வாழ்பவர்களுடைய

சபத் துன்பங்களில் பங்கெடுத்துக்கொள்ள வேண்டி இருக்கிறது. மனிதனைப் பிடித்துக்கொண்டு ஆட்டிவைக்கும் இயற்கை குணங்களுள் பொறாமையும் ஒன்றாகும். மனிதர் வாழ்க்கையில் இது சிறிதாகவோ, பெரிதாகவோ தலைதூக்கிக் கொண்டுதான் இருக்கும். பொறாமையை வென்றவன் மகான் என்றுதான் சொல்ல வேண்டும். எவ்வளவுதான் நாகரீகம் அடைந்தவன் ஆனாலும் கல்வியில் சிறந்து விளங்கினாலும், நிகரற்ற ஞானியானாலும் பொறாமை விடாது.

''தனக்கு ஒரு கண் போனாலும் அடுத்த வீட்டுக்காரனுக்கு இரண்டு கண்ணும் போனால் திருப்தி.' இந்தப் பழமொழி காரணம் இல்லாமல் பிறக்கவில்லை. ஒவ்வொரு மனிதனும் சுகம், அந்தஸ்து, பெருமை முதலியவை வேண்டுமென்று முயல்வதும் பாடுபடுவதும் இயற்கையே. தனக்கு இருந்தாலும் இல்லாவிட்டாலும் பிறருடைய சுகத்தையும் அந்தஸ்தையும் கண்டு பொறுக்காமல் வயிறெரிவதும், தனக்கு அவனால் எந்தவிதமான துன்பமும் இல்லாத போதும் அவனுடைய நல்ல நிலையைக் கண்டு பொறாமைப் படுவது, தனக்கு எத்தனை செல்வம் இருந்தாலும் பிறருடைய உயர்வைக் கண்டு அவனும் நமக்குச் சரியாக வாழ்வதா என்று பெருமூச்சு விடுவது ஆகியவை உலகத்தின் போக்கு. நாம் படும் பல துன்பங்களுக்கும் பைத்தியக்காரத் தனத்துக்கும் பொறாமைதான் காரணம்.

விசுவாமித்திரர் முதலில் எல்லாவித போகங்களையும் அனுபவித்துக்கொண்டிருந்த மகாராஜாதான். வசிஷ்டர் காட்டின் நடுவில் எங்கோ மரங்களின் நடுவில் பர்ணசாலை அமைத்துக்கொண்டு தவம் செய்து எளிய வாழ்வை வாழ்ந்து காட்டிய முனிவர். பரம சாது. அவர் மகாராஜா பதவிக்கோ, சுகபோகங்களுக்கோ ஆசைப் படவில்லை. அவர் தம் குடிலுக்கு வந்த விசுவாமித்திரருக்குத் தம்மால் இயன்ற அளவு மரியாதை செய்து விருந்தளிக்க மனப்பூர்வமாக விரும்பினார். வசிஷ்டர் மகாராஜாவின் க்ஷேமத்தை விரும்பும் மகரிஷி. அவரிடம் 'கேட்டதெல்லாம் கொடுக்கும் காமதேனு' இருந்தது உண்மையே. ஏதோ சொந்தத் திறமையால் பெற்ற சாதனை அந்தக் காமதேனு. அப்பசு வசிஷ்டரிடம் இருந்தால் விசுவாமித்திரருக்கு நேர்ந்த குறை என்ன? ஏற்பட்ட நஷ்டம் என்ன? உண்மையைச் சொல்லப் போனால் மகாராஜாவுக்கு அப்பசு தேவையேயில்லை. அது இல்லாவிட்டால் ஒரு நஷ்டமும் இல்லை. அந்த காமதேனுவை தமக்குக் கொடுத்துவைக்கும்படி விசுவாமித்திரர் வசிஷ்டரைக் கேட்டார். வசிஷ்டர் கொடுக்க மறுத்ததால் விசுவாமித்திரர் அவருடன் சண்டையிட்டார். விசுவாமித்திரர் பட்டது பொறாமையில்லாமல் வேறு என்ன? நல்ல மனிதன் ஒதுங்கி இருந்

தாலும் துஷ்டன் காரணம் இன்றியே அவனை இம்சிக்க முற்படு வான். இது அவனுடைய பிறவிக் குணம். இதுதான் உண்மை.

பார்க்கப்போனால் இப்பொறாமை மனிதர்களை மட்டுமே பிடிக்க வில்லை; மகாத்மாக்களைக்கூட விடவில்லை. தேவ குருவான பிருகஸ் பதிகூட இவ்வலையில் விழுந்துவிட்டாரென்று மகரிஷியான வியாசர் சொல்லி இருக்கிறார். பிருகஸ்பதியும் ஸமவர்த்தியும் உடன் பிறந்த வர்கள். ஸமவர்த்தி ஞானக் களஞ்சியம். நற்குணங்கள் எல்லாம் அவரிடம் குடிகொண்டிருந்தன. எல்லோரும் சமவர்த்தியை அன் புடன் கௌரவித்து வந்தார்கள். பிருகஸ்பதி மகோன்னத பதவி யில் இருப்பவர். சமவர்த்தியின் கூடப்பிறந்தவராயினும் சமவர்த் தியின் பெருமையைக் கண்டு அவருக்குப் பொறுக்கவில்லை. அவர் சமவர்த்தியைப் பலவகையில் துன்புறுத்தி அவமதிக்க முயன்றார். அண்ணாவின் பொறாமையைக் கண்டு அலுத்த சமவர்த்தி தாம் எட்டி இருந்தால் இருவருக்கும் நன்மை ஏற்படும் என்று நிச்சயித் தார். தம் அண்ணனுக்கு அபசாரம் செய்ய நினைக்கவில்லை. அத னால்தான் ''துஷ்டர்களைக் கண்டால் தூர விலகு'' என்று பெரியோர் கள் சொல்லி இருக்கிறார்கள். பாவம் சமவர்த்தி தம் சகோதரனை விட்டுவிட்டு அவருடைய தொடர்பின்றி தொலைவில் தம் ஆசிர மத்தை அமைத்துக் கொண்டார். சிறிது காலம் சென்றது.

மாருதன் என்னும் பெயர்கொண்ட அரசர் ஒருவர் தாம் பெரிய யாகம் ஒன்று செய்ய வேண்டும் என்று கருதினார். அந்த யாகத்தின் தலைவராக இருக்கும்படி பிரகஸ்பதியை அவர் வேண்டினார். பிரகஸ் பதி தமக்கு அப்போது ஓய்வு இல்லை என்றும், யாகம் இப்போது நடக்காதென்றும் அரசனிடம் சொல்லிவிட்டார். அதற்கு மகா ராஜா இப்படிப் பதில் சொன்னார்: ''ஐயா ஒரு நல்ல செயலைச் செய் யத் தோன்றுவதே அரிது. அப்படித் தோன்றியபோது அதை உடனே செய்ய வேண்டுமேயன்றித் தள்ளிப் போடலாமா? என் உடம்பு வீழ்ந்துவிடலாம்; என் புத்தி மாறிவிடலாம். ''ஆலஸ்யம் அம்ருதம் விஷம்'' என்று தாங்களே சொல்லியிருக்கிறீர்களே; தயவு செய்து யாகத்தை நடத்திக் கொடுங்கள்'' என்று ராஜா பிரகஸ் பதியைக் கெஞ்சினார்.

''நான் ஒருமுறை ஏதோ சொல்லிவிட்டேன். உன் யாகத்தை இப்போது நடத்த முடியாது'' என்று பிடிவாதமாக மறுத்து விட் டார். பெரிய ஆசாமிகளிடம் இப்படிக் குறையிருப்பது வழக்கமாய் இருக்கிறது. இது சாதாரண மக்களுக்குத் துன்பமாய் முடிகிறது. தாங்கள் சொல்லுவது சரியில்லை என்று தெரிந்தாலும் திருத்தித் கொள்ளமாட்டார்கள். திருத்திக்கொண்டால் தம் பெருமைக்கு

இழுக்கு வந்துவிட்டதாகத் தோன்றும் போலும். செய்வதறியாமல் மாருத மகாராஜா பிருகஸ்பதியிடம் விடைபெற்றுக் கொண்டு சம வர்த்தியிடம் சென்றார். "மகானுபாவா! தாங்கள் என் யாகத்தை நிறைவேற்றி வைக்கவேண்டும்" என்று வேண்டினான். 'இதேதடா தொல்லை! இதனால் என்ன வம்பு விளையுமோ' என்று பயந்த சம வர்த்தி தயங்கி, "எனக்கேது அவ்வளவு சக்தி? என்னை ஏன் தொந் தரவு செய்கிறீர்கள்?" என்று சொல்லித் தப்பித்துக்கொள்ளப் பார்த்தார். ஆனால் மகாராஜா மேன்மேலும் வேண்டி வணங்கினார். மறுக்கமுடியாமல் சமவர்த்தி ஒப்புக்கொண்டார். யாக மேடைகள் தயாராயின. யாகத்துக்கு வேண்டிய பொருட்கள் குவிந்தன. வேத கோஷங்கள் முழங்க யாகம் தொடங்கியது. சமவர்த்திக்குச் சிறந்த மரியாதைகள் நடந்தன.

இந்தச் செய்தி பிருகஸ்பதிக்கு எட்டியது. சமவர்த்திக்கு இவ் வளவு பெருமை கிடைப்பது அவருக்குப் பொறுக்கவில்லை. தவித் தார். எப்படியாவது யாகத்தைக் கலைத்துச் சமவர்த்தியை அவ மானப் படுத்தத் தீர்மானித்தார். முதலிலேயே தம்மை அவ்வளவு தூரம் அரசன் கெஞ்சியபோது அகம்பாவத்துடன் மறுத்துவிட்ட பிருகஸ்பதிக்கு இவ்வளவு துன்பம் ஏன்? தன் கூடப் பிறந்த தம்பி யான சமவர்த்திக்குச் சன்மானம் கிடைத்தால் அவருக்கு வந்த நஷ்டம் என்ன? அகௌரவமா? தனக்கு இல்லையே என்ற ஏக்கம் பிறருக்குக் கிடைத்து விடுகிறதே என்ற வயிற்றெரிச்சல். இது ஒரு வகைப் பொறாமை. இதுதான் மோசம் செய்து தீமையை விளைவிக் கும். தம்குருவான பிரகஸ்பதியின் வருத்தத்தைப் புரிந்து கொண்ட இந்திரன் தான் அவருக்கு உதவி செய்கிறேனென்று வாக்களித் தான். சமவர்த்திக்கு மதிப்பும் மரியாதையும் இல்லாமல் செய்ய லாம் என்று அக்கினி தேவனை அழைத்து, "அக்கினியே! நீ சென்று மாருத மகாராஜாவிடம் உடனே யாகத்தை நிறுத்தும்படிச் சொல். தடுத்துக் கண்டிப்புடன் சொல். கேட்காவிட்டால், 'எல்லாவற்றை யும் சுட்டுப் பொசுக்கிவிடுவேன்'' என்று பயமுறுத்து. சமவர்த்திக்கு இந்த மரியாதை நடக்கக் கூடாது தெரியுமா? அதுதான் முக்கியம். இது என் ஆணை." என்று சொன்னான். இந்திரன் சொற்படி அக் கினி தேவன் சென்று மாருத மகாராஜாவிடம், "அரசே, நீ யாகம் செய்யக் கூடாது. நிறுத்திவிட வேண்டும். இல்லாவிட்டால் எல் லாவற்றையும் பொசுக்கிச் சாம்பலாக்கி விடுவேன்" என்று மிரட் டினான்.

யாகத்தை நடத்தி வைக்க சமவர்த்தி தயாராக இருந்தார். அவர் மகா தேஜஸ்வி. தவச் செல்வர். தரும நெறியில் செல்லுபவர் சமவர்த்தியின் முன் தன் பாச்சா பலிக்காதென்று உணர்ந்த அக்

கினி தேவன் பயந்து சாபத்துக்கு ஆளாகாமல் தப்பித்துக்கொண்டு இந்திரனிடம் சென்ருன். யாகம் நிற்காமல் நடந்து கொண்டிருந்தது.

பிறகு இந்திரன் தானே நேரில் புறப்பட்டு யாகசாலைக்குச் சென்ருன். சமவர்த்தியைக் கண்டவுடன் இந்திரனுக்குக் கை, கால்கள் ஜில்லிட்டு விட்டன. இந்திரன் தன்னுல் ஆனமட்டும் முயன்றும் நல்ல சுபாவமும் சர்வ சக்திகளும் கொண்ட சமவர்த்தியின் முன் இந்திரனுடைய எதிர்ப்புச் சக்திகள் வீணுயின. முறைப்படி 'ஹவிஸ்'ஸைப் பெற்றுக் கொண்டு இந்திரன் திரும்பிச் சென்ருன். யாகம் தடையின்றி நிறைவேறியது. பிருகஸ்பதி வீணுக வருந்தி ஏங்கினுர். அவருக்கு வருத்தம்தான் மிஞ்சியது.

நம்மைப் போன்ற—உடன்பழகும்—மக்களிடம் சகோதரபாவத்துடன் நடந்து கொள்ளவேண்டும். நாம் எல்லோரும் கடவுளுடைய குழந்தைகள். நாம் நம் நலனை மட்டுமேயன்றிப் பிறர் நலனையும் விரும்பவேண்டும். நமக்குச் சக்தி இருந்தால் அருகில் உள்ளவர்களுக்கு நன்மை செய்யவேண்டுமே தவிர பொருமையால் அவர்களுக்குக் கேடு நினைக்கக்கூடாது. நம்மால் இயலாவிட்டால் உதவி செய்யாவிட்டாலும் ஆதரவான சொற்களையாவது சொல்லித் தேற்றவேண்டும். இந்த மாதிரியான கருத்து இருந்தால் பரஸ்பரம் பகையும் கொடிய சுபாவமும் எட்டிக் கூடப் பார்க்காமல் நழுவி விடும்.

## பாமிடி

## சுவாமி கேசவய்யாஜீ பிறந்த ஊர்

அனந்தப்பூர் மாவட்டத்தில் உள்ள பாமிடி வரலாற்றுப் புகழ் பெற்ற க்ஷேத்திரம். புராணப் பிரசித்தியும் பெற்ற தலம். இங்கே ஐந்து சிவன் கோயில்கள், மூன்று விஷ்ணு கோயில்கள், நான்கு ஆஞ்சநேயர் கோயில்கள், நான்கு சக்தி கோவில்கள் ஆக மொத்தம் பதினுறு கோயில்கள் உள்ளன. இத்தனை மூர்த்திகளும் தாமாகவே இல்லத்தைத் தேர்ந்தெடுத்து புனிதமான பெண்ணையாற்றங் கரையில் எழுந்தருளி யிருக்கிருர்கள். இவற்றுள் முக்கியமானவை போகேசுவரர் கோயில், சென்னகேசவர் கோயில், மாருதி கோயில் ஆகியவை.

அகத்திய முனிவர் இங்கே தவம் செய்ததாக ஐதீகம். அத்திரி, கௌதம மகரிஷிகளும் இங்கே இருந்ததாகப் பிஞகினி வரலாறு

ெ. ல்லுகிறது. ரிஷியசிருங்கரும் சிங்ககிரிபட்டுடன் தவம் செய்த தாக ]தே வரலாறு தெரிவிக்கிறது. இப்பகுதியிலுள்ள சிங்ககிரிக் குப் பரசுராமர் வந்து மலையடிவாரத்தில் ராமேசுவரஸ்வாமியை யும் பார்வதி அம்மனையும் கேசவசுவாமியையும் பிரதிஷ்டை செய்த தாக

சிங்ககிரிபட்டு தவம் செய்த இம்மலையை க்ஷேத்திர பாலமலை என்றும் சொல்வதுண்டு. இம்மலையை ஒட்டியுள்ள கிராமத்துக்கு க்ஷேத்திர பால மலைப் பட்டினம் என்று பெயர் வந்துவிட்டது. இவ் வூரில் ஒரு குடியானவனிடம் பசு மந்தைகள் ஏராளமாக இருந்தன. மந்தையைப் பட்டணத்துக்குத் தென் கிழக்கில் ஒரு கோச தூரத் தில் வியாச தீர்த்தத்தையும் பாவன நதியையும் சூழ்ந்திருந்த காட் டுக்கு ஓட்டிப்போவது வழக்கம். இப்படி பசுக்கள் காட்டுக்கு போய் வந்துகொண்டிருக்க சில நாட்களுக்குப்பின் ஒரு பசுமட்டும் வியாச தீர்த்தத்துக்கும் பாவன நதிக்கும் கிழக்கே சிறிது தூரத்தில் இருந்த ஒரு புற்றின்மேல் நின்று, புற்றில் பாலைச் சுரக்கவிட்டுக் கொண்டி ருந்தது. அதனால் அப்பசு குடியானவன் வீட்டில் பால் கொடுக்காது. இதையறிந்த குடியானவன் மந்தைக் காப்பவனைக் காரணம் கேட் டான். அவனைத் தண்டித்தான். மேய்ப்பவனுக்கு உண்மை தெரி யாது. அதனால் அவன் பசுவின் செயலைக் கண்காணித்துச் சொல்ல வேண்டியிருந்தது. அன்று அப்பசுவை குறிப்பாகக் கவனித்தான். அக்கபிலைப்பசு வழக்கம்போல் அன்றும் புற்றில் பாலைப் பொழிந்து விட்டு வந்தது. காவல்காரன் இதைக்கண்டு கோடரியால் பசுவை அடிக்க முயன்றான். அப்பொழுது புற்றிலிருந்து, "பசுவை அடிக்க வேண்டாம்; நான் போகேசுவரன்; புற்றினுள் இருக்கிறேன். இப்பசு தினந்தோறும் எனக்குப்பால் தருகிறது. அதுதான் என் உணவு. நீ இச்செய்தியை உன் எஜமானரிடம் சொல்" என்ற அசரீரி காதில் விழுந்தது. காவல்காரன் வீட்டுக்குச் சென்று குடியானவனிடம் செய்தியைச் சொன்னான். குடியானவன் நம்பவில்லை. தனக்குத் தெரியவேண்டுமென்றான்.

அன்றிரவு குடியானவனுடைய கனவில் போகேசுவரசுவாமி தோன்றி இப்படிச் சொன்னார். "முன் ஆதிசேஷன் பிரதிஷ்டை செய்ததால் வந்த போகேசுவரன் நான். பலநாட்களாக இப்புற் றில் வசித்து வருகிறேன். உன் மந்தையிலுள்ள கபிலைப்பசு கொடுக் கும் பால்தான் எனது உணவு. நீ புற்றை அகற்றி எனக்குக் கோயில் கட்ட ஏற்பாடு செய்."

மறுநாளே குடியானவன் ஆட்களுடன் சென்று புற்றைக் கண்டு பிடித்துத் தோண்டச் செய்தான். புற்றுக்குள் மனித உயரத்துக்கு ஒரு சிவலிங்கமும், லிங்கத்தைச் சுற்றிப் பாம்பால் ஆவுடையாரும்



பாமிடியில் சுவாமிஜி பிறந்த வீடு



பாமிடியில் பெண்ணையாற்றங்கரையில் உள்ள
ஸ்ரீ சென்ன கேசவ சுவாமி கோவில்



பாமிடியில் உள்ள ஸ்ரீ போகேஸ்வர சுவாமி கோவில்



பாமிடியில் உள்ள ஸ்ரீ ஹனுமார் கோவில்



சுவாமி கேசவய்யாஜீயின் காலஞ் சென்ற மூத்த சகோதரர்
ஸ்ரீ சுவாமி சஞ்சீவையா.

காணப்பட்டன. தனது கனவில் போகேசுவரர் கட்டளையிட்டபடி குடியானவன் லிங்கத்தை ஸ்தாபித்துக் கோயில் கட்டினுன். அம்பாள் இல்லாததால் பார்வதி தேவியை ஐந்தடி தூரத்தில் பிரதிஷ்டை செய்தான். இக்கோயிலுக்குத் தெற்கே பத்தடி தூரத்தில் இருந்த விஷ்ணு கோயில் இடிந்திருந்ததால் அக்கோயிலை எடுத்துக் கட்டி சென்ன கேசவரையும் லக்ஷ்மி தேவியையும் பிரதிஷ்டை செய்தான். இக்கோயில்களை ஒட்டி ஒரு கிராமத்தை அமைக்க வேண்டுமென்று குடியானவனுக்குத் தோன்றியது. அன்றிரவு அவனுடைய கனவில் ஆதிசேஷன் தோன்றி அங்கே கிராமத்தை அமைத்து அதற்கு 'சேஷ கிரந்தி புரம்' என்று பெயர் வைக்கும்படி சொல்லியது. குடியானவன் அப்படியே செய்தான். இப்பெயர் வடமொழியில் இருப்பதாலும் லிங்கத்தில் பாம்பு முடியிட்டுச் சுற்றிக்கொண்டிருப்பதாலும் எளிதாக பாம்புமுடி என்று எல்லோரும் சொல்லி வந்ததால் பாமுடியாகி இன்று பாமிடி ஆகிவிட்டது.

ஸ்ரீ கிருஷ்ண தேவராயருக்குப் பிறகு நாட்டை ஆண்ட விஜய புக்கராயலு இம்மாகாணத்துக்கு திம்மையா அவர்களை அதிகாரியாக்கினுர். அவர் பாமிடி கிராமத்துக்கு வந்து தெற்குப் பக்கமாக ஒரு மண்டபத்தை எழுப்பி அதில் ஆஞ்சநேய சுவாமியைப் பிரதிஷ்டை செய்தார்.

ஸ்ரீ கேசவய்யாஜீ இம்மூன்று கோவில்களையும்தான் அடிக்கடி தரிசித்து அங்கேயே தியானம் செய்து வந்தார். இக்கோயில்கள் புராதனமானவை. மிக மகிமை பெற்றவை. பிரகலாதனைப்போல் சுவாமிஜி இளமை முதற்கொண்டு தெய்வ சம்பந்தமான விவகாரங்களிலும் பகவத் தியானத்திலும் ஈடுபட்டுப் பொழுது போக்கினுர். அவருக்குத் தெரியாமலேயே அவருக்கு சிறிது மகிமை ஏற்பட்டது. அதன் காரணமாகவே அச்சிறு பிராயத்தில், உபாத்தியாயரான ஸ்ரீ லெக்லரிடம் பாரதநாடு நிச்சயமாக சுதந்திரம் பெறப்போகிறதென்றும் பிரிட்டிஷார் நாட்டை விட்டுப் போய்விடுவார்கள் என்றும் அவரால் விவாதிக்க முடிந்தது. சுவாமி கேசவய்யாஜீ மிகப் பெரிய மகான். அவருடைய வாழ்க்கை ஒளிமயமானது.

---

## பல சுருதி

கலியுலகத்தில் பகவானுடைய நாமஸ்மரணையாலேயே இம்மைச் சுகங்களைப் பெற்று மறுமையையும் பெறலாம் என்று மகான்கள் அறிவுறுத்தி யிருக்கிறார்கள். ஸ்ரீ சாயி பாபா விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தின் பெருமையை விளக்கி அதே விஷயத்தை அறிவுறுத்தி இருக்கிறார். பகவானுடைய திருப்பெயரை நினைப்பதாலேயே இம்மை மறுமைகளைப் பெறலாம் என்றால் பகவானுடைய லீலைகளைப் படிப்பதாலும் கேட்பதாலும் மனிதனுடைய ஆசைகள் எல்லாம் நிறைவேறிக் கரையேற வழி ஏற்படுவதில் அதிசயப்பட வேண்டியது எதுவும் இல்லை.

''ஸ்ரீ சாயி மகிமை'' சுவாமி கேசவய்யாஜி மூலமாக சமர்த்த சத்குரு சாயிநாதர் இரண்டு மாமாங்க காலமாக வெளிப்படுத்திய சில லீலைகளை விவரிக்கிறது. நூலை எழுதிய ஆசிரியருக்கு மன அமைதி கிடைத்துவிட்டது. எழுதும் காலத்தில் பல அனுபவங்களை அவர் பெற்றார். பகவான் பக்தர்களுக்கு வசப்பட்டவர். பக்தர்களுடைய துன்பங்களைப் பாராயணம் செய்து அவர்களுடைய கதைகளைக் கேட்டுப் புனிதத்துவம் பெறுவது இதனால் எளிதாகிறது. அடியார்க்கு அடியவரானவர்களுக்கு ஒருபுறம் பகவானுடைய ஆதரவும் ஒருபுறம் பக்தர்களுடைய அரவணைப்பும் கிடைக்கின்றன.

சுவாமி கேசவய்யாஜி சாக்ஷாத் சாயி பாபாவேதான் என்பது பல பக்தர்களுடைய அனுபவம் ஆகும். அப்படிப்பட்டவருடைய வாழ்க்கைதான் ஸ்ரீ சாயி மகிமை. இந்த நூலை அச்சிடவும், பிரசாரம் செய்யவும் உதவிய எல்லோருக்கும் ஸ்ரீ சாயிநாத் ஆரோக்கிய ஐசுவரியங்களை அருளுவாராக. அவர்கள் எல்லோருக்கும் ஸ்ரீ சாயி மகிமை அனுபவம் ஆகட்டும். இந்த நூலைப் படித்தவர்களுக்கும் கேட்டவர்களுக்கும் கூட முக்காலத்திலும் அவர் ஸ்ரீராம ரக்ஷையாக இருக்கட்டும்.

நூலைப் பாராயணம் செய்வதால் வாசகர்களுக்கு வறுமைத் துன்பம் நீங்கிப் பாரமார்த்திக சுகம் கிடைக்குமாக. எண்ணிய எண்ணியாங்கெய்தி வாசகர்கள் பக்தி நெறியிலும் இகவாழ்விலும் எந்தத் தடையும் நேராமல், அரோயாஸமாகப் பிரயாணத்தைத் தொடர்ந்து நடத்திய லக்ஷிய ஸ்தானத்தைச் சேரட்டும்.

ஸ்ரீ சாயிபாபா சர்வாந்தர்யாமி. அதுபோலவே ஸ்ரீ சாயி மகிமையும் எங்கும் நிறைந்திருப்பது. சுவாமி கேசவய்யாஜீயே,

"ஸ்ரீ சாயி மகிமை" அந்த மகிமையைப் புரிந்துகொண்டு சகல சுகங்களையும் ஐசுவரியங்களையும் அடைவோமாக. பரம பக்த சிகாமணியின் கதையையும், போதனைகளையும் படித்து ஸ்ரீ சாயி பாபாவின் கிருபா கடாக்ஷத்துக்குப் பாத்திரர்கள் ஆவோம். அதுதான் நமக்குக் கிடைக்கும் விலைமதிப்பற்ற பயனாகும்; எல்லா கோரிக்கைகளையும் கைகூட வைப்பது. சர்வ மங்களங்களையும் கிடைக்கச் செய்வது.

சர்வே ஜனா : சுகினோ பவந்து
ஓம் ஸ்ரீ சாயி நாதாய நமஹ.
ஸ்ரீ சமர்த்த சத்குரு ஸாயிநாத் கி ஜே.

முற்றும்

